# தமிழ் இலக்கிய வரலாறு

## ஒன்பதாம் நூற்றாண்டு

பாகம் – 1

மு. அருணாசலம்

**The PARKAR**

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*

*இராயப்பேட்டை*

*சென்னை - 14.*

தமிழ் இலக்கிய வரலாறு

ஒன்பதாம் நூற்றாண்டு, பாகம் – 1

மு. அருணாசலம்



*முதற் பதிப்பு : பங்குனி 1975.*

*திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.*

*பக்கம் : xxxii + 368 = 400.*

*பதிப்பு :*

**தி பார்க்கர்**

*293, அகமது வணிக வளாகம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*

*இராயப்பேட்டை, சென்னை - 600 014.*

**விலை : 296. 00**

*வடிவமைப்பு :*

வே. கருணாநிதி

*அச்சிட்டோர்:*

**தி பார்க்கர்**

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.*

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். **அ. சிதம்பரநாதன்**
15. 11. 2004.

# நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ. சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், இது 9ஆம் நூற்றாண்டின் முதல் பாகம். மூன்று பாகங்களாக 9ஆம் நூற்றாண்டு வரலாற்றை எழுதி வெளியிட ஆசிரியர் முயற்சித்துள்ளார். இதுபற்றி ஆசிரியர் தமது 9ஆம் நூற்றாண்டு முதல் பாகத்தின் முகவுரையில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:

"இவ்வொன்பதாம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு அளவில் பெரிதாகி விட்டமையால், இதை மூன்று பாகமாக வெளியிட்டால் ஒவ்வொரு பாகமும் கையடக்கமாக அமையும் என்று தோன்றிற்று. இப்போது முதல் பாகத்தை முடித்துத் தனிப் புத்தகமாக வெளியிடுகிறோம். அடுத்து நம்மாழ்வார், மாணிக்கவாசகர் இருவரையும் ஆய்கின்ற ஆய்வு இரண்டாம் பாகமாகவும், சிந்தாமணி, கம்பராமாயணம் பற்றிய ஆய்வு மூன்றாம் பாகமாகவும் வெளிவரும்."

ஆசிரியர் மேற்கண்டவாறு குறிப்பிட்டிருப்பினும் 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம், மூன்றாம் பாகங்கள் அவரால் வெளியிடப்படவில்லை. இப்பாகங்கள் தொடர்பான கையெழுத்துப் பிரதியும் கிடைக்கவில்லை. திருச்சிற்றம்பலத்தில் உள்ள அவரது வீட்டில் இத்தொகுதிகளின் திருத்தப்பட்ட இந்த மறுபதிப்புத் தொடர்பாக, நாம் பல நாட்கள் தங்கியிருந்தபோது, இரண்டாம் மூன்றாம் தொகுதிகளுக்கான கையெழுத்துப் பிரதிகளைத் தேடிச் சோர்ந்தோம்.

எனினும் இந்த 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகத்திற்குரிய 'நம்மாழ்வார்' என்ற பகுதி மட்டும் தனி நூலாக ஆசிரியரால் வெளியிடப்பட்டிருந்தமையால் அதனை இவ்வரலாற்றுத் தொகுதிகளுடன் 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகமாகச் சேர்த்துள்ளோம். இதில் இடம்பெற வேண்டிய மற்றைய பகுதிகளான 'மாணிக்கவாசகர்' மற்றும் 'திருவாசகம்' பற்றிய வரலாறுகள் கிடைக்காமல் போயின. எமது தொடர்ச்சியான தேடலில் அவை கிடைப்பின் இப்பாகம் முழுமை பெறும்.

இந்நூற்றாண்டின் மூன்றாம் பாகம் முற்றாகக் கிடைக்க வில்லை. ஆசிரியரின் புதல்வர் அ. சிதம்பரநாதன் ஐயா அவர்கள் மூலம் இப்பாகம் எமக்குக் கிடைப்பின் 9ஆம் நூற்றாண்டு வரலாறு முழுமைபெறும்.

இந்நூலை வெளியிடுகிறபோது ஆசிரியர் அச்சாக்கம் தொடர்பாக மிகுந்த இடையூறுகளை எதிர்நோக்கியுள்ளார். இது தொடர்பாக தமது முகவுரையில், "இடையில் காகிதம் கிடைக்காத நிலைமையும் ஒன்றுக்கு இரு மடங்குக்கும் அதிக மாக விலை கொடுத்து வாங்க வேண்டிய நிலைமையும் சேர்ந்து கொண்டன. எந்தக் காகிதமாவது கிடைத்தால் போதும் என்ற நிலைமையும் கூட. எனவே அன்பர்கள் காகிதத்தின் தரத்தையும் வெளியீட்டின் தாமதத்தையும், பிழைகளையும் அன்புகூர்ந்து பொறுத்துக்கொள்ள வேண்டியவர்கள்." என்று குறிப்பிடுகிறார். முதல் பதிப்பில் ஆசிரியருக்கு ஏற்பட்ட மேற்கண்ட குறைபாடு களை இப்பதிப்பின் மூலம் முழுமையாக நாம் நிவர்த்தி செய்துள் ளோம் என்று நம்புகின்றோம்.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. 14வது தொகுதியாக மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன. ஆசிரியரின் கருத்துப்படி நாம் இம் முயற்சியை மேற்கொண்டுள்ளோம். தன் தந்தையாரின் இவ் விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக் கொணர எமக்கு அனுமதியளித்த அவர் மகனார் மிகுந்த போற் றுதலுக்கு உரியவர்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செல விட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடுகொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக் குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படை யில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

**வே. கருணாநிதி**

# முதல் பதிப்பின் முகவுரை

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை எல்லாமும்
குன்றே அனையாய்! என்னை ஆட்–
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோர் இடையூறு எனக்குண்டோ?
எண்தோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய், பிழை செய்வாய்,
நானோ இதற்கு நாயகமே? – திருவாசகம்

## இந்நூற்றாண்டு வரலாறு

இந்த இலக்கிய வரலாற்று நூல், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் 800-900 ஆகிய கால எல்லைக்குள் வாழ்ந்த புலவர் வரலாற்றையும் அவர்கள் செய்த நூல்களையும் ஆராய்கிறது. இதுவரையில் ஆறு நூற்றாண்டு இலக்கிய வரலாறுகள் - 10ஆம் நூற்றாண்டு முதல் 15ஆம் நூற்றாண்டு வரை வெளியாகியுள்ளன. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரலாறு அளவில் மிகவும் பெரியதாகி 1030 பக்கம் ஆகியமையால் அதுமட்டும் இரு தொகுதிகளாகக் கட்டடம் செய்து வெளியிடப்பட்டது. ஆக ஆறு நூற்றாண்டுகளுக்கும் ஏழு தொகுதிகள் ஆயின. அந்த முறையில் எழுதி வருகையில் இவ்வொன்பதாம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு அதனினும் அளவில் பெரிதாகி விட்டமையால், இதை மூன்று பாகமாக வெளியிட்டால் ஒவ்வொரு பாகமும் கையடக்கமாக அமையும் என்று தோன்றிற்று. பொதுவாக இவ்வரலாற்றுத் தொகுதி ஒவ்வொன்றும் சுமார் 500-600 பக்கங்களுக்குள் அடங்க வேண்டும் என்பது எமது கருத்து. இப்போது இந்த நூல் 516* பக்கங் கொண்டதாக, இந்நூற்றாண்டு வரலாற்றுள் முதல் பாகமாய் அமைக்கப் பெற்றிருக்கிறது. இதனுள் இந்நூற்றாண்டுக்குரிய இலக்கிய இலக்கணங்கள் யாவும் ஒருங்கு தொகுத்து

* முதல் பதிப்பில் இடம் பெற்ற பக்கங்கள்,

ஆராயப்படும் - காப்பியங்களும் சைவ வைணவ இலக்கியங் களும் நீங்கலாக.

இப்புத்தகமும் முன்வந்த நூல்களின் பொருளமைப்பை உடையது. காலத்தில் பின்னோக்கிச் செல்லும்போது கால வரை யறை முக்கியப் பொருளாகிறது. இருப்பினும், இதனோடு, இலக் கிய வழக்காறுகள், கால வரலாறு, ஆசிரியர் வரலாறு, நூலின் திறனாய்வு ஆகிய பொருள்களும் இயன்ற அளவு இடம் பெறு கின்றன. அத்தியாயப் பாகுபாடும் முன்போலவே அமைக்கப் பெற்றுள்ளது. கிடைக்கின்ற இலக்கிய இலக்கணப் பொருளின் அளவால் சில அத்தியாயங்கள் மிக விரிந்தும் சில மிகச் சுருங்கி யும் உள்ளன. இந்த நிலை தவிர்க்க முடியாதது.

### வரலாற்றுப் பார்வை

நாட்டு வரலாற்றை நோக்கும் போது, ஒன்பதாம் நூற் றாண்டு, நாட்டு வரலாற்றில் ஒரு திருப்பு மையமாக அமைந் திருப்பது புலப்படும் சேர, சோழ, பாண்டியர் என்பது நம் சொல் லாட்சி மரபு. சேரர் தொடர்பு, சில காலம் முன்னதாகவே நின்று போய் விட்டது. சேரமான் பெருமாள் குலசேகராழ்வார் முதலி யோர் இந்நாட்டில் தோன்றினர் என்ற இலக்கியத் தொடர்பை நாம் கருதலாமாயினும், நாட்டுத் தொடர்பு அற்றுப்போய் விட் டது. அதற்கு மாறாக, மூன்றாம் நூற்றாண்டிலிருந்து காஞ்சியில் பல்லவர் என்ற புதிய மரபு தமிழ் நாட்டில் சிறப்பான செங் கோல் செலுத்தி வந்ததை அறிவோம். இம்மரபினர் வடமொழி யைப் பெரிதும் போற்றியவர்கள்; கலையை வளர்த்தவர்கள்; குடைவரைக் கோயில்கள் பல அமைத்தவர்கள். முன்னமே சைவம், வைணவம், சைனம் ஆகிய சமயங்களைத் தழுவியிருந் தவர்கள். எப்படியோ காலகதியின் வேகத்தில் இந்த மரபு, ஒன்ப தாம் நூற்றாண்டின் இறுதியில் மறைந்தே போகிறது.

பல்லவர் மரபு மறைகின்ற அதே நேரத்தில் - ஒரு கால் இம் மறைவுக்குக் காரணமாகவும் இருத்தல் கூடும் தஞ்சையில் ஒரு புதிய மரபு கால்கொண்டு வளர்ந்தோங்கி வருகிறது. இந்த நூற் றாண்டின் மத்தியில், பல்லவருக்குக் கீழ்ப்பட்டிருந்த சோழர், தலையெடுக்கத் தொடங்கி ஏறக்குறைய நானூற்றைம்பது ஆண் டுக்காலம் தமிழ்நாட்டின் தனிப்பெரும் அரசாக ஆட்சி புரிந் திருக்கிறார்கள். இவர்கள் அனைவருமே சைவமாயிருந்து,

சைவத்துக்கு மட்டுமல்லாமல் தமிழுக்குமே இக்காலத்தை இணையற்ற ஒரு பொற்காலமாக்கியிருப்பதை இலக்கிய வரலாறு நன்குணர்த்தும்.

## இலக்கியத் திறனாய்வு

இங்கு ஆராயப்பெறும் எல்லா நூல்களிலும் இது முக்கிய மான பகுதி. முன்சொன்னதுபோல இங்கு ஆறு நூல்கள் சிறப் பாய்க் கருதப்பெறும். ஆறும் வெவ்வேறு இலக்கியத் துறைக் குரிய நூல்கள்; இலக்கியம் இரண்டே, இலக்கணம் நான்கு. காலக்கண் கொண்டு இவற்றை ஆய்ந்து கூறுகிறோம். இவை யன்றி இக்காலத்து இருந்து இறந்துபோன நூல்கள் பலவற்றை (30க்கும் அதிகமாக)க் குறிப்பிட்டுச் சொல்லியிருக்கின்றோம். அவை பற்றிய குறிப்புக்களும், சிறப்பான பொருள்; வரலாற்றுக் குறிப்பு மட்டுமல்லாமல், இலக்கியச் சுவையும் ஆய்ந்து எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

வரலாற்று விளக்கம் ஆராயுமிடத்திலும் இலக்கியச் சுவை யைக் காட்டுமிடத்திலும், மேற்கோட் பாடல்கள் பல பெய்து காட்டப்பெற்றிருக்கும். பல்வேறு இடங்களில் எளிதில் பார்க்க இயலாதபடி உள்ள பொருள்களை ஒரு சேரத் தொகுத்துத் தரு வது ஆராய்வோருக்கும் சுவை தேர்வோருக்கும் பயன்படும் என் பதே இதன்நோக்கம். வரலாற்று வளர்ச்சியில் கூட, கவிச் சுவை யுணர்வும் சேர்ந்து அமையவேண்டும் என்பது எமது கருத்து.

## அட்டவணைகள்

அட்டவணைகள் இலக்கிய வரலாற்றைத் தொகுத்தறிய எத்துணைச் சிறந்த கருவிகள் என்பதைப் பல இடங்களிலும் விரித்துரைத்திருக்கிறோம்.* எமது வரலாற்று நூல்களைப் பயன் படுத்துகிற ஆய்வாளருக்கு இது நன்கு விளங்கியிருக்கும். இந் நூலிலும் 18 அட்டவணைகள் இடம்பெறுகின்றன. ஆசிரியர் காலம், கால ஒப்புமை என்பன வழக்கமாயுள்ளன. ஏனையவை இந்நூற்றாண்டுக்கே சிறப்பாய் உரியவை. எல்லா அட்டவணை களும் பாரதம், நிகண்டு ஆகிய இருபொருள் பற்றியனவாகும். பல பத்திகளால் விளக்கிச் சொல்ல வேண்டியவற்றை அட்ட வணைகள் மிகவும் திட்டமாய் எளிதில் கண்முன்னே தொகுத்துக் காட்டுவதால் பொருளுணர்வுக்குப் பெரும் பயனுடையவை.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு மற்றும், 12ஆம் நூற்றாண்டு நூல்களின் முன்னுரைகளில் காண்க.

**விளக்கங்கள்**

இப்புத்தகத்தில் ஆறே நூல்கள் ஆராயப்படுகின்றன என்றால் உண்மை. அவை ஒரு பாரதம், ஒரு நிகண்டு, அகப்பொருள் இலக்கண நூல் ஒன்று, புறப்பொருள் இலக்கண நூல் ஒன்று, இசைத்தமிழ் நூல் ஒன்று, ஒரு பிரபந்தம் என்பனவாகும். இக் காலத்துக்குரிய சமய இலக்கியங்களும் காப்பிய இலக்கியங் களும் இரு தனிப்பாகங்களாக வெளிவருகின்றன.

இங்கு ஆராயப்பட்ட ஆறு நூல்களின் விளக்கங்களும் தனிச் சிறப்புடையவை. இவை இதுகாறும் இலக்கிய வரலாற்றில் இத்துணை விரிவாக ஆராயப் பெற்றதில்லை. திவாகர நிகண்டாராய்ச்சி மிக்க சிறப்புடையது. 10 ஆம் நூற்றாண்டு வரலாற்றில் வெளியாகிய எமது பிங்கல நிகண்டாராய்ச்சி மிக்க சிறப்புடையது. இங்கு காணும் திவாகரம் தமிழில் முதல் நிகண்டானமையால் இங்குள்ள அதன் ஆய்வு பின்னும் முக்கியமானது, பொருளுடையது, இதைப்போலவே மிகவும் அபூர்வமாய்க் கிடைத்து வெளியாகியிருக்கும் பஞ்சமரபு பற்றிய விளக்கமும் முக்கியமானது. இவ்விரு நூல்களின் காலமும் இங்கு பல சான்று கள் கொண்டு ஆராய்ந்து திட்டமாய் வரையறுக்கப்பெறுவது சிறப்பு. இப்புத்தகத்தில் சிறப்பாய் அமைந்துள்ள சில விளக்கங் களைக் கீழே சுட்டிக் காட்டுகிறோம்.

நூல் பற்றிய விளக்கம் : பாரத வெண்பா, வளையாபதி, பஞ்சமரபு.

வரலாற்று விளக்கம் : திவாகரம், பாட்டியல் நூல்கள், பௌத்த நூல்கள்.

காலம் பற்றிய விளக்கம் : திவாகரம், தமிழ்நெறி விளக்கம், பஞ்சமரபு, வெண்பாமாலை.

கருத்து விளக்கம் : தமிழ்நெறி விளக்கம், வளையாபதி, நந்திக் கலம்பகம்.

காலப் பழமையினால் எல்லா நூல்களுக்கும் எல்லா விளக்கமும் புதிதாகவே சொல்லப்பட்டிருக்கக் காணலாம். பாட்டியல் பற்றிய விளக்கம் இங்கு ஒரு பகுதியே தரப்பட்டுள்ளது. அது பற்றிய முழு விளக்கம் எமது எட்டாம் நூற்றாண்டு வரலாற்றில்* விரிவாக வரும். வரும்போது அனேகச் செய்திகளுக்குப் புதிய தொடர்பும் புதிய விளக்கமும் அங்கு அமையக் காணலாம்.

---

* 8ஆம் நூற்றாண்டு வரலாறு ஆசிரியரால் வெளியிடப்படவில்லை.

## பிற்சேர்க்கை*

எழுத எழுதத்தான் கருத்துக்களும் தெளிவு பெற்று வளர்கின்றன, நாமும் வளர்கிறோம். எழுதி அச்சிட்டு முடித்தபின் பல புதிய கருத்துக்கள் தோன்றுகின்றன. இவற்றை ஆங்காங்கு அத்தியாய முடிவில் குறிப்பிட்டதோடு*, சில குறிப்புக்கள் என்ற ஒரு தலைப்பாகவும் தனியே சேர்த்திருக்கிறோம்.*

## முடிவுரை

முந்தைய ஆராய்ச்சியாளருடைய குறிப்புக்கள் ஆங்காங்கு பயன்படுத்தப்பட்டுள்ளன; சில ஏற்கப்பெற்று இருக்கும்; சில மறுத்து வேறு முடிவுகள் கொள்ளப்பெற்று இருக்கும். முன் வெளியிட்டோருக்கும் ஆராய்ந்தோருக்கும் எம் நன்றி உரியது. பதிப்பு ஆய்வு பற்றிய குறிப்புக்கள் ஆங்காங்கு சொல்லப் பட்டுள்ளன. இந்நூலில் மூன்றாம் அத்தியாயமாகிய திவாகர நிகண்டு பற்றிய ஆய்வு, அதன் அருமை கருதி, தனி நூலாகவும் வெளியிடப் பெற்றுள்ளது.

15ஆம் நூற்றாண்டு தொடங்கி, காலத்தில் பின் நோக்கிச் செல்லும்போது, இது ஏழாவது காலப் பகுதியாகும்; நூல் தொகுதியளவில் இப்போது வெளியாவது 8ஆவது புத்தகம். 9ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றாராய்ச்சியை மூன்று பாகமாக வெளியிட எண்ணி, இப்போது முதல் பாகத்தை முடித்துத் தனிப் புத்தகமாக வெளியிடுகிறோம். அடுத்து நம்மாழ்வார், மாணிக்க வாசகர் இருவரையும் ஆய்கின்ற ஆய்வு இரண்டாம் பாகமாகவும், சிந்தாமணி கம்பராமாயணம் பற்றிய ஆய்வு மூன்றாம் பாகமாகவும் வெளிவரும்.❖

இப்புத்தகம் 1973இலேயே வெளிவந்திருக்க வேண்டும். இதை யாம் கொடுத்திருந்த அச்சகத்தார் ஓராண்டுக்கு மேல் ஒரு வேலையும் செய்யாமையால், புத்தகத்தைத் திரும்பப்பெற்று வேறு அச்சகத்தில் கொடுத்து அச்சு வேலையை நடத்த வேண்டியிருந்தது. முன்னமே வெளியாகியிருந்தால் செலவு எவ்வளவோ குறைந்திருக்கும். என் செய்வது? நல்ல நூல் வெளியிட முயல்வோருக்கு இவை போன்ற துன்பங்கள் பல.

---

* இத்திருத்தப்பட்ட இப்பதிப்பில் ஆசிரியர் கருத்துப்படி உரிய இடங்களில் இவை சேர்க்கப்பட்டிருக்கிறது.

❖ இவை பற்றிய மேலதிக விளக்கத்தை எமது பதிப்புரையில் (vii) காண்க.

எமக்கு அதிக சிரமமில்லாமல், விரைந்து நூலை நன்கு அச்சிட்டுக் கொடுத்த அச்சக நிர்வாகி கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு மிக்க நன்றி பாராட்டுகிறோம்.* இடையில் காகிதம் கிடைக்காத நிலைமையும் ஒன்றுக்கு இரு மடங்குக்கும் அதிக மாக விலை கொடுத்து வாங்க வேண்டிய நிலைமையும் சேர்ந்து கொண்டன. எந்தக் காகிதமாவது கிடைத்தால் போதும் என்ற நிலைமையும் கூட. எனவே அன்பர்கள் காகிதத்தின் தரத்தையும் வெளியீட்டின் தாமதத்தையும், பிழைகளையும் அன்புகூர்ந்து பொறுத்துக் கொள்ள வேண்டியவர்கள்.*

இந்நூல் எழுதிய காலத்தில் எம்மிடம் பயின்ற மாணாக்கர் சிலர்; சொல்வதை எழுதியும், பெயர்த்தெழுதியும் உதவி செய்த னர். அவர்களுக்கு இறைவன் எல்லா நலன்களையும் அருளுவா னாக! இந்நூல் முடியும் தருணத்தில் சென்னை அரசின் கல் வெட்டுத்துறை இயக்குநர் திரு. ரா. நாகசாமியவர்களுடைய மாணாக்கர் இதற்கான சிறப்புப் பெயரகராதி தயாரிக்க உதவி செய்தார்கள். அவர்களுக்கு எமது நன்றி உரியது.*

1974இல் எமது தமிழ் இலக்கிய வரலாற்று நூல் எதுவும் வெளியாகவில்லை; அதற்குப் பதிலாக, நூற்பொருட் பாகுபாட் டையொட்டி ஆராய்ந்து ஆங்கில மொழியில் எழுதப்பெற்ற தமிழ் இலக்கிய வரலாற்று அறிமுக நூலொன்று வெளிவந்தது. இனி இந்த 9ஆம் நூற்றாண்டுக்குரிய ஏனைய இரு பாகங்களும் விரைவில் அச்சாகும். இப்போது அச்சாகிக் கொண்டிருக்கிற எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற்றாண்டு முதற் பாகம் அடுத்து வெளியாகும்.

எம்மை இத்துறையில் எந்த நேரமும் ஈடுபடுத்தி நடத்தி வரு கின்ற இறைவன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

ஆராலும் என்னை அமட்டஒண் ணாதினி
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்;
சீராடி யங்கே திரிவதல் லால், இனி
ஆர்பாடும் சாரா அறிவறிந் தேனே. – திருமூலர்

திருச்சிற்றம்பலம் — மு. அருணாசலம்
15-3-1975.

---

* இவை ஆசிரியரால் வெளியிடப்பட்ட முதற் பதிப்பிற்குரிய செய்திகள்.

# பொருளடக்கம்

OOO

## அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



ooo

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்

* இவை மட்டுமே இன்று உள்ள நூல்கள்.

# முன்னுரை

ஒன்பதாம் நூற்றாண்டின் தமிழ் இலக்கிய வரலாறு மூன்று பாகங்களாக வெளிவருகிறது. இரண்டாம் பாகம் அருட்பாசுரப் பகுதியும், மூன்றாம் பாகம் காப்பியப் பகுதியுமாகும். இந்த முன்னுரையானது, இந்த நூற்றாண்டு வரலாற்றுப் பகுதிகள் அனைத்துக்கும் உரிய பொதுப்பகுதியாகும். இங்கு ஏனைய பகுதிகளின் பொதுத் தன்மைகளும் சிறிதளவு தொகுத்தே சொல்லப் பெறும்.

## காலப் பாகுபாடு

தமிழ் மொழியின் இலக்கிய வரலாற்றை ஐந்து பெருங் காலப் பகுதிகளாகப் பகுத்து ஆய்வு செய்ய முடியும். அவற்றைப் பின்வருமாறு அமைக்கலாம்.

1. **சங்க காலம்:** அ. கடைச்சங்கத்துக்கு முற்பட்ட காலம் கி.மு. 300 வரை; ஆ. கடைச்சங்க காலம் கி.மு. 300 தொடங்கி கி.பி. 250 வரை.
2. **பாசுர காலம்:** அ. களப்பிரர் ஆதிக்கம் அல்லது முதற் பாசுர காலம் - கி.பி. 250 தொடங்கி கி.பி. 600 வரை. ஆ. பாசுர காலம் கி.பி. 600 முதல் கி.பி. 900 வரை.
3. **சோழர் ஆதிக்க காலம்:** கி.பி. 850 தொடங்கிக் கி.பி. 1300 வரை.
4. **சமய எழுச்சிக் காலம்:** அ. சைவ வைணவ சாத்திரங்களின் தோற்ற காலம் - கி.பி 1150 தொடங்கி 1550 வரை. ஆ. புராண எழுச்சிக் காலம் - கி.பி.1450 தொடங்கி 1700 வரை. இ. பக்தி மறுமலர்ச்சிக் காலம் கி.பி. 1650 தொடங்கி 1800 வரை.
5. **தற்காலம்:** அ. அன்னியர் ஆதிக்க காலம் - 1800 - 1900 வரை. ஆ. சுதந்திரப் போர்க்காலம் 1900-1950 வரை. இ. சுதந்திர காலம் - 1950-க்குப் பின்.*

---

* இப்பாகுபாடு பற்றிய ஒரு விரிவான குறிப்பை எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

இவ்வாறு வளர்கின்ற தமிழ் இலக்கிய வரலாற்று நெறியில், மூன்றாவதாகிய சோழர் ஆதிக்க காலம் என்ற சிறப்பான காலத்தின் தோற்ற நிலையை இந்த வரலாற்று நூல் பேச முற்படுகிறது. சோழப் பேரரசு என்று தனிப்படுத்திப் பேச இயல்வது போலப் பிற அரசுகளைப் பேசும் வாய்ப்பு இல்லை. பாண்டியர் ஆட்சி குன்றி, களப்பிரர் என்ற அன்னிய இருள் சூழ்ந்து நின்ற நிலையால், அங்கு இலக்கிய வளர்ச்சிக்கு அரசின் ஆக்கம் மங்கி விட்டது. பல்லவர் வடமொழியையே பெரிதும் போற்றியவர்கள். அவர்கள் காலத்தில் தமிழுக்கு உயர்நிலை அவர்களிடத்தில் வாய்க்கவில்லை. எப்படியோ மூன்றாம் நந்திவர்மன் ஒருவனே தமிழைப் போன்றியவனாகக் காணப்படுகிறான்.

### அரசியல் – பேரரசுகள்

ஒன்பதாம் நூற்றாண்டில் ஒரு பேரரசு அத்தமித்து மற்றொரு பேரரசு உதயமாகும் நிலையைப் பார்க்கிறோம்; சோழராட்சி எழுந்து பல்லவராட்சி உறங்கிற்று. சங்க காலத்தையடுத்துச் சோழ நாடு சிறப்பாக இருந்ததில்லை. தெற்கே பாண்டியரும் வடக்கே பல்லவரும் வலிமை மிகுந்து தங்களுக்குள் போட்டி போட்டுக்கொண்டு போரிட்டு, சோழ நாட்டைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டிருந்தார்கள். சோழர் வலி குன்றியவர்களாய் ஒடுங்கி விட்டார்கள். சங்க காலத்துக்கும் ஒன்பதாம் நூற்றாண்டுக்கும் இடையில், கோச்செங்கட் சோழன் என்ற ஒரு பெருமன்னன் செய்திகளையே நாம் வரலாற்றிற் அறிய முடிகிறது. இவன் ஈசற்கு எழில் மாடம் எழுபதும் திருமாலுக்குத் திருநறையூர் மணிமாடமும் கட்டியவன். கட்டியபோதிலும், இவன் பேரரசனாக விளங்கினான் என்பதற்கு வர்லாற்றுச் சான்றில்லை. தனது நாட்டுக்குத் தெற்கே பண்டைப் பெருமை வாய்ந்த பாண்டி நாட்டில் சைவம் அரசினால் ஒடுக்கப்படும் நிலையை இவன் கண்ணாரக் காண்கிறான். இதற்காகப் பெரிதும் வருந்துகிறான். ஆனால் அதுபற்றி இவன் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை. படைவலி கொண்டு பாண்டிய நாட்டுக் களப்பிரரை ஒடுக்கும் ஆற்றல் இவனுக்கு இல்லை. ஆகவே, தனது நாட்டில் இயன்றவரை வைதிக சமயத்துக்கு இவன் ஆக்கம் அளிக்கிறான். சைவம் வைணவம் இரண்டையுமே பெருநோக்கோடு வளர்க்கிறான். இரண்டும் சேர்ந்து வளர்வதே இரண்டுக்கும் தனிப்பட்ட வளர்ச்சியுமாகும் என்று இவன் உணர்கிறான். இவன் சிறந்த

சைவன் என்பதைத் திருவானைக்காப் புராணக் கதைகள் நன்கு புலப்படுத்தும். களப்பிரன் என்ற பொதுப் பகைவனை நோக்கும் போது, சைவம் வைணவம் என்ற முரண் கொள்ளாது இரண்டும் ஒத்து வாழ்வதே வைதிகத்தின் வாழ்வும் வளர்ச்சியுமாகும் என்று நன்குணர்ந்து இரண்டுக்கும் இவன் தன்னுடைய குறைந்த ஆற்றலுக்கு இயன்றவரையில் ஆக்கம் தேடியிருக்கிறான். இது இலக்கியச்சான்று கொண்டு யூகித்துச் சொல்வதேயாகும். இச் செய்தி எமது ஐந்தாம் நூற்றாண்டு வரலாற்றில் மேலும் விரித்துப் பேசப்படும்.

சேரன் செங்குட்டுவன் காலத்திலும் அவனுக்குச் சில நூற்றாண்டுகள் முன்னும் பின்னும் சோழ நாட்டின் வட பகுதி பல்லவர் வசமாயிருந்தது. பல்லவர் வடமொழிக்கு ஆதிக்கம் தந்தவர்கள். மேலும் ஒரே சமயத்தைத் தழுவியவர்கள் அல்லர். சைவம் வைணவம் சைனம் ஆகிய மூன்றில் ஒவ்வொன்றை ஒவ்வொரு மன்னர் தழுவியிருந்தனர். சைனனாயிருந்த மகேந்திர பல்லவனை ஏழாம் நூற்றாண்டில் அப்பர் சைவனாக்கிய செய்தியைப் பெரிய புராணமும் வரலாறும் பேசும். இப்பல்லவராட்சி ஒன்பதாம் நூற்றாண்டு வரை நன்கு வளர்ந்தோங்கி வருகிறது. இதன் முற்பகுதியில் ஆட்சி புரிந்த நந்திவர்மன் தெள்ளாற்றுப் போரில் பாண்டியரையும் சோழரையும் முறியடித்தான். ஆயினும் அவனுக்குப் பின் குறுகிய காலத்தில், பல்லவராட்சி வலிமை இழந்து ஒடுங்கி விட்டது. விசயாலயன் தோற்றுவித்த புதிய சோழ மரபு அவன் மகன் ஆதித்தன் காலத்தில் பேரரசாக, பல்லவர் ஆதிக்கத்தை உதறிவிட்டுத் தனிக்கொடி தூக்கிய நிலையையும் இந்த நூற்றாண்டின் இறுதியில் பார்க்கிறோம்.

களப்பிரரை ஒழித்த பாண்டியன் கடுங்கோன் முதல் பாண்டியராட்சி ஓரளவு ஓங்கி வந்திருக்கிறது. மிகச் சிறப்பாக இல்லாவிட்டாலும், இவ்வாட்சி தென் சோழநாட்டைத் தனக்குள் அடக்கி வைத்திருந்து பின்னர் ஆதித்த சோழன் காலத்தில் தான் வலி குறைந்தது. சம்பந்தரும் பெரியாழ்வாரும் நம்மாழ்வாரும் மாணிக்கவாசகரும் பாண்டியராட்சியில் வெவ்வேறு காலங்களில் சிறப்புப் பெற்றவர்கள் என்பதை நாம் நினைவு கூர வேண்டும். பேரரசன் முதலாம் இராசராசன் முதலியோர் காலத்தில் பாண்டியர் முழுமையும் வலிகுன்றி ஒடுங்கி விட்டனர். பின்னர், சோழர் வலி குறைகிற காலமாகிய 13ஆம் நூற்றாண்டில்

தான் பாண்டியருள் சிலர் பெருஞ் சிறப்படைகிறார்கள். ஆனால் இதுவும் அணைகிற தீபம் அணையும் நேரம் அதிகம் ஒளிவிடுவது போலப் பெருவலிமை பெற்றிருந்தது. 14ஆம் நூற்றாண்டில் முகம்மதியர் படையெடுப்பால் அடியோடு அழிந்து தமிழராட்சிக்கு முடிவு கட்டிற்று. மதுரையிலிருந்து தப்பியோடிய பாண்டியர் சிலர் 15-16 நூற்றாண்டுகளில் தென்காசி முதலான இடங்களில் புகழ்பெற்று வாழ்ந்தார்கள் என்று அறிகிறோம். நாம் கருதும் 9ஆம் நூற்றாண்டில் வெவ்வேறு தகுதி நிலையில் பாண்டியர் சோழர் பல்லவர் ஆகிய மூவர் ஆட்சியையும் பார்க்கிறோம்.

### பெருங்காப்பியங்கள்

விருத்தமென்னும் ஒண்பாவில் உயர்கம்பன் என்று போற்றப் பெறுகின்ற கம்பர் இக்காலத்தே வாழ்ந்து தமிழ்ப் பெருங் காப்பியமாகிய இராமாயணம் செய்தார். பண்டைத் தமிழ்க் காப்பியங்களான சிலப்பதிகாரமும், மணிமேகலையும் பெருங் கதையும் ஆசிரியப்பாவில் செய்யப்பெற்றன. விருத்தப்பாவின் யாப்பமைதிக்கு முன் தோற்றமாக, சிலப்பதிகாரத்திலேயே கலிப்பா உறுப்பாகப் பல்வகைப் பாவினங்கள் ஆட்சி பெற்றிருக்கக் காண்கிறோம். அவற்றின் பின்னும் பெருங்கதைக்கு முன்னும், ஆழ்வார் நாயன்மார் பாசுரங்களில் மிகவும் விரைவாக வளர்ந்து வந்து விருத்தப்பாவை தொடர்நிலைச் செய்யுளில் பயன்படுத்திய சிறப்பு, சிந்தாமணி செய்த திருத்தக்கதேவருக்கு உரியதென்று அறிஞர் கூறுவர். தேவர் வாழ்ந்ததும் இந்த நூற்றாண்டு ஆகும்.

ஒரு நிலையைக் குறிப்பிட வேண்டும். திருத்தக்கதேவர் சமண சமய நெறியைத் தம் நூலில் குறிப்பிட்ட போதிலுங்கூட, அவர் செய்த நூலைச் சமண நூலாகக் கொள்வதில்லை; பெருங் காப்பியமென்றே கொண்டு தமிழ் மக்கள் பயிலுகிறார்கள். அப்படியே கம்பர் பாடிய இராமாயணம், இராமனைப் பரம்பொருள் என்று பாடிய போதிலுங்கூட, அதை வைணவ நூல் என்று தமிழ் மக்கள் கருதுவதில்லை; இணையற்ற பெருங்காப்பியம் என்றே எல்லாச் சமயத்தாரும் பயில்கிறார்கள்.

### சமய இலக்கியம்

இந்த நூற்றாண்டின் இலக்கியம் சைவம் வைணவம் என்ற இரு பிரிவுகளிலும் பெருஞ்சிறப்புப் பெற்றிருக்கிறது. வேளாள

குலத்தில் தோன்றிய நம்மாழ்வார் ஆயிரத்துக்கு மேற்பட்ட அருட்பாசுரங்கள் பாடி நாடெங்கும் திருமால் பக்தி வெள்ளம் கரைபுரண்டோடும்படி செய்து தமிழ்மொழியே மனிதனுக்கு உய்தி தரும் என்று உணர்த்தி வேதத்தைச் செந்தமிழால் விரித் துரைத்தார் என்று புகழப்பெற்றார். இந்தியா முழுமையும் இன்று பரந்துள்ள வைணவ பக்தி நெறிக்குத் தோற்றுவாய் நம்மாழ் வாரே; நம்முடைய ஆழ்வார் என்ற உரிமையொட்டி அமைந்த இவர் பெயரே மிக்க அருமைப்பாடு உடையது. இவரையே தெய்வ மாகக் கொண்டு தேவுமற்றறியாது வாழ்ந்த அந்தணரான மதுர கவியும் கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற புகழ்மாலை இவர் மீது பாடித் தாமும் ஆழ்வாரானார். இவை மட்டுமல்ல: நம்மாழ் வாருக்குப் பின் மறைந்து போய் விட்ட நாலாயிர திவ்வியப் பிரபந் தங்களையும் இதே நூற்றாண்டில் கண்டு வெளிப்படுத்தித் தொகுக்க உதவி செய்தவையும் இவருடைய பாடல்களே என்று அறியும்போது இவருடைய பெருமை எல்லையின்றிப் பெருகிக் கொண்டு போகிறது.

ஒரு வாசகத்துக்கும் உருகாதோரையும் உருகச் செய்வதா கிய திருவாசகம் இந்த நூற்றாண்டில் எழுந்தது. அழகிய திருச் சிற்றம்பலமுடையானது அருமைத் திருக்கரத்தால் எழுதப் பெற் றது என்று வரலாறு கூறும் இவ்வருள் நூல் சைவ சமயத்துள் நான்காம் ஆசாரியராகிய மாணிக்கவாசகர் பாடியது. இந்த நூலும் தமிழ்வேதம் என்று சொல்லப்பெறுவது (திருவாசகம் மட்டும் அன்றி, ஆரணம் என்றும், காமநூல் என்றும், ஏரணம் என்றும், எழுத்து என்றும் பல வகையாகப் பல்லோரும் மனம் கொண்டவாறு போற்றும் திறமுடைய திருக்கோவையாரும்) இக்காலத்தே தோன்றியதாகும்.

ஒரு சிறப்பைக் குறிப்பிடலாம். சங்க காலத்தின்பின் முந் நூறு ஆண்டுக் காலம் சமய வளர்ச்சியெல்லாம் ஒடுக்கப்பட்டு இருளில் ஆழ்ந்திக் கிடந்த பாண்டிநாட்டில் பெருஞானிகள் தோன்றவில்லை என்ற அபவாதம் நீங்கும் பொருட்டு, இந்த நூற்றாண்டில் நம்மாழ்வார், மாணிக்கவாசகர் என்ற இருபெரு ஞானியரும் பாண்டி நாட்டிலேயே தோன்றியிருக்கிறார்கள்.

சைவத்தில் இக்காலப் பகுதியில் வேறு நூல்கள் தோன்றா விடினும், அடுத்த நூற்றாண்டுகளில் சிறப்பான சைவ நூல்கள்

தமிழில் தோன்றிச் சைவப்பயிரை வளர்த்திருக்கின்றன. அடுத்த நூற்றாண்டில் தோன்றியது திருவிசைப்பாவில் பெரும்பகுதி. இக்காலத்து வரகுணன் காலத்திலேயே சிவவாக்கியதேவர் என்ற ஒரு சிவ ஞானி தோன்றினார் என்று பட்டினத்தார் குறிப்பிடு கிறார். வரகுண பாண்டியனே சிறந்த சிவபக்தன். சைவமரபு இவ்வாறிருக்க, வைணவ சமயத்தில் நம்மாழ்வாருக்குப் பின் இரு நூறு ஆண்டுகள் எந்தத் தமிழ் நூலும் எழவில்லை. சுமார் 1130ஐ ஒட்டித்தான் திரு அரங்கத்தமுதனார் செய்த இராமானுச நூற்றந்தாதி தோன்றுகிறது.

இனி சைன சமயத்தில் பெருஞ் சிறப்புடைய சீவக சிந்தா மணி இக்காலத்தில் தோன்றுகிறது. இன்று இறந்துபோன வளையாபதியும் இக்காலத்தில் தோன்றியதாகலாம். ஆனால் பௌத்த சமயத்தில் மணிமேகலைக்குப் பின் நூலே இல்லை. சில நூல்கள் இருந்தனவென்று வரலாறுகளால் அறிகிறோம், நூல் இல்லை. பௌத்தம் அரசியல் ஆதிக்கம் பெறாமையால் அச்சமய நூல் எதுவும் எழவில்லை. இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் வாழ்ந்தவர் சங்கரர். அவர் காசி வரை சென்று அத்வைத நிரூபணம் செய்த போதிலும் கூட, அத்வைத பரமாக எந்தத் தமிழ் நூலும் அவர் காலத்தில் இல்லை. இந்த நூற்றாண்டிலும் தோன்றவில்லை. 13ஆம் நூற்றாண்டில் பட்ட னார் பகவத்கீதையின் தமிழ் பெயர்ப்புப் பாடுகிற வரையுள்ள இடைக்காலத்திலும் எழவில்லை.

## இலக்கண வளர்ச்சி

இந்நூல் ஐந்தாம் அத்தியாயத்தில் பாட்டியல் என்ற பொருள் விரிவாய்ப் பேசப் பெற்றுள்ளது. தொல்காப்பியம் பாட்டியலைச் சொல்லவில்லை. எட்டாம் நூற்றாண்டில் பல துறைப்பட்ட புதிய இலக்கணக் கிளர்ச்சி எழுந்தது. அதன் புதுத்துறைகள் பலவற்றில் நிகண்டு, பாட்டியல் முதலியன அடங் கும். பாட்டியல் என்பது மிகவும் விரிவானது, பல கூறுகளைக் கொண்டது. இவையெல்லாம் எமது எட்டாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் விரிவாக ஆராயப் பெறுகின்றன. அந்நூற்றாண்டில் எழுந்த புத்திலக்கண முயற்சிகள் அடுத்த நூற்றாண்டாகிய ஒன்பதிலும் விரிவாய் வளர்ந்தன. இக்காலத் துக்குரியன என்று யாம் கருதுகின்ற சில நூல்களை இங்கு விரி

வாய் ஆராய்ந்திருக்கிறோம். நூல்களில் ஒன்றும் இன்று கிடைக்க வில்லை. இக்கிளர்ச்சிக்குக் காரணம் எட்டாம் நூற்றாண்டு வர லாற்றில் உரைக்கப்பெறும். ஆனால் இந்நூல்கள் யாவும் ஏன் மறைந்தன என்பதற்குக் காரணம் புலப்படவில்லை.

சொல்லுக்குப் பொருள் வரையறை செய்கின்ற ஓர் இலக் கணப் பகுதி நிகண்டு எனப்படும். தமிழில் இன்று கிடைக்கிற முதல் நிகண்டாகிய திவாகரம் இக்காலத்தில் தோன்றியது. இதன் பின்னால் இருபதாம் நூற்றாண்டு வரை எத்தனையோ நிகண் டுகள் தோன்றியிருக்கின்றன. இவ்வளர்ச்சி அனைத்துக்கும் வித் திட்டது திவாகரம். இந்நூலுக்கு முன்னமே கூட ஒரு நிகண்டு இருந்ததாகக் கருத இடமுண்டு. அதுவும் இங்கு ஆராயப் பெறுகிறது.

இனி, தமிழுக்கே சிறப்பாக உரிய இலக்கணப் பகுதியில் அகம் புறம் என்ற இரு பிரிவுகளிலும் தனி நூல்கள் இந்த நூற் றாண்டில் எழுந்திருக்கக் காண்கிறோம். தமிழ்நெறி விளக்கம் என்ற சிறு நூல் அகப்பொருளைத் தமிழ்நெறி என்ற பெயரால், இறையனார் களவிய*லினும் சுருக்கியுரைக்கிறது. தொல்காப் பிய நெறியிலும் சிறிது வேறுபட்டு வளர்ந்தது புறப்பொருள் இலக்கணமாகிய புறப்பொருள் வெண்பாமாலை. இதன் மூல நூலாகிய பன்னிரு படலம் இன்று கிடைக்காமற் போக, இந் நூல் உரையோடு நின்று நிலவுவது பெருஞ்சிறப்புடையது.

## முத்தமிழ்

இயல் இசை நாடகம் ஆகிய முத்தமிழ் என்றே எப்போதும் பேசுகிறோம். சங்கத்தமிழ் மூன்று என்பது வழக்கு. இம்மூன்று எவ்வளவு விரிவுடையது என்பதைச் சிலப்பதிகாரத்தாலும் அதன் உரைகளாலும் அறிகிறோம். சிலப்பதிகாரத்தை அடுத்த காலத் தில் களப்பிரரால் தமிழுக்குக்கேடு விளைந்தது. இசையும் நாடக மும் அருகிப்போயின; அகப்பொருளும் ஆட்சி குன்றியது. இதை இறையனார் களவியலுரை நன்குணர்த்தும். இவற்றை மீண்டும் உயர்த்தி நிறுத்தவே திருஞான சம்பந்தர் தோன்றிக் கையில் தாளமேந்தி, நாடு முழுமையும் சுற்றி இன்னிசையால் தமிழ்

* தமிழ் என்றால் அகப்பொருள் என்றே பொருளாகும் என்று இறை யனார் களவியல் கூறுவதும் இங்கு அறியத்தக்கது.

பரப்பினார். இதன் பயனாய்த் தோன்றிய விழிப்பின் விளைவே இவருக்கு அடுத்த காலமாகிய எட்டாம் நூற்றாண்டின் பல துறை இலக்கணக் கிளர்ச்சியின் அங்கமாக இசைத்தமிழ்க் கிளர்ச்சியும் நாடகத் தமிழ்க் கிளர்ச்சியும்: நூல்களும் உதித்தன. அடியார்க்கு நல்லார் தம் உரைப்பாயிரத்துள், இசைத் தமிழுக் குரிய பெருநாரை பெருங்குருகு பஞ்சபாரதீயம், நாடகத் தமிழுக் குரிய பரதம் அகத்தியம் முதலாகவுள்ள தொன்னூல்கள், முறு வல் சயந்தம் குணநூல் செயிற்றியம் ஆகிய எல்லாம் இறந்தன வென்றும் இசை நுணுக்கம் இந்திரகாளியம் பஞ்சமரபு பரத சேனாபதீயம் மதிவாணர் நாடகத் தமிழ்நூல் ஆகிய ஐந்து நூல் களும் சிலப்பதிகாரக் கருத்தறிந்த நூல்களன்றேனும் (இவை அதன்பின் வந்த நூல்களாதலால்) அவற்றைத் துணைக்கொண்டு தாம் உரை எழுதுவதாகக் கூறுகிறார். இந்நூல்கள் யாவும் 8-9 ஆகிய நூற்றாண்டுத் தமிழ் எழுச்சிக்குரியனவாகும். இன்று இவற்றுள் ஏனைய இறந்து போயிருக்க, பஞ்சமரபு மட்டும் இறவாது கிடைத்து ஒரு பகுதி அச்சாகியிருப்பது அரியதொரு நிகழ்ச்சி. இந்நூல் இந்நூற்றாண்டுக்குரியதாய் இங்கு ஆராயப் பெறுகிறது.

அடுத்த நூற்றாண்டுகளில் இசையிலக்கணம் வளர்ச்சி பெறாவிட்டாலும், திருவிசைப்பா, திருப்புகழ் முதலிய அருள் நூல்களால் இசை இலக்கியம் வளர்ந்து கொண்டே வந்திருக் கிறது.

**சிற்றிலக்கியம்**

பிரபந்தம் என்று வரலாறறில் வழங்கிய நூற்பிரிவை இன்று சிற்றிலக்கியம் என்று சொல்வது வழக்காகியிருக்கிறது. இந்தக் காலப் பகுதியில் தனியே தோன்றிய ஒரு பிரபந்தம் மூன்றாம் நந்திவர்மன் மீது ஒரு புலவர் பாடிய நந்திக் கலம்பகமாகும்: இதுவே தமிழ்மொழியில் தோன்றிய முதல் கலம்பகப் பாட் டாகும். அன்றியும், இரும்பல் காஞ்சி நூல் இன்று இல்லாது போயினுங்கூட, இக்காலத்துக்குரிய ஒரு பிரபந்தம், நிலையா மையைக் கூறுவது. வேறு தனிப் பிரபந்தங்களாக இக்காலத் துப் பிரபந்தமெதுவும் கிடைக்கவில்லை.

இருப்பினும், அருட் பிரபந்தங்களில் பல வகையான பிர பந்த வகைகள் அமைந்திருக்கவும் காண்கிறோம். அவற்றுட்

சில, புதிய வகைகள். நம்மாழ்வார் பாடிய நூல்கள் யாவுமே அந்தாதிப் பிரபந்தங்கள், திருவாசிரியம் என்பது அளவால் சிறிய அந்தாதிப் பிரபந்தம்; ஏழே ஆசிரியப் பாடல்கள் கொண்டது. பெரிய திருவந்தாதி 87 பாடல்கள் உடையது; அந்தாதி என்றே பெயர் பெற்றிருக்கிறது, வெண்பா யாப்பு. திருவிருத்தமானது, கலித்துறை யந்தாதி, 100 பாடல்களுடையது. திருவாய் மொழியே 1102 பாடல்களுடைய தொடர்ந்த பெரியதோர் அந்தாதியாகும்.* திருவாசகத்துள், திருச்சதகம் ஒரு பதிற்றுப்பத்தந்தாதி. நீத்தல் விண்ணப்பம் ஐம்பது பாடல்களாலான ஓர் அந்தாதி. இரண்டும் மண்டலித்து வரும் அந்தாதிகள். அப்படியே கோயில் மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து என்ற பதிகங்களும் மண்டலித்து வரும் அந்தாதிகள். யாத்திரைப் பத்தும் பண்டாய நான்மறையும் பிற அந்தாதிப் பதிகங்கள். திருவெம்பாவை, திருச்சாழல், கோத்தும்பி, திருப்பள்ளியெழுச்சி என்பவை முன் நாலாயிரத்துள் அமைந்த பிரபந்தங்களைத் தழுவியவை. ஆனால் மாணிக்கவாசகர் இங்கு புதிய பிரபந்தங்கள் என்று கருதத்தக்க பல வகைகளைப் படைத்திருக்கிறார்; திரு அம்மானை, அன்னைப் பத்து, உந்தியார், குயில் பத்து, தசாங்கம், தெள்ளேணம், தோணோக்கம், பூவல்லி, பொற்சுண்ணம், பொன்னூசல் என்பவற்றை எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். இவற்றுள் அம்மானை பொன்னூசல் என்பவற்றுக்கான மூலம் சிலப்பதிகாரத்தில் வரிப்பாடலாகக் காணப்படுகிறது. பிற்காலத்தில் இவ்வகைகளுட் சிலவற்றைச் சாத்திரம் செய்தோரும் தத்துவராயர் போன்றோரும் எடுத்தமைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

### உரையும் உரைநடையும்

தமிழில் முதல் உரைநடை இறையனார் களவியலுரையில் காணப்படுவது என்று சொல்வது மரபு. அவ்வுரை சொல்லப்பட்ட காலம் எட்டாம் நூற்றாண்டு. அடுத்த நூற்றாண்டில் கூட சிறப்பான உரையோ உரைநடையோ எழவில்லை. தமிழ்

---

* அளவால் இதுவே மிகவும் பெரிய அந்தாதி நூலாகும். சேர நாட்டில் 12ஆம் நூற்றாண்டில் சீராமவர்மா என்பவர் தமிழில் பாடிய இராம சரிதம் என்பது இதனினும் பெரியது, 1815 பாடல், முழுமையும் அந்தாதியாக உள்ளது. இதை அந்நாட்டார் மலையாள மொழியில் தோன்றிய முதல் காவியம் என்பர்.

நெறிவிளக்கக் குறிப்பையும் பாரத வெண்பாவையும் இங்கு குறிப்பிட்டிருக்கிறோம்; இவற்றுள் காணும் உரைநடை பெருஞ் சிறப்புடையதன்று. அன்றியும் பாரத வெண்பா உரைநடையில் உள்ள வடசொல்லாட்சியை நோக்குமிடத்து, இதுவே பிற்காலத்தில் மணிப்பிரவாள நடையின தோற்றத்துக்கு வழிகாட்டியிருக்கும் என்ற கருத்தும் எழுகிறது. இலக்கிய உரை எதுவும் இக் காலப் பகுதியில் எழவில்லை.

உரைநடையில் மற்றொரு பகுதி கல்வெட்டு. பண்டைக் காலத் தமிழ் மன்னர் கோயில்களுக்குத் தனிப்பட்டோரும் தாமும் தந்த கொடைகளை மக்கள் என்றும் உணர்ந்து பேணிக் காக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு அவற்றைக் கோயில் உட்பகுதிக் கற்சுவரின் வெளிப்புறத்தே கல்லில் உளியால் பொறித்து வைக்கச் செய்தார்கள். இவற்றையே கல்வெட்டென்றும் சாசனம் என்றும் சொல்லுகிறோம். பாண்டியனொருவன், பல்லவர் மூவர், சோழனொருவன் ஆகியோர் சாசனப் பகுதிகளைப் பின்னே காட்டியிருக்கிறோம். இவற்றின் வாசகம் வரலாற்றாராய்ச்சியில் முக்கியமானது. இது அக்காலம் மக்கள் வழங்கிய மொழியும் சொல்லாட்சியும் வழங்கியவாறே இன்று நாம் அறிந்து கொள்ள உதவும் ஒரே சாதனம். சாசன வாசகங்களைப் பல சமயம் மொழி வல்ல பெரும் புலவர் செய்து கொடுத்தார்கள்.* அவற்றை ஓலையில் எழுதிப் புலவன் தர, ஒரு கல்தச்சன் கல்லில் பொறித்தான். கல்தச்சர் எல்லோருமே எழுத்தறிவில் சிறந்தவராயிருந்ததில்லை. இது காரணமாக, பொறித்த எழுத்தில் பிழைகள் நிரம்ப இருத்தலும் உண்டு. உதாரணமாக, கொடுத்த என்ற சொல்லைக் குடுத்த என்றே எழுதியிருப்பார்கள். பேசும்போது யாருமே கொடுத்த என்று இலக்கண சுத்தமாகப் பேசுவதில்லை; குடுத்த என்றே இன்றும் பேசுகிறோம். இந்தநிலை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னும் இருந்தது. கல்வெட்டில் இதைக் காண்கிறோம். இங்கு ஓர் எச்சரிக்கை அவசியம். இத்தகைய வடிவங்களெல்லாம் இலக்கிய வடிவங்களல்ல: பேச்சில் மட்டும் வழங்கும் திரிபு. எனினும், நவீன ஆராய்ச்சியாளர் இவையே அன்றுள்ள இலக்கிய ஆட்சி என்று கொண்டு ஆராய முற்படுகிறார்கள்.

---

* இந்த நூற்றாண்டில் பாண்டியன் சீமாறனுக்கு இவ்வாறு செய்து கொடுத்தவன் ஒரு பெருங்கொல்லனாகிய புலவன்.

இது சரியாகாது. பேச்சும் அதிலுள்ள திரிபும் ஒன்று, இலக்கிய வழக்கு வேறொன்று. இங்கு நாம் காட்ட விரும்பியது, எழுத் தறிவில்லாமையால் வந்த பிழையை வழக்கு என்று கொள்ள லாகாது என்பதே.

## சிறப்புக்கள்

சோழராட்சி தலையெடுப்பது இந்நூற்றாண்டுக்குரிய பெருஞ்சிறப்பு. வைணவ சைவ வேதங்களான திருவாய்மொழி யும் திருவாசகமும் இந்நூற்றாண்டிலே தோன்றியிருப்பது எல்லா வற்றுக்கும் மேலான சிறப்பு. தொடர்நிலைச் செய்யுளாக விருத்த யாப்பினால் சீவகசிந்தாமணி கம்பராமாயணம் என்ற இரு பெரும் காப்பியங்கள் இந்த நூற்றாண்டில் தோன்றியுள்ளன. நம்மாழ்வார் மாணிக்கவாசகர் என்ற இருவர் வரலாறும் நூல் களும் இந்நூற்றாண்டு வரலாறு இரண்டாம் பாகத்திலும், திருத் தக்கதேவர் கம்பர் வரலாறும் நூல்களும் மூன்றாம் பாகத்திலும் விரித்துரைக்கப்படுகின்றன.

இனி, உலகிலே அளவால் மிகப் பெரிய காவியம் வடமொழி மகாபாரதம் என்று சொல்லப்படும். அதைத் தமிழில் சொல் வதற்குப் பல காலங்களிலும் முயற்சி நடந்திருக்கிறது. முதல் முயற்சிகளாயிருந்த நூல்கள் நமக்குக் கிடைக்கவில்லை.* ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டில் ஒரு புலவர் வாழ்ந்து வெண்பா யாப் பில் பாரதத்தைப் பாடினார். அந்நூல் முழுமையும் இன்று கிடைக்காவிட்டாலும் ஒரு பகுதியேனும் கிடைத்து அச்சாகி யிருப்பது இந்த நூற்றாண்டின் சிறப்புக்களில் ஒன்று. மேலும் இந்த நூல் இடையிடையே உரைநடை அதிகம் விரவியுள்ளது. இவ்வகை நூலமைப்பு வடமொழி மரபில் (சம்புகாவியம்) எனப் படும். பிற்காலத்தில் இத்தகைய காவியம் தமிழில் ஒன்றேயுள்ளது.

பல்லவராட்சியின் இறுதிக் காலத்தில் இப்பாரதம் மூன் றாம் நந்திவர்மன் ஆதரவில் பாடப்பெற்றது. பல்லவர் பெரிதும் வடமொழிக்கே ஆதரவு தந்தவர்கள். ஆனால் இம்மன்னன் தமி ழுக்கு நிரம்ப ஆதரவு தந்தவன். இவனுடைய புகழாக, நந்திக் கலம்பகம் என்ற ஒரு கலம்பகம் பாடப்பெற்றது. இது இவனு டைய போர்ச்செயல்கள் பலவற்றைக் குறிப்பிடுவதனால், வர

---

* நூலிலுள்ள பாரதநூல் அட்டவணை பார்க்க.

லாற்றறிவுக்கும் துணை செய்கிற ஒரு சிறந்த பிரபந்தம்; அன்றியும் இதுவே தமிழில் முதலில் தோன்றிய கலம்பகமாகும்.

முத்தமிழில் இசைக்கும் நாடகத்துக்கும் உரியதான பஞ்ச மரபும் இந்நூற்றாண்டில் எழுந்த நூலாகும். அகம் புறம் யாப்பு பாட்டியல் ஆகிய துறைகளில் இலக்கண நூற்பெருக்கமும் ஏற்பட்டிருக்கிறது. முதன்முதலாகத் திவாகர நிகண்டு தோன்றி பின்னே எண்ணற்ற நிகண்டு நூல்கள் எழ வழி வகுத்துக் கொடுத்திருக்கிறது.

இங்ஙனமாக, தமிழின் பல்வேறு துறைகளில் பெருஞ் சாதனைகளையும் புதுச் சாதனைகளையும் இந்நூற்றாண்டில் காண்கிறோம்.

OOO

## அத்தியாயம் 1

# இலக்கியம்

### முன்னுரை

இந்த நூற்றாண்டில் தோன்றிய பேரிலக்கியங்கள் இரண்டு; சீவக சிந்தாமணியும், அதனினும் சிறப்புடையதாகிய கம்ப ராமாயணமும். இந்திய நாட்டுப் பேரிதிகாசங்கள் இரண்டு: இராமாயணமும் பாரதமும். முன்னது திருமாலின் இராமா வதாரத்தைப் பொருளாக உடையது. பின்னது பாண்டவர் சரித்திரத்தைக் கூறுமுகத்தால் இராமாவதாரத்துக்கு அடுத்த தாகிய கிருஷ்ணாவதாரத்தின் சிறப்பைக் கூறுவது. இரண்டு கதைகளும் இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவானவை; எல்லோராலும் போற்றப் பெறுபவை. மனித இனத்தின் அடிப்படையான நல்லியல்புகளையும் தீய இயல்புகளையும் உயிருள்ள பாத்திரங்களாகப் படைத்துக் காட்டி, உலகெங்கும் உள்ள மக்கட்குலம் கொள்ளத்தக்க பெருநீதிகளையும், சாசுவத மான தருமங்களையும் நிலை நாட்டுபவை. மனித குலம் வாழ்கிற வரையில் இவை சொல்லும் கதைகளும் வலியுறுத்தும் தருமங் களும் அழியமாட்டா, வாழ்ந்து கொண்டிருக்கும். இரண்டிலு முள்ள கதாபாத்திரங்கள் இந்திய மொழிகளில் இரண்டறக் கலந்துவிட்டன. மூல இதிகாசங்கள் வடமொழியில் செய்யப் பெற்றிருக்கலாம்; ஆனால் பாத்திரங்கள் ஒவ்வொரு மொழி யிலும், சமூகத்திலும், சிற்றூரிலும், வீட்டிலும், அடுக்களை யிலும், மேடையிலும், கற்றார் நாவிலும், கல்லாதார் நாவிலும், பெண்டிர் பிள்ளைகள் நாவிலும் நடம்புரிகின்றன.

இக்கதைகள் பன்னெடுங் காலமாக இந்திய மொழிகள் அனைத்திலும் காப்பியமாய்ச் செய்யப்பட்டிருந்தன. தமிழ் மொழிக்குரிய சிறப்பு, இது இந்தியப் பெருநிலத்தின் பண்டைப்

பெருமொழி என்பதற்கேற்ப, இவ்விதிகாசங்கள் இம்மொழி யிலும் பண்டைக் காலத்திலேயே செய்யப் பெற்றிருந்தமை யாகும். மறை நாலொடு ஐந்தென்று நிலை நிற்க, முனிராசரான வியாசர் பாரதம் பாடினார், விநாயகர் மேருவில் எழுதினார் என்பது பண்டை வரலாறு. நூற்பெருமை நோக்கிப் பாரதம் மகாபாரதம் எனப்பட்டது. அளவால் உலகிலேயே மிகப் பெரிய இலக்கியம் (காப்பியம்) வடமொழிப் பாரதம் என்பர்; ஹோமர் செய்த இலியட், ஆடிஸ்ஸி என்ற இரு காப்பியங்களின் மொத்த அளவைப் போல் இது பத்து மடங்கு பெரிது என்பர்.

இந்திய மொழிகள் அனைத்தினுள்ளும், தமிழிலேயே முதன் முதலாக இவை செய்யப்பெற்றன. செய்தோர் பொதுவாக வடமொழியைத் தமிழில் அப்படியே பெயர்க்காமல், கதையை மட்டும் வாங்கிப் புதுக்காப்பியம் புனைந்தார்கள். இராமா யணத்தைப் பொறுத்தவரையில், கம்பராமாயணத்திற்கு முன்பே தமிழ் இராமாயணம் இருந்தது என்று அறிகிறோம்; ஆனால் நூல் எதுவும் இன்று கிடைக்கவில்லை. அது போலவே தமிழிலும், பாரதம் பல முறை எழுதப் பெற்றிருந்தது என்று சாசனங் களால் அறிகிறோம். அவை இல்லை. முதலாவதாகக் கிடைப்பது பெருந்தேவனார் பாடிய பாரத வெண்பா. காலம் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி. கிடைத்துள்ளதும் முழு நூலல்ல : ஒரு சிறு பகுதியே. அதுவே இவ்வத்தியாயத்தில் ஆராய்கிறோம்.

## பெருந்தேவனார்

பெருந்தேவனார் என்ற பெயர் சிவபெருமானைக் குறிப்பது (பெருந்தேவன் - வடமொழியில் மகாதேவன் சிவபெருமான்). இப்பெயரைத் தாங்கிய புலவர் தமிழ் இலக்கியப் பரப்பினுள் பலர் காணப்படுகின்றனர். அவர் பெயர்களையும் செய்யுள் களையும் ஆராய்ந்து விளங்கக் கூறுகிறோம். அட்டவணை பின்னே உள்ளது.

**1. சங்க நூற் பெருந்தேவனார் :**

இவர் நற்றிணை, பாடல் 83, அகநானூறு 51 ஆக இரு பாடல்கள் பாடியவர். சுவையுடைய பாடல்கள்; இரண்டும் குறிஞ்சியும் பாலையுமாகும்.

### 2. கடுகு பெருந்தேவனார் :

குறுந்தொகை 255 பாடியவர். இவர் வேறாவர்; வையாபுரிப் பிள்ளை பதிப்பித்த சங்க இலக்கியப் பதிப்பில் இவர் பாடலையும் முதலிற் காட்டிய சங்க நூற் பெருந்தேவனார் என்ற தலைப் பிலேயே சேர்த்து அச்சிட்டிருப்பது பொருந்தாது.

### 3. பாரதம் பாடிய பெருந்தேவனார் :

இவர் பெயரால் தொகை நூல்கள் ஐந்திற்குக் கடவுள் வாழ்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளது. அங்கு, சிவபிரானை மூன்று பாடல்களாலும், முருகனை ஒரு பாடலாலும், திருமாலை ஒரு பாடலாலும் வணங்குகிறார். அகநானூறு ஐங்குறுநூறு புறநானூறு - சிவபிரான் துதி; குறுந்தொகை - முருகன் துதி; நற்றிணை - திருமால் துதி. இவர் பொது நோக்குடையவ ராயினும், சிறந்த சைவரென்றே அறியலாம். தொகை நூல்கள் தொகுக்கப் பெற்ற காலத்தில் இவர் வாழ்ந்து, சிலவற்றுக்குக் கடவுள் வாழ்த்தும் பாடினாரென்று கருத முடியும். இவர் ஒரு பாரதம் தமிழில் பாடியிருந்தார். (அந்நூல் இப்போது இல்லை) அது பற்றியே இவருக்குப் 'பாரதம் பர்டிய' என்ற அடை வந்தது. சின்னமனூர்ச் செப்பேடுகள் குறிப்பிடும் பாரதம் (மாபாரதம் தமிழ்ப் படுத்தும்) இதுவேயாகும். காலம் கி.பி. 700க்கு முன்பாகும்.

'தொன்மை தானே உரையொடு புணர்ந்த பழமை மேற்றே' என்ற தொல்காப்பியச் சூத்திரத்துக்கு (பொருள் 237) உரை எழுதிய விடத்து, பேராசிரியர் 'தொன்மை என்பது உரை விராஅய்ப் பழமையவாகிய கதைப் பொருளாகச் செய்யப்படுவது என்றவாறு. அவை பெருந்தேவனாராற் பாடப்பட்ட பாரதமும் தகடூர் யாத்திரையும் போல்வன' என்று கூறுகிறார். இவர் கூறியபடி பழமையான கதைப் பொருளாகச் செய்யப்பட்ட பாரதம், இங்கு குறிப்பிட்ட பழைய பாரதமேயாகும். பின்வரும் பெருந்தேவனார் பாரத வெண்பாவன்று. பாரத வெண்பாவின் உரைப்பகுதியில் காணும் வடசொற்களை எண்ணும்போது, அப்பாரதம் பேராசிரியர் குறிப்பிடும் பாரதமாயிருக்கவியலாது என்பது தெளிவு. நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் புறத்திணை யுரையில், ஆசிரியமும் வெண்பாவுமாகப் பத்துப் பாடல்களை மேற்கோள் தருகிறார். இவை யாவும் இப்பாரதத்தைச் சேர்ந் தனவாகும் எனலாம்.

| பெருந்தேவனார் | | | | |
|---|---|---|---|---|
| எண் | பெயர் | காலம் | நூல் | குறிப்புக்கள் |
| 1. | சங்ககாலப் பெருந்தேவனார் | கி.பி.100க்கு முன் | அகநானூறு 51, நற்றிணை 83. | இவை முறையே பாலையும் குறிஞ்சியும். |
| 2. | கடுகு பெருந்தேவனார் | கி.பி.100க்கு முன் | குறுந்தொகை 255 | இவர் 1லிருந்து வேறானவர். |
| 3. | பாரதம் பாடிய பெருந்தேவனார் | 700க்கு முன் | சங்க நூற் கடவுள் வாழ்த்து அகம், புறம், ஐங்குறு நூறு சிவபிரான் துதி; குறுந்தொகை முருகன்; நற்றிணை திருமால். | எட்டுத் தொகை தொகுக்கப் பெற்ற காலம் வாழ்ந்தவர். சின்னமனூர்ச் செப்பேடு 'மாபாரதம் தமிழ்ப்படுத்தும்' என்று குறிப்பிடுவது இவராகலாம். ஆகவே காலம் கி.பி.700க்கு முன். இவர் தமிழ்ப்படுத்திய மாபாரதம் இன்று இல்லை. |
| 4. | பார வெண்பாப் பாடிய பெருந்தேவனார் | 825 - 50 | இன்று ஒரு பகுதி அச்சிலுள்ள பாரத வெண்பாப் பாடியவர். | மூன்றாம் நந்திவர்மன் காலம். நூலுள் தெள்ளாற்றுப்போரைக் குறிப்பிடுகிறார். இவரே இக்கட்டுரையுள் ஆராயப் பெறுகின்றார். |
| 5. | பெருந்தேவனார் | 1100 - 25 | வீர சோழிய உரை. | |
| 6. | கவி சாகரப் பெருந்தேவனார் | | இவர் பெயரில் பூவிற்குத் தாமரையே என்ற திருவள்ளுவ மாலைப் பாடல் | இப்படியொருவர் இருந்ததில்லை. திருவள்ளுவமாலை ஆராய்ச்சி காண்க. (11 நூற்றாண்டு இலக்கிய வரலாறு) |

**4. பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனார் :**

இவர் மூன்றாம் நந்திவர்ம பல்லவனால் ஆதரிக்கப் பெற்று வாழ்ந்தவரென்று கருதலாம். காலம் 9 ஆம் நூற்றாண்டு.

**5. வீரசோழிய உரைகாரர் பெருந்தேவனார்* :**

இவ்வுரை உள்ளது. இவர் காலம் 12ஆம் நூற்றாண்டு (கி.பி. 1105).

**6. கவிசாகரப் பெருந்தேவனார் :**

இவர் பாடியதாகத் திருவள்ளுவ மாலையில் 'பூவிற்குத் தாமரையே' என்ற பாடல் காணப்படுகிறது.

பூவிற்குத் தாமரையே, பொன்னுக்குச் சாம்புநதம்,
ஆவிற் கருமுனி ஆ, யானைக்கு அமரர்உம்பல்,
தேவில் திருமால் : எனச்சிறந்த தென்பவே,
பாவிற்கு வள்ளுவர் வெண் பா.

திருவள்ளுவ மாலை போலியாகப் புனைந்த ஒரு நூல் என்பது எம்மால் வேறிடத்தில்❖ விரிவாக விளக்கப்பட்டுள்ளது. கவி சாகரப் பெருந்தேவனார் என்ற பெயரும் அப்போலியாசிரி யரின் கற்பனையில் விளைந்த ஒரு பெயரேயன்றி, இப்படி ஓர் ஆசிரியர் இருந்ததாகச் சொல்வதற்கில்லை.

பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற பெயரில் அம் மாலை யில் காணப்படும் 'எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுற' என்ற பாடலும் ஒரு போலிப் பாடலே; இப்பெருந்தேவனா ருக்குச் சம்பந்தமில்லை.

எப்பொருளும் யாரும் இயல்பின் அறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாம் செப்பவரும் – முப்பாற்குப்
பாரதம்சீ ராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர்.

என்பது அப்பாடல். திருவள்ளுவமாலை பாடியவர், பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற பெயரில் ஒரு பாடலைப் பெய்து கொண்ட போது, பொருத்தம் அமையும் படியாக அதனுள் பாரதம் என்ற நூலைக் குறிப்பிட்டுக் கொண்டாரெனக் கருத வேண்டும்.

---

* இவர் வரலாற்றை எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

இவ்வாறு கூறப்பெற்ற பெருந்தேவனார் அறுவருள், நாம் இங்கு ஆராயப் போவது நான்காம் எண்ணுள்ள பாரத வெண்பாப் பாடிய பெருந்தேவனார் வரலாறாகும்.

**ஆசிரியர்**

இவ்வாசிரியரைக் குறித்துத் தனித்து அறியத்தக்கதாக எதுவும் தெரியவில்லை. மூன்றாம் நந்திவர்ம பல்லவனை இவர் புகழ்வதால், அவனாற் சிறப்பிக்கப் பெற்று அவன் அவைப் புலவருள் ஒருவராக இவர் வாழ்ந்தாரென்று கருத இடமுண்டு. (காலம் என்ற அடுத்த தலைப்புப் பார்க்க) இது கொண்டே தொண்டை மண்டல சதகமுடையார் இவர் தொண்டை மண்டலத்தில் வாழ்ந்தவர் என்று பாடியிருக்கிறார். (53)

> சீருறும் பாடல்பன் னீரா யிரமும் செழுந்தமிழுக்கு
> வீரர்தம் சங்கப் பலகையி லேற்றிய வித்தகனார்
> பாரதம் பாடும் பெருந்தேவர் வாழும் பழம்பதிகாண்
> மாருதம் பூவின் மணம்வீ சிடும்தொண்டை மண்டலமே.

பெருந்தேவனார் சங்கப் புலவர் என்ற கருத்து பிழையான போதிலும் கூட, இவர் பாடிய பாரதம் இப்பாடல் கூறுகின்ற படி பன்னீராயிரம் பாடல் என்பது கொள்ளக் கூடியதே. கிடைக்கின்ற சிறு பகுதி 830 பாடலாயிருக்க, முழு நூலும் பன்னீராயிரமாயிருக்கலாம் என்பது பொருந்தத்தக்கதே.

பெருந்தேவனார் தொண்டை மண்டலத்தார் என்று கருதுவதற்கு, இவர் பல்லவ வேந்தனைப் புகழ்ந்திருப்பதோடு கூட, நூலகத்தே மற்றுமோர் ஆதாரமும் கிடைக்கிறது. 'தேனோங்கு சோலை'* என்ற பாடலில் இவர் குறிப்பிட்ட தலங்கள் திருமலை, அழகர் திருமலை, திருவரங்கம் பெரிய கோயில், (காஞ்சிப்) பெருமாள் கோயில் என்ற நான்கு. கச்சிப் பெருமாள் கோயில், அத்திகிரி வரதராசர் கோயில் என்பதாகும். இதை ஆசிரியர் மூன்றிடங்களில் குறிப்பிடுகிறார் -349, 484, 514. இவற்றுள் இரண்டில் அத்திகிரியை மட்டும் குறிப்பிடுகிறார்; ஒரு பாடலில் (349), கண்ணன் துரியோதனிடம் தூது சென்று வந்ததைக் கூறும் போது கண்ணனை 'அத்திகிரி மன்னும் பெருமான்' என்கிறார்.

> கொன்னவில்வேல் நாகக் கணைதடுப்பக் குந்திதனைக்
> கன்னனிடை விட்டதொரு காரணமும் – முன்னி

* இப்பாடலைப் பின்னே துதிப்பாடல்கள் என்ற தலைப்பில் காணலாம்.

வருவார் தமக்கருள அத்திகிரி மன்னும்
பெருமான் உரைத்தான் பெயர்ந்து.

மற்ற இரு பாடல்களும் கடவுள் வாழ்த்துப் பாடல்கள். வேறு எந்தத் தலத்தையும் இவ்வாறு இவர் குறிப்பிடவில்லை. (மாவிந்தப் பகுதியிலும் அத்திகிரி ஒருமுறை கூறப்பட்டுள்ளது) இவற்றால் இப்பெருந்தேவனார் உண்மையிலேயே காஞ்சியில் வாழ்ந்தார். அத்திகிரிப் பெருமானிடத்து மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார் என்று முடிவு செய்யலாம்.

இவர் திருமாலிடத்து எல்லையற்ற பக்தியுடையவர் என்பதை இவர் பாடிய பல கடவுள் வாழ்த்துப் பாடல்களும் நன்கு எடுத்துக்காட்டும். 'மெய்யடியைத் தெள்ளி யுணர்ந்தா ரவர்கள் சிந்தையுள்ளே வீற்றிருப்பான்' (85) என்று திருமாலைக் குறிப்பிடுவார். கண்ணன் திருமால் என்று சொல்லவரும் இடங் களிலெல்லாம் ஸ்ரீவாசுதேவன் என்றே சொல்வார்; ஸ்ரீநாராயண சுவாமி என்பதும் உண்டு.

காலம்

இப்பெருந்தேவனாரின் காலம் மிகவும் திட்டமாய்த் தெரிந் தது. உத்தியோக பருவத்தின் நான்காம் பாடலிலும் உரையிலும் இவர் தம்மை ஆதரித்த பல்லவ அரசனைப் புகழ்ந்து பாடுகிறார்.

வண்மையால் கல்வியால் மாபலத்தால் ஆள்வினையால்
உண்மையாற் பாராள் உரிமையால் – திண்மையால்
தேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானோடு
யார்வேந்தர் ஏற்பார் எதிர்.

எல்லையி னிறைந்த எண்திசை யுலகத்து
மலையும் மலையும் உள்ளிட்ட
மண்மிசை முழுதும் மறையது வளர்க்க
அல்லி பீடத் தரிவைக்குத் தன்
அழகமர் தோளே ஆலய மாக்கிய
பல்லவர் கோமான் பண்டிதராலயனைப் பரவினேம்.

தெள்ளாற்றில் வென்றான் என்றமையால் இவன் மூன்றாம் நந்திவர்மன் (830-850) என்பது பல்லவ நாட்டு வரலாற்றால் நன்கறியப்பட்ட செய்தி. தெள்ளாற்றுப் போர் கி.பி. 832 என்பது அறிஞர் முடிபு. ஆகவே இப்பெருந்தேவனார் காலம் கி.பி. 832-850க்குள் என்பது மிகவும் திட்டமாக ஏற்படுகிறது.

பல்லவ வேந்தனை இவர் பண்டிதராலயன் என்று பரவுகிறார். நந்திக் கலம்பகம் இவன் மீது பாடப்பட்ட நூல்; இதன் வரலாறு இவனுடைய தமிழ் அன்பையும் புலமையையும் நன்கு புலப்படுத்தும். ஆதலால் பண்டிதராலயன் என்ற பெயர் இவனுக்கு எத்துணை பொருந்தக் கூடியது என்பது தெளிவாய்த் தெரிகிறது.

மூன்றாம் நந்திவர்மனுடைய காலத்தால் பெருந்தேவனாருடைய காலமும் திட்டமான வரையறை பெறுகிறது. மற்றும் ஒரு குறிப்பும் சொல்லக்கூடும். பாரத வெண்பாவில், சத்திய வாக்கியம், வாக்கியன் என்ற தொடர்கள் சிலமுறை வருகின்றன. சொன்ன சொல் தவறாதவன் என்பது பொருள். சத்திய வாக்கியன் என்று கி.பி. 815-53இல் ஆட்சி புரிந்த கீழைக் கங்க அரசன் பெயர் பெற்றிருந்தான். அவன் பெயரே (முதலாம்) இராச மல்லச் சத்தியவாக்கியன். பல்லவருக்கும் கங்கருக்கும் அக்காலத்தில் நட்புத்தொடர்பு உண்டு. இவ்விராசமல்லனுடைய பேரன் காலத்தில் கங்கர் கிளையொன்றில் அரசனாயிருந்த பிருதிவிபதி என்பவன் நந்திவர்மன் புதல்வனான நிருபதுங்க வர்மன் ஆதித்த சோழனுக்குப் படைத்துணை அனுப்பிய போது தானும் தன் படையோடு வந்து இரண்டாம் வரகுண பாண்டியனோடு திருப்புறம்பயத்தில் நடந்த போரில் உயிர் துறந்தான் என்று வரலாறு கூறும். எனவே நந்திவர்மன் காலத்தில் பெருந்தேவனார் கங்க மன்னன் பட்டமான சத்திய வாக்கியன் என்பதை நன்கறிந்திருந்தார் என்று கருதலாம். அத் தொடரை இவர் தருமபுத்திரனைக் குறிப்பிடுமிடமெல்லாம் பயன்படுத்துகிறார்.

**பாரத வெண்பா**

கிடைக்கின்ற பாரத வெண்பா, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்; அதாவது வெண்பாப் பாட்டும், சில சமயம் அப்பாடலை விளக்கியும், விளக்காமலும். மேலும் கதைத் தொடர்பை அமைத்தும் கூறுகின்ற உரைநடைப் பகுதியும் உடையது. பாடல் பகுதி நல்ல செந்தமிழ் நடை கொண்டது. உரைநடைப் பகுதியில் வடசொற்களும் தொடர்களும் அதிகம் பயில்கின்றன. வேறான இவ்வியல்பைக் கண்டவர்கள், வெண்பா மட்டுமே பழைய நூல், உரை நடை பிற்காலத்தில் சேர்க்கப் பட்டது என்றும் சொல்லுவர். இது சரியன்று. வடமொழியில் சம்புகாவியம் என்று சொல்வதுபோல, தமிழும் வடமொழியும் வல்ல ஒரே ஆசிரியர் இரண்டு பகுதிகளையும் செய்தார் என்று தான் கருத வேண்டும். தெலுங்கில் பெரும்பகுதி சம்பு காவியமே.

**உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் – சம்பு காவியம்**

| எண் | நூல் | ஆசிரியர் | பாடல் | யாப்பு | காலம் | விளக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 1. | சிலப்பதிகாரம் | இளங்கோ அடிகள் | 30 காதை | ஆசிரியம் | 2 நூ. | வெண்பா, கலிவெண்பா, வரிப்பாடல்களும் உள்ளன எனினும் இதில் வரும் பகுதிகள் உரைநடை என்று கொள்ளவியலாது. |
| 2. | தகடூர் யாத்திரை | --- | --- | ஆசிரியமும் வெண்பாவும் | | மேற்கோள் பாடல்கள் சில மட்டுமே கிடைக்கின்றன. |
| 3. | தமிழ்ப்பாரதம் | --- | --- | ஆசிரியமும் வெண்பாவும் | 700க்கு முன் | பேராசிரியர் இது உரை விராயது என்று சொல்கிறார். |
| 4. | பாரதவெண்பா | பாரதம் பாடிய பெருந்தேவனார் | 830 + 339 | 818 வெண்பா 6 விருத்தம் 6 ஆசிரியம் மாவிந்தப் பகுதி 339 வெ. | 9 நூ. | பெருநூல். சில பகுதிகளே கிடைக்கின்றன. மிகவும் பழமையான உரைநடைப் பகுதி. |
| 5. | ஜீவசம் போதனை | தேவேந்திர முனிவர் | 550 | வெண்பா; சில ஆசிரியம் விருத்தம் கலிப்பா | 14 நூ. | சைன சமய தத்துவம் போதிக்கும் நூல். |
| 6. | வீரமாறன் கதை | --- | --- | --- | 18 நூ. | கதைப் பொருள். |
| 7. | அரிச்சந்திர வெண்பா | --- | --- | --- | --- | --- |

11ஆம் நூற்றாண்டில் நன்னயர் பாரதம் சம்பு. பின்னரும் வடமொழிப் புராண இதிகாசங்களை மொழிபெயர்த்தோர் சம்பு வாகவே செய்தனர்.*

ஈண்டு என்ற சொல்லை இவ்வாசிரியர் ஈண்டன் என்றே வழங்குகிறார். இவ்விருவிதமான ஆட்சி வெண்பாவிலும் காணப் படுகிறது. இரண்டையும் ஒரே ஆசிரியர் செய்தார் என்பதற்கு இதுவுமொரு சான்றாகும்.

பிற்காலத்தில் (14 நூற்.) சீவசம்போதனை என்ற சைன சமய நூல் இதே இயல்புடையதாய்ச் செய்யப் பெற்றிருப்பதும் அறியத் தக்கது. தகடூர் யாத்திரையும் (இது மிகப் பழைய நூல்) இவ்வியல் புடையது என்று தொல்காப்பிய உரையால் அறிகிறோம். அந்நூல் இப்போது கிடைக்கவில்லை. உரைவிராய்ச் செய்யப் பட்ட பெருந்தேவனார் பாரதம் என்று பேராசிரியர் கூறும் பழைய பாரதம் இப்பெருந்தேவனாருக்கு முன் மாதிரியாய் இருந்திருக்கலாம்.

பாரத வெண்பாப் பகுதிகள் சில தனித்தனியே சிலரால் அச்சிடப்பட்டிருந்த போதிலும், இவற்றை ஒருங்கு சேர்த்து ஒரே நூலாக 1925இல் பண்டித கோபால ஐயர் முதன் முதலாக அச்சிட்டார். இதனுள் நூற்பாடல்கள் 830 அடங்கியுள்ளன; இங்கு அடங்கிய பகுதிகள் உத்தியோக பருவம், வீடும பருவம், துரோண பருவத்தில் பதின்மூன்றாம் நாட்போர் வரையில் ஆகியவையே. இவற்றுள் வெண்பாவும் உரைநடையும் இருப்ப தோடு, ஆசிரியப்பாக்கள் ஆறும், விருத்தப்பாக்கள் ஆறும் அடங்கியுள்ளன. அவற்றின் அமைப்பு பின்வருமாறு:

---

* சம்பு காவியம் வடமொழிப் பெயரிலிருந்துங்கூட தமிழில்தான் முதன்முதல் எழுந்தது. பின்னர்தான் வடமொழி போஜராஜன் சம்பு காவியம். காலம் 10ஆம் நூற்றாண்டுகளில் என்று சொல்லுவர். 'செய்யுள்காவியம் சுவையிருப்பினும் ஒரு சமயம் தெகிட்டிவிடும். ஆகவே நான் உரைநடையும் சேர்த்துச் செய்கிறேன்.' தெலுங்கு நன்னயர் பட்டர் சோழ நாட்டிலிருந்து 11ஆம் நூற்றாண்டில் தெலுங்கு நாடு சென்றுள்ளார். அவர் பாரதம் அம்மொழியில் ஆதிகாவியம். இதுவரை எல்லோரும் அவர் வடமொழியில் பார்த்தே சம்புவாகச் செய்தார் என்று கருதுகிறார்கள் இது சரியல்ல. தமிழில் சம்பு இருந்ததைப் பார்த்து இவர் தெலுங்கில் செய்தார். - நாராயண நன்னய பட்டர் பாரதப் பிரசங்கம் - ஐயர்.

| பருவம் | வெண்பா | ஆசிரியம் | விருத்தம் |
|---|---|---|---|
| உத்தியோகபருவம் | 479 | 4 | - |
| வீடும பருவம் | 191 | - | 3 |
| துரோண பருவம் | 148 | 2 | 3 |
| | 818 | 6 | 6 |

துரோண பருவமும் பூர்த்தியாக இல்லை. கிடைக்கும் பகுதிகளில் தௌமியன் தூது செல்வது தொடங்கிப் பதின் மூன்றாம் நாட்போரில் அபிமன்னன் இறக்க, அருச்சுனன் துயரந் தாங்காது தீயில் விழ எத்தனிப்பது வரையில் உள்ளது. பாரதத்தின் இறுதிப் பகுதியாகிய சுவர்க்கா ரோகணப் பருவம் என்பதன் பகுதி 'மகாவிந்தம்'* என்ற பெயரில் தஞ்சை சரசுவதி மகால் வெளியீடாகத் தனியே வெளிவந்துள்ளது. அது பற்றிய ஆராய்ச்சியைத் தனியே தருகிறோம்.

நூற் பகுதிகளுள் வாசுதேவன் தூது என்ற பகுதியே அளவில் மிக நீண்டது. 246 வெண்பாக் கொண்டது. ஆசிரியப்பாக்கள் 20 அடிச் சிறுமையும் 150 அடிப் பெருமையும் உடையன. இவை, தௌமியன் தூது பயனற்றுப் போனமையறிந்து கண்ணன் அருச்சுனனை அழைப்பித்தல், துரியோதனன் அவையில் அவன் கொண்ட விசுவரூப வருணனை, குருக்ஷேத்திரத்தில் நின்ற படையின் வருணனை, வீடுமன் இப்படையை வெல்லும் ஆற்றல் உடையார் யாவர் என்று கூறுதல், தருமராசனைச் சிறை செய்ய உதவுவதாக அரசர் கூறும் வஞ்சினம், அபிமன்னன் இறந்தபோது அருச்சுனன் புலம்பல் ஆகிய சந்தர்ப்பங்களில் எழுந்தன. இவற்றுள் விசுவரூப வருணனையே மிக நீண்ட பாடல்; 150 அடி.

விருத்தப் பாக்கள், வீடுமன் பட்டமை கேட்டுத் திருதராட்டிரன் புலம்பல், அபிமன்னன் வீரம் கண்டு துரியோதனன் படை வியப்படைதல், அவன் பாடு கேட்டுத் தரும புத்திரன் புலம்பல் ஆகிய நிலைகளில் எழுந்தவை. எண் சீராயும் அறு சீராயும் உள்ளன. விருத்தப்பாக்கள் நாயன்மார் காலத்தும் ஆழ்வார் காலத்தும் யாப்பளவில் மிக்க செப்பமுடையனவாய் வளர்ந்து விட்டன. பிற்காலத்தில் சீவக சிந்தாமணிக்காரரே இதைச் செப்பமுடையதாக ஆக்கினார் என்று பலர் கருதும்

* இப்பகுதிகளையன்றி, பிறிதும் சில பகுதிகள் தம்மிடம் இருப்பதாக, வேலம்பாளையம் வித்துவான் தெய்வசிகாமணிக் கவுண்டரவர்கள் சொல்லியிருக்கிறார்.

கருத்து அத்துணைப் பொருத்தமுடையதன்று. பெருந்தேவனாரும், இங்குள்ள ஆறு விருத்தங்களிலும், எண்சீர் விருத்தங்களையும், அறுசீர் விருத்தங்களையும் நான்கு வகையான யாப்பில் பயன் படுத்துகிறார்; இப்பாடல்கள் நன்கு செப்பம் செய்யப் பெற்றே உள்ளன. முழுப் பாரதத்தில் பின்னும் பல பாடல்களும் இருத்தல் கூடும். ஆகவே, பின்வந்த சிந்தாமணியில் விருத்தப்பா செப்பம் பெற்றது என்பார் கூற்று முழுமையும் பொருந்துவதன்று. முழுக் காவிய நூலாக இந்த யாப்பைத் திருத்தக்க தேவர் முதலில் பயன்படுத்தினார் என்ற அளவுக்கு வேண்டுமானால், இக்கூற்றை நாம் ஒப்புக் கொள்ளலாம்.

பெருந்தேவனார் பாரதப் பாட்டுக்கள் சில தொல்காப்பியம் புறத்திணை இயலில் நச்சினார்க்கினியர் உரைமேற்கோளாக வந்துள்ளன. பத்துப் பாடல்கள்; இங்கு வெண்பாவும் ஆசிரி யமும் பயில்கின்றன. இவையன்றி வீரசோழிய உரையிலும் புறத்திரட்டிலுமாக 32 பாடல்கள் காணப்படுகின்றன. இவையும் நச்சினார்க்கினியர் காட்டும் பாடல்களும், ஒன்பதாம் நூற் றாண்டுக்கு முற்பட்ட மற்றொரு பாரத வெண்பாவிற்குரியன என்று முன்னே குறிப்பிட்டோம். இவற்றுள் பெரும்பான்மை நீதி கூறும் பாடல்களாக உள்ளன. நாம் கருதும் பெருந்தேவனார் பாடலில் நீதிப் பாடல்கள் பெரிதும் பயிலவில்லை. பாரத வெண்பாப் பாடல்களை, கொலை மறுத்தல் உரையில் சிதம்பர சாமிகள் 'இதிகாசம்' என்று பெயரிட்டு எடுத்துக் காட்டுகிறார்.

### நூற்பொருள்

கிடைக்கின்ற நூற்பகுதி உத்தியோக பருவத்தில் தொடங்கி, அடுத்த பருவமாகிய வீடும பருவமும் கடந்து, துரோண பருவத்தினுள் பதின்மூன்றாம் நாள் போர் வரையில் சென்று அபூர்த்தியாய் முடிகிறது. உத்தியோக பருவமென்பது, பாண் டவர் தூதுவிடுதலும் அது பயனற்றுப் போகவே இரு திறத்தாரும் குரு க்ஷேத்திரத்தில் தங்கள் படைகளைத் திரட்டிப் போருக்கு ஆயத்தமாகிறவரை கூறுவது. வீடும பருவம் என்பது, பீஷ்மர் படைத்தலைமை வகித்து நடத்திப் பத்தாம் நாள் போரில் அவர் படுகிற வரையில் போரை நடத்துகின்ற பகுதி. துரோணப் பருவம், துரோணாசாரியர் படைத் தலைமை வகித்து நடத்து வதைக் கூறும் பகுதி.

## உத்தியோக பருவம்

வனவாசம் முடித்து அஞ்ஞாத வாசத்திலிருந்து வெளிப் பட்ட பாண்டவரைக் காண விரும்பி வருகின்ற மத்திரராசன் சல்லியனைத் துரியோதனன் வஞ்சித்துத் தன் வசப்படுத்திக் கொள்ளவே, அவன் சென்று பாண்டவரைக் கண்டு நிலைமை கூறுகிறான். உத்தரை திருமணம் நடக்கிறது. தருமபுத்திரன் தனது புரோகிதனான தௌமியனைத் துரியோதனனிடம் தாயபாகம் கேட்டுத் தூதனுப்புகிறான். பெரியோர் சொற்கேளாது, அவன் பாகம் கொடுக்க மறுக்கிறான். தௌமியன் சென்று இதைக் கண்ணனுக்கும் உணர்த்தி வருகிறான். திருதராட்டிரன் சொற்படி கண்ணனைப் படைத்துணை அழைக்கச் சென்ற துரியோதனன், கண்ணன் துயில் கொண்டு இருப்பது கண்டு அவன் தலைப் பக்கத்தில் அமர்கிறான். பின் வந்த அர்ச்சுனன் கால்பக்கம் அமர்கிறான். பின்னர் கண்ணன் அருச்சுனனுக்குச் சாரதியாக இருக்கவும், தன்னவர் அனைவரையும் துரியோதனனுக்குப் படைத்துணை அனுப்பவும் இசைகிறான். பின் உபலாவிய நகரத்தில், தருமன் கண்ணனைத் தூது போகுமாறு வேண்ட, அவன் பாண்டவருடைய உள்ளக் கருத்தை வினவுகிறான். சகாதேவன் மனநிலை அறிந்து அவனுக்கு வரம் கொடுக்கிறான். பின்னர் தூது சென்றபோது விதுரன் மனையில் தங்குகிறான். துரியோதனன் நாடு கொடுக்க மறுக்கிறான். விதுரனை இகழவே, அவன் சினந்து தனது வில்லை முறித்துப் போகிறான். கண்ணன், கன்னன் பிறப்பைக் குந்திக்கு உணர்த்துகிறான். மறுநாள் துரியோதனன் கண்ணனைப் படுகுழியில் வீழ்த்த, கண்ணன் விசுவரூபம் எடுக்கிறான். அந்த ரூபத்தைத் தரிசிக்கக் கண்ணன் திருதராஷ்டிரனுக்குக் கண் அளித்து, மீட்டுக் கொள்கிறான். பின் கன்னனையும் அசுவத்தாமனையும் பேதிக்கிறான். கன்னன் வருவது உணர்ந்து சர்வதானம் செய்கிறான். இந்திரனை அனுப்பிக் கன்னனுடைய கவச குண்டலங்களையும் சிகாமணியையும் தானம் பெறச் செய்கிறான். கன்னனுக்கு இந்திரன் வேல் கொடுத்து மீள்கிறான். குந்தி சென்று கன்னனுக்கு அவன் பிறப்புணர்த்தி வரம் பெற்று வருகிறாள். திருதராட்டிரன் போர் தவிருமாறு தருமனுக்குச் சஞ்சயனைத் தூதனுப்புகிறான். இருவர் படையும் குருக்ஷேத்திரத்தில் திரள்கின்றன. நாள் குறித்து கடோர்க்கசன் துரியோதனனிடம் தூது சென்று வருகிறான். துரியோதனன் மாயத்தேர் பெற்று பீஷ்மர் சொற்படி சகாதேவனிடம் சென்று களப்பலிக்கு நன்முகூர்த்தம் கேட்டு, தருமன் அணியிலுள்ள

அரவானைப் பலியாவதற்கு இசையச் செய்து கொள்கிறான். நிகழ்ந்தது அறிந்து கோபித்த கண்ணன் சதுர்த்தசியை அமாவாசை யாக்கி அரவானுக்கு வரம் கொடுத்து அவனைப் பலியிடுவிக் கிறான். துரியோதனன் சினந்து பலியூட்டாமலே அணிவகுத்து வைக்கிறான். பீஷ்மன் தலைமை. அவன் கன்னனை அதிரதரில் சேர்க்காது அர்த்தரதரில் சேர்த்தமைக்குக் கோபித்துக் கன்னன் விலகுகிறான். இப்படையை வெல்வார் யார் எனக் கேட்ட துரியோதனனுக்கு வீடுமன் விடை அளிக்கிறான். போர் புரியேன் என்ற அருச்சுனனுக்குக் கண்ணன் கீதை உபதேசம் செய்து, போர் புரிவிக்கிறான். தருமன் வீஷ்மர் துரோணரிடம் சென்று பணிந்து மீளுகிறான். கண்ணன் கன்னனை மீண்டும் பேதித்தல்.

இப்பருவத்தில் போருக்குப் பூர்வாங்கமாய் நடந்த நிகழ்ச் சிகள் யாவும் சொல்லப்படுகின்றன.

**வீடும பருவம் :**

முதல் நாள் போரில் பாண்டவர் படைத் தலைவனாய் இருந்த சுவேதனைக் கண்ணன் அசரீரியாக நின்று வீடுமனைக் கொண்டு கொல்விக்கிறான். இரண்டாம் நாள் கடும்போர். மூன்றாம் நாள் வீடுமன் கடும்போர் செய்யக் கண்டு கண்ணன் சக்கராயுதம் எடுக்கவே அர்ச்சுனன் தடுக்கிறான். நான்கு, ஐந்து, ஆறு, ஏழு நாட் போர்களில் கடும் போர் நிகழ்கிறது. எட்டாம் நாட் போரில் அலம்புசன் அரவானைக் கொல்லுகிறான். வீடுமன் தான் பத்தாம் நாட் போரில் படுவதாயும், பதினோராம் நாள் கன்னன் தன் திறமையைக் காட்டலாம் என்றும் கூறுகிறான். ஒன்பதாம் நாள் கடும்போர். பத்தாம் நாள் வீடுமன் தன் முடிவை உணர்ந்து மகாதானம் செய்து போரில் இறங்குகிறான். சிகண்டியை முன்னிட்ட அருச்சுனன் அம்பினால் படுகிறான். பாண்டவர் வணங்குகிறார்கள். துரோணன் சேனாதிபதியாகிறான்.

**துரோண பருவம் :**

தரும புத்திரனைப் பிடித்துத் தரும்படி துரியோதனன் கேட்கிறான். அருச்சுனனைப் பிரித்து விடுவதாக சம்தத்தகர் உறுதி கூறுகின்றனர். பன்னிரண்டாம் நாளில் அருச்சுனன் பகதத்தனை அழிக்கிறான். பதின்மூன்றாம் நாளில் சக்கர வியூகத்தைப் பிளந்து சென்று பொருமாறு தருமன் கூற, அவ்வாறே அபிமன்னன் பிளந்து சென்று போரிடும் போது பீமனைத் துணைக்கு அனுப்பு கிறான். பீமனைச் சயத்திரதன் கொன்றை மாலையினால் தடுக்கிறான். தனியாக இருந்த அபிமன்னனைப் பகைவர் தாக்கி

வீழ்த்துகின்றனர். சம்தத்தகரை வென்று மீண்ட அருச்சுனன் பின்னர் உயிர் விடாமல் காக்க வேண்டி இந்திரன். அவனிடம் வரம் பெறுகிறான். பாடிவீடு அடைந்த அருச்சுனன், அபிமன்னன் இறந்தமை கேட்டு வருந்தி, உயிர்விடத் துணிகிறான். இதனோடு, கிடைத்துள்ள பாரத வெண்பாப் பகுதி முடிகிறது.

**நூல் ஆராய்ச்சி**

நூல், வெண்பாவும் உரைநடையும் விரவியது என்று குறிப்பிட்டோம். ஆசிரியருக்குச் சிறந்த தமிழ் நடையும் வரும், வடமொழியும் வரும். சில அரிய தமிழ்ச் சொற்கள் இவரிடம் பயன்படும்.

வெண்பாவில் சொல்லிய பொருளை மீட்டும் விரித்துச் சொல்லும் போது 'என்றவாறு' என்றோ, இவ்வாறு சொன்னானாக என்றோ முடித்து விட்டு, யாது செய்தான், யாது விண்ணப்பஞ் செய்தான், அவன் நிலைமை யாதாயிற்றோ எனில் என்று, அடுத்த பாடலுக்குத் தோற்றுவாய் செய்கிறார். சில சமயம் மூன்று அல்லது நான்கு பாடல்களைத் தொடர்ந்து சொல்லி முடித்துப் பின்னர் உரைநடை எழுதுவார். சில சமயம் ஒரு பகுதி முழுமையும் செந்தமிழாகவே எழுதி வருவார். செய்யுளோசை கொண்ட தொடர்கள் பல பயிலும்; "ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளுவது கேட்டு மகாப்பிரியஸ்தனாய் வீதிகடோறும் பூவும் நீரும் பொழிந்து மாட மண்டபந்தோறும் வண்ணத் துகிலும் மணிமாலையும் அணிந்து, கொண்டல் பொருந்தண்டலைக ளெண்டிசையும் நிரைத்துத் தீபதூபங்களா லலங்கரித்து, இரவி கிரணங்களை மறைத்த ஆடரங்கும் மாட வீதியும் பட்டுத் துகில் பொதிந்து, ஆடலொலி பரப்பிச் செப்பங் கூர்ந்த மண்டபத்தே, தேவராசன் ஸ்ரீவாசுதேவனுக்கான கோயிலிடம் பண்ணி, அஞ்சனத்தாலழகு செய்து பஞ்சணையும் மஞ்சனமும் பாரித்து, மற்றும் வேண்டினவெல்லாம் விளைப்பித்தான்."

அப்படியே வடசொற்களையும் தொடர்களையும் எங்கும் கோத்தெழுதுவார். இருதயஸ்தன், மகாப்பிரியஸ்தன், சர்வா பரண பூஷிதன், பரராஷ்டிரத்துச் சர்வ க்ஷத்திரியரும், பிராதாக்கள், விவஸ்தை (நிலை) பாலியதை, இராத்திரிசேஷன், சுவஸ்திவசனம், கேசக்கிரகணம் என்ற தொடர்களையும் சொற்களையும் காண்க.

வீடும துரோண பருவங்களில் ஒவ்வொரு நாட்போர் கூறும் பகுதியின் தொடக்கத்தில் சூரிய உதயத்தையும் இறுதியில்

சூரிய அஸ்தமனத்தையும் குறிப்பிடுகின்றார். சில இடங்களில் ஒரே கருத்துடைய பாடல்கள் கருத்து ஒற்றுமையால் அப்படியே திருப்பிச் சொல்லப்படுகின்றன. கண்ணனைப் பார்த்துப் போர் தவிர்க்கும்படி பாண்டவருக்குச் சொல்லுமாறு கூறிச் சஞ்சயனைத் திருதராட்டிரன் அனுப்பும் பாடலும் அவன் அப்படியே சென்று கண்ணனுக்கு, கூறும் பாடலும் அனேகமாய் ஒன்றாகவே உள்ளன (355, 360).

சஞ்சயன் தூது வந்த விடத்து, வீமன் போர் நடத்தித் தரும புத்திரனைக் கொண்டு வீர யாகம் பண்ணுவிப்பேன் என்று கூறுகின்ற பகுதி பயங்கரமாகவே உள்ளது. "கேளாய். சஞ்சயனே! தரும புத்திரனை வீர யாகம் பண்ணுவிக்கக் கடவேன்; அந்த யாகம் பண்ணும்படி கேளாய்; குருக்ஷேத்திர மென்ற யுத்த பூமியே யாகசாலை யாக, கோபமென்னும் அக்கினி மூட்டிக் கொடித்தேரென்னும் இந்தனம் அடுக்கிக் குருசேனை யென்னும் நெய் சொரிந்து, தருமபுத்திரன் யாக்ஞபரனாகவும் துரோபதியே யக்ஞபத்னியாகவும் நாங்கள் நால்வரும் இருத்துவிக்குகளாகவும் என் கையிற் தண்டாயுதம் யூபமாகவும், தன்ம விரோதிகளா யுள்ள துரியோதனாதிகளென்னும் நூற்றுவரையும் பசுப்படுத்து வைகல்வியப் படாமல் அலகைக்கும் பக்ஷி சாதிக்கும் பிண மென்னுஞ் சொன்ன தானம் பண்ணித் தட்டுப்படாமல் (வீர யாகச்) சடங்கு செய்வித்து, வைவச்சுதனாகின்ற ஓதாவினுக்கும் பூதங்களுக்கும் பரராஷ்டிரத்து ராசாக்கள் பிராணனென்கின்ற தக்ஷிணை கொடுத்து (திருதராஷ்டிர தலையே ஸ்தானமாகவும்) (பூர்த்தி செய்யலாம்) இந்த யாகத்துக்குப் பலனே தென்னில், துரோபதி குழன்முடித்தலும், என் மனக் கருத்து முடித்தலும். இதற்கு ஸ்ரீவாசு தேவனே மந்திர லோப காரிய லோபங்கள் வராதபடிக்குச் சடங்கு காட்டி இப்படித் தருமபுத்திரனைக் கொண்டு வீரயாகம் பண்ணுவிக்கக் கடவேன் என்றும், இந்தப் படிக்கு ஸ்ரீவீஷ்மர் துரோணர் விதுரனுக்கும் துரியோதனாதி களுக்கும் கன்னனுக்குஞ் சொல்லுவாயாக.

வில்லிபுத்தூரர் கதையும் பெரும்பான்மை பெருந்தேவனாரை ஒத்தே செல்கிறது. சில சமயம் இவருடைய வெண்பாவும் உரைநடையும் சற்று விரிவாகவே உள்ளன. தௌமியன் தூது என்ற பெயர் வில்லி பாரதத்தில் உலூகன் தூது என்றிருக்கக் காண்கிறோம். ஒற்றுமையைப் பார்க்கும் போது பல விவரங்கள் இரண்டிலும் ஒன்றாகவே உள்ளன. உதாரணமாக, தௌமியன்

தூதுச் சருக்கத்தில் வீடுமனைக் கன்னன் பழிப்பதையும், கன்ன னுடைய வீரத்தை வீடுமன் பழிக்கும் போது சித்திரசேனன் வரலாற்றையும் விராட பருவத்தில் நிரைமீட்சியில் கௌரவர் தோற்று நின்றதையும் சொல்லுமிடத்து இரண்டும் ஒன்று போலவே காணப்படுகின்றன.

எனினும் வேற்றுமைகள் இல்லாமல் இல்லை. கண்ணன் தூது போகும் முன்னமே சகாதேவனைச் சோதிக்கும் இடம் இரண்டிலும் வெவ்வேறாக உள்ளது. வில்லிபாரதத்தில், யுத்தம் நிறுத்துவதற்கான வழியை சகாதேவன் பல விதமாகக் கூறி, 'நின்னையும் யான் கட்டுவனேல் வாராமற் காக்கலாம் மா பாரதம்' என்று சொல்லி அப்படியே கட்டவும் செய்கிறான். ஆனால் பெருந்தேவனார் கூறுவது வேறு. 'நான் இங்குள்ள ஆயிரம் தூணிலும் மறைந்து நிற்பேன், என்னுடைய சக்தி எதில் மறைந்திருக்கிறது, கண்டு சொல்' என்று கண்ணன் கூறுவதாக இங்கு கதைப்போக்கு வேறுவிதமாய் இருக்கிறது. சகாதேவனும் அப்படியே அத்தூணைக் கண்டு சொல்கிறான்.

ஒவ்வொரு நாட்போரின் தொடக்கத்திலும் காலையில் கதிரவன் தோன்றினான் என்பதையும் மாலையில் அவன் மறைந்தான் என்பதையும் தவறாது தற்குறிப்பேற்ற அணியோடு அழகுபடச் சொல்கிறார்.

ஒரு பாடல் பின்வருவது : பதினோராம் நாட்போர்

**வேலை யொலியே முழவாக, வெண்திரைகள்**
**சால எறிந்தோங்கு சாமரமா – வேலையென**
**வாதித்த மன்னரெலாம் வாநீ என அழைக்க**
**ஆதித்தன் வந்தெழுந்தான் ஆங்கு.**

## துதிப் பாடல்கள்

பெருந்தேவனார் ஒவ்வொரு நூற்பகுதியின் முகப்பிலும், திருமால் துதியாக ஒரு வெண்பா அமைத்திருக்கிறார். (பிற் காலத்தில் விருத்தத்தால் பாரதம் பாடிய வில்லிபுத்தூரரும், இவ்விதமே நூலுறுப்புத் தோறும் ஒவ்வொரு விருத்தம் துதி யாகப் பாடியிருப்பதும் இங்கு அறியத்தக்கது) பெருந்தேவனார் தம் நூல் முழுதும் கிடைக்குமானால், இப்பாடல்கள் மட்டும் நூற்றுக்கு மேல் இருந்து, இவையே ஒரு தனித் தோத்திரப் பிர பந்தமாய் அமைதலும் கூடும். கிடைக்கின்ற நூற்பகுதியில் மட் டும் இவ்வாறு 18 பாடல்கள் கிடைக்கின்றன. இவற்றைக் குறித்

*துச் சில சொற்கள் கூறுவோம். (பிற்பகுதியாகிய மாவிந்தத்தில் அபயம் சரணம் என்ற முடிபுடைய பாடல்கள் நீங்க, மாதவனே 185, எட்டெழுத்தும் 245, நரசிங்கமாகியும், வெள்ளைச்சுரி சங்கு 248 என்ற நான்கு பாடல்கள் இவ்வாறு துதியாக உள்ளன)*

*நூல் முகப்பில 3 பாடல்கள்: ஓது வினையகல விநாயகர் வணக்கம்; புத்தகமும் ஞானத்து முத்திரையும் நாமகள் வணக்கம்: இவ்வையிரண்டும் பொதுவாகப் பழங்காலத்தில் ஏடெழுது வோர் முகப்பில் எழுதும் தெய்வ வணக்கப் பாடல்கள் எனக் கொள்ள வேண்டும். மற்றப் பாடல்கள், உத்தியோகப் பருவத்தின் தொடக்கத்தில் ஒன்றும், படை திரட்சி என்ற பகுதியின் தொடக்கத்தில் ஒன்றும், பின்னர் பதின்மூன்று நாட் போர் களைக் குறித்த பதின்மூன்று பகுதிகளின் முகப்பில் ஒவ்வொன்று மாக உள்ளன. பத்தாம் நாட் போரில், பீஷ்மன் திருமாலைத் துதிப்பதாக ஒரு பாடல் உள்ளது. இப்பாடல்கள் யாவும், ஆசிரியரின் ஆழ்ந்த திருமால் பக்தியைப் புலப்படுத்துகின்றன. இவற்றில் பெரும் பகுதி, நெஞ்சிற் கமைவுரையாக அமைந் தவை. எல்லாப் பாடல்களும் சிறப்புடையன வென்றாலும், பின்வரும் மூன்றும் மிகச் சிறந்தவை என எடுத்துக் கூறலாம்.*

பொருப்படைந்து தங்கள் புலனைந்தும் செற்று
நெருப்படைந்து நீரடைய வேண்டா – விருப்படைந்து
வைகுந்தம் சிந்தையிலே வைப்பார்க்கு மாதவனும்
வைகுந்தம் சிந்தையிலே வந்து. **387**

தேனோங்கு சோலைத் திருவேங் கடமென்றும்
வானோங்கு சோலை மலை என்றும் – தானோங்கு
தென்னரங்க மென்றும் திருஅத்தி யூரென்றும்
சொன்னவர்க்கு முண்டோ துயர். **484**

நீலமே, காரின் முகிலே, நெடுங்கடலின்
கோலமே, அத்திகிரிக் கோமானே – மூலமென
மாத்தா மரைமடுவில் மால்யானை ஓலமிடக்
காத்தாய், கடை போகக் கா.

*துதியாக வருமிடங்கள் மட்டுமன்றி, வேறிடங்களிலும், கண்ணனைப் பரம் பொருளாகவே கருதிப் பாடுகிறார். 'மெய் யடியை - தெள்ளியுணர்ந் தாரவர்கள் சிந்தையுள்ளே வீற்றி ருப்பான்'(85), 'தந்தையாவானும் தருமம் வளர்ப்பானும் எந்தை யாவானும் நீ'(174) 'மாயா மணிவண்ணா, மண்ணுலகும் விண்*

ணுலகும் தாயாகி நின்றதொரு தற்பரமே'(129), 'காற்றும் கன லும் இடியும் கதிரோனும் தோற்றும் சுடரும் சுருதியுமாய் - நாற்றிசையோ டெல்லா உயிருமாய் நின்றாய்'(135).

## தரும நெறி

மகாபாரதம் உலகப் பெருங்காப்பியங்களுள் மிகச் சிறந்த ஒன்று. அதில் சொல்லப்படாத நீதிகளும் வாழ்க்கை முறை களும் தருமங்களும் உலகியல்பும் இல்லை. நீதியையும் இராச தருமத்தையும் போதிப்பதற்கென்றே அது வந்தது. வடமொழி யில் பேரிதிகாசமாக உள்ள அந்நூல் ஐந்தாம் வேதம் என்னும் பெயர் பெற்றது. அதைத் தமிழில் செய்த ஆசிரியர் அதிலுள்ள சிறந்த கருத்துக்களையும் செய்திகளையும் தமிழிலும் மிக்க அற்புதமாகவே சொல்லியிருக்கிறார். சிலவற்றை இங்கு எடுத்துக் காட்டலாம்.

மிக்க பலமுடையவனான சல்லியராசன் தன் பெரிய படை யோடும் தருமனுக்கு உதவி செய்ய வந்தவனை, வழியில் துரி யோதனன், தன்னை அறிவிக்காமலே விருந்து செய்வித்து உண்ட பிறகு அவனைத் தனக்கு துணை இருக்குமாறு வேண்டு கிறான். உண்ட கடனுக்காக அப்படியே அச்சல்லியராசன் துரியோதனன் பக்கமிருந்து போர் புரிந்து உயிர் துறக்கிறான். தான் இவ்வாறு உண்ட கடனால் கட்டுப்பட்ட நிலையை இவன் தருமபுத்திரனிடத்துக் கூறிய வழி, அவன் 'உன்னை வெல்லுமாறு எவ்வாறு?' எனக் கேட்டலும், அதையும் சல்லியன் சொல்லு கிறான். இவ்வாறு சத்தியத்தையும் தருமத்தையும் நிலைநாட்ட வேண்டிப் பெருவீரர்கள் தங்களை வெல்வதற்கான வழிகளைத் தங்கள் பகைவருக்குக் காட்டுவதை இங்குக் காணலாம் (துரோணர், வீஷ்மர்).

விதுரன் வில் முறித்ததையும், அப்படியே கண்ணன் அசுவத்தாமாவிடம் நடந்து கொண்டதையும், பிறவற்றையும் அறிந்த கன்னன், இனி தான் உய்வது அரிது என்று உணர்ந்து சர்வதானம் பண்ணுகிறான். குறுமன்னர் தனக்கு இடும் திறை யெல்லாம் முற்பகல் முழுவதும் தானம் பண்ணி விட்டு, அப ராண்ணிய (பிற்பகல்) தரித்திரன் என்று பெயர் வாங்குகிறான். அதுபோலவே வீஷ்மன் திரிகால ஞானியாகலின் போர்க் களத்தில் நாளை தான் உயிர் துறக்கப் போவது உறுதி என்று உணர்ந்து, அன்று காலை தன் கடன்களை முடித்து ஆயிரக் கணக்கான பிராமணரையழைத்துத் தானங்களெல்லாவற்றையும்

பண்ணிவிட்டுப் பிறகே யுத்த களம் புகுகிறான்; அப்போது வீஷ்மன் திருமாலைத் துதிக்கின்ற பாடல்:

> **ஆக்கை குலைந்திட் டனைத்தெலும்பும் கைவிட்டுக்**
> **காக்கை பருந்து கலவாமுன் – நோக்கிக்**
> **கருமாலை மாற்றிக் கருதிமட நெஞ்சே**
> **திருமாலை ஏத்தாய் தெளிந்து.**

போருக்கு நாள்குறிக்கும்படி வீடுமனைத் துரியோதனன் கேட்க, அவன் பகைவனாயினும் சகாதேவன் சத்திய வாக்கியன், அவன் நாள் குறித்துக் கொடுத்தால் அதை யுத்த பூமியில் யாராலும் வெற்றி கொள்ள அரிது; "சத்திய விரதனுமாய் மகானுபாவனு மாயுள்ள சகாதேவனன்றிச் சோதிடத்தில் யாருமில்லை. சகா தேவன் யுத்தத்துக்குத் தக்க நாளும் முகூர்த்தமும் சொல்லு மாகில் திரிலோகம் கூடிவரினும் திரிமூர்த்திகளாலும் யுத்த பூமியில் வெல்ல அரிது கண்டாய், அவனைச் சத்துரு பட்சத் தானென்று கருதாது, கடிது போய் நாளும் முகூர்த்தமும் வேண்டி வருவாயாக" என்று கூறுகிறான். அப்படியே நாளும் முகூர்த்தமும் அவனிடத்துக் கேட்டுப் பெற்றதோடு களப்பலிக் காவார் யார் என்று அவனைக் கேட்கவும், அவன் தன் மூத்தவன் அருச்சுனன் மகன் அரவானே களப்பலிக்குத் தக்கவன் என்று குறிப்பிடுகிறான். அப்படியே துரியோதனன் அராவானிடம் சென்று 'நீ எங்களுக்குக் களப்பலியாகுக!' எனக் கேட்கவும் அவனும் உடன்படுகிறான். இந்த இரண்டு நிலைகளும் உலக இதிகாசங்களில் எங்கும் காண்பதற்கரியன. பகைவனுடைய சத்தியத்தில் நம்பிக்கை; அவனும் தான் தோற்கவும் தன் பகைவன் வெல்லவும் நாள் குறித்துத் தருதல்; அவரில் ஒருவன் தான் தோற்கவும் மாற்றான் வெல்லவும் உதவத் தன்னையே களப்பலி கொடுக்க இசைதல் ஆகிய இவ்விரு தரும நிலைகளும் உல கெங்கும் காண்பதற்கரியவை. இத்தகைய தருமங்கள் பாரத மெங்கும் பேசப்படுகின்றன. ஆனால் இவ்வாறு சத்தியத்தையே மேலாகக் கொண்டு, வீரர்கள் பகைவனுக்கும் முழு உதவி செய் தால், தாங்கள் வெல்வது எவ்வாறு என்ற கேள்வி வரும். இதற்குப் பதில், எந்த வீரனும் சுயகாரியம் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு, தன்மானம் இழந்து, துரியோதனன் சென்று கேட்ட மாதிரிப் பகைவனிடம் சென்று கேட்க மாட்டான் என்பதே.

துரியோதனன் பழிச் சொல்லைக் கேட்டு நொந்த விதுரன் அவனுக்காகப் போரிடவோ, அன்றித் தருமவழி நிற்கும் தரும

புத்திரன் பக்கம் சேரவோ, மனந்துணியாமல், தன் வில்லை முறித்துப் போடுதல், வீஷ்மன் தன்னை அருச்சுனன் வெற்றி கொள்வதற்குத் தானே உபாயம் சொல்லிக் கொடுத்தல் முதலான தரும நிலைகள் இக்காலத்தில் காண்பதற்கல்ல, உணர்தற்கும் அரியன விபீஷணனைப் போல விதுரன் பகைவனைச் சரண் புகவில்லை.

பதின்மூன்றே வயதுடைய அபிமன்னன் பெரு வீரத்தோடு போரிட்டு மடிந்தபோது, துரோண கிருப கன்ன அசுவத்தாமா போன்ற முதியோர் தத்தம் மக்களை யிழந்தாற் போலத் துயர மடைந்தார்கள் என்று கூறியிருப்பதும் சிறந்த மனித தருமத் துக்கு எடுத்துக்காட்டு.

குருக்ஷேத்திரத்தில் திரண்டு நிற்கிற இருபெரும் படையை யும் நோக்கிய துரியோதனன் வீஷ்மனைப் பார்த்து, "இப் பெருஞ்சேனையை வெல்வாருளரோ?" என்று கேட்கிறான். அப்போது அவன், "இதை நானொருவன் முப்பது நாழிகையில் வெல்வேன்; துரோணன் மூன்று நாளையில் வெல்வான்; கன்னன் ஐந்து நாளையில் அடுவான், அசுவத்தாமா ஒரே நாழிகையில் வெல்வான். ஆனால் அருச்சுனனோ ஒரு நொடியில் வெல்வான்" என்று மறுமொழி கூறுவது அறியத் தக்கது; வீஷ்மருடைய வீரத்தையும் அறிவாற்றலையும் ஒருமிக்க வியக்கிறோம்.

மகாபாரதம் பெருங்காவியம் என்பதற்கேற்ப இதனுள் சில கருத்துக்களும் உலக இயல்புகளும் சுவையாகச் சொல்லப் பட்டுள்ளன. கண்ணன் போர்க்களத்தில் ஆயுதம் ஏந்துவதில்லை என்று சொல்லித் தன் படை அனைத்தையும் துரியோதனனுக்கு ஆக்கி விட்டு, தன்னை 'உகிரும் எயிறும் இழந்த சிங்கம் போல' என்கிறான். வாசுதேவனைத் தூது விடத் தருமன் துணிந்தபோது வீமன், 'நின்னோடே தோற்றுதற்கு நோற்றேனே பாவியேன் - என்னோடெழுத்தே இது' என்கிறான். துரியோதனனுடைய சிறப்பைக் கூறும் ஆசிரியர், அவனைத் தினமும் வாழ்த்தும் அந்தணர்கள் இட்ட அறுகம்புல் ஐயாயிரம் குதிரைக்கு அன் றைக்கு உணவாகும் என்கிறார்.

> அந்தணர்கள் உள்ளார்கள் ஆசிசொல்லி யேகொடுத்த
> கந்த மலர்த் தாளிக் கறுகம்புல் – பந்தி நிலை
> ஐயாயிரம் குதிரைக் கற்றைப் படியாகும்
> பையா டரவுயர்த்தோன் பால்.

சோறு இரண்டு: அன்பின் இடும்சோறு ஆபத்தின் இடும் சோறு. களப்பலி இடுவதில் தான் செய்த ஏற்பாடுகளெல்லாம் பயன் படாதபடி பாண்டவர் முந்திக் கொண்டது அறிந்த துரியோ தனன் தன் ஏமாற்றத்தை மறைக்க, 'பலியூட்ட வேண்டுமோ பாரதப் போர் வெல்ல - வலி கெட்டார் போல' என்று கோபிக்கிறான்.

மற்றும் கதைப் போக்கிலேயே பல நல்ல கற்பனைகள் கிடைக்கின்றன. அர்த்தரதர், சமரதர், மகாரதர், அதிரதர் என்ற நால்வகைத் தலைவர்களும் ஒருவருக்கொருவர் முறையே ஏற்ற மானவர்கள். துரியோதனன் படையை அணி வகுத்த வீடுமன் கன்னனை அதிரதரில் சேர்க்காது அர்த்தரதரில் சேர்த்ததற் காகக் கோபித்துக் கொண்டு போர்க்களம் விட்டுப் போய் விடுகின்றான். ஆனால் பாண்டவர் சேனையில் தலைவனாய் இருக்கிற சுவேதன் வீமசேனனை மகாரதரிலும் நகுல சகா தேவரை அர்த்தரதரிலும் வகுத்தபோது அவர்கள் கோபித்துக் கொள்ளவில்லை. இதன் மூலமே இரு படையினருடைய ஒழுங்கு முறையை நாம் உணர்தல் கூடும். துரியோதனன் மீது சினந்த விதுரன் தீர்த்த யாத்திரை செல்கிறான். துரியோதனனுக்குப் படைத்துணை போக நேர்ந்த பலதேவன் அவன் செய்த அதர் மத்தை ஒப்புக் கொள்ளாது, அவன் அழிவதைக் க்ாண மனம் வராது, தீர்த்த யாத்திரை போகிறான்.

தூதனாய் வந்த கண்ணன் விதுரன் மனையில் தங்கியதற் காகத் துரியோதனன் சினந்தபோது கண்ணன் தன் செயலுக் குச் சமாதானம் சொல்வது மிகவும் அழகாய் உள்ளது. தூதர் எவ்வளவு திறமை உள்ளவர்களாய் இருக்க வேண்டும் என்ப தற்கும் எடுத்துக் காட்டாய் இருக்கிறது. "நீங்கள் இராச தன்மமே விரும்பி வெகுமதராய்ச் சாதுக்களையும் சம்பந்தி களையும் இகழ்ந்து வாழ்கையாலும், முன்னாள் வஞ்சனை யாய்ச் சூதாடிய ஞான்று தரும புத்திரனுக்குப் பன்னிரண்டு வருஷங் காடுறைந்து ஒரு வருஷங் கரந்துறைந்து பதின் மூன்றுங் கழிந்தால் உங்கள் ராச்சியம் வாங்கிக் கொள்ளக் கட வீரென்று பேசியபடியே தருமபுத்திரனும் பிராதாக்களும் அருங்கான முறைந்து அதிகிலேசப்பட்டுச் சமய விரோதஞ் செய்யாமல் ஒட்டின நாள் கழிந்து வந்து வெளிப்பட்டுத் தங்களுரிமை வேண்டக் கொடாது விவஸ்தை யொழிந்து நீதி மார்க்கங்கெடப் பேசுகையாலும், உங்களகத்து உண்ணுமது தருமமன்று கண்டாய்; ஆதலால், விதுரனாவான் சருவஞானியு

மாய்ச் சாதுமார்க்கம் வழுவாமல் சருவபிராணிகளையுமிகழா மல் இல்வாழ்க்கையும் இராச தருமமும் உடையவனாயிருப் பனாகையாலும், தரும புத்திராதிகளுக்குத் தூதாய் உன்பக்கல் பூமி வேண்டி வருகையாலும், வந்த கருமம் முற்றாமையாலும், விதுரராசன் உங்கட்கும் மற்றவர்க்கும் சமனான பிதாவாகை யாலும், அவன் கிருகத்திலே போனகங் கொள்ளுமது கேட் டார்க்கும் யோக்கியமாங் கண்டாயாதலால், அங்கும் உன்ன தன்றோ அடிசில்" மிகவும் அற்புதமான சமாதானம்.

வீஷ்மர், அருச்சுனனது அம்பு மார்பு கிழித்துச் செல்ல, விழுந்து அம்பணைமேல் கிடந்தார். அவர் இருந்தவரையில் அவரோடு கொடிய பகைமை பூண்டிருந்த கன்னன் வந்து காலடியில் விழுந்து, "இதுவரை நான் செய்த அனாசாரமெல் லாம் பொறுத்தருள்வாயாக" என்று அழுகிறான். கண்டு வீஷ்மர் சிறிது கருணை தோன்றி, "இதுவெல்லாம் ஸ்ரீவாசுதேவனுடைய மாயை; நான் உன்னை அலட்சியப் படுத்தினமை பொறுப் பாயாக; நீ செய்தவை சொல்லியவை ஒன்றும் நான் மனத்திற் கொள்ளவில்லை; இனி உன் சருவ சக்தியெல்லாம் கொண்டு சத்துரு செயம் பண்ணித் துரியோதனனுக்கு இராச்சியம் கொடுப்பாயாக" என்று சொல்லி, கன்னனுக்கே சேனாபதிப் பட்டமும் கட்டும்படி துரியோதனுக்குச் சொல்கிறார். அந்நேரம் அடுத்து நிகழும் செயல், பயங்கரமும் சோகமும் கலந்த அந்த நிலையில் சிறிது நகைச் சுவையையும் தோற்றுவிக்கிறது. அர வணைமேல் கிடக்கின்ற வீஷ்மர் துரியோதனனை நோக்கி ஒரு தலையணை கேட்கிறார். இடம் போர்க்களம்; அவரோ இறக்கிறார். படுத்திருப்பதோ அம்புப்படுக்கை; துரியோதனன் 'அத்தியந்தம் மிருதுவாயிருப்பதொரு பஞ்சணை' கொண்டு வந்து கொடுக்கிறான்; அப்போது வீஷ்மர், "நீ தந்த பஞ்சணை யுத்த பூமியிற் சர சயனத்துக் கிடக்கின்றேமுக்கு யோக்கியமல்ல கண்டாய்" என்று அதனைத் தவிர்த்துத் துரியோதனனை நோக்கிப் பலகாலும் நகையரும்பி, "எமக்குடற் கணைதந்த அருச்சுனன் தானே தலைக்கணையும் தெரிந்து தருங்காண்" என்று, சகல க்ஷத்திரியரையும் கன்னனையும் அகற்றி, யுத்த வீரரைப் பெறாது தன்னினம் பிரிந்த வீரசிங்கம் போல தக்ஷிண பாரிசத்து நின்ற அருச்சுனனை நோக்குதலின், மற்றவன் கருத்தறிந்து, ஒரு திவ்வியாஸ்திரத்தை வீஷ்மர் திருமுடியிற் கடாவுதலும், அதுவும் முடி பிளந்தெடுத்து நின்றது". இங்கு ஆசிரியர் மிகவும் அருமையாக, துரியோதனன் அருச்சுனன் இரு

வருடைய குணங்களை எளிதில் சித்தரித்துக் காட்டிவிடுகிறார். சொல்லியும் சந்தர்ப்பம் புரியவில்லை துரியோதனனுக்கு, வீர னுக்கேற்ற செயல் செய்யவில்லை; குறிப்பாலேயே அருச்சுனன் செய்கிறான்.

பன்னிரண்டாம் நாட்போரில் தரும புத்திரனைப் பிடித்துக் கொடுப்பதாகத் துரோணாசாரியன் ஏற்பாடு செய்திருப்பதை யறிந்த தருமபுத்திரன், தனக்குக் காவலாக உடனிருக்கும்படி அருச்சுனனுக்குக் கூறியபோது, அவன் கூறும் சொற்கள், இணை யற்ற வீரனாகிய அவனுக்கு இருக்கும் பெரும் பணிவுடைமை யைக் காட்டுகின்றன. "தேவேந்திரன் முதலாகவுள்ள தேவசாதி களும் என்னை யறைகூவினா ரில்லை; மண்ணுலகத்தவர் வந் தறை கூவக் கேட்டிருக்குமதெனக்கு வீர சௌரிய பங்கமாங் கண்டாய், என்றுரைத்தது, 'இவ்வகை செய்த திரிகர்த்தராசனுள் ளிட்டாரை நொடி வரையிற் படமலைந்து ஸ்ரீ வாசுதேவன் பிரசாதத்தினால் மகிதலத்துத் தலை புரட்டிச் சயஞ்செய்து ஈண்டன் வருகின்றேன். ஈங்கிதற்கு எம்பெருமான் வெகுளா தொழிவாயாக. எனக்கு நின் திருவுளக் கருத்தால் விசயஞ்செய்து வருவேனாக, உன் பிரசாத பலத்தால் விடை தருவாயாக". இங்கு, வாசுதேவன் பிரசாதத்தினால் சயம் செய்வேன் என்பதையும், தமையனை எம்பெருமான், நின் திருவுளக் கருத்தால், உன் பிரசாத பலத்தால் என்பதையும் காண்க. அடுத்து (719ஆம் பாட்டின் பின்னுள்ள உரைப்பகுதி) பீமனை இவன் புகழ்வது மிக்க அழகாயுள்ளது.

பதின்மூன்றாம் நாட்போரில் அபிமன்னியு, போர் புரிந்து படுவதைப் படிப்பவர் யாரும் அவன் வீரத்தைக் கண்டு பெரு மிதமும் வியப்புமடைந்து அவன் பாடு கண்டு கண்ணீர் பெருக் காமல் இருக்க முடியாது. இங்கும் அவரவருடைய சொந்த ஆசாரங்களும் நியதிகளும் பார்த்து வியக்கும்படியுள்ளன. சக்கர வியூகத்தைப் பிளந்து உள்ளே சென்று தனியே பெரும் போர் புரிகின்ற பதின்மூன்று வயது அபிமன்னனுக்குத் துணை போக எண்ணிப் பீமன் விரைகிறான். எதிர்த்தோரையெல் லாம் துவம்சம் பண்ணிப் போகிறவனைத் தடைசெய்ய வகை யறியாமல், சயத்திரதன் பரமேசுவரனிடத்தில் தான் பெற்ற கொன்றை மாலையைப் பீமன் எதிரே விடுகிறான். சிறந்த சிவ பக்தனாகிய பீமன் கொன்றை மாலையைக் கண்டவுடன் கை தொழுது வீழ்ந்தான்.

கன்றி எயிறு கடித்தெழுந்து காலன்போல்
வென்றிசேர் வீமன் விரைந்தேகி – கொன்றைத்
தொடைமாலை கண்டளவிற் கைதொழுது வீழ்ந்தான்
அடன்மாலை வேலார்முன் னாங்கு.

அப்போது திட்டத்துய்மன் இவன் இவ்வாறு நிற்பதைப் பழித்து அபிமன் உதவிக்குச் சென்றான். அவனை வெகுண்டு வீமன், எல்லோரும் இறந்தாலும் சங்கரன் மாலையைக் கடவோம் என்ற பக்தி வைராக்கியத்தைக் கூறுகிறான்.

எங்கள் குடிப்பிறந்தார் எல்லாம் இறந்தாலும்
சங்கரன்தன் மாலை தனைக்கடவோம் – அங்கவனும்
பட்டானே யாகிற் படுத்தான் தனைப்படுத்தெங்
கட்டாவி யுங்களைவேம் காண்.

பெருவீரத்தின் இடையிலும் ஆசிரியர் இத்தகைய பெரும் பக்தியையும் சிறப்பித்துக் காட்டுகிறார்.

பொதுவாக பாரத வெண்பா முழுமையும், வெண்பாவையும் உரைநடைப் பகுதியையும் ஈடுபாட்டோடு படிப்பவர் யாரும், புளகாங்கிதமும் மயிர்க்கூச்சும், கண்ணீர்த் துளிப்பும் இன்றிப் படிக்கவியலாது. இது ஏதோ கதையல்ல நம் சொந்தச் செய்தி என்றே படிக்கிறோம்.

கீதை பிறந்த இடம் குருக்ஷேத்திரப் போர்க்களம் என்பது வரலாறு. போர்க்களத்தில் எதிரில் நின்ற சேனையைப் பார்த்த அருச்சுனன் இத்தனை உற்றாரைக் கொன்று அரசாள்வதானால் எனக்கு அரசு வேண்டாம் என்று வாளா இருக்கிறான்.

உற்றாரை யெல்லாம் உடன்கொன் றரசாளப்
பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வம் – சொற்றாழ்ந்து
வாட்ட டக்கை வில்நெகிழ வாளா இருந்திட்டான்
தேர்த்தட்டின் மீதே திகைத்து. 475

- அப்போது கண்ணன்,

பிறப்பு நிலைகே டிவையாவான் பாவம்
அறத்தினோ டைம்பூத மாவான் – உறற்கரிய
வானாவான், மண்ணாவான், மன்னுயிர்க ளித்தனையும்
தானாதல் காட்டினான் தான்.

'பிறப்பேனும் யான், இறப்பேனும் யான், காத்தளிப்பேனும் யான், முடிவு காலத்து வந்து சத்த சமுத்திரங்களாய்க் கிளர்ந்து பிரளய மாவேனும் யான், அவை யுட்டிரியுஞ் சர்வ மச்ச சாதி யாவேனும் யான், கற்ப ஆழித்தீயாய்ச் சங்கரிப் பேனும் யான், பூமி யந்தர சுவர்க்க மாகின்றேனும் யான், சர்வமாகின்றேனும் சத்தமாகின்றேனும் யான், இரவாகின்றேனும் பகலாகின்றேனும் யான், மாலை மயக்கமாகின்றேனும் யான், பிருதுவி அப்பு தேயு வாயு ஆகாசமாகின்றேனும் யான் கண்டாய், என்னை யொழிந் துண்டாவன வொன்று மில்லை கண்டாய், சகல பதார்த்தமும் யானாகி நிற்கின்ற தன்மைதனைக் காண்பாயாக என்றும், உனக்குத் திவ்வியாக்ஷுந் தந்தேனென்றும் அருளிச் செய்து தன் திவ்வியமான விசுவரூபத்தை வெளிப்படுத்திக் காட்டினான். "பேயேனுரைத்த பெரும் பிழைகள் பொறுத்தருள்வாய்' என்று அருச்சுனன் கண்ணன் திருவடியில் வீழ்ந்தான். மேலும் கண்ணன் தானும் அருச்சுனும் நாராயணனும் நரனும், முற்பிறப்புக்களில் எப்படியெல்லாம் தோன்றினார்கள் என்பதை விரிவாக உரைக் கிறான். அதன்மேல் அருச்சுனன் போருக்கு மனம் ஒருப்படு கின்றான்.

**சில இயல்புகள்**

கண்ணனிடம் சென்று துணை வேண்டி அமர்ந்திருந்த துரியோதனன், "நான் முன் வந்தேன், எனக்கு முன் அருள்" என்று கேட்பது, இன்றுள்ள கியூ வரிசை முறைச் செய்தி போலுள்ளது. பகைவனின் பலத்தைக் கண்டு அஞ்சி, தருமன், விதுரனை யார் வெல்ல முடியும், அசுவத்தாமாவை யார் வெல்ல முடியும், கன்னனை யார் வெல்ல முடியும், மூதாதை வீஷ்மனை யார் வெல்ல முடியும் என்று கேட்டுக் கொண்டே போக, கண்ணன், நகுலன் பரியேறி வருதலும், சகாதேவன் படைத்தலைமையும், அபிமன் மந்திரவில்லும் என்று இங்ஙனம் சொல்லி வந்து, பின் பொறுமையிழந்து, வீஷ்மன் வரும்போது பார்த்துக் கொள் வோம், இப்போதிலிருந்தே கவலைப்படாதே என்று சொல்வது உலக இயல்பை ஒட்டியுள்ளது. தனிமரம் தோப்பாகாது, உற்றா ரோடு அரசாள்வது சிறப்பே தவிர, எல்லோரையும் அழித்து ஆள் வது அரசல்ல என்று தருமன், தூதனுப்புவதை இகழ்ந்த வீமனுக்கு உணர்த்தும் சிறந்த கருத்துக் கொண்ட பாடல்:

> உற்றாரை யெல்லாம் உடன்கொண் டரசாளப்
> பெற்றால் அதின்மிக்க பேறுண்டோ? – வெற்பார்

பனிமருவும் பூந்தொங்கற் பாழியந்தோள் வீமா
தனிமரமும் தோப்பாமோ தான்.

அருச்சுனனையே ஒப்பற்ற தனி வீரனாகக் காட்டுவது பாரதமுடையார் கருத்து. ஆனால் கண்ணன், அத்தினாபுரம் சென்று, குந்திதேவியைத் தான் கன்னனின் தாய் என்று அறிவித்துக் கொண்டு, கன்னன் தன் நாகாஸ்திரத்தை இரண்டாவது எச்சிற்கணையாக அருச்சுனன் மீது தொடானாக வேண்டி வரச் செய்கிறான். இதனால் அருச்சுனன் வீரத்துக்கு இழுக்கு வரும் என்ற கேள்விக்கு விடையாக ஒரு செய்தி அமைக்கின்றார். "அருச்சுனன் காண்டாவனத்தை யெரிமூட்டிய ஞான்று தன் சரீரம் அறுப்புண்டு வல்லூறு பிழைத்துப் போந்து கன்னன் தன் பக்கற் சென்றடைந்து மற்றவனை ஆசிரயித்து அருச்சுனனுக்குப் பகையாக வாழ்கின்ற அசுவசேனன் என்னும் மாநாகத்தினை இமையவராலும் வெல்லவரிது; மற்றதனை அருச்சுனன் மேல் இரண்டாவது எச்சிற் கணையாகத் தொடானாக வேண்டிக் கொண்டு வருவாயாக".

கண்ணன் துரியோதனன் வஞ்சகத்தைக் கடக்க வேண்டி, விசுவ ரூபமெடுத்தான். அதைக் காண, கண்ணில்லாத திருதராட்டிரனுக்குக் கண் அருளினான். அக்காட்சி கண்டு உணர்வு எய்திய அவன், "உன் வடிவம் கண்ட யான் வேறொன்றும் காணாதிருக்க, கண்ணை வாங்கிக் கொள்" என்று பிரார்த்திப்பது உருக்கமாயுள்ளது.

இந்திரன் விருத்தப் பிராமண வடிவங் கொண்டு, கன்னனிடம் சென்று அவனோடுடன் பிறந்த கவச குண்டலங்களை யாசிக்கிறான். 'கொடுக்காதே' என்று சூரியன் அசரீரியாய் நின்று கன்னனைத் தடுக்கிறான். அப்போது கன்னன், இன்னாரென்னாது மறாமல் தானம் பண்ணுகின்ற என்பால் தேவராசனாயுள்ள தேவேந்திரன் வந்து தேகியென்று என் கைத்தலம் மேற்படச் செம்மலர்க்கை கீழ்ப்பட ஏற்குமாகில் எனக்கு இது வொப்ப இரட்சையுண்டோ?" என்று சொல்கிறான்; "நில்லா உயிர் கொடுத்து நின்ற புகழ் படைக்கை நல்லார் கடன்" (272) என்கிறான். இது மகாபலியிடம் வாமனன் மூவடி மண் கேட்க, சுக்கிரன் தடுத்த போது,

நினைக்கிலை, என் கை நிமிர்ந்திட வந்து
தனக்கிய லாவகை தாழ்வது தாழ்வில்
கனக்கரி யானது கைத்தலம் என்னில்
எனக்கிதன் மேல் நலம் யாதுகொல்? என்றான்.

என்று மகாபலி கூற்றாகக் கம்பர் பாடியிருப்பதனோடு ஒப்பு நோக்கத்தக்கது.*

இரண்டாம் முறையாகப் பிராமணன் கன்னனிடம் வந்து சிகாமணியை வாங்குகிறான்; "கண் கழுவி வாய் பூசி மேவி நீ இன்னடிசில் உண்டாங்கு இயல்புடனே தா" என்கிறான். அப்போது கன்னன்,

> நினைவுக்கும் வாய்மைக்கும் உயிர்க்கும் நிலையில்லை
> மனுவுக்கும் வாழ்வுக்கும் அற்றே; – நினைவிற்
> கொடுத்தபோ தேகொண்டு கோதின் மறையோய்
> நடத்தியே என்றான் நயந்து.

இன்றைக்கும் உண்மையான வார்த்தை.

அப்படியே இந்திரன் பெற்று, மனமுருகி, மிக்க ஆற்றல் வாய்ந்த வேல் ஒன்றைக் கன்னனுக்குக் கொடுக்கிறான். 'உன் பக்கல் பிரதிதானம் ஏற்பேனோ?' என்று அவன் மறுத்து, 'இதனை அருச்சுனனுக்குக் கொடுத்து அவனைக் கொண்டு என்மேல் விடத்தகாதோ? இவ்வகை திவ்விய சக்தியுண்டாகில் நீ என்பால் வந்து இரவலனாய்த் தானமேற்கப்படுமோ?' என்று பரிகசிக்கிறான். இது உலகியல்பு.

உலக வாழ்க்கையில் அற்பமானவர்கள் யாருமில்லை. ஒவ்வொருவரும் அவரவர் நிலைக்கேற்ப, தக்க சிறப்பைப் பெறு கிறார்கள். பாரத வெண்பா இந்தப் பேருண்மையை நன்கு எடுத்துக் காட்டுகிறது. தருமபுத்திரர், அருச்சுனன், கண்ணன் முதலியோருடைய சிறப்பை விரிக்க வேண்டியதில்லை. ஏனைய பாத்திரங்களுக்கும் சந்தர்ப்பம் அறிந்து ஆசிரியர் பெரும் சிறப்புக் கொடுக்கின்றார். பீமனை நாம் நன்கறிவோம். போரில் அபிமன்ன னுக்குத் துணையாக அவன் செல்லுகின்ற நேரம் செயத்திரதன் அவன் முன்னே பரமேசுவரன் தனக்குக் கொடுத்த கொன்றை மாலையை விடுகிறான், அதைப் பணிந்து பீமன் நின்று விடுகி றான். அபிமன்னன் இறக்கிறான். ஆனால் 'எங்கள் குடிப்பிறந்தார் எல்லாரும் இறந்தாலும் சங்கரன் மாலைதனைக் கடவோம்' என்பது அவனது கொள்கை. இது மற்றொரு கதையோடு ஒப்பு நோக்கத்தக்கது. சிவபக்தியில் தானே சிறந்தவன் என்று இறு மாப்புக் கொண்டிருந்த அருச்சுனனுக்குக் கண்ணன், கைலாயத்

---

* பெருந்தேவனார் காலம் 832-50 என்பதையும் கம்பர் இராமாயணம் அரங்கேற்றியது 885 என்பதையும் கருதுக.

தில் பீமன் பூசை செய்து கழித்த நிர்மால்யங்கள் மலைமலை யாய் இருக்க, அருச்சுனன் பூசித்தவை ஒரே மலராகத்தான் இருந்தன என்று காட்டினானென ஒரு கதையுண்டு.

நகுலனை ஓர் இடத்தில் காட்டுகிறார். 'துரியோதனனுக் காக மீண்டு வந்து விதுரன் யுத்தம் பண்ணுமாகில், நம்முடைய நகுலன் பரிமேற்கொண்ட பொழுது விதுரனும் மற்றுமுள்ள யுத்த வீரரும் எமலோகத்து, வீற்றிருப்பதல்லால் நகுலனுக்கு மீண்டுமதிகமுண்டோ?' என்று கண்ணன் கூறுகிறான். (பாடல் 107 பார்க்க.) சகாதேவன் தூணில் மறைந்து நின்ற கண்ணனைக் கண்டமையாலும், பகைவனுக்கும் பகைமை கருதாது நன் முகூர்த்தம் கணித்துக் கொடுத்தமையாலும் தன் பக்தியிலும், சத்தியத்திலும் உயர்ந்து நிற்கிறான். மிகவும் சாதாரண நிலையில் உள்ள அரவான், துரியோதனன் வந்து களப்பலியாக வேண்டு மென்று கேட்டபோது, இப்பொழுதேயாகிலும் பின்னர் உனக்கு வேண்டின பொழுதாகிலும் வாங்கிக் கொண்டு போ! என்று கொடுப்பதால், நினைத்தற்கரிய வீரமுடையவனாகிறான். ஒரே வேளை உண்ட சோற்றுக்காகச் சல்லியன் உயிரைக் கொடுக் கிறான். இப்படியே எல்லாப் பாத்திரங்களும் பெருஞ் சிறப் படைகிறார்கள்.

## போர்கள்

பதின் மூன்று நாட்போர்களைப் பாரதவெண்பா விவரிக் கிறது. விவரணம், உயிரில்லாத கதையாக இல்லை. ஒவ்வொரு நிலையிலும் நாமே குறித்த பாத்திரமாகி நடிக்கும்படி செய்கி றார். காட்சிகள் ஒவ்வொன்றும் நம் கண்முன்னே உயிர் பெற்று நிகழ்கின்றன. நாமும் பங்கு கொள்வது போன்ற உணர்வு பெறு கிறோம். ரேடியோவில் இன்று நாம் கேட்கிற நேர்முக வருண னையையும் பலபடி கடந்திருக்கிறது இங்குள்ள வருணனை. போர் முறைகள், ஆயுதங்கள், நம்பிக்கைகள், சகுனங்கள், வீரருடைய மனப்பான்மை, வஞ்சினம், யானை, குதிரை, தேர், இவற்றின் பெயர்கள், படைதிரட்சி, அமைப்பு, ஒற்று, பல வகை யான வியூகங்கள் முதலியவற்றை அறிய இவ்வொரு நூலே போதும். படைத் தலைவர்கள் நான்கு தரமாக இங்கு காண்கி றோம் - அர்த்தரதர், சமரதர், மகாரதர், அதிரதர். இத்தலைமை தருவதெல்லாம் போரில் நியமிக்கப்பட்ட சேனாதிபதியே. அவ ருடைய கருத்தை யாரும் ஆட்சேபிப்பதில்லை (கன்னன் ஒரு வனே விலக்கு). பெரியவர்கள் என்பதற்காகப் படைத்தலைமை யில் சிறப்பான தகுதி கொடுப்பதில்லை.

போர்ச் செய்திகளைப் படிக்கும் போது நாமே வீரராகி விடுகிறோம். இப்படியா போர் செய்தார்கள் என்று வியக்கிறோம். ஒருவர் சந்தேகப் பிராணியாயிருந்து, இது வெறும் கதை என்று சொன்னாலுங்கூட, இப்படியும் ஒருவர் பாடமுடிந்ததா என்று வியக்கிறோம். அடுத்த கணம் இவர்கள் வழிவந்தவர்களா நாம் என்று நம் நாட்டு இழிநிலையை எண்ணி இரங்காமலும் இருக்க முடியாது. வீரவுணர்ச்சி வேண்டுமானால், பாரத வெண்பா வுக்கு இணையான வேறு நூல் காண முடியாது. உணர்வோடு படிப்பவர் யாரும் பல இடங்களில் கண்ணீர் வடிக்காமல் இருக்க முடியாது; குந்தி வந்து கன்னனைக் காணுதல், வீஷ்மன் பொருது படுதல் முதலியன அத்தகையன.

சேர சோழ பாண்டியர் மூவரும் பாண்டவர் சார்பில் போர் செய்தார்களென்று பலமுறை சொல்லப்படுகிறது. ஆனால் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன் பாண்டவ துரியோதனா தியர் அனைவரும் போர் செய்த காலத்து உணவு மட்டுமளித்தா னென்ற செய்தியைச் சங்க நூல்களில் காண்கிறோம். பாண்டவர் படையில் பல்லவர் பெயரையும் ஆசிரியர் குறிப்பிடுகிறார். இவர்களெல்லாம் பிற்காலத்தில் கற்பனையாகச் சேர்க்கப்பட்ட பெயர்களெனக் கருதவேண்டும்.

முதலிலிருந்து கடைசி வரை கண்ணன் பூபாரம் தீர்க்க வந்தான், அனைத்துச் செய்திகளும் அவன் சித்தம் போல நடை பெறுகின்றன என்ற ஒரு கருத்து எல்லா நிகழ்ச்சிகளையும் பிணைக்கின்ற ஒரு சரடாக அமைகின்றது. சகாதேவன் மட்டும் இதைச் சொல்லவில்லை. வீஷ்மனும் சொல்லுகிறான். கன்னன் கூட இதையுணர்ந்து அடங்குகிறான். இதை உணர்ந்தால்தான் பல நிகழ்ச்சிகளுக்கு நாம் அமைதி காண முடியும். கன்னன் தன் கவச குண்டலங்களைத் தானஞ் செய்தல், தனது சிகாமணி யைத் தானஞ் செய்தல், வீஷ்மன் சிகண்டியை முன்னிட்டு அருச்சுனன் தன்னை வெல்லலாம் எனக் கற்பித்தல், துரோணர் தம்மை வெல்லும் முறையைக் கற்பித்தல், கையில் வில் உள்ள வரை வெல்ல முடியாதவனாகிய சுவேதனை ஓர் அசரீரி தோன்றி வில்லை எறிந்து வந்து போர் புரியுமாறு அழைக்க வீஷ்மனுக் குக் கூறுதல், கருட வடிவெடுத்து அரவானை வெல்லும்படி கண்ணன் அசரீரியாக அலம்புசனுக்கு உணர்த்துதல் முதலியன வெல்லாம், இந்த நோக்கோடு பார்த்தால்தான் உணரமுடியும்.

## சொல்லாட்சி

இவ்வாசிரியர் எப்போதும் ஸ்ரீ என்ற சிறப்பு அடை கொடுத்தே சில பொருள்களைக் குறிப்பிடுவார், கிருஷ்ணனை வாசுதேவன் என்று கூறுவதே இவர் மரபு; ஓர் இடத்தில் மட்டும் ஸ்ரீ கிருஷ்ணாம்சம் என்பார். வாசுதேவன் எனும் போது, ஸ்ரீ வாசுதேவன் என்றே தவறாது குறிப்பிடுவார்; அப்படியே ஸ்ரீமத் துவாரகாபதி, ஸ்ரீ பலதேவர், ஸ்ரீ அஸ்தம், ஸ்ரீ பாதம் என்ற ஆட்சிகளும். வீஷ்மர் ஒருவரிடத்து மட்டும் இவருக்குத் தனித்த பக்தி; அது பற்றி எந்த இடத்திலும் ஸ்ரீ வீஷ்மன் என்றே சொல் வார்; நூறு தடவை சொன்னாலும், ஸ்ரீ வீஷ்மன்தான்; வீர லக்ஷ்மியை எங்கும் வீர ஸ்ரீ என்பார்.

அப்படியே சில சமயம் சில கருத்துக்களுக்கு, அடுக்குத் தொடரொன்றைத் தவறாது எங்கும் வைத்தே சொல்வார். சத்திய வாக்கியன் தரும சீலன் இராசராசன் தருமபுத்திரன்; தேவதேவன் ஸ்ரீ வாசுதேவன்; விக்கிரம மூர்த்தி பக்தவற்சலன் சக்கரபாணி ஸ்ரீவாசுதேவன்; ஈசுவரமூர்த்தி அசுவத்தாமா. ஈண்டிய தொல் புகழ் எழுமணி வரைத்தோட் பாண்டவர். மற்ற மன்னர் என் பதை எப்போதும் பர ராஷ்டிரத்து க்ஷத்திரியர் என்பார். உற வினர் என்றால் மித்திரபாந்தவத்தார். கண்ணனோ, அரசரோ புறப்படும் போது, அவரைக் குறிக்க வருணனை ஒரே தொடர் பான அடுக்குத் தொடர்களைக் கொண்டிருக்கும்.

> சர்வ க்ஷத்திரியரும் சென் றெதிர் கொண்டு
> அடி பணிந்து
> எம் மருங்கும் சூழ்ந்து சேவை பண்ண,
> எழில் மணிக் கவரி அருகிரட்ட
> தவள சத்திரம் மேனிழற்ற
> கருடத்துவசம் விசும் பணுவச்
> சங்கு பேரிகை முதலாயுள்ள இசைக் கலன்கள்
> பஞ்சமகா சத்தம் முழங்க .....

உத்தரவு என்பதை அருளிப்பாடு என்பார். விரைவைக் குறிப்பிடு வதற்குக் கதுமென என்ற தொடரே அடிக்கடி வரும். அரண் மனை என்று சொல்வது இவருக்கு வழக்கமில்லை; கோயில் என்றே சொல்வார்; விதுரன் கோயில் ஸ்ரீ வீஷ்மன் கோயில் என்றே சொல்லக் காண்கிறோம். அரசர் என்பதை க்ஷத்திரியர் என்றே சொல்வார். தண்டன் பண்ணி நமஸ்கரிக்க என்பது ஒரு

*தொடர். வினைச்சொல்லைத் தனியாகச் சொல்லிப் பாட்டைச் சொல்வது இவருக்குப் பழக்கமில்லை; யாது சொன்னான் கன்னன், யாது செய்தான் சல்லியன் என்று கூறிப் பிறகே பாட்டைச் சொல்வார்.*

*அசத்தியமல்ல, சத்தியங் கண்டாய்; பயமும் பரித்திராசமும் எய்தி - என்பன போன்ற தொடர்கள் காண்க.*

*தோல்வியைப் புறக்கவ்வுதல் என்றே சொல்வார். பெரியோரைப் போரில் வதைத்தல் அல்லது வெல்லுதல் என்று சொல்ல மாட்டார். வீஷ்மனைப் பத்தாம் நாட் போரில் மாலைக்குள் வெல்ல வேண்டும் என்று சொல்ல வருகிற கண்ணன், "இன்று மாலை யந்தியளவில் திவ்வியாஸ் திரங்களாற் சொர்க்க லோகத்துக்குப் போகவிடாயாகில்" என்று கூறுவது காண்க.*

அக்குரோணி — ஒரு பிற்குறிப்பு

*படைத் திரட்சியும் படை வகுப்பும் கூறிய இடத்து ஆசிரியர் இரண்டு பாடல்களால் (398, 399) அக்குரோணியின் அளவை வரையறுக்கிறார். (அக்குரோணி - அக்ஷௌஹிணி என்ற வடசொல்)*

கரிபத்து; தேர் மூன்று; கால் ஆயிரமாம்;
பரிநூறது — ஆகும் பதாதி; — வரு தொகைதான்
எண்பத்திரு மடங்கு தண்டாம்; இது நூறு
கொண்டது அக்குரோணியின் கூறு.

ஒன்பதி னாயிரம் யானை யொடு, யானையாற்
பொன் பொதிந்த தேர் மூன்று, தேரொன்றாற் — கண்பொதிந்த
காண் தகைய அக்குதிரை யொன்றினாற் காலாள் நூறு
ஆண்டகைய அக்கோணி யாங்கு.

*ஆனால், இதற்கும் வேறாக முன்பாட்டின் (397) உரைப் பகுதியில் எழுதியுள்ளார்: 24, 60, 170 தேர்; 82, 21, 690 யானை; 820, 65, 670 குதிரை; 82, 01, 09, 350 காலாள் - இவை கொண்டது ஓர் அக்குரோணி. இவ்வாறு இருமுறை எழுதிவிட்டு (391, 397) அக்குரோணியின் அளவைக் காட்ட உரைநடைப் பகுதியில் ஒரு சூத்திரமும் மேற்கோள் தருகிறார்.*

ஒரு பெருந் தேரும் இரு பெருங் களிறும்*
துரகம் நான்கும் படைஓர் ஐவரும்

---

* *இது ஒரு பெருங்களிறும் என்றே இருந்திருக்கும் போலும்; இரு என்பது பிழை; திவாகரம் பிங்கலம் பார்க்க.*

கொண்டது பதாதி என்ப தாகும்;
பதாதி முறைவழு வாமல்மும் மடங்கு
கொண்டது சேனை என்ப தாமே;
ஆங்கது மும்முறை கொண்டது குன்மம்;
குன்மம் மும்முறை கொண்டது அனீகினி;
அனீகினி ஐம்பதிற் றிரட்டியொ டாயிரம்
கொண்டது அக்குரோணி என்ன மொழிந்தான்;
மூவகை யுலகம் முறைப்பட வேத
பாரதம் பகர்ந்த பராசரன் மகனே.

*இச்சூத்திரம் எந்த நூலில் உள்ளது என்பது விளங்கவில்லை. (இதன் தொடக்க வரிகள் திவாகரம் பிங்கலங்களோடு ஒப்பு நோக்கத்தக்கன) திவாகரம் சற்றே உடன் காலமாகலாம்; பிங் கலந்தை பிற்காலம்; இரண்டினும் அக்குரோணி வேறு அள வில் சொல்லப்பட்டுள்ளது. இவையன்றி வேறு ஒரு பழைய நிகண்டு நூல் இருக்கக் கூடும் என்று வேறிடத்தில் விளங்கக் கூறி யிருக்கிறோம்.* ஒருகால் இம்மேற்கோள் அதனுள் காணப் பட்ட சூத்திரமாயிருக்கலாம். இதனுள் காணப்படும் நால்வகைப் படையின் தொகையும் பின்வருவதாகும்.*

*விவரம் தேர் யானை குதிரை காலாள் 1, 391, 397ஆம் பாடல்களின்படி,*

*1. அக்குரோணி 24,60,170; 82,21,699; 8,20,65,670; 82,01,09,350.*

| விவரம் | தேர் | யானை | குதிரை | காலாள் |
|---|---|---|---|---|
| 2. 398ஆம் பாடலின் படி: | | | | |
| பதாதி | 3 | 10 | 100 | 1000 |
| தண்டு | 246 | 820 | 8200 | 82000 |
| அக்குரோணி | 24600 | 82000 | 820000 | 82,00,000 |
| 3. மேற்கோள் சூத்திரத்தின்படி: | | | | |
| பதாதி | 1 | 2 | 4 | 5 |
| சேனை | 3 | 6 | 12 | 15 |
| குன்மம் | 9 | 18 | 36 | 45 |
| அனீகினி | 27 | 54 | 108 | 135 |
| அக்குரோணி | 2700 | 5400 | 10800 | 13,500 } |
| ? | 1000 | 1000 | 1000 | 1000 } |

* *எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.*

4. திவாகரத்தின்படி

| | | | | |
|---|---|---|---|---|
| பதாதி | 1 | 1 | 4 | 50 |
| சேனாமுகம் | 3 | 3 | 12 | 150 |
| குமுதம் | 9 | 9 | 36 | 450 |
| கணம் | 27 | 27 | 108 | 1350 |
| வாகினி | 81 | 81 | 324 | 4050 |
| பிரதனை | 243 | 243 | 972 | 12150 |
| சமுகம் | 729 | 729 | 2916 | 36450 |
| அனீகம் | 2187 | 2187 | 8748 | 109350 |
| அக்குரோணி | 21870 | 21870 | 87480 | 1093500 |

5. பிங்கல நிகண்டின்படி:

| | | | | |
|---|---|---|---|---|
| பதாதி | 1 | 1 | 3 | 5 |
| சேனாமுகம் | 3 | 3 | 9 | 15 |
| குமுதம் | 9 | 9 | 27 | 45 |
| கணகம் | 27 | 27 | 81 | 135 |
| வாகினி | 81 | 81 | 243 | 405 |
| பிரளயம் | 243 | 243 | 729 | 1215 |
| சமுத்திரம் | 729 | 729 | 2187 | 3645 |
| சங்கம் | 2187 | 2187 | 6561 | 10935 |
| அனீகம் | 6561 | 6571 | 19683 | 32805 |
| அக்குரோணி | 19683 | 19683 | 59049 | 98415 |

| | | | | |
|---|---|---|---|---|
| 6. வடநூல்முறை அக்குரோணி | 21870 | 21870 | 65610 | 109350 |

(இந்த 6-ஆம் எண், பாணினியைத் தழுவி வடமொழி அகராதிகளிற் கொள்ளப்பட்டுள்ளது. இது பிங்கலத்தில் கூறிய சங்கம் என்ற எண்ணைப் போல் பத்து மடங்கு கொண்டிருக் கிறது)

இந்நான்கில் கூறப்படும் எண்கள் பெரிதும் வேறுபட்டுள் ளன. 1 இல் கூறியபடி பார்த்தால் காலாள் 82 கோடிக்கு மேல்; இது சிறிதும் பொருந்தாது. பெருந்தேவனார் காலத்திலும், இன்னும் நிச்சயமாக அவர் குறிப்பிடுகின்ற பாரத காலத்திலும், பரத கண்டத்தில் மக்கள் தொகையே 82 கோடி இல்லை; உலகம் முழுமையுமே அத்தொகை இருந்திருக்காது. கௌரவர் படை 11 அக்குரோணி, பாண்டவர் படை 7 அக்குரோணி ஆக 18 அக்குரோணி என்று நூல் சொல்லுகிறது; இதன்படி காலாள் கணக்கு 1476 கோடியாகும். இத்தொகை உலகனைத்துக்கும் ஒரு

காலத்திலும் பொருந்தாது. இன்றைய ஜனத்தொகையே 400 கோடிகள்தான். எனவே இக்கணக்குகள் திருத்தமான கணக்குகள் ஆகா. மேலே காட்டப்பட்ட 6 ஆம் எண் வடநூல் முறைக் கணக்கு பொருந்துவதாகலாம். தமிழ் நூல்களில் அளவின்றி, இருந்த நிலைமைக்கு முரணாகப் பெருக்கிச் சொல்லியிருக்கிறார்கள்.

## மாவிந்தம்

பெருந்தேவனார் பாரதத்தின் இறுதிப்பகுதி, பாண்டவர் வைகுந்தம் செல்வதைக் கூறும் சுவர்க்காரோ கணப் பருவம் என்பதாகும். இதன் சில பாகங்கள், கிலமான ஏடுகள் வடிவத்தில் கிடைத்து, தஞ்சைச் சரசுவதி மகால் வெளியீடாக வெளிவந்துள்ளது. இதன்கண் உள்ள பாடல் தொகை 339. 'பொழிப்புரையுடன்' என்ற தலைப்போடு அச்சிடப்பட்டுள்ளது. பாரதவெண்பா, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள்; இடையில் வரும் பகுதி பொழிப்புரையன்று; உரைநடையில் சில சமயம் பாட்டின் விளக்கமாயும் சில சமயம் கதைப் போக்கின் தொடர்பைப் புலப்படுத்துவதாயுமுள்ள பகுதி; இது நூலின் அங்கமேயன்றி நூலின் உரை என்பது பதிப்பித்தோர் நூலமைப்பையே அறியாமையால் வந்த பிழை.

மகாவிந்தம்* (மாவிந்தம்) என்பது வைகுந்தம்; பாண்டவர் வைகுந்தம் செல்வதைக் கூறும் பகுதி என்று பொருளாகும்.

இப்பகுதியில் வரும் கதைப் போக்கு பின் வருவதாகும். தனது முன்னோருடைய பராக்கிரமங்களைக் கேட்டால் தன் மேலிருந்த வினைவிட்டகலும் என்று அறிந்து சனமேசயன் கேட்க, வேதவியாசன் சொல்லுகின்றான். தருமபுத்திரன் செங்கோல் செலுத்தி வரும் நாளில் கலியுகம் பிறந்தபடியால் நல்லோர் இருக்கலாகாது என்று கண்ணன் தருமபுத்திரனை அழைத்து, தான் உலகத்தை நீங்கிப் போவதை அறிவித்தான். பின்னர் அவன் நகரில் இருக்க, நகரப்பிள்ளைகள் மற்றொரு பிள்ளை வயிற்றில் சீலையைக் கட்டி இவள் பெறப் போகும் பிள்ளை ஆணோ பெண்ணோ என்று துருவாச முனிவரைக் கேட்க, அவர் சினந்து, 'இவள் உங்களுக்கும் உங்கள் ஸ்வாமிக்கும் யமனாய் இருக்க வல்ல ஓர் இருப்புலக்கையைப் பெறுவாள்' என்று சொன்னார்.

---

* பெருந்தேவனார் பாரதம் பொழிப்புரையுடன், மகாவிந்தம் 1950, பண்டித முத்துரத்ந முதலியார் பதிப்பித்தது.

அப்படியே அவள் வயிற்றுச் சீலை இருப்புலக்கையாயிருக்கக் கண்டஞ்சி, அவர்கள் அதை அராவிப் பொடியாக்கிக் கடலில் விட்டார்கள். பொடி சம்பங்கோரையாக வளர்ந்தது. அத்துவ ராபதி அரச குமாரர்கள் ஒரு சமயம் அங்கு வந்து சண்டை யிட்டு அச்சம்பங்கோரையால் ஒருவரை யொருவர் அடித்துக் கொண்டு மாண்டார்கள். உலக்கையில் இருந்த ஒரு துண்டத்தை ஒரு மீன் விழுங்க, அம்மீனைப் பிடித்த வேடன் அதைத் தன் அம்பில் தொடுத்து வைத்திருந்தான். ஒரு மானைத் துரத்தி வரும் போது அவன் மானை நோக்கி எய்த அம்பு அங்கு யோகத்தில் எழுந்தருளியிருந்த கண்ணன் பாதத்தில் தைத்தது. தனது முடிவை உணர்ந்த கண்ணன் அருச்சுனனை அழைத்து, துவாரபதியில் உள்ளாரை அழைத்துச் செல்லுமாறு சொல்லிவிட்டு, வைகுந்தம் சென்றான். துவாரபதியைக் கடல் கொண்டது. உலகத்தில் கலியுகம் வந்தது. நாமும் வைகுந்தம் போவோம் என்று எண்ணித் தருமபுத்திரன் தம்பியரோடும் திரௌபதியோடும் பரீட்சித்திடம் அரசை ஒப்புவித்துப் புறப்பட்டான். வழியில் விநாயகனையும் க்ஷேத்திர பாலனையும் கண்டு வழி வினவிச் சென்றார்கள். தருமமே கடைபிடித்துப் போர் துறந்து சென்ற இவர்களது பண்பை மேகநாதன் அறிந்து மகிழ்ந்து வழிகாட்டி அனுப்பி னான். பல காட்சிகளைக் கண்டு, சத்திவிருடி என்பவரைக் கண்டு அப்பால் ஒரு மாநாகத்தின் சாபம் நீக்கி, ஒரு பெரிய பருவதத்தின் சாபம் நீக்கி, அசுவமுகி என்ற அரக்கியின் சாபம் நீக்கி, மாகாளியின் அருளைப் பெற்றுச் செல்லுகின்ற காலத் தில், திரௌபதி இறந்தாள். அப்பால் நாராயணன் பெயரைச் சொல்லிக் கொண்டு செல்லுகின்ற காலத்தில், வானர வீரர் களையும் கடந்து, கருடாழ்வாரையும் கடந்து, அப்பாற் சென்ற போது, சகாதேவன் உயிர் துறந்தான். பின்னர் நகுலன் உயிர் துறந்தான். அப்பால் இவர்கள் பரமேசுரனைச் சந்தித்து மேலும் சென்றார்கள். தரும புத்திரனை விழுங்க வந்த ஒரு மகாமிருகத்தை வீமன் பிளந்தெறிந்தான். அது இருடி மகனாகிச் சாப நீக்கம் பெற்றுச் சென்றது. அடுத்து அருச்சுனன் இறந்தான். பின்னர் தருமனும் வீமனும் தனியே செல்லும்போது வந்து தாக்கிய ஒரு பன்றியை வீமன் கொன்றான். அப்பன்றி சாப நீக்கம் பெற்று இருடியின் சீடனாய்ச் சென்றது. வீமசேனனை விஷ்ணுவின் தூதர் வந்து அழைத்துச் சென்றனர். தனியே செல்லுகின்ற போது தருமன் ஒரு புருஷா மிருகத்திடம் வழி கேட்டுச் செல்லுகின்ற நிலையில் தருமராசர் அவனைச் சோதிக்க எண்ணி புழுத்த

நாயின் வடிவத்தோடு அவனைப் பின் தொடர்ந்தார். தருமன் அதைத் தலையிலே தூக்கிச் சென்று ஓர் ஆற்றைக் கடந்தான். அப்போது அந்த நாய் தன் சுயவடிவத்தை எடுத்துத் தருமராசன் ஆகி, 'நீ உன் சரீரத்துடனே சொர்க்கம் புகுவாய்' என்று வர மளித்துச் சென்றது. அங்கு தருமன் கேதாரத்தைக் கண்டான். அப்போது நாராயணன் கட்டளைப்படி தேவர்கள் அவனை வந்து அழைத்தார்கள். தருமராசன் சந்நிதி அடைந்தான். அப்போது, 'அசுவத்தாமா என்ற யானை அரசு இறந்தான்' என்று பாரதப் போரில் சொன்ன பொய் காரணமாக, யம கிங்கரர் இவனை ஏழு நரகமும் காணுமாறு அழைத்துச் சென்றார்கள். ஏழையும் கண்டு வருந்தி, அங்கு துரியோதனன் துன்புற்றது கண்டு, அவ னுக்குத் தான் செய்த புண்ணியத்தில் பாதியை ஈந்து, அவனை யும் உடனழைத்துக் கொண்டு அப்பாற் சென்றான். பின்னர் பிரம லோகமும் வேண்டாமென்று மேலும் சென்று வைகுந்தத்தைக் கண்டான்.* நாராயண மூர்த்தி மகாபலிக்குத் தருமபுத்திரனை அறிமுகப்படுத்துவதோடு நூல் (அபூர்த்தியாய்) முடிகிறது.

## பதிப்பு

மிகவும் சிதிலமான ஓர் ஏட்டிலிருந்து இப்பகுதி எடுத் தெழுதி அச்சிடப்பட்டுள்ளது உண்மை. ஆனால் இப்பகுதி பதிப்பு என்ற பெயருக்கே தகுதி இல்லாத முறையில் அச்சிடப் பட்டுள்ளது. எதுகை, மோனை, அசை, சீர், அடி, பாட்டு என்ற உறுப்புக்களைச் சிறிதும் ஆராயாமலே நூல் அச்சிடப்பட்டுள்ளது. மூல ஏட்டை மீண்டும் ஒரு முறை பார்த்தால் ஏடு படிக்கும் பழக்கம் உள்ளவர்கள் பல இடங்களைச் செம்மைப்படுத்த முடியும். பாட்டையும் உரைநடையையும் படித்துப் பொருள் செய்து கொள்வதில் உள்ள கஷ்டத்தால் நூலை ஆராய இடர்ப்படுகிறது. இத்தனைக்கும் இப்பதிப்பாளருக்கு முன், கோபாலையர் பதிப்பித்த 830 பாடல் கொண்ட முன் பகுதி இருக்கவே செய்கிறது. அப்படியிருந்தும் இப்பகுதியின் பதிப்பில் உள்ள குறைகளைப் பற்றி என்ன சொல்வது? ஒரு வெண்பாக் கூடத் திருத்தமான வடிவத்தில் இல்லை.

---

* இக் கதைப் பகுதி பிற்காலத்தில் வைகுந்த அம்மானை என்ற பெயரில் 7500 அடி கொண்ட நீண்ட அம்மானைப் பாடலாகவும் பாடப் பெற்றுள்ளது. பாரதம் மாவிந்தம் என்ற பெயரில் விருத்தப் பாவால் ஆன நூலின் ஏட்டுச் சுவடிகள் இரண்டு சரசுவதி மகால் நூல் நிலையத்தில் உள்ளன; செய்யுள் 1378; நடை சிறப்பற்றது. இதுவே மாவிந்த புராணம் என்று சிலரால் சொல்லப்பட்டது போலும்.

### சில குறிப்புக்கள்

இனி, சில பொருள்களை இப்பகுதியிலிருந்து மட்டும் இங்கே எடுத்துக் காட்டுவோம். இப்பகுதி முழுமையும் வெண்பாவே; ஆசிரியப்பா இதனுள் இல்லை. தொடக்கத்தில் கோபாலையர் பதிப்பில் தரப்பட்டுள்ள விநாயகர் துதியும் திருமால் துதியும் எழுதப்பட்டுள்ளன. பொது நோக்காகப் பார்க்குமிடத்து, வெண்பாவும் உரைநடையும் முன்னதிலுள்ளவை போலவே இங்கும் இருப்பதாகத் தோற்றினாலும், நடை சிறிது தாழ்வானது என்றெண்ணவே தோன்றுகிறது. பிழையான பதிப்பு முறை இத்தோற்றத்துக்கு ஒரு காரணமாயிருக்கலாம்.

தருமன் முதலிய ஐவரும் கணபதியைக் கண்டு துதிப்பதாக நான்கு பாடல்கள் உள்ளன. இவை வெண்பா தானா என்று சொல்ல முடியவில்லை; யாவும் 'கணபதியே உனக்கபயம்' என்று முடிகின்றன. அப்படியே தனக்கு இறுதி வந்தமை யுணர்ந்த சகாதேவன் திருமாலைத் துதிக்குமிடத்து, சரணம் சரணம் என்று முடிகிற இரு பாடல்கள் உள்ளன. வெண்பாக்கள் அல்ல; பிழையாய்ப் பதிப்பிக்கப்பட்ட விருத்தங்கள் போலும். மேலும் துதிப் பாடல்களாக வருமிடங்களில் பின்வரும் திருப்பதிகள் குறிப்பிடப் பட்டுள்ளன: அத்தியூர், திருமாலிருஞ்சோலை மலை, திருவரங்கம், வேங்கடம், கண்ணபுரம், கச்சி உலகளந்த பெருமாள் (ஊரகம்) துதிப்பாடல்களுக்குப் பின்வருவன எடுத்துக்காட்டுக்கள்.

> கார்மேக வண்ணனே, கண்ணபுரவா, கச்சி
> ஊர்மேவி நின்றாய், உலகளந்தாய் – சீர்மேவு
> தாமரையாள் கேள்வா, சரணே சரணென்று
> நாவுரை செய்தான் நயந்து. 210

> மாதவனே கோவிந்தா என்பேன்நான், வாயினால்
> மாதவனும் வந்தென் மனத்துளான்; – மாதவனே,
> ஆரணனே அச்சுதனே, அண்டர்தொழும் வானவனே
> நாரணனே என்றுரைப்பேன் நான். 185

சுனையில் மலர்ந்த தாமரையைப் பார்த்த தருமன் கூற்று:

> கண்ணன்தன் கண்ணோ, கமல மலரிவைதாம்
> கண்ணன்தன் மேனியோ காற்கமலம் – கண்ணன்தன்
> சேவடியோ, இம்மலர்கள் செவ்வாயோ, இம்மலர்கள்
> ஆவதுதான் அம்போ ருகம். 194

பண்டைய நூல்களின் தொடர்கள் பயிலுதற்குச் சில எடுத்துக் காட்டுக்கள் தரலாம். ‘பாலோடளாய நீர் பாலானது போல’ (322) என்ற வரி ‘பாலோடளாய நீர் பாலாகும் அல்லது நீராய் நிறந்திரிந்து தோற்றாதாம்’ என்ற நாலடியார்ப் பாடலைத் தழுவியது (177). ‘இருதலைக் கொள்ளி மின லென் னெறும்பே* ஒத்தேன்’(76) என்ற வரியை ‘இருதலைக் கொள்ளியின் உள் ளெறும் பொத்து நினைப்பிரிந்த விரிதலையேனை விடுதி கண் டாய்’ என்ற திருவாசக வரியுடன் ஒப்பிடுக. ‘பிறை கவ்வி நின்ற பெருங்குன்றம் போல’(166) என்ற வரியை நச்சினார்க்கினியர் மேற்கோள் காட்டுகிற ‘பிறை கவ்வி மலை நடக்கும்’ என்ற விடுகதை வரியோடு ஒப்பிடுக.

இனி கதைப்போக்கு என்ற அளவில், இப்பகுதியில் இரு வரலாறுகள் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கன. ஒன்று கண்ணன் அடிச் சோதிக்கெழுந்தருளிய பின், பாண்டவர்களின் நிலை. துவராபதியிலுள்ள பெண்டிர் முதலியோரையும் நிதியங்களை யும் கொண்டு போகும்படி அர்ச்சுனனுக்குக் கூறி விட்டே கண்ணன் மறைந்தான். அவ்வாறு இவனும் வீமனுமாக எல்லாம் கொண்டு ‘அத்தினாபுரம் நோக்கி வருங்காலத்து, வேடர் திரண்டு வந்து “ஆயிழையாரைத் துகிலுரிவாரும் ஆபரணங்களைக் கழற்றிக் கொள்வாரும் மணி நெடுந்தேரும், மதகளிறும், வயப் புரவியும் கைக்கொள்வாரும், மலை நிதியம் சூறை கொள்வாரு மாக நின்றபொழுது, இடும்பனையும் பகனையும் சராசந்தனையும் துச்சாதனனையும் கொன்ற வீமசேனன் வரப்பலன்கள் குறைந்து நின்றன. எத்தனையோ ஆயிரம் இராசாக்களைக் கொன்று பூமி பாரந் தீர்த்துத் தர்ம புத்திரனுக்கு இராச்சியங் கொடுத்த தோள்கள் வலி குறைந்து அருச்சுனனுக்குக் காண்டீபம் வாங்க வொண்ணாதாயிற்று; நாராயணன் பலமல்லாது இவரால் ஒரு பலன்களுமில்லை என்று தேவர்கள் சொல்லா நின்றார்கள்.’

மற்றொன்று, தருமபுத்திரன் சபையில் இரு பிராமண ரிடையே நிகழ்ந்த ஒரு வழக்கு. ஒரு பிராமணன் மற்றொரு வனுக்கு நிலம் விற்றான். வாங்கினவன் அதை உழுவித்த போது புதையல் இருந்தது கண்டான். அவன் அது தனக்கு உரியதன்று என, விற்றவனும் விற்றுவிட்டபடியால் தனக்கு உரியதன்று என்றான்.

---

* இவ்வரி ‘இருதலைக் கொள்ளியின் உள்ளெறும்பே ஒத்தேன்’ என்று இருத்தற்குரியது. அச்சுப்பாடம் பிழையாகும்.

இவ்வழக்கு தருமன் சபைக்கு வந்தது. முடிவு காண முடியாமல் ஐந்தாறு நாள் கழித்து விசாரிக்கின்றேன் என்று சொல்லியனுப்பினான். இடையில் கலியுகம் பிறந்தது. யுக தருமங்கள் தலை கீழாய் மாறிவிட்டன; மீண்டும் அழைத்துக் கேட்டபோது, வாங்கினவனும் என்னதே என்றான், விற்றவனும் என்னதே என்றான். கண்ட தருமன் உலக தருமம் மாறியதுணர்ந்து அரசைத் துறந்தான் என்பது வரலாறு.

இனி, மாவிந்தப் பகுதியும் பெருந்தேவனார் செய்தது தானா என்பதில் ஐயப்பாட்டுக்கும் இடம் உண்டு. பாடல்களும் உரை நடையும் முந்திய பகுதியளவு செம்மை பெற்றன வாயில்லை; ஆனால் இந்தத் தோற்றம் ஏற்படுவதற்குக் காரணம், பதிப்பின் குறை. முன் காட்டியபடி பதிப்பு செம்மை பெறாதபடியால் நூல் குறைபாடுடையதாகத் தெரிகின்றதேயன்றி, இப்பகுதியும் பெருந்தேவனார் வாக்கு என்று கொள்வதில் தடையில்லை. திருமாலையும் அவன் ஊரான துவாரகை முதலியவற்றையும் குறிப்பிடும்போது, இப்பகுதி எங்குமே, முன் பகுதி போல ஸ்ரீ என்ற அடை கொடுத்தே சொல்லப்பட்டுள்ளது. முன் பகுதியில் கடவுள் வாழ்த்தாக ஸ்ரீ வாசுதேவர் ஸ்ரீ பலதேவர் ஸ்ரீபாதம் ஸ்ரீகளுடன் ஸ்ரீமத் துவாரபதி என்றவாறே இங்கும் வருவன காண்க. கண்ணனை ஸ்ரீவாசுதேவன், ஸ்ரீநாராயண சுவாமி என்றே ஈரிடங்களிலும் கூறுகிறார். அத்தியூர், சோலைமலை, அரங்கம், வேங்கடம் என்ற நான்கு தலங்களையும் குறிப்பிடுகிறார். இங்கும் ஒரு பாடலில்(165) அந்நான்கு தலங்களையுமே சேர்த்துப் பாடுகிறார். திருமால் என்று சொன்னதுமே அவனுடைய பல நாமங்களை அடுக்கிச் சொல்லும் இயல்பு இரண்டு பகுதியிலும் காணப்படுகிறது. திருமாலைத் துதிக்கும் பாடல்களைக் கூறும் இயல்பும் இரண்டு பகுதிகளிலும் ஒன்றாகவே காணப்படுகிறது.

OOO

அத்தியாயம் 2

# இலக்கிய ஆசிரியர்

## *முன்னுரை*

ஐம்பெருங்காப்பியம் என்று சொல்லப்படுவனவற்றுள் இரண்டு காப்பியங்கள் இந்த நூற்றாண்டில் எழுந்தன என்று அறிய முடிகிறது. இவை வளையாபதியும் சிந்தாமணியும். சிந்தாமணி மூவாயிரத்துக்கு மேற்பட்ட பாடல் கொண்டது. வளையாபதியும் ஒரு விரிந்த காப்பியமாய் இருக்க வேண்டும் என்று தெரிகிறது. நூல் இன்று இல்லாமையால் அது பற்றி எதுவும் சொல்ல முடியவில்லை.

இந்த நூற்றாண்டில் விருத்தப்பா செம்மைப்பட்டுக் கொண்டு வருகிறது. தேவார திருவாசகங்களிலும், ஆழ்வார் பாசுரங்களிலும் பயின்று வந்து புதிய புதிய உருவம் படைத்துக் கொண்டிருந்த விருத்தப்பாவினங்கள் இந்த நூற்றாண்டில் நல்ல வடிவம் பெறுகின்றன. இன்று முழுமையும் கிடைக்கின்ற சீவக சிந்தாமணியும் மிகப் பெரிய காவியமாகிய கம்பராமாயணமும் இந்த நூற்றாண்டிலே தான் தோன்றின. இவை இரண்டும் விருத்தப்பாவிலே தோன்றிய பெருநூல்கள். மேலும் இவை நீண்ட கதையை, தொடர்ந்த பல்லாயிரம் செய்யுட்களால் இசை பொருந்தப் பாடிச் செல்லுகின்றன. பல்வேறு வகையான உறுப்புக் களும் வருணனைகளும் இவற்றில் அமைகின்றன. பாவினங்களில், ஆசிரிய விருத்தம், வெளி விருத்தம், கலி விருத்தம், வஞ்சி விருத்தம் முதலிய பல்வேறு விருத்தங்கள் இங்கு முதன்முதலாக உருவம் பெற்று நிமிர்ந்து செல்கின்றன. இந்த நிலைமை இந்த நூற்றாண்டுக்குரிய சிறப்பு. இந்தச் சிறப்பில் முற்கூறிய வளையா பதிக்கும் பங்குண்டு. நூல்களின் காலம் இன்னும் திட்டமாக வரையறை பெறாமையாலும், அபிமானம் காரணமாக விருப்பு வெறுப்புக்கள் ஓங்கி நிற்றலாலும், விருத்தப்பாவின் வளர்ச்சி யைத் திட்டமாகக் கணிக்க முடியவில்லை. பொதுவாக சீவக சிந்தாமணி தான் விருத்தப்பாவில் இயன்ற முதலாவதான

தொடர் நிலைச் செய்யுள் என்று அறிஞர் கருதுகிறார்கள். இது பின்னும் ஆராய்வதற்குரிய பொருளே ஆகும்.

ஒருகால் வளையாபதி என்ற, இன்று கிடைக்காத பெருங் காப்பியம் சிந்தாமணிக்கு முற்பட்டதாகலாம் என்று யாம் கருதுகிறோம். இரண்டு நூல்களின் நடையை மட்டும் சுவைக்கும் போது இக்கருத்து எழாமல் போகாது. வளையாபதி என்ற நூல் இல்லாமல் போயினும், அதனுள் இன்று கிடைக்கின்ற பாடல்களை இவ்வத்தியாயத்தில் ஆராய்கிறோம்.

தமிழில் பாக்கள் நான்கு: ஆசிரியம், வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என. இவற்றுள் வஞ்சிப்பாவில் எந்தத் தனி நூலும் எழுந்தது இல்லை; பாடல்கள் மட்டுமே உள்ளன. கலிப்பா வில், எட்டுத் தொகையுள் ஒன்றான கலித்தொகை என்ற அகப் பொருள் நூல் ஒன்று மட்டுமே எழுந்திருக்கிறது; தொடர் நிலைச் செய்யுள் என்று சொல்லுகின்ற பெருங்காப்பியம் எழ வில்லை. வெண்பாவில் எழுந்த தனி நூல்கள் பல. ஆனால் வெண்பாவில் காப்பியங்கள் பிற்காலத்தில் தான் எழுந்தன. பண்டைய காலத்தில் இல்லை. ஓர் இராமாயண வெண்பா இருந்திருக்கும் போலும்: இன்று இல்லை. பிற்காலத்தில் நள வெண்பா போன்ற காப்பியங்கள் எழுந்தன. நாம் கருதுகின்ற ஒன்பதாம் நூற்றாண்டில் பெருந்தேவனார் பாடிய பாரத வெண்பா என்பது, பெரும்பான்மை வெண்பாக்களைக் கொண்டு உரைநடையை இடைமடுத்துச் சிறுபான்மை அகவல், விருத்த மாகிய பாடல்களைப் பெய்து செய்யப்பட்டது. இதை முந்தைய அத்தியாயத்தில் பார்த்தோம். பண்டைய காப்பியங்கள் யாவுமே ஆசிரியப்பாவில் இயன்றிருந்தன. சிலப்பதிகாரம், மணிமேகலை, உதயணன் கதை என்பன எடுத்துக் காட்டுக்களாகும். ஆனால் பிற்காலத்தில் பெருங்காப்பியங்களை ஆசிரியப்பாவில் செய்யும் நிலை மாறி, புதிதாக விருத்தப்பாவில் செய்யும் மரபு தோன்றி வளர்ந்தது. இன்று வரையிலும்கூட, விருத்தப்பாவே காப்பியம் செய்வதற்குரிய யாப்பாகக் கொள்ளப்பட்டு வருகிறது. பண்டைய பாக்களுள் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் வழக்கு வீழ்ந்தன. ஆசி ரியப்பாவும் வெண்பாவும் வழக்கில் இருந்தும் கூட, அவற்றில் பெருநூல் செய்யும் மரபு அருகிவிட்டது.

இந்த நிலையில், **இரும்பல் காஞ்சி** என்ற ஒரு நூல், வெண்பாவும் ஆசிரியப்பாவும் விரவி வர இந்நூற்றாண்டிற் செய்யப்பட்ட ஒரு நூல் என்று தெரியவருகிறது. இந்நூலின்

பொருட்போக்கு விளங்கவில்லை; நூலே இன்று இல்லை. ஆயினும் காஞ்சி என்ற பெயரானது இது நிலையாமையை எடுத்துக்காட்டும் ஒரு சிறு நூல் என்று தெரிவிக்கிறது. இரும்பல் காஞ்சியில் இரண்டு மூன்று பாடல்களே இன்று கிடைக்கின் றன. இதுவும் இக்காலத்துக்குரியதென்று முடிவு செய்து இவ் வத்தியாயத்துள் இது பற்றிச் சில சொற்கள் கூறுகின்றோம்.

## இரும்பல் காஞ்சி

புறத்திரட்டு என்ற தொகை நூலினாலும் தக்கயாகப் பரணி யுரையாலும் தெரிய வருகின்ற ஒரு நூல் இரும்பல் காஞ்சி என்பது. நூல் இப்போது இல்லை.

காஞ்சி என்பது புறப்பொருளில் ஒரு திணை; வெட்சி முத லாகக் கூறப்பெறும் எட்டுத் திணைகளுள் இது நான்காவது; 'உட்காது எதிர் ஊன்றல் காஞ்சி' என்று திவாகரம் கூறும். இது வேற்று மன்னன் படையெடுத்து வந்த விடத்து, அரசன் தன் காலனிடத்தே அஞ்சாது எதிர்நின்று காஞ்சி என்னும் பூவைச் சூடும் புறத்துறையாகும். இது புதிய அமைப்பு, ஆனால் தொல் காப்பியப் பொருளதிகாரமானது, வீடு பெறுவதை உணர்த்த வேண்டிப் பல்வேறு நிலையாமைகளை எடுத்துக் கூறும் புறத் துறைக்கும் காஞ்சி என்று பெயர் கூறும். நிலையாமை பல வகை ஆதலினால், காஞ்சியாகிய புறத்துறையும் பலவகையா யிருக்கும். பல் காஞ்சி என்றதனால் பலவகைக் காஞ்சியையும் இதுகூறும் என்றும், இரும் என்றதனால் விரிந்த பெரு நூலா யிருக்கும் என்றும் கூடக் கருத இடமுண்டு.

தக்க யாகப் பரணி யுரைகாரர் இரண்டிடங்களில் இந் நூலைக் குறிப்பிடுகின்றார்; "சமண்மூகர் என்றது சமணரான ஊமர்கள் என்றவாறு",

> **எய்கணை விழுந்துளை யன்றே செவித்துளை**
> **மையறு கேள்வி கேளா தோர்க்கே.**

இஃது இரும்பல் காஞ்சி. எனவே சமணம் கேள்வி சகத்துக்குச் சிருஷ்டிகர்த்தா ஒருவன் இல்லை என்னும் கேள்வி என்றது". (தாழிசை 189 உரை) மற்றோரிடத்தில் "ஆதித்தன் பிறந்த முட் டையிலே திக்கயங்களெட்டும் பின்னைப் பிறந்தன என்னும் கதை யுண்டு, அம்முட்டைச் சிவப்பாலே ஆதித்தனைச் செங்கதிரோன் செய்யோன் என்பர்;

பருதிக் கருவின் முட்டைக்
கதிர்விடும் பெருங் குறை வாங்கி வலங்கையிற்
பூ முதல் இருந்த நான் முகத் தனிச் சுடர்
வேதம் பாடி மேதகப் படைத்தன
எண் பெருவேழம்.

இஃது இரும்பல் காஞ்சி" என்று கூறுகிறார். (தாழிசை 276 உரை) இரண்டிடங்களிலும் இவ்வுரைகாரர் திட்டமாக நூலின் பெயரைக் குறிப்பிடுவது காணத்தக்கது.

இனி, புறத்திரட்டுத் தொகுத்த ஆசிரியர் மூன்று வெண்பாக் களை இரும்பல் காஞ்சி என்று காட்டுகிறார். முதல் பாடல் (புறத்திரட்டு 5) கடவுள் வாழ்த்துப் பகுதியில் உள்ளது.

நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழல்நாறிக்
காலை இருள்சீக்கும் காய்கதிர்போல் – கோல
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற்சூர் வென்றோன்
அணிச்சே வடிஎம் அரண்.

இப்பாடல் முருகன் துதி. இது நளவெண்பாக் கடவுள் வாழ்த்துப் பகுதியைச் சேர்ந்ததாகவும் பலரால் அச்சிடப்பெற்றுள்ளது. நளவெண்பாச் செய்த புகழேந்தி வைணவச் சார்புடையவர்; அவர் நூலில் இப்பாடல் ஏடெழுதுவோரால் முகப்பேட்டில் எழுதிக் கொள்ளப் பெற்றுள்ளதேயன்றி, இது இரும்பல் காஞ்சிப் பாடல் என்பதில் ஐயமில்லை.

இரண்டாம் பாடல் 'வலியறிதல்' என்ற அதிகாரத்தில் வருகிறது (புறத்திரட்டு 601),

ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற் சிறந்த
பேரருளி னாற்குப் பெறலருமை யாதரோ
வார்திரைய மாமகர வெள்ளத்து நாப்பண்ணும்
போர் மலைந்து வெல்லும் புகழ்.

மூன்றாம் பாடல் 'புகழ்' என்ற அதிகாரம் (1475),

கருங்கலி முந்நீரின் மூழ்காத முன்னம்
இருங்கடி மண்மகளை ஏந்தினவேயாயிற்
பெரும்பெயரேனத் தெயிறனைய வன்றே
கரும்பறை தொண்டையான் தோள்.

தக்கயாகப் பரணியுரை மேற்கோள் இரண்டும் ஆசிரியப்பா. புறத்திரட்டில் வந்தவை வெண்பா. இவ்வெண்பா மூன்றினுள் முதலாவது நேரிசை வெண்பா, மற்ற இரண்டும் ஒரு விகற்பத்

தால் வந்த இன்னிசை வெண்பா. ஆதலால், இந்நூலானது வெண்பாவும் ஆசிரியமும் விரவிச் செய்யப்பெற்ற நூலாயிருத்தல் கூடும். வேறு இதன் பொருளமைதி விளங்கவில்லை. ஆயினும், ஒரு குறிப்புக் கிடைக்கிறது. இறுதிப் பாடலில் 'தொண்டை யான் தோள்' புகழப்பட்டுள்ளது. இது தொண்டை நாட்டில் கடைசியாய் சிறப்பு மிக்கவனாய் ஆட்சி புரிந்த பல்லவன் மூன் றாம் நந்திவர்மனைக் குறிக்குமென்று தோன்றுகிறது. இவனே தெள்ளாறெறிந்த பல்லவ மல்லன் என்று புகழப் பெற்றவன். பிரசித்தி பெற்ற நந்திக்கலம்பகம் இவன் மீது பாடப்பெற்றது. இவனுக்குப் பின்னர் புகழ் பெற்ற தொண்டை மன்னன் யாரும் இருந்ததில்லை. அறங்காவல் என்றும், புகழ் என்றும், வராக மூர்த்தியின் எயிறு போன்ற தோள் என்றும் புகழ் படைக்கத் தக்கவன் இவ்வரசனே. ஆதலால் இந்நூல் இவன் காலத்து இவன் மீது பாடப் பெற்றிருக்கலாம் என்றே கருதுகிறோம். மேலும், இவனைப் பற்றிய கதை, கவிதைச் சிறப்பை நன்கு அனு பவித்து நிலையாமையையும் நன்கு உணர்ந்து தன் உயிரையே கொடுத்தான் என்று சொல்லுகிறது. ஆதலால் காஞ்சி அவனுக்கு உரியதென்று கூறுதல் பொருத்தமே.

பாடல்களைத் தரும் உரைகாரரும் திரட்டாசிரியரும் 15ஆம் நூற்றாண்டினர்.

## வளையாபதி

### ஐம்பெருங் காப்பியம்

வடமொழியில் பஞ்சகாவியம் என்றொரு வழக்குண்டு; அவையாவன ரகுவம்சம், குமாரசம்பவம், மாகம் அல்லது சிசு பாலவதம், கிராதார்ஜுனீயம், நைடதம் என்பன. (நைடதத்தை நீக்கி இராமாயணத்தைக் கூட்டிச் சொல்லுவதும் ஒரு வழக்கு) இதுபோலவே தமிழிலும் ஐம்பெருங்காப்பியம் - பஞ்ச மகா காவியம் என்ற வழக்கும் சொல்லப் பெறும். முதன் முதலாக நன்னூல் உரை செய்த மயிலைநாதரே* இலக்கியங்களைத் தொகைப்படுத்திச் சொல்கிறார்; ஐம்பெருங் காப்பியம், எண் பெருந்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு என்பது அவர் கூற்று (சூத்திரம் 387 உரை) ஐம்பெருங்காப்பியங்கள் யாவை என்று அவர் பெயர் குறிப்பிடவில்லை. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த கந்தப்பையரது திருத்தணிகைச் சந்நிதி

---

* எட்டுத் தொகையைப் பெரும் என்ற அடை கொடுத்து இவர் குறிப்பிடுவது காணத்தக்கது.

முறையுள் அடங்கிய பிரபந்தமாகிய திருத்தணிகை யுலாவில் இரண்டு கண்ணிகள் ஐந்து காப்பியப் பெயரைக் கூறுகின்றன;

> சிந்தா மணியாம் சிலப்பதிகா ரம்படைத்தான்
> கந்தா மணிமே கலைபுனைந்தான் – நந்தா
> வளையாபதி தருவான் வாசவனுக் கீந்தான்
> திளையாத குண்டல கேசிக்கும். (526–7)

ஆனால், தொகை விரி கூறும் திவாகரம், பிங்கலத்தின் பகுதிகளிலும் சதுரகராதியிலும் ஐம்பெருங்காப்பியம் என்பதன் விளக்கம் காணப்பெறவில்லை. இவற்றின் காலத்தில் அதாவது 18ஆம் நூற்றாண்டு வரை (சதுரகராதியின் காலம்) இன்னவையே ஐம்பெருங்காப்பியம் என்ற வரையறை ஏற்படவில்லை. தமிழ் விடு தூது, பஞ்ச காவியத்தைக் குறிப்பிடுகின்றதேயன்றி, அவை இன்னவை என்று சொல்லவில்லை (காலம் 17ஆம் நூற்றாண்டு).

இவ்வாறு நாம் அறிய வருகின்ற ஐம்பெருங்காப்பியங்களாகிய ஐந்து நூல்களில், இன்று கிடைக்கும் நூல்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி என்ற மூன்றுமே.

வளையாபதி, குண்டலகேசி என்ற இரண்டும் கிடைக்கவில்லை. இவற்றுள் முதல் இரண்டும் ஆசிரியப்பாவால் இயன்றவை ஏனைய மூன்றும் விருத்தப்பா; கலிப்பாவினங்களும் கலந்து வரும். சிலப்பதிகாரத்தில் ஆசிரியப்பா வன்றிப் பிற பாவினங்களும் வரிப்பாடல்களாக வருகின்றன. அன்றியும், சிலப்பதிகாரம், சிந்தாமணி என்ற இரண்டும் பழைய உரைகளைப் பெற்றவை; மணிமேகலைக்கு உரை இல்லை. பொதுவாகக் காலமுறை குறிப்பிடும்போது, சிலப்பதிகாரம் மணிமேகலை இரண்டும் நாம் இங்குக் கருதுகின்ற ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவை; சிந்தாமணியும் வளையாபதியும் ஒன்பதாம் நூற்றாண்டு; குண்டலகேசி பத்தாம் நூற்றாண்டு என்று மட்டும் இப்போதைக்குக் குறிப்பிடுவோம்.

### வளையாபதி

இந்த நிலையில் வளையாபதி என்ற காப்பியம் கிடைக்கவில்லை என்று குறிப்பிட்டோம். ஆனால் ஐயரவர்களும் வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியாரவர்களும் இதன் ஏட்டுப் பிரதியைத் தாங்கள் கண்டதாகச் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் ஏடுகள் பின்னால் கிடைக்காமற் போயின; இனி யாரிடமேனும் இருந்து கிடைக்குமென நம்புவதற்கு இடமில்லை. இன்று வளையாபதியைக் குறித்து நாம் அறிவதற்கான ஆதா

ரங்கள் உரையாசிரியர்களின் குறிப்புக்களும் புறத்திரட்டில் திரட்டியுள்ள பாடல்களுமாகும். இவற்றை வைத்து இந்நூலைச் சிறிது ஆராய்ந்து பின்வரும் கருத்துக்களைச் சொல்லலாம்.

> சிந்தா மணி திகழ் சிலப்பதி காரம்
> மணிமே கலை வளையா பதி குண்டல
> கேசி பஞ்சகா வியமெனக் கிளத்துவர்.

கிடைக்கின்ற மூன்று காப்பியங்களில், மணிமேகலை ஒன்றே கதாபாத்திரத்தால் பெற்ற பெயர்; சிலப்பதிகாரம் சிந்தாமணி இரண்டும் பொருள் தன்மையால் பெற்ற பெயர். குண்டலகேசி காப்பியத் தலைவியின் பெயரால் வந்த பெயர். வளையாபதி, காப்பியத் தலைவியின் பெயரா அல்லது வேறு காரணத்தால் வந்த பெயரா? என்பது விளங்கவில்லை. பின்னே குறிப்பிடும் வைசிய புராணம் என்ற பிற்கால நூல் 'வைரவாணிகன் வளையாபதி பெற்ற சருக்கம்' என்று பெயர் சூட்டியிருக்கின்றது; ஆனால் இந்நூலுக்கும் காப்பியத்துக்கும் தொடர்பில்லை.

**நூல்**

> உலக மூன்றும் ஒருங்குடன் ஏத்துமாண்
> திலகமாய திறலறி வன்னடி
> வழுதின் நெஞ்சோடு வாலிதின் ஆற்றவும்
> தொழுவல் தொல்வினை நீங்குக என்றியான்.

இப்பாடலை இளம்பூரணருக்கு முற்பட்ட உரையாகிய யாப்பருங்கல விருத்தியுரையும் தருகிறது. இவ்வீரிடங்களிலும் இப்பாடல் என்ன நூல் என்பது சொல்லப் பெறவில்லை. இதே பாடலைத் தொல்காப்பியச் செய்யுளியலுரையில்(148) தந்து, இது வளையாபதி என்று நச்சினார்க்கினியர் நூற் பெயரும் குறிப்பிடுகிறார்; 'இவ் வளையாபதி முதலியவற்றுள் தேவபாணியல்லாத தொடர் பொருட் செய்யுட்களை யாப்பினும், பொருளினும் வேற்றுமையுடையது என்றதால் தரவு கொச்சகமென்று கொள்க, அவை தாம் பொருளோடு முடியாமையின்' என்றும் கூறுகின்றார். சிந்தாமணி, கடவுள் வாழ்த்துப் பாடலை இவர் அடுத்துச் சொல்வதாலும் இப்பாடலின் பொருள் அமைதியாலும், இது வளையாபதியின் கடவுள் வாழ்த்துச் செய்யுள் என்று அறிகிறோம்.

புறத்திரட்டுத் தொகுத்த ஆசிரியர் (14ஆம் நூற்றாண்டு) இக்காப்பியத்திலிருந்து 66 பாடல்களை வெவ்வேறு அதிகாரங்களில் தொகுத்திருக்கிறார். இவையே நமக்கு இன்று அதிகமாய்க்

கிடைக்கும் இந்நூற் பாடல்கள். இவையன்றி, அடியார்க்கு நல்லாரின் சிலப்பதிகார உரையில் மூன்று பாடல்களும் எடுத்துத் தரப்பட்டுள்ளன இவ்வாறு நாம் காண்கிற 72 பாடல்களே இந்நூலில் இன்று நமக்குக் கிடைப்பன.

அடியார்க்கு நல்லார் உரையில், அம்மூன்று பாடல்களை யன்றி, 'நீள் கடலிடை அலவன் வழி உழவா' என ஒரு வளை யாபதி அடியையும் தருகிறார்; முழுப்பாடலும் இல்லை. பரிமேலழகரும் வளையாபதியைக் குறிப்பிடுகிறார். 'எழுமை என்றது வினைப்பயன் தொடரும் ஏழு பிறப்பினை; அது வளையாபதியுட் கண்டது' (குறள் உரை 107).

## நூற்பொருள்

இப்போது கிடைக்கும் இந்நூற் பாடல்களால் இக்காப் பியத்தின் கதை இன்னதென்று தெரிவதற்கு வழியில்லை. குண்டல கேசி என்பது வணிகர் குலத்தில் பிறந்த ஒரு பெண்ணின் வர லாற்றைப் புனைந்து கூறுவது. குண்டலகேசியின் கதை நீலகேசி யின் உரையில் சொல்லப்பட்டிருப்பதால் நாம் அறிகிறோம். பிற் காலத்து நூல் ஆகிய வைசிய புராணம் என்பது வளையாபதி ஒரு வணிக சாதிப் பெண் என்று கொண்டு, 35ஆம் சருக்கத்தில் ஒரு கதை கூறுகிறது. வைசியர் வக்குவரிஷி மரபினர் என்பது புராணம். இம்மரபில் நவகோடி நாராயணன் என்ற ஒரு வைர வாணிகன் இருந்தான். அளவற்ற செல்வம் உடையவன், சிவபக்தி உடையவன். பாண்டியனை வென்ற வீரன். இரு மனைவியரை இவன் மணந்தான். ஒருத்தி வைசிய குலம், மற்றவள் வேற்றுக் குலம். சமூகக் கட்டுப்பாடு காரணமாக வேற்றுக்குலத்து மனை வியை இவன் நீக்கி வைத்தான். அப்போது அவள் கர்ப்பவதி. அதன் பின் அவன் பெருஞ்செல்வம் தேடிப் பெற்றுத் தன் குல மனைவியோடு இன்பமாய் வாழ்ந்து வந்தான். மற்றவள் காளியை வழிபட்டுத் தன் கணவன் தன்னை ஏற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும் என்று வேண்டவே, காளியும் தன் கோயில் அருகே இவளை வாழ்ந்து வரச் செய்தாள். உரிய காலத்தில் இவளுக்கு ஒரு புதல்வன் பிறந்து பள்ளியில் படித்து வந்த சமயம், மற்றொரு பையன், தந்தையை அறியாதவன் என்று இவனைப் பழித்தான். இவன் தாயிடம் உண்மையறிந்து, நவகோடியின் கடையை அடைந்து வணிகனிடம் தான் இன்னான் என்று அறிவிக்க, காளி அருளால் உண்மை வெளிப்பட்டு விட்டது. பின்னர் தந்தை இவளை ஏற்றுக் கொண்டான்.

இப்பகுதிக்கு வைசிய புராணத்தில் 'பஞ்ச காவியத் தலைவரில் வைர வாணிகன் வளையாபதி பெற்ற சருக்கம்' என்று தலைப்பிடப்பட்டுள்ளது. இது 49 பாடல்களைக் கொண்டது. இங்கு வேற்றுக் குலத்துப் பெண் பெயர் வளையாபதி என்று சொல்லப்படவில்லை. இக்கதையில் பொருள் ஒன்றும் இல்லை. இது ஒரு காப்பியத்துக்குப் பொருளாக அமையும் தகுதி உடையது அன்று. மேலும் புராணங்களின் இயல்புக்கு ஏற்ப இவ்வணிகன் பஞ்சாட்சர செபம் செய்பவன் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆனால் பின்னால் வளையாபதிக் காப்பியம் சைன ஆசிரியர் செய்த காவியம் என்று தெளிவாக எடுத்துக் காட்டுவோம். அவர் பஞ்சாட்சரத்தைச் சொல்லமாட்டார். எனவே, இப்புராணக்கதை காப்பியத்தின் பொருளாய் இருக்கமுடியாது என்பது தெளிவு.

### நூலாராய்ச்சி

புறத்திரட்டிலிருந்து கிடைக்கின்ற பாடல்கள் 66 பின்வரும் அதிகாரங்களில் அமைந்துள்ளன;

| | | | |
|---|---|---|---|
| பிறவி பெறுதற்கருமை | 2, | கொல்லாமை. | 1, |
| கற்புடை மகளிர் | 1, | செல்வ நிலையாமை | 5, |
| கற்பில் மகளிர் | 4, | இளமை நிலையாமை | 1, |
| புதல்வரைப் பெறுதல் | 1, | பல்வகை நிலையாமை | 1, |
| அடக்கமுடைமை | 1, | துறவு | 3, |
| பிறர்மனை நயவாமை | 2, | மெய்யுணர்தல் | 1, |
| தீவினையச்சம் | 2, | பழவினை | 1, |
| தானம் | 1, | நாடு | 1, |
| அருளுடைமை | 2, | பொருள் செயல் வகை | 1, |
| புலால் மறுத்தல் | 3, | நட்பு | 1, |
| தவம் | 2, | பேதைமை | 2, |
| புணர்ச்சி விழையாமை | 5, | புல்லறிவாண்மை | 1, |
| கள்ளாமை | 1, | பொது மகளிர் | 13, |
| பொய்யாமை | 2, | பண்புடைமை | 1, |
| | | நல்குரவு | 4. |

இவற்றை நன்கு ஆராயும்போது, பொதுவாக நூலாசிரியர் அறவொழுக்கத்தையே அதிகம் வற்புறுத்துகிறார் என்று கருதலாம். புலால் மறுத்தல், கொல்லாமை, நிலையாமை, வினை, பொது மகளிர் முதலிய தலைப்புக்களால் நூல் சைன சமயத்தை மிகவும் எடுத்துக் கூறுகிறது என்பது தெளிவாகப் புலப்படுத்து கின்றது. 66 பாடல்களில் 30 பாடல்கள் சிற்றின்பத்தை வெறுத்துப் பாடுவன. ஆகவே ஆசிரியர் துறவைப் பெரிதும் வலியுறுத்து கிறார் என்பதும் விளங்கும்.

*காப்பியத்தின் தகுதிக்கேற்ப, நூல் நாட்டு வருணனை முதலிய பகுதிகளைக் கொண்டிருந்தது போலும். பின்வரும் பாடல் காண்க:*

செந்நெலங் கரும்பினோ டிகலும்; தீஞ்சுவைக்
கன்னலங் கரும்புதான் கமுகைக் காய்ந்தெழும்
இன்னவை காண்கிலன் என்று பூகமும்
முன்னிய முகில்களான் முகம் புதைக்குமே.

*நூல் ஒரு கதையை உள்ளடக்கியதென்று, உரையாடல் முறையில் அமைந்த ஒரு பாடலால் அறியலாம்.*

உயர்குடி நனியுட் டோன்றல், ஊனமில் யாக்கை யாதல்
மயர்வறு கல்வி கேள்வித் தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் அறியே யாதல், பேரறக் கோடல் என்றாங்கு
அரிதிவை பெறுதல்; ஏடா, பெற்றவர் மக்கள் என்பார்.

*இப்பாடலில் வரும் ஏடா என்ற சொல்லைக் காண்க. களவுக்குத் தண்டனை கால்கள் கைகளைக் குறைத்தல் என்று ஒரு பாடலில் கூறுகின்றார்.*

*மகளிரைப் பற்றிப் பலவான பாடல்கள் கிடைக்கின்றன. கற்புடை மகளிர், கற்பில் மகளிர், பொது மகளிர், பிறர்மனை விழையாமை முதலான தலைப்புக்களில் இவை தொகுக்கப் பட்டுள்ளன. சம்பிரதாய முறையில் சைனருக்குரிய ஒரு கருத் தாகிய பெண்ணிழிவு என்பதைப் பாடல்கள் பெரிதும் வற் புறுத்திச் சொல்கின்றன.*

பள்ள முதுநீர்ப் பழகினும் மீனினம்
வெள்ளம் புதியது காணின் விருப்புறூஉம்
கள்ளவிழ் கோதையர் காமனொ டாயினும்
உள்ளம் பிறிதா யுருகலுங் கொள் நீ.

*இப்பாடல் பொதுவாகப் பெண்டிரைப் பழிப்பது. காமவசப் பட்டார் செயலை ஒரு பாடல் நன்கு கூறுகின்றது.*

சான்றோ ருவர்ப்பத் தனிநின்று பழிப்ப காணார்;
ஆன்றாங் கமைந்த குரவர்மொழி கோட லீயார்;
வான்றாங்கி நின்ற புகழ்மாசு படுப்பர்; காமன்
தான்றாங்கி விட்ட கணைமெய்ப்படு மாயி னக்கால்.

*பொது மகளிர் என்ற தலைப்பில் காணும் எல்லாப் பாடல்களும் பொது மகளிரை ஆறு, யாழ், அரணி, ஞெலிகோல், மதி, பூங் கொடி, ஆழ்களம், மா, குரங்கு, வண்டு முதலியவற்றோடு ஒப் பிட்டு உரைக்கின்றன. புரைப, ஒப்ப என்ற உவமைச் சொல்லோடு முடிகின்றன. பின்வரும் பாட்டுக்கள் எடுத்துக்காட்டாகும்.*

வாரி பெருகப் பெருகிய காதலை
வாரி சுருங்கச் சுருங்கி விடுதலின்
மாரி பெருகப் பெருகி யறவறும்
வார்புன லாற்றின் வகையும் புரைப
நுண்பொரு ளானை நுகர்ந்திட்டு வான்பொருள்
நன்குடை யானை நயந்தனர் கோடலின்
வம்பிள மென்முலை வாணெடுங் கண்ணவர்
கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப.

*இவ்வாறு பெண்ணைச் சம்பிரதாயமாகப் பழித்து எழுதிய ஆசிரியர், கற்புடைப் பெண்டிரைச் சிறப்பித்தே பாடியிருக்கிறார். 'நாடும் ஊரும்' என்று (பக்கம் 52) காட்டிய பாடலும் காண்க. அவர் பழிப்பது பொது மகளிருடன் கூடி ஒழுகும் ஒழுக்கத்தையே. குலமகளிரொடு கூடி வாழும் இல்லற வாழ்க்கையை அவர் புகழ்ந்துரைப்பது பின்வரும் பாடலாலும் அறியலாம்.*

மக்கட் பயந்து மனையற மாற்றுதல்
தக்க தறிந்தார் தலைமைக் குணமென்ப
பைத்தர வல்குற் படிற்றுரை யாரொடு
துய்த்துக் கழிப்பது தோற்ற மொன்றின்றே.

*கிடைக்கின்ற பாடல்களைக் காணும்போது வளையாபதி சுவை மிக்க பாடல்களைக் கொண்டது என்பது நன்கு தெரிகிறது. பல பாடல்கள் சொல் நயம் உடையனவாய் ஓசை இன்பம் தருவனவாய் உள்ளன. இது அழகுமிக்க பாடல் கொண்டது என்பதைத் தக்கயாகப் பரணி உரைகாரர் கூற்றாலும் அறிகிறோம். பரணி 425ஆம் தாழிசை உரையில் இவர் பின்வருமாறு எழுதுவது காணத்தக்கது. 'எங்ஙனம் அங்ஙனமென்னும் சொற்கள் எங்ஙனே அங்ஙனேயென்று வந்தன. இவர் வளையாபதியை நினைத்தார் கவியழகு வேண்டி', 'எம்மனை மாரினி யெங்ஙனம் வாழ்குதிர்' என்பது சிந்தாமணி; எங்ஙனமென்னும் சொல் இவ்வாறே வளையா பதியிலுமுண்டு'. இவ்வுரைகாரர் காலத்தில் (15ம்நூற்றாண்டு) வளையாபதி நூல் இருந்தது போலும். இவ்வுரைகாரர் கூற்றால் வளையாபதி கவியழகு நிறைந்த நூல் என்பது மட்டுமன்றி, ஒட்டக்கூத்தரும் கவியழகில் ஈடுபாடு மிக்கவர் என்ற செய்தியும் பெறுகிறோம்.*

*இனி, வளையாபதி ஆசிரியர் தமக்கு முன் இருந்த நூற் பாடல்களை எடுத்தாளும் இடங்கள் பலவாகும் புணர்ச்சி விழையாமை என்ற அதிகாரத்தில் காணும் ஒரு பாடல்.*

மாவென் றுரைத்து மடலேறுப மன்றுதோறும்
பூவென் றெருக்கின் இணர்சூடுப; புன்மை கொண்டே
பேயென்றெழுந்து பிறரார்ப்பவும் நிற்ப; காம
நோய்நன் கெழுந்து நனிகாழ்க் கொள்வ தாயினக்கால்.

*இது குறுந்தொகை 17ஆம் பாடலை எடுத்தமைத்தது என்பது வெளிப்படை.*

மா என மடலும் ஊர்ப; பூ எனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமம் காழ்க் கொளினே.

*வளையாபதிப் பாடல்கள் பல திருக்குறளைத் தழுவியமைந்தவை.*

ஆக்கப் படுக்கும், அருந்தளைவாய்ப் பெய்விக்கும்
போக்கப் படுக்கும், புலைநரகத் துய்ப்பிக்கும்
காக்கப் படுவன இந்திய மைந்தினுள்
நாக்கல்ல தில்லை, நனிபேணு மாறே.

*என்பது, 'யாகாவாராயினும் நாகாக்க - காவாக்கால் சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு' என்ற குறளின் கருத்தை விரித்தது.*

உண்டியுட் காப்புண்டு, உறுபொருட் காப்புண்டு
கண்ட விழுப்பொருள் கல்விக்குக் காப்புண்டு
பெண்டிரைக் காப்ப திலம் – என்று ஞாலத்துக்
கண்டு மொழிந்தனர் கற்றறிந் தோரே.

*என்பது, 'சிறை காக்கும் காப்பெவன் செய்யும் - மகளிர் நிறை காக்கும் காப்பே தலை' என்ற குறளின் விளக்கமாகும். கற்புடை மகளிரைக் குறிப்பிடும் பாடல்,*

நாடும் ஊரும் நனிபுகழ்ந் தேத்தலும்
பீடுறும் மழை பெய்யெனப் பெய்தலும்
கூட லாற்றவர் நல்லது கூறுங்கால்
பாடுங் கால்மிகு பத்தினிக் காவதே.

*என்பது, 'தெய்வந் தொழாள் கொழுநற் றொழுதெழு வாள் பெய்யெனப் பெய்யும் மழை' என்னும் குறளைத் தழுவியது. 'மற்றும் தொடர்ப்பாடு எவன்கொல் - பிறப்பறுக்க லுற்றார்க்கு உடம்புமிகை' என்ற குறளை வளையாபதி யுடையார் ஒரு பாடலில் முழுமையும் அப்படியே பெய்திருக்கிறார்.*

மற்றுந் தொடர்ப்பாடு எவன்கொல், பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை, யவை உள்வழிப்

பற்றா வினையாய்ப் பலபல யோனிகள்
அற்றா யுழலும் அறிதற் கரிதே.

*புல்லறிவாண்மை என்ற தலைப்பில் அடங்கிய ஒரு வளையா பதிப் பாடல்,*

அந்தகன் அந்தகற் காறு சொலல் ஒக்கும்
முந்துசெய் குற்றம் கெடுப்பான் முழுவதும்
நன்கறி வில்லான் அது அறி யாதவற்கு
இன்புறு வீட்டின் நெறி சொல்லு மாறே.

*என்பது, பின்வரும் திருமந்திரப் பாடலின் கருத்தைத் தழுவியது.*

குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடும் குருடும் குருட்டாட்ட மாடிக்
குருடும் குருடும் குழிவீழு மாறே.

*இவ்விரண்டுக்கும் மூலம்,*

அவித்யா யாயாம் அந்தரே வர்த்தமாநா
ஸ்வயம் தீரா: பண்டிதம் மந்ய மாநா;
தந்தரம்ய மாணா: பரியந்தி மூடா
அந்தேநைவ நீய மாநா யதாந்தா.

*என்ற உபநிடதப் பாடலாகும்.*

*"மூடர் அஞ்ஞானத்தில் இருந்து கொண்டு தங்களை அறிவாளிகள் என்று மதித்து, குருடர் நடத்திச் செல்லும் குருடர் போலச் சுழன்று சுழன்று வருகிறார்கள்' என்பது இதன்பொருள்.*

*இளமை நிலையாமை கூறுகின்ற ஒரு பாடல், 'நாற்பது வயது கடந்தது நரை தூது வந்தது' என்று கூறுகிறது.*

வேற்கண் மடவார் விழைவொழிய யாம் விழையக்
கோற்கண் நெறிகாட்டக் கொல்கூற் றுழையதா,
நாற்ப திகந்தாம், நரைத்தூதும் வந்ததினி
நீத்தல் துணிவாம் நிலையாது இளமையே.

*தசரத மன்னன், தன் கன்ன மூலத்தில் ஒரு மயிர் கருமை போய் வெளுத்ததாகக் கண்டபோது, அரசை மகனுக்கு ஈந்து போய்த் தவம் புரிய வேண்டுமென்று அது எச்சரித்ததென உணர்ந்தான் என்று ஒரு பாடல் கூறுகிறது.*

மன்னனே! அவனியை மகனுக் கீந்து நீ
பன்னரும் தவம்புரி பருவம் ஈது எனக்

கன்ன மூலத்தினில் கழற வந்தென
மின்னெனக் கருமை போய் வெளுத்ததோர் மயிர்.

*(இப்பாடல் கம்பராமாயணத்தில் இடைச் செருகல் என்று கூறுவர்)*

## இசைப் பகுதி

*உண்மையிலேயே வளையாபதிச் செய்யுட்கள் பரணி உரைகாரர் குறிப்பிடுகின்றவாறு கவியழகு நிறைந்தவை என்பதைப் பின்வரும் பாடல்கள் நன்கு புலப்படுத்தும். இவை யாப்பருங்கல விருத்தியுரையுள் தரப்பட்ட பாடல்கள். இவை இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என்ற பொருள்களைக் கூறுகின்றன. (ஒரு கால் செல்வ நிலையாமை கூறும் மற்றொரு பாடலும் இருந்திருக்கும். உரையாசிரியர் எடுத்துக்காட்டவில்லை போலும்).*

நீல நிறத்தனவாய் நெய்கனிந்து போதவிழ்ந்து
கோலங் குயின்ற குழல் வாழி நெஞ்சே!
கோலங் குயின்ற குழலும் கொழுஞ்சிகையும்
காலக் கனலெரியின் வேம்வாழி நெஞ்சே!
காலக் கனலெரியில் வேவன கண்டாலும்
சால மயங்குவ தென் வாழி நெஞ்சே!

வித்தகர் செய்த விளங்கு முடிகவித்தார்
மத்தக மாண்பழிதல் காண் வாழி நெஞ்சே!
மத்தக மாண்பழிதல் கண்டால் மயங்காதே
உத்தம நன்னெறிக்கண் நில்வாழி நெஞ்சே!
உத்தம நன்னெறிக்கண் நின்றூக்கம் செய்தியேல்
சித்தி படர்தல் தெளிவாழி நெஞ்சே!

*'என இத்தொடக்கத்துள் ஒருசார் வளையாபதிப் பாட்டும்..... கலிவிருத்தத்தின்பாற் பகுத்து வழங்கப்படும்; கொச்சகக் கலியின் பாற்படுத்தலும் ஆம்' என்று அவ்வுரை கூறுவதால் இத்தகைய பாடல்கள் பின்னும் பல வளையாபதியினுள் இருந்தன என்று கருத இடமுண்டு. 'உலக மூன்றும்' என்ற ஈரெதுகைப் பாடலை முன்னமே குறிப்பிட்டோம். இப்பாடல்கள் வரிப் பாடல்களாகும்; இத்தொடக்கத்தன என்ற தொடரால், பின்னும் பல வரிப் பாடல்கள் இந்நூலுள் இருந்தன என்று கருதலாம். இதை எண்ணிப் பார்க்கும்போது, வளையாபதியின் கதைப் போக்கில் இடையிடையே சிலப்பதிகாரத்தில் காண்பது போல, பாத்திரங்களின் கூற்றாக இவ்வரிப் பாடல்கள் வந்தன என்று கூறலாம். சிந்தாமணியிலும் இவ்வகை வரிப் பாடல்கள்*

*57 வருகின்றன; சிலப்பதிகாரத்தில் வருவன 133; சூளாமணி நீல கேசியிலும் உள்ளன. குண்டலகேசி மேற்கோள் பாடல்களால், அதனுள் வரிப்பாடல்கள் இருந்தனவாகத் தெரியவில்லை.*

*வரிப்பாடல்கள் அமைந்துள்ளமையால் வளையாபதியில் இசைத் தமிழும் உண்டு எனக் கருதலாம். இக்கருத்துக்குப் பொருந்தவே அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டும் பாடல் களில் இரண்டு இசையைக் குறிப்பிடுகின்றன.*

பண்ணால் திறத்தால் பழுதின்றி மேம்பட்ட
தொண்ணூற் றறுவகைக் கோவையும் வல்லவன்
விண்ணா றியங்கும் விறலவ ராயினும்
கண்ணாறி நோக்கிக் கடுநகை செய்வான்.

*(சிலப்பதிகாரம் 9:14 - 15). இங்கு பண் திறம் என்பன இசை. மற் றொரு பாட்டுப் பின்வருவது*

அன்றைப் பகற்கழிந் தாளின் றிராப்பகல்
கன்றின் குரலும் கறவை மணிகறங்கக்
கொன்றைப் பழக்குழற் கோவலர் ஆம்பலும்
ஒன்றல் அரும்பு நரம்பெண ஆர்ப்பவும்.

*(ஆய்ச்சியர் குரவையுரை). இங்குக் கொன்றைப் பழக்குழல், ஆம்பலங் குழல் என்பனவற்றைப் பாடல் கூறுகிறது. இதைக் கூறும் அடியார்க்கு நல்லார் 'வளையாபதியுள்ளும் கருவி கூறிப் பண் கூறுதலாலும்' என்று கூறுகிறார். முன்னும் இவரே கனாத்திற முரைத்த காதையுரையில் (அடி 23)*

துக்கந் துடைக்கும் துகளறு காட்சிய
நிக்கந்த வேடத் திருடி கணங்களை
ஒக்க அடி வீழ்ந் துலகியல் செய்தபின்
அக்கதை யாழ்கொண் டமைவரப் பண்ணி.

*என்றார் வளையாபதியினும்' என எடுத்துக் காட்டுகிறார். 'அக்கதை யாழ் கொண்டமை வரப்பண்ணி' என்று கூறுவது காணத்தக்கது. இவை அனைத்தினாலும் வளையாபதியினுள் இசைப் பகுதியும் இருந்தமை தெளிவு.*

### பிற பாடல்கள்

*அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் நான்கு பாடல்களை வளையாபதி என்று பெயர் சொல்லி எடுத்துக் காட்டுகிறார் என்று குறிப்பிட்டோம். இவையன்றிப் பின்னும் சில பாடல்கள் அவர் உரையில் வளையாபதி என்று கருதுமாறு*

*உள்ளன. முன்பின் தொடர்புகளாலும், பாட்டின் யாப்பினாலும் பொருளாலும் இவ்வாறு கருதுகிறோம். அன்றியும், அடியார்க்கு நல்லாருக்கு முன் விருத்தப்பாவால் ஆன காப்பியங்கள், இன்று இல்லாமற் போனவை சிலவே; வளையாபதி, குண்டலகேசி, சாந்தி புராணம், நாரத சரிதை முதலாயின. இவற்றுள் இவர் வளையாபதி ஒன்றை மட்டுமே பெயர் சொல்லி மேற்கோள் தந்துள்ளார். இக்காரணத்தாலும் இப்பாடல்கள் வளையாபதி என்று கருதுமாறு உள்ளன. பாடல்கள் பின்வருவன. இவை கடலாடு காதையில், மாதவி கடலாடுதற்காகப் புறப்படும் போது செய்து கொண்ட அலங்காரத்தைக் கூறுமிடத்து எடுத்துக் காட்டாக வந்தன. முதற்பாடல், பத்துத்துவர் முதலியவை ஊட்டின நீரால் கூந்தலை நலம் பெற ஆட்டினாள் என்ற சிலப்பதிகார வரிகளுக்கு மேற்கோளாக வருவது.*

பத்துத் துவரினும் ஐந்து விரையினும்
முப்பத் திருவகை ஓமாலிகையினும்
ஊறின நன்னீர் உரைத்த நெய்வாசம்
நாறிடும் கூந்தல் நயம்பெற ஆட்டி.

*என்பவை சிலப்பதிகார வரிகள். பாடல் பின்வருவது:*

ஓரை விரையினும் ஈரைந் துவரினும்
ஆறைந்தின் மேலிரண் டோமாலிவகையினும்
நாறைங் கதுப்பின் நானமும் நன்குரைஇ
ஊறின நன்னீர் உவந்தனள் ஆட்டி.

*பரியகம் முதலியன காலுக்கு அமைவுற அணிந்தாள் என்ற விடத்து (அடி 84 - 5)*

அவ்வாய் மகரத்து அணிகிளர் மோதிரம்
பைவாய் பசும்பொற் பரியகம் நூபுரம்
மொய்ம் மணிநாவின் முல்லையங் கிண்கிணி
கௌவிய வேனவும் காலுக் கணிந்தாள்.

*அடுத்து குறங்கு செறி அணிந்து துகில் உடுத்தாள் என்று கூறுவது சிலப்பதிகார வரிகளை எடுத்தமைத்தாற் போலவே உள்ளது; சிலப்பதிகார வரிகள் (86 - 88).*

குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்துப்
பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்
நிறங்கிளர் பூந்துகில் நீர்மையின் உடீஇ.

*உரை மேற்கோள் செய்யுள்,*

குறங்கு செறியொடு கொய்யலங் கார
நிறங்கிளர் பூந்துகில் நீர்மையின் உடீஇ
பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்
அறிந்த தமைவர அல்குற் கணிந்தாள்.

*சிலப்பதிகார அடிகளை அப்படியே எடுத்து இப்பாடல் முழுமையும் அமைத்திருப்பது காணத்தக்கது. ஏனைய அடிகள் பலவும் இவ்வாறே காட்டத்தக்கன. இடமின்மை கருதி அவ்வடிகளை விட்டு, மேற்கோட் பாடல்களை மட்டும் கீழே தருகிறோம்;*

ஆய் மணி கட்டி அமைந்த விலைச் செய்கைக்
காமர் கண்டிகை கண்டிரண் முத்திடைக்
காமர் பொற் பாசம் கொளுத்திக் கவின்பெற
வேய் மருள் மென் தோள் விளங்க அணிந்தாள்.

புரைதபு சித்திரப் பொன்வளை போக்கில்
எரியவிர் பொன்மணி எல்லென் கடகம்
பரியகம் வால்வளை பாத்தில் பவழம்
அரிமயிர் முன்கைக் கமைய அணிந்தாள்.

சங்கிலி நுண்தொடர் பூண் ஞாண் புனை வினைத்
தொங்க லருத்தித் திருந்தும் கயிலணி
தண் கடன் முத்தின் தகையொடு காழெனக்
கண்ட பிறவும் கழுத்துக் கணிந்தாள்.

நூலவ ராய்ந்து நுவலரும் கைவினைக்
கோலங் குயின்ற குணஞ்செய் கடிப்பிணை
மேலவ ராயினும் மெச்சும் விறலொடு
காலமை காதிற் கவின்பெறப் பெய்தாள்.

கேழ்கிளர் தொய்யகம் வாண்முகப் புல்லகம்
சூளா மணியொடு பொன்னரி மாலையும்
தாழ் தரு கோதையும் தாங்கி முடிமிசை
யாழின் கிளவி அரம்பையர் ஒத்தாள்.

*ஆசிரியர்*

*குண்டலகேசியும் வளையாபதியும் இன்று இறந்து போன பெருங்காப்பியங்கள். குண்டலகேசி செய்தார் நாதகுத்தனார் என்று நீலகேசியுரை கூறும். ஆனால் அவ்வாறு வளையாபதி ஆசிரியரைக் குறித்த எந்தக் குறிப்பும் கிடைக்கவில்லை: ஆயினும், கிடைக்கின்ற பாடல்களை வைத்து ஆராயும்போது, இவர் சைனர், புலமை மிக்கவர் என்பது நன்கு தெரிகின்றது.*

'உலக மூன்றும்' என்ற பாடல் கடவுள் வாழ்த்துப் பாடலாகக் கருதத்தக்கது என்று தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ளோம். 'வினை நீங்குக என்று அறிவனைத் தொழுவல்' என்று கூறுகின்ற இப்பாடல் அருக தோத்திரம் என்பது வெளிப்படை. இனி அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டும் பாடல்களில் 'துக்கந்துடைக்கும்' என்ற பாடல் முன்னே தரப்பட்டது. இதில் 'நிக்கந்த வேடத்திருடி கணங்கள்' என்ற தொடர் வருகிறது. 'நிக்கந்தக் கோட்டம் - அருகன் கோயில்' என்று பொருள் கூறுவதற்கு அடியார்க்கு நல்லார் இப்பாடலை மேற்கோள் தருகின்றார். நிக்கந்தன் - நிர்க்கந்தன், (கந்தம்-பற்று) பற்றுக்களிலிருந்து விடுபட்டவன், அருகன். இக்குறிப்புக்கள் வளையாபதியுடையார் அருக சமயத்தினர் என்பதை ஐயமறக் காட்டுகின்றன.

கிடைக்கின்ற பாடல்களில் வினையின் வலிமையைப் பேசுகின்ற பாடல்கள் பல. புலால் மறுத்தல், பெண்டிரின் இழிவு, நிலையாமை, துறவு போன்ற கருத்துக்கள் அதிகம் பேசப்படுகின்றன. இத்தகைய பொதுத் தன்மையினாலும், ஆசிரியர் சைனர் என்பது தெளிவு.

பண்டைய நூல்களின் ஒப்புமையைக் குறிப்பிட்டுக் காட்டிய நூல்களால், இவருடைய கல்விப் புலமை நன்கு புலனாகும். இருப்பினும் ஒரு கருத்துச் சொல்லாமல் இருக்க முடியவில்லை. தக்கயாகப் பரணி உரையாசிரியர் மிகச் சிறந்த சைவர். சைவப்பற்று மிகுதியும் கொண்டவர். சமயப்பற்று மிகுதியுமுடையவர்கள் பொதுவாகப் பிற சமய நூல்களை மேற்கோள் தரமாட்டார்கள்; இது பொதுவான ஓர் இயல்பு என்பது மட்டுமன்றி, நூலுக்கு உரை செய்வதற்கான முறையுமாகும். வைணவ நூலுரைகாரர் வைணவ நூலையே காட்டுவர். பரணியுரைகாரரும் சைவ நூலையேதான் காட்டுவர். இது கொண்டு வளையாபதி ஒரு சைவ நூல் என்று கூடக் கருதலாம், நூலே கிடைக்காதிருக்கும் போது. இருப்பினும், இங்கு குறிப்பிட்ட கருத்துக்களையெல்லாம் வைத்துப் பார்க்கும் போது அது சைன சமயத்தார் செய்த நூலென்பதில் தடையில்லை. பரணியுரைகாரர் அதன் கவிதைச் சுவையில் ஈடுபட்டே கவியழகு என்று குறிப்பிட்டார் என்று கொள்ள வேண்டும்.

### காலம்

இன்று நாம் வளையாபதியை அறிவது புறத்திரட்டு, நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரை, பரிமேலழகர் குறள்

உரை, அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரை, இளம்பூர ணர் உரை, யாப்பருங்கல விருத்தியுரை ஆகியவற்றால் என்று முன்னமே விரிவாகக் குறிப்பிட்டோம். இந்நூல்களின் காலம் முறையே 14, 14, 13, 12, 11 நூற்றாண்டுகளாகும். குறிப்புக்களில் காலத்தில் மிகவும் முந்தியதான குறிப்பு யாப்பருங்கல விருத்திக் குறிப்பாகும். ஆதலால் வளையாபதியின் காலம் 11ஆம் நூற் றாண்டுக்கு முற்பட்டதென்று உறுதியாகக் கருதலாம்.

வையாபுரிப்பிள்ளையவர்கள் தமது காவிய காலம் என்ற நூலில் வளையாபதியைக் குறித்த சில கருத்துக்களைக் கூறி யிருக்கிறார். அவர் கூறுவது:

'ஒரு பௌத்தர் மணிமேகலை இயற்றினார்; அதனைத் தெரிந்து உடனே ஒரு சைனர் சிலப்பதிகாரத்தை இயற்றித் தந்தனர். இரண்டு காப்பியங்களும் ஆபரணங்களின் பெயர் களாய் அமைந்திருப்பது கவனிக்கத்தக்கது. இங்ஙனமே ஒரு பௌத்தர் குண்டலகேசி என்ற காவியத்தை இயற்றினார். பௌத்த சமயப் பொருள்கள் இதில் விளக்கப்பட்டிருத்தல் வேண்டும். நூற்பெயர் ஒரு பெண்ணின் பெயராக உள்ளது. இதனை யடுத்துச் சில ஆண்டுகளுக்குள் ஒரு சைனர் ஒரு பெண்ணின் பெயருள்ள காப்பியம் ஒன்று தமது சமயப் பொருள்களை விளக்கி இயற்றியிருப்பார் என்று நாம் எதிர்பார்க்கலாம். இவ்வாறே ஒரு சைன காவியம் தோன்றியது. இதுதான் வளை யாபதி என்ற பெருங்காப்பியம். குண்டலகேசியில் வரும் சமயம் பற்றிய செய்யுள் ஒவ்வொன்றையும் எடுத்துத் தருக்கித்துச் சைன சமயத்தை நிறுவப் புகுந்த நீலகேசி என்ற காப்பியம் ஒன்று உண்டு என்பதையும் இங்கே ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும். இதனைப் பற்றிப் பின்னர்க் கூறுவேன். 'கதை' என்ற நெறியில் சைன சமயக் கதையைப் பொருளாகக் கொண்டு குண்டலகேசிக்கு எதிர்த் தராசில் வைத்து எடை காணத் துணிந்தது வளையாபதி.'

இக்கூற்றிலுள்ள சில கருத்துக்களை ஆராய்ந்து விட்டு, பின்னர் காலம் என்ற ஆராய்ச்சியைத் தொடர்வோம். மணிமேகலை இயற்றியதைத் தெரிந்து உடனே ஒரு சைனர் சிலப்பதிகாரத்தை இயற்றித் தந்தனர் என்ற கூற்று பொருந் தாதது. 'மணிமேகலை மேல் உரைப்பொருள் முற்றிய சிலப் பதிகாரம்' என்று வஞ்சிக்காண்டம் உரைத்த போதிலும் கூட,

அக்கருத்தை இன்று அறிஞர் மறுத்து வருகின்றனர். இளங்கோ வடிகள் பாடி நெடுநாள் ஆன பின்னரே, அதிக கால இடை யீட்டின் பின்னரே, சாத்தனார் என்பவர் மணிமேகலையைப் பாடினார் என்பது தான் உண்மை. மணிமேகலை பௌத்த காவியம் என்பது உண்மையே. ஆனால் சிலப்பதிகாரம் சைன காவியம் அல்ல. அதன் ஆசிரியரான இளங்கோவடிகள் சைனர் என்ற கருத்திலும் இன்று வேற்றுமை உள்ளது. குண்டலகேசி பௌத்த காவியம். அதற்கு மறுப்பாகச் சிறிது காலம் கழித்துத் தோன்றியது நீலகேசி. இவை இரண்டும் சமய வாத நூல்கள். இவை இரண்டையும் ஒன்றுக்கொன்று எதிராகச் சொல்லலாம். வளையாபதி இத்தகையது அன்று. இது சைன சமயத்தைத் தழுவியதாய் இருக்கலாம். அச்சமய காவியங்களின் மரபை யொட்டி (சிந்தாமணி, சூளாமணி போன்றவை) இதுவும் துறவு பூணுதலில் போய் முடியலாம். இருப்பினும், இது ஒரு சமய வாத காவியம் அல்ல. பேரிலக்கியப் போக்குடைய காப்பியமே ஆகும். ஆதலால் இப்பேராசிரியர் குண்டலகேசிக்கு எதிர்த் தராசில் வைக்கத்தக்கது வளையாபதி என்று சொல்லும் கூற்று ஏற்க முடியாத கூற்று; புறத்திரட்டுப் பதிப்பித்த ஆசிரியர் இவ் வாறு எழுதியிருப்பது வியப்பாயுள்ளது.

இனி, காலம் என்ற கண்கொண்டு பார்க்கும்போது, இங்கு வளையாபதி, சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி என்ற நான்கு சைன காப்பியங்களைக் காண நேர்கிறது. இவற்றுள் சூளாமணி, நீலகேசி இவையிரண்டும் 10ஆம் நூற்றாண்டுக்கு உரியவை என்று அக்கால வரலாற்றில் கூறியிருக்கிறோம். சிந்தாமணி 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதிக்கு உரியது என்பது முடிவு செய்யப்பட்ட செய்தி. வளையாபதி, நூல் கிடைக்காமையினால் காலம் இதுவரை ஆராயப் பெறவில்லை. ஆனால் அதனுடைய நடை சொல்லமைப்பு பொருளமைதி கருத்துக்கள் யாப்பு முதலிய தன்மைகளால் அது சிந்தாமணிக்கு முற்பட்டிருத்தல் கூடும் என்று சொல்ல முடியும். ஆதலால் 9ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று வரையறை செய்வது பொருத்தமாய் இருக்கும்.

(குறிப்பு : 'புரைதபு' என்ற பாடலை (பக்கம் 57) எடுத்துத் தரும்போது, அடியார்க்கு நல்லார் வேறு பாடத்தையும் குறிப்பிடு கிறார். இதனால் அக்காலத்தில் வளையாபதி சிறப்பாகப் பயி லப்பட்டு வந்தது என்பது தெரிகிறது).

## அத்தியாயம் 3

# இலக்கணம் – நிகண்டு

### முன்னுரை

தமிழ் இலக்கிய வரலாற்று மரபில், அகத்தியர் முதல் தமிழ் இலக்கணம் செய்தார் என்று சொல்லப்படும். அவர் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழுக்கும் தம் பெயரால் அகத்தியம் என்று நூல் செய்தார், ஆனால் அந்நூல் கடைச்சங்க காலத் திற்கு நெடுங்காலம் முன்னமேயே மறைந்து போயிற்று என்று அடியார்க்கு நல்லார் கூறுகிறார். அகத்தியருக்குப் பிறகு பலர் இசை நாடகம் பற்றி நூல்கள் செய்திருப்பினும், அவற்றுள் ஒன்று கூட நமக்குக் கிடைக்கவில்லை. இயலுக்குரிய நூல்கள் மட்டுமே கிடைக்கின்றன. இடைச்சங்க காலத்தில் தொல்காப்பியம் செய்யப்பட்டதென்பது வரலாறு. இது கடைச்சங்க காலம் தொடங்கி இன்று வரை இருக்கிறது. பல உரைகளையும் பெற்று ஆட்சியிலும் உள்ளது. இதன் பகுதிகள் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றும். தொல்காப்பியர் ஐந்திலக்கணத்தைச் சொல்ல வில்லை. எனினும், ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து அதன் பொரு ளதிகாரப் பகுதியைப் பல பிரிவுகளிலும் விரிவாக்கும் முயற்சி வளர்ந்து வந்திருக்கிறது. யாப்பும் அணியும் சேர்த்துத் தமிழி லக்கணம் ஐந்திலக்கணம் என்று வழங்கலாயிற்று.

இவ்வைந்திலக்கணப் பாகுபாட்டுள் அடங்காது வேறு தனியான சில பிரிவுகள் கிளைத்து வளர்ந்தன. அவை பாட்டியல், நிகண்டு, உவமானம் என்ற பிரிவுகளாகும். இம்மூன்றினுள் நிகண்டைப் பற்றி இங்கு ஆராய்கிறோம். பாட்டியலும் உவ மானமும் பற்றிச் சில சொற்கள் மட்டும் இங்கே சொல்லு வோம். எட்டாம் நூற்றாண்டில் பாட்டியலுக்கு ஒரு பெரும் வளர்ச்சியேற்பட்டது. ஒரு புலவர் அகத்தியர் என்று பெயர் வைத்துக் கொண்டு பாட்டியல் நூல் செய்தார். அவருக்குப் பன்னிரு மாணாக்கர் இருந்தனர் போலும். இவர்களும்

பின்னும் பலரும் தத்தம் பெயரால் பல யாப்பியல், பாட்டியல் நூல்கள்* செய்தனர். இவை யாவும் தொல்காப்பியச் செய்யுளியலின் விரிவு என்றே கருதவேண்டும். அக்காலத்தில் கவிதையுள் பெண்ணை வருணிப்பது ஒரு கவி மரபாய் இருந்தபடியால், கவிதை புனைவோருக்குத் துணைசெய்யும் பொருட்டு பெண்ணின் அங்கவருணனைக்கு உதவவல்ல உவமைகளையெல்லாம் திரட்டி, உவமான சங்கிரகம் என்ற பெயரால், பதினாலாம் நூற்றாண்டு தொடங்கிப் பல சிறு நூல்கள் செய்யப்பட்டன.

நிகண்டு நூலானது, சொற்களின் பொருளை வரையறை செய்வதாய், தொல்காப்பியத்துச் சொல்லதிகார உரியியல், பொருளதிகார உவமவியல் மரபியல் என்பவற்றுள் பொருள் வரையறை கூறும் நூற்பாக்களின் அடிப்படையைக் கொண்டதாய் எழுந்தது. இங்கு, இம்மூன்று இயல்களிலும் இந்த முறையில் கருதத்தக்க நூற்பாக்கள் 90, 8, 85; பொருளதிகார மரபியல் முழுமையுமே நிகண்டுக்கு அடிப்படை என்று சொல்வதும் ஒரு வகையில் பொருந்தும். சொல்லதிகார இடையியலிலுங் கூட, முப்பதுக்கு மேற்பட்ட நூற்பாக்கள், இடைச்சொற்களுக்குப் பொருள் வரையறை செய்யுமுகமாக, நிகண்டுப் பொருளன என்று கருதுதல் பொருந்தும். இவ்விடங்கள் எல்லாவற்றிலுமே தொல்காப்பியர், தாம் விளக்க வேண்டும் என்று கருதிய சொற்களை மட்டுமே விளக்கியுரைத்தனர்; எல்லாச் சொற்களையும் சொல்ல அவர் எண்ணவில்லை.

## இலக்கணமும் நிகண்டும்

இலக்கணம் என்ற தலைப்பில் நிகண்டைச் சேர்த்துச் சொல்வது பொருத்தமா என்று சிலர் நினைக்கலாம். உண்மை. எமது வரலாற்று நூல்களில் பொதுவாக, இலக்கியம் (காப்பியத் தன்மையுடையது அல்லது பேரிலக்கியம்), இலக்கணம், சமய நூல், சிற்றிலக்கியம் என்ற விரிந்த தலைப்புக்களில் அவ்வக் காலத்தில் தோன்றிய எல்லா நூல்களையும் தொகுத்து ஆராய்கிறோம். ஆகவே, சொற்பொருளைப் பேசுகின்ற நிகண்டை ஆராய்வதற்கு, பிற எத்தலைப்பையும் விட, இலக்கணம் என்ற தலைப்பே நன்கு பொருந்துவது என்பது தெரியும். இலக்கணம் எடுத்த ஒவ்வொன்றையும் வரையறுத்துக் கூறுவது; நிகண்டும்

---

* இதுபற்றிய ஒரு சிறு ஆய்வு பாட்டியல் என்ற அத்தியாயத்துள் காணப்படும்; விரிவு எட்டாம் நூற்றாண்டு வரலாற்றுள் வெளிவரும்.

சொற்பொருளை வரையறுத்துக் கூறுவது. ஆகவே, அதையும் இலக்கணம் என்ற தலைப்பில் பொருத்திப் பேசுவதில் பிழை யில்லை.

மற்றுமொரு பொருத்தம், இலக்கணத்திலிருந்தே எடுத்துக் காட்ட முடியும். அகத்திணை யொழுக்கத்தைக் கூறும் தொல் காப்பியமானது, முதற்பொருள் உரிப்பொருள் கருப்பொருள் என்பவற்றைக் கூறும்போது, ஒரு நூற்பாவால் தெய்வம், உணா, மா, மரம், புள், பறை, செய்தி, யாழின் பகுதி என்பதைக் கூறுகிறது.

தெய்வம் உணாவே மாமரம் புள்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
இவ்வகை பிறவும் கருவென மொழிப.

என்பது தொல்காப்பியச் சூத்திரம்; இது கூறும் கருப்பொருள் எட்டு, பிற்கால இலக்கணங்கள் தலைவர், மாக்கள், ஊர், நீர், பூ, பண் முதலியன பலவும் சேர்த்துச் சொல்லுகின்றன.

ஆரணங்கு உயர்ந்தோர் அல்லோர் புள் விலங்கு
ஊர் நீர் பூமரம் உணாப்பறை யாழ்பண்
தொழில் எனக் கருஈ ரெழுவகைத் தாகும்

என்பது நம்பியகப்பொருள் சூத்திரம்; இதுகூறும் கருப்பொருள் பதினான்கு; பிறவும் என்னும் இலேசானே ஏனையவும் இங்குச் சொல்லப்பட்டன என்று உரை விளக்குகிறது.

இக்கருப்பொருள்களோடு, பண்புப் பெயர்களும் சேர்ந்து நிகண்டுக்குரிய பொருளாயிருக்கின்றன என்று தெரிகிறது. பின்னால் சொல்லப் பெறும் திவாகரத் தொகுதிகளின் பெய ராகிய தெய்வம், மக்கள், விலங்கு, மரம், இடம், பல்பொருள், செயற்கை வடிவம், பண்பு, செயல், ஒலி என்ற பத்தையும் இங்கு ஒப்புநோக்குக. எனவே, கருப்பொருள்களின் பட்டியலே நிகண்டின் தொகுதியமைப்பிற்கு வழி காட்டியிருக்கிறது என்று கருதுவது பிழையாகாது.

எமது இலக்கிய வரலாற்று நூல்கள் பலவற்றிலும் நிகண்டு பற்றிய செய்திகளை ஆங்காங்கு பிற நிகண்டுகளைக் குறித்துப் பேசிய இடத்து ஏற்ற அளவு கூறியிருக்கிறோம்; 10ஆம் நூற் றாண்டு - பிங்கல நிகண்டு; 14-உரிச்சொல் நிகண்டு; 15-கயாதர நிகண்டு. இவையனைத்திற்கும் காலத்தால் முற்பட்டது திவாகர நிகண்டு. ஆதலால் திவாகரத்தைக் குறித்துப் பேசும் இந்த

இடத்தில் முன்கூறிய செய்திகள் அனைத்தையும், பொருளின் நிறைவு கருதி, ஒரு சேரத் தருகிறோம். சிறப்பாக, பிங்கல நிகண்டின் முன்னுரைப் பகுதிகள் சில இங்கு எடுத்தமைக்கப் பெற்றிருக்கும்.

**நிகண்டின் பெயர்**

தொல்காப்பியர் தமது உரியியலை 'உரிச் சொற்கிளவி விரிக்குங் காலை' என்று தொடங்குகிறார். பின்னால் பதினாறாம் நூற்றாண்டு வரை எழுந்த எல்லா நிகண்டுகளும் உரிச்சொல் என்றே சொல்லிக் கொள்கின்றன. திவாகரர் தம் நூலுக்குப் பெயர் என்ன என்பதைச் சொல்லவில்லை. தம் நூலின் தொகுதி இறுதி பன்னிரண்டு இடங்களிலும்,* 'திவாகரத்து' என்று மட்டும் சொல்லுகிறாரே யொழிய, அங்கு வேறு சொல்லை வைக்கவில்லை. பின்னர் நிகண்டு செய்த பிங்கலர் தம் நூலைப் பிங்கலந்தை என்று பெயர் வைக்கிறார் என்று அறிகிறோமே அன்றி, வேறு சொல் அவர் வைத்ததாகத் தெரியவில்லை. அடுத்து நூல் செய்த காங்கேயர் நூல், 'காங்கேயன் சொன்ன உரிச்சொல்' என்று பெயர் பெறுகிறது; உரிச்சொல் நிகண்டு என்ற பெயரி லேயே இது அச்சிடப்பட்டது. அடுத்து வந்த கயாதரர் தம் நூலை உரிச்சொல் பனுவல், உரித்தாய சொல் என்றே குறிப்பிடுகிறார். இவ்விருவர் காலமும் முறையே 14, 15 நூற்றாண்டுகளாகும். இடையில் இலக்கணம் செய்த நன்னூலார் (13ஆம் நூற்றாண்டு) பிங்கலந்தையைக் குறிப்பிட நேர்ந்தபோது, உரிச்சொல் என்றே சொல்கிறார்.

> **இன்னது இன்னுழி இன்னணம் இயலும்**
> **என்றிசை நூலுட் குணகுணிப் பெயர்கள்**
> **சொல்லாம், பரத்தலின்; பிங்கலம் முதலா**
> **நல்லோர் உரிச்சொலின் நயந்தனர் கொளலே.**

அன்றியும், பிங்கலத்தின் சிறப்புப் பாயிரம் 'பிங்கல முனிவன் எனத் தன் பெயர் நிறீஇ, உரிச்சொற்கிளவி விரிக்குங்காலை' என்றே சொல்கிறது. இவற்றால், நெடுங்காலம் வரையில் நிகண்டு என்ற பெயரால் இன்று நாம் அறியும் நூலுக்கு அக்காலம் முழுமையும் உரிச்சொல் என்ற பெயரே வழங்கி வந்தது என் பது தெளிவு.

முதன் முதலாக அடுத்த நூற்றாண்டில்தான் மண்டல புருடர் தமது நூலின் பெயர் சொல்லுமிடத்து நிகண்டு சூடாமணி

---

* இவை முழுமையும் பின்னே தரப்பட்டுள்ளன.

என்று புதிதாகப் பெயர் படைக்கிறார். தற்சிறப்புப் பாயிரத்துள் பிண்டியின் நிழல் வீற்றிருந்தவனை வாழ்த்தி, 'மன்னிய நிகண்டு சூடாமணி என ஒன்று சொல்வன், கேண்மின்' என்கிறார். இவர் காலம் 16ஆம் நூற்றாண்டு.

கூட்டமெனினும் நிகண்டெனினும் ஒக்கும் என்பது சங்கர நமசிவாயர் நன்னூலுரையில் தரும் குறிப்பு(சூ. 460). 'இலக்கணம் கூறுவதாகிய இந்நூலுள் இலக்கணம் காட்டுதற்கு வேண்டிய மாத்திரையே கூறுவதன்றி உரிச்சொல்லாகிய குணப்பெயரை யும் ஏனைக் குணிப்பெயரையும் நிகண்டினிற் கூறினாற் போல விரித்துக் கூறக்கடவ மல்லம். அவற்றினைக் கண்டறிய வேண்டி னார் அவ்விலக்கணம் அறிவதற்கு முன்னர் ஏனைப் புலவராற் கூறப்பட்ட பிங்கலம், திவாகரம், சூடாமணி* முதலிய நூல்க ளுள் வகுக்கும் உரிச்சொல் தொகுதியுள் விரும்பிக் காண்க'.

'இவ்விலக்கணம் அறிதற்கு முன்னே நிகண்டறிக என்றாம், அறியும் முறை அதுவாகலான்' என்றும் அவர் எழுதுகிறார்; 'இலக்கணம் கூறும் நூலுள் நிகண்டினையும் உடன் கூறாது அதனை வேறொரு நூலாகக் கூறுதல் தமிழுள்ளேயன்றி ஆரியம் முதலியவற்றுள்ளும் காண்க' உரியியலுக்கும் புறநடைச் சூத்திரமாகிய 'இன்ன தின்னுழி இன்னணம் இயலும்' என்பதன் உரையில் அவர் இக்கருத்துக்களைச் சொல்கிறார்; நன்னூல் 456-9 வரையுள்ள சூத்திரங்களிற் கண்ட உரிச்சொற்கள் 45 என இவர் எண்ணிச் சொல்கிறார். இப்புறனடைச் சூத்திரத்தில், இச் சொல் தொகுதிகளை விரிக்காமல், இலக்கணம் காட்டுவதற்கு வேண்டிய மாத்திரையே கூறப்பட்டது என்கிறார்.

நன்னூலாரும் உரை செய்த சங்கர நமசிவாயரும் குண குணிப்பெயர் என்று கூறுவது பற்றி ஒன்று சொல்லலாம். உரை காரர் இவ்விரண்டும் நிகண்டில் விரித்துக் கூறியிருப்பதாகச் சொல்லுகிறார். கூறியிருந்தும் கூட, தொகுதிப் பாகுபாடுகள் திவாகரம் முதலியவற்றில் திட்டமாய்க் குணி என்றும் குணம் என்றும் காணப்படவில்லை. கலந்தே காணப்படுகிறது. பிற் காலத்தில் எழுந்த நாம தீப நிகண்டு தான் இவ்விரண்டையும் அடிப்படையாகக் கொண்டு எழுந்த ஒரு பாகுபாட்டை வர்க்கம்

---

* நன்னூலார் நிகண்டு என்ற பெயரைச் சொல்லவில்லை; ஆனால் 18ஆம் நூற்றாண்டில் உரை எழுதிய சங்கரநமசிவாயர் தம் காலத்துக்கு முன் எழுந்த பல நிகண்டுகளையும் உணர்ந்து இவ்வாறு எழுதுகிறார்.




என்று சொல்லி நூல் செய்கிறது அது கொண்டுள்ள பாகுபாட்டை இவ்வாறு ஒரு படமாகக் காட்டலாம். இப்பாகுபாட்டைத் திவாகரத்தோடு ஒப்பிட்டுக் காட்டும் ஒரு விளக்கத்தை, பின் வந்த நிகண்டுகள் என்ற தலைப்பின் முடிவில் காண்க.

**நிகண்டு என்ற சொல்**

நிகண்டு என்ற சொல்லைத் திவாகரரே உபயோகிக்கிறார். ஆறங்க வகைப்பெயர் கூறுமிடத்து,

> **ஆறங்கம் மந்திரம் வியாகரணம் நிகண்டு***
> **சந்தோ பிசிதி நிருத்தம் சோதிடம்.**

என்பது இவருடைய சூத்திரம். இந்த ஆறையும் பிங்கலர் அப்படியே சொல்லுகிறார். வேதாங்கம் என்பது வேதத்தின் உறுப்பு. அவை ஆறு; சிட்சை, வியாகரணம், சந்தஸ், நிருத்தம், சோதிடம், கற்பம் என. சிட்சையாவது, எழுத்துக்களின் உச்சரிப்பு முதலியவற்றை உணர்த்தும் நூல். வியாகரணமாவது இலக்கணம். சந்தஸ் என்பது யாப்பு; இதுவே சந்தோபிசிதி எனப்படுகிறது. நிருக்தம் என்பது யாஸ்கர் எழுதியது; இது நிகண்டு என்ற மூல நூலின் உரை; நிகண்டு நூலாவது, நைகண்டுகம், நைகமம், தைவதம் என்று மூன்று பிரிவுகளாக உள்ளது; முதல் பகுதி வேதத்தில் உள்ள பௌதிகப் பொருள்களின் பெயர்கள்; இரண்டாம் பகுதி பல பொருள்களை உடைய சொல்; மூன்றாம் பகுதி மூன்று உலகங்களிலும் உள்ள தேவதைகளின் பெயர் ஆகிய பெயர்களைக் கூறும். சோதிடம் என்பது நன்கு தெரிந்தது. கற்பம் என்பது வேதங்களுக்குரிய கருமங்களையும் அவற்றின் பயனையும் சொல்வது. இப்படிப் பார்க்கும்போது, வடமொழியில் நிருக்தம் என்பதுதான் நாம் அறிகிற நிகண்டுப் பொருளைக் கூறுகிறது. ஆனால் திவாகரர் நிருக்தத்தையும் கூறி நிகண்டையும் கூறுகிறார். எனவே ஏட்டில் பிழை இருக்கவேண்டும், அல்லது திவாகரரின் கருத்தில் பிழை இருக்க வேண்டும் என்பது தெரிகிறது. இது எப்படி இருந்தாலும், ஒன்று தெளிவு; நிகண்டு என்ற சொல்லைத் திவாகரர் அறிந்திருந்த போதிலும்கூட, அதைத் தம் நூலுக்குப் பெயராக இடவில்லை. ஏன் என்பது ஆராயத் தகுந்தது. திவாகரர் சைவர் என்று சொன்னோம். ஆகவே வைதிக சமயத்தார் வேதத்தின் அங்கத்திற்குக் கூறிய பெயரைத் தாம் முதன் முதலாகச் செய்கின்ற ஒரு நூல் வகைக்குப் பெயராக அமைத்துக் கொள்ள அவர் விரும்பவில்லை. ஆகவே தெரிந்தேதான் இதற்கு அப்பெயர் வைக்கவில்லை என்பது நன்கு புலப்படுகிறது.

இவரைப் பின்பற்றி நூல் செய்த பிங்கலரும், நிகண்டு என்ற சொல்லை ஆறங்கங்களின் பெயராகவே சொல்லுகிறார். தம்

---

* கற்பம் என்பதற்கு நிகண்டு பிழையாக வந்திருக்கலாம்.

நூலுக்கும் இப்பெயர் வைக்கவில்லை. அவர் காலம் 10ஆம் நூற்றாண்டு. ஆனால் 16ஆம் நூற்றாண்டில் நிகண்டு செய்த மண்டல புருடர் வேதாங்கம் என்பதில் திவாகரர் போல எந்தக் குழப்பமும் இன்றி,

> ஆறங்கஞ் சிட்சை கற்ப மாம்வியா கரணம் மற்றும்
> வீறிய நிருத்தஞ் சந்தோ விசிதஞ்சோ திடமென் றாகும்.

என்று தெளிவாக நிகண்டு என்ற பெயரை விலக்கி நூல் செய்கிறார். இவர் கூறும் ஆறும் மரபை ஒட்டியவை. ஆனால் இவர் தமது நூலுக்கு 'நிகண்டு சூடாமணி' என்ற பெயரிட்டார் என்பது இங்கு கருதத்தக்கது. இவருக்கு முன் திவாகரர், பிங்கலர், காங்கேயர், கயாதரர் ஆகிய நால்வர் நிகண்டு செய்திருக்கிறார்கள். நால்வரும் தங்கள் நிகண்டுகளை உரிச்சொல் என்றே சொன்னார்கள். நால்வரும் வைதிக சமயத்தினர். ஆகவே திவாகரர் சொல்லாது விட்ட நிகண்டு என்ற பெயரை மற்றவர்கள் மேற்கொள்ள விரும்பவில்லை. ஆனால் மண்டல புருடரோ சைனர், வைதிக மார்க்கத்தினர் அல்லர். ஆதலால் அவருக்கு வேதத்தோடு ஒட்டி வழங்கிய பெயரைத் தம் நூலுக்கு அமைத்துக் கொள்வதில் குற்றம் ஒன்றும் தோன்றவில்லை. இதுவே நிகண்டு என்ற சொல்லைத் திவாகரர் தெரிந்தும் கொள்ளாததற்கும், பின்வந்தோர் கொள்ளாததற்கும், மண்டல புருடர் தெரிந்து கொண்டதற்கும் காரணமாகும்.

16ஆம் நூற்றாண்டில், திருவொற்றியூர் ஞானப் பிரகாசர் என்பவர் சிவஞான சித்தியார் பரபக்கத்திற்கு ஒரு விரிவுரை செய்தார். அதில் அவர் மேற்கோளாகத் தரும் பாடல் ஒன்று, குறட்பா:

> கணிதம் நிருத்தம் வியாகரணம் சந்தம்
> கணநிகண்டு கற்பம்சங் கம்.

இது எந்த நூலில் இருந்து எடுத்தார் என்று தெரியவில்லை. இந்த நூலாசிரியரும் நிகண்டு ஒரு தனி அங்கம் என்று, திவாகரர் செய்த பிழையையே செய்தார் என்று தோன்றுகிறது. நிகண்டு என்றால் சொற்களின் கூட்டம் என்று சங்கர நமசிவாயர் கூறியதை மேலே காட்டினோம்.

திவாகரருக்கு முன் இருந்த நிகண்டு என்ற சொல்லின் ஆட்சியும் நிகண்டின் பொருள் ஆட்சியும் பின்னே திவாகரருக்கு முன் இருந்த நிகண்டுகள் என்ற ஒரு தலைப்பில் விரிவாக ஆராய்ந்திருக்கிறோம். இங்கு நாம் காட்டியது சொற்பொருள்

கூறும் நூலுக்குப் பெயராக நிகண்டு என்ற சொல்லை மண்டல புருடரே முதன்முதல் பயன்படுத்துகிறார் என்பது ஆகும். இது நடந்தது 16ஆம் நூற்றாண்டில்.

இந்த (16) நூற்றாண்டுக்கு மற்றொரு சிறப்பும் உண்டு. அது அகராதி என்ற சொல்லைப் பற்றியது. அகராதி என்ற சொல் அதுவரையில் ஆட்சிக்கு வரவில்லை. இச்சொல்லுக்கு அகர வரிசையாக அல்லது அகரம் ஆதியாக என்பது பொருளாகும். இந்த முறையில் அமைக்கப்பட்ட எந்த ஒரு பட்டியலுக்கும் இப்பெயர் பொருந்தக் கூடியது. ஆனால் இந்த நூற்றாண்டில் புதுமுறையில் ரேவணசித்தர் என்பவர் ஒரு நிகண்டு செய்தார். மண்டலபுருடர் தம் நிகண்டு செய்த காலம் 16ஆம் நூற்றாண் டின் தொடக்கப் பகுதி. அவர் சைனர். ஆனால் ரேவண சித்தர் வீரசைவர். இவர் தமக்குச் சில காலம் முன்னமே தோன்றிய சூடா மணி நிகண்டின் பெயரை அறிந்து தம் நூலுக்கும் நிகண்டு என்ற அதே பெயரையே இட்டது ஓர் அரிய செய்தி. இதற்கும் மேலாக அவர் முன்னமே இருந்த பொருள் தொகுதி முறை களான பத்தையும் அடியோடு மாற்றி அனைத்தையும் ஒன்று சேர்த்து முதலெழுத்துக்களை நூற்பா தோறும் அ முதல் ஔ வரையில் தமிழ் நெடுங்கணக்கின்படி வரிசைப்படுத்தித் தம் நூலை அமைத்தார். இந்த வரிசை அமைப்புக்கு அகராதி முறை என்று பெயர் வைத்துத் தம் நூலையும் அகராதி நிகண்டு என்று சொன்னார். இது வியப்பான ஒரு செய்தி. இவர் பெயர் வைத்தது நிலைத்துவிட்டது. அகராதி என்றால் அகர முறையில் அமைந்த பட்டியல் என்று பொதுவாய்ப் பொருளான போதிலும்கூட, சொற்பொருள் கூறும் நூலுக்கு அகராதி என்ற பெயரே அமைந்து விட்டது. இவர் அகராதி என்ற சொல்லைப் படைத்தது தமிழ் இலக்கிய வரலாற்றில் ஒரு பொன்னான நேரம்.

இவ்விதமாக அகராதி, நிகண்டு என்ற இரு சொற்களும் ஒரே நூற்றாண்டில் (16) ஆட்சிக்கு வந்திருப்பதை அறிகிறோம்.

**யாஸ்கர்**

நிகண்டின் வடமொழி மூலத்தை ஆராய்வது தொல்காப் பியத்தையும், பின்வந்த நிகண்டுகளையும் அறியப் பெரிதும் துணை புரியும். யாஸ்கர் என்ற பேராசிரியர் வடமொழியில் நிருக்தம் என்ற நூலை எழுதினார். இவர் காலம் கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு. க்-த தமிழில் வரும்போது த் த என்று வரும்; ஆகவே நிருக்தம் நிருத்தம் என்றே எழுதப்படும். நிருத்தம் என்றால்

நடனமன்று; இங்கு நிருக்தம்: உக்தம் - சொல்லப்படுவது, நிர்-உக்தம்-சொல்லப்படாதது. ஆகவே சொல்லப்படாத சொல்லையும் பொருளையும் யாஸ்கர் இந்நூலில் ஆராய்கிறார். இவருடைய கருத்தைச் சிறிது தெரிந்து கொள்வது பயனுடையது. பொதுவாக, யாஸ்கர் செய்த நிருத்தம் நிகண்டு நூல், அது வேதத்தின் சொற்களுக்குப் பொருள் கூறுவது என்றே கருத வேண்டும். பின்னே சொல்பவற்றால் இது தெளிவுபடும்.

வேதம் பிறந்தது பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே. ஆனால் யாஸ்கர் வாழ்ந்தது கி.மு. 5ஆம் நூற்றாண்டில். வேதத்தின் பாஷைக்கும் யாஸ்கர் காலத்துச் சமஸ்கிருத பாஷைக்கும் நிரம்ப வேறுபாடு. வேத பாஷை அப்போது வழங்கவில்லை. ஆகவே அது அன்று நிருக்தம் - வழக்கில் இல்லாதது. ஆகவே தான் யாஸ்கர் வேதச் சொற்களுக்கு யாருக்கும் பொருள் தெரியாது என்று கருதித் தாம் பொருள் சொன்னார். அதுவும் முன்னமே இந்த, இந்த விதமாகப் பொருள் இன்னாரால் இன்ன நூலில் வரையறை செய்யப் பெற்றுள்ளது என்று காட்டி ஒரு வரையறை ஏற்படுத்தினார். அதாவது, முன்னிருந்த வேதமாகிய இலக்கியச் சொற்களுக்குத் தாம் இப்போது பொருள் கூறினார்.

இவருடைய நிருக்தத்தில் நைகண்டுகம், நைகமம், தைவதம் என்று மூன்று காண்டங்கள் உள்ளன. (இம்மூன்று சொற்களும் நிகண்டு நிகமம் தெய்வம் என்ற சொற்களிலிருந்து வந்தவை). நைகண்டுகம் ஒரு பொருள் பல் பெயரும், நைகமம் ஒரு பெயர்ப் பல் பொருளும் கூறும்; தைவதம் என்பது வைதிக தேவதைகள் பற்றிய ஆராய்ச்சி. இம்மூன்றில் நைகண்டுகம் என்பதே நிகண்டாகும். நிகமம் - வேதம்; நைகமம் - வேதம் பற்றியது.

### தொல்காப்பியர்

நிருக்தம் பற்றிய இந்த நினைவோடு தொல்காப்பியத்தின் சில பகுதிகளைப் பார்க்கவேண்டும். சொல்லதிகார உரியியல், பொருளதிகார உவம இயல் மரபியல் என்ற மூன்றியல்களிலும் முறையே 129, 65, 119 சொற்களை உரைக்கின்றார். எச்சவியலிலும் சில சொல்லாட்சிகளை விளக்குகிறார் - நால்வகைச் சொற்களாகிய பெயர்ச்சொல், வினைச்சொல் இடைச்சொல், உரிச்சொல் என்பவற்றில் பண்பு உணர்த்தும் சொற்களாகிய உரிச்சொற்களே மிகுதி. உரியியலில் அவற்றை எடுத்துப் பேசுகிறார். அவற்றுள்ளும் தம் காலத்து நன்கு ஆட்சியில் இருந்து வெளிப்படப் பொருள் விளங்குவனவாகிய சொற்களை அவர்

சொல்லவில்லை. தம் காலத்தில் பொருள் விளக்கமில்லாத சொற்களையே எடுத்துப் பொருளையும் ஆட்சியையும் விளக்கு கிறார். இவற்றுள் 'ஒரு சொற் பல்பொருட்குரிமை தோன்றினும், பல சொல் ஒருபொருட்குரிமை தோன்றினும்' என்று அவரே இலக்கணம் செய்தது போல (781), ஒரு சொல் பல பொருட்கும், பல சொல் ஒரு பொருட்கும் உரியனவாய் வருவன உள்ளன. இவை போலவே, மரபியற் சொற்களைக் கருதும் அவர் கூறும் சொற்களிற் சில மட்டுமே இலக்கிய வழக்கால் நாம் அறிகிறோம். பல சொற்களும் அவற்றின் சொல்லாட்சியும், சங்க நூல்களிலும் இல்லை, பிற்கால நூல்களிலும் இல்லை. வடமொழியில் நிருக்தம் தோன்ற நேர்ந்த மொழிநிலையோடு தொல்காப்பியர் சொற்களைக் கூற நேர்ந்த நிலையையும் சேர்த்துப் பார்க்கும் போது, அதே கருத்தை இங்கும் சொல்லலாம். தொல்காப் பியருக்கு முன்னும், எல்லையற்ற பேரிலக்கியப் பரப்பு தமிழில் இருந்தது; அவர் காலத்திலும் இருந்தது. அந்த இலக்கியப் பரப்பில் கண்ட சொல்லாட்சிக்கும், அவருடைய சமகாலத்தில் கண்ட சொல்லாட்சிக்கும் நிரம்ப வேறுபாடு இருந்தது. இதை உணர்ந்த ஆசிரியர், முந்திய இலக்கியத்தின் அருஞ்சொற்களைத் தம் காலத்தவர் அறிய மாட்டார்கள். ஆதலால் அவர்களுக்கு உணர்த்த வேண்டி, பண்டை இலக்கிய அருஞ்சொற்களையும் அருமரபுகளையும் தம் நூலில் எடுத்தமைத்துக் கொண்டார். இவை உலகியல் வழக்கிழந்தன; செய்யுள் வழக்கு அவர் காலத்தில் இருந்தது. ஆதலால் அச்செய்யுளை அறிய முற்பட்டவர்களுக்கு உறுதுணையாக அவர் இங்கு இந்நூற் பகுதியைச் செய்தார். வடமொழியில் யாஸ்கர் செய்த பணியையே தொல்காப்பியரும் செய்தார். யாஸ்கருக்கு மூலமாயிருந்த நூல்கள் - வேதங்கள் - இன்று உலவுகின்றன. தொல்காப்பியருக்கு மூலமாயிருந்த இலக்கியங்கள் - ஒருவேளை இறையனார் களவியலுரையில் கூறுகின்ற 'எத்துணையோ' பரிபாடல், முதுநாரை, முதுகுருகு, களரியாவிரை, கலி, குருகு, வெண்டாளி, வியாழமாலையகவல் முதலான நூல்கள் - அன்று இருந்தன, இன்று அழிந்து போய் விட்டன. இதுவே வேறுபாடு. இதனால் தொல்காப்பியர் தம் நூற் பகுதிகளை, யாஸ்கர் நிருக்தம் போலவே செய்திருக்கிறார் என்று உறுதியாகக் கருதலாம். இவர் வேதங்களையும் பார்த்து, யாஸ்கர் நூலையும் பார்த்திருக்கக் கூடும். எனவே, குறிப்பிட்ட இவருடைய நூற்பகுதிகள் நிகண்டை யொத்தன என்று கருது வதில் தவறில்லை.

### நிகண்டின் பொருள்

நிகண்டு நூலின் பொருள் பாகுபாட்டையும் பொருள் வளர்ச்சியையும் மாறுபாட்டையும் ஆராய்வது சுவையுள்ள பயன் பொருந்திய ஓர் ஆராய்ச்சி, இது சொற்பொருள் வளர்ச் சியை மொழி மூலம் நன்கு உணர்வதற்கான ஒரு சிறந்த முயற்சி யுமாகும். தமிழ் எவ்வளவு வளர்ந்திருக்கிறது என்று நாம் பறை சாற்றிய போதிலும் கூட, ஆராய்ச்சியாளர் இத்துறையில் ஈடு படுவது மிகவும் அருமை. இலக்கிய வரலாற்றைக் கூறும் இந்த நூலில் சொற்பொருள் வளர்ச்சியை ஆராயும் வேலையில் அதிகம் ஈடுபட முடியாது. எனினும், முதல் முதல் தோன்றிய சொல்லும் பொருளும் தொகுத்துக் கூறுகின்ற திவாகரர் நிகண்டை நாம் ஆராயும் போது காலத்தால் பின் வந்த அடுத்த சில நூல்களையேனும் சிறிது ஆராய்வது இன்றியமையாதது. நிகண்டின் யாப்பு என்ற தலைப்பில் திவாகரம் தொடங்கி 9ஆம் நூற்றாண்டு முதல் 16 வரையில் எழுந்த ஆறு நூல்களைக் குறிப்பிட்டோம். அவற்றில் ஆறாவதாகிய அகராதி நிகண்டு அகராதிக் கிரமமாய் நூற்பாவையும் சொற்களையும் அமைத் திருப்பதால் அங்கு பொருளை ஒட்டிய நூற்பாகுபாடு இருக்க முடியாது. ஏனைய ஐந்திலும் உள்ள பொருள் பாகுபாட்டை இங்கு சிறிதளவு குறிப்பிடலாம்.

திவாகரர் அகப்பொருள் இலக்கணத்தில் சொல்லப்பட்ட கருப்பொருள்களின் தொகுப்பையே கருத்தில் கொண்டு தம் நூலைப் பாகுபாடு செய்தார் என்று குறிப்பிட்டோம். பொது வாக, திவாகரமும் நிகண்டுகள் யாவுமே பொருளை மூன்று வகையாகச் சொல்லுகின்றன.

#### 1. ஒரு பொருள் பல்பெயர்த் தொகுதி :

இது ஒரு பொருளுக்கு உரிய பெயர்கள் அனைத்தையும், செய்யுள் வழக்கையும் உலகியல் வழக்கையும் ஒட்டி, ஒரு சேரத் தொகுத்துச் சொல்லுகிறது.

#### 2. ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதி :

இது ஒரு சொல்லுக்குரிய பலவகைப் பொருளையும் ஒரே இடத்தில் ஒன்றாகத் தொகுத்துக் கூறுவது. இந்த 20ஆம் நூற்றாண்டில் அகராதி என்ற பெயரால் நாம் அறிவது இந்தப் பொருளே.

**3. பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி :**

இது கூட்டமான பெயரையும் அந்தப் பெயருக்கு விளக்கமான விரிவையும் ஒன்று முதல் 96 வரையில் நிரலே விரித்துச் சொல்லுவது. அதாவது ஒன்று இரண்டு மூன்று நான்கு பத்து இருபது முப்பத்தாறு அறுபத்து நாலு தொண்ணூற்றாறு என்ற தொகை எண்ணுக்குரிய பொருள் விளக்கங்களைக் காட்டுவது. முதல் முதல் பெஸ்கி அச்சிட்ட சதுரகராதியில் இதற்கு நான்காம் பாகமாகிய தொகையகராதி என்று பெயர் கொடுத்தார். அது முதல் இன்று வரை இது தொகை அகராதி என்றே பெயர் பெறுகிறது.

திவாகர நிகண்டின் பெயர்களைப் பின்னே விரிவாக ஆராய்கிறோம். இங்கு அவற்றின் பாகுபாடு பற்றிச் சில சொற்கள் சொல்ல வேண்டும். மேலே ஒன்று என்று எண்ணிட்டுக் காட்டிய பிரிவினுள் முதல் பத்துப் பிரிவுகளும் அடங்கும். இவை தெய்வப் பெயர், மக்கட் பெயர், விலங்கின் பெயர், மரப்பெயர், இடப் பெயர், செயற்கை வடிவப் பெயர், பண்பு பற்றிய பெயர், செயல் பற்றிய பெயர், ஒலி பற்றிய பெயர் என்ற பத்துத் தொகுதிகளாகத் திவாகரர் அமைத்திருக்கிறார். அகத்திணையுள் சொல்லப்படுகின்ற கருப்பொருள்கள் தெய்வம், தலைவர், மாக்கள், புள், விலங்கு, ஊர், நீர், பூ, மரம், உணா, பறை, யாழ், பண், தொழில் ஆகிய பதினான்கு. இவற்றை, திவாகரர் பத்துத் தொகுதியுள் அமைக்கிறார்.

1. தெய்வப் பெயர் - தெய்வம்
2. மக்கள் பெயர் - தலைவர் மாக்கள்
3. விலங்கின் பெயர் - விலங்கு, புள்
4. மரப் பெயர் - பூ, மரம்
5. இடப்பெயர் - ஊர், நீர்
6. பல்பொருள் பெயர் பிற தொகுதிகளில் சொல்ல முடியாது விடுபட்ட பெயர்கள் எல்லாம், இங்குச் சொல்லப்படுகின்றன; மணிகள், உலோகங்கள் முதலாயின
7. செயற்கை வடிவப் பெயர் - படைக்கலம், பறை, ஆடை வகை முதலாயின
8. பண்பு பற்றிய பெயர் - இது உரிப் பொருளைச் சொல்வது
9. செயல் பற்றிய பெயர் தொழிற் பெயர்கள் முதலாயின
10. ஒலி பற்றிய பெயர் - இலக்கியம், இலக்கணம் பண். இவ்வாறு திவாகரர் பொருள்களைப் பத்துத் தொகுதியுள் வரையறுத்துக் காட்டுவது நயமாக உள்ளது.

அடுத்தது பதினோராவது ஒரு சொல் பல்பொருள் பெயர் இது முன்னே காட்டியபடி அகராதிப் பொருள். எல்லோரும் மனப்பாடம் செய்தது இந்தப் பகுதிதான். இதற்கு அதிக விளக்கம் தேவையில்லை.

பன்னிரண்டாவது, தொகைப் பொருளைச் சொல்லும் தொகையகராதி என்பது. 18ஆம் நூற்றாண்டில் சுப்பிரமணிய பாரதி என்பவர் இப்பொருளை விளக்குவதற்கென்றே பொருள் தொகை நிகண்டு என ஒரு தனி நூல் செய்தார்.

இவ்வாறு திவாகரர் செய்த பன்னிரு தொகுதி அமைப்பைப் பின்னே எல்லா நிகண்டு ஆசிரியர்களும் மேற்கொண்டு அப்படியே நூல் செய்திருக்கிறார்கள். உரிச்சொல் கயாதரம் சூடாமணி நிகண்டு முதலான எல்லா நிகண்டுகளும் திவாகரருடைய பாகுபாட்டை அப்படியே மேற்கொண்டு இருக்கின்றன. கயாதரத்தில் இடப்பெயர் என்பதை இரண்டாவது தொகுதியாக மாற்றியிருக்கிறார். மேலும், அச்சிட்ட கயாதர நூலில் பன்னிரண்டாவது தொகுதி காணப்படவில்லை. பெயர்களைத் தொகுதி என்று திவாகரம் சொல்ல, வகை என்று பிங்கலமும், இயல் என்று கயாதரமும் சொல்லுகின்றன. அரும்பொருள் விளக்க நிகண்டும் நானார்த்த தீபிகையும் ககர முதல் னகர இறுதியாக நூலை எதுகைக்குரிய 18 தொகுதிகளாகப் பிரித்துக் கொண்டன. இவையிரண்டிலும் பொருளை ஒட்டிய தொகுப்பு முறையில்லை.

குறிப்பிடத்தக்க ஒரே வேறுபாடு பிங்கலர் செய்ததாகும். இவர் பொருளில் மட்டும் திவாகரரை எடுத்து அப்படி அப்படியே அமைத்திருந்த போதிலும் கூட, பொருள் பாகுபாடு மட்டும் மாறுபட்டிருக்கிறது. அச்சிட்டபடி உள்ள நூலில் பத்து வகைகள் அல்லது தொகுதிகளே காணப்படுகின்றன. பார்ப்போருக்கு இதில் ஏதோ குறையிருப்பது போலத் தோன்றும். உண்மையில் குறை இல்லை. உடன் அமைந்துள்ள நிகண்டுகளின் பிரிவுகளில் உள்ள அட்டவணையைப் பார்த்தால் இது நன்கு விளங்கும். தெய்வப்பெயரை வானவர் வகை என்று இரண்டாகப் பிரித்திருக்கிறார். பண்பு பற்றிய பெயர், செயல் பற்றிய பெயர் இரண்டையும் பண்பிற் - செயலிற் - பகுதி வகை என்று ஒன்றாகத் தொகுத்திருக்கிறார். ஐயர் வகை என்று பிழையாக மூன்றாம் தொகுதி உள்ளது. இதனுள் முதல் பத்து நூற்பாக்கள் மட்டும் பிங்கலத்தின் மக்கள் பெயர் ஆகிய ஐந்தாவது ஆடவர் வகைக்கு

**நிகண்டுகளின் பிரிவு – ஒப்புமை அட்டவணை**

| பிரிவு எண் | திவாகரம் 9 நூ. தொகுதிப்பெயர் | பிரிவு எண் | பிங்கலம் – 10 நூ. வகை | பிரிவு எண் | உரிச்சொல் 14 நூ. சூடாமணி 16 | கயாதரம் 15 நூ. பிரிவு எண் |
|---|---|---|---|---|---|---|
| 1 | தெய்வப்பெயர் | 1 | வான் வகை | 1 | தேவப் பெயர் | 1 |
| | | 2 | வானவர் வகை | | | |
| 2 | மக்கட் பெயர் | 5 | ஆடவர் வகை | 2 | மக்கட் பெயர் | 3 |
| 3 | விலங்கின் பெயர் | 8 | மாப் பெயர் வகை | 3 | விலங்கின் பெயர் | 4 |
| 4 | மரப் பெயர் | 9 | மரப்பெயர் வகை | 4 | மரப் பெயர் | 5 |
| 5 | இடப் பெயர் | 4 | அவனி வகை | 5 | இடப் பெயர் | 2 |
| 6 | பல் பொருட் பெயர் | 6 | அனுபோக வகை | 6 | பல் பொருட் பெயர் | 6 |
| 7 | செயற்கை வடிவப் பெயர் | | | 7 | செயற்கை வடிவப் பெயர் | 7 |
| 8 | பண்பு பற்றிய பெயர் | 7 | பண்பிற் செயலிற் பகுதி வகை | 8 | பண்பு பற்றிய பெயர் | 8 |
| 9 | செயல் பற்றிய பெயர் | | | 9 | செயல் பற்றிய பெயர் | 9 |
| 10 | ஒலி பற்றிய பெயர் | 7 | பண்பிற் செயலிற் பகுதி வகை உட் பிரிவு - வாய் வகை - செவி வகை | 10 | ஒலி பற்றிய பெயர் | 10 |
| 11 | ஒரு சொற் பல் பொருட் பெயர் | 10 | ஒரு சொற்பல் பொருள் வகை | 11 | ஒரு சொற் பல் பொருட் பெயர் | 11 |
| 12 | பல் பொருட் கூட்டத் தொரு பெயர் | 3 | ஐயர் வகை | 12 | பல் பெயர்க் கொரு பெயர் | |

உரியன. இவ்வகையின் ஏனைய பொருள்கள் யாவும் பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி என்ற இறுதித் தொகுதியாக இருத்தற்குரியன. எப்படியோ ஏடு எழுதினோர் பிழையாலோ, ஏடுகளை முறை பிறழ்ந்து கோத்தவராலோ, தவறாகப் பெயர்த்தெழுதினவராலோ, ஏற்பட்ட பிழையினால் அச்சிட்ட பிங்கல நிகண்டின் தொகுதிகள் மிகவும் பிழைபட்டுக் காண்கின்றன. அட்டவணையில் இவை நன்கு விளங்கும். பிங்கலர் இவ்வாறு பொருளை மாற்றியமைத்திருந்த போதிலும் கூட, யாருமே அவருடைய அமைப்பைப் பின்பற்றவில்லை. கைலாச நிகண்டு சூடாமணி என்ற ஒன்று மாத்திரம் பிங்கலத்தைப் பின்பற்றியிருக்கிறது என்று வையாபுரிப்பிள்ளை குறிப்பிட்டிருக்கிறார். பிற்கால நிகண்டுகளில் ஒன்றை மட்டும் இங்கு குறிப்பிடுவது பயனுடையது. நாமதீப நிகண்டுடையார் தம்முடைய வெண்பா நூலை இன்னும் சிறிது அறிவியல் ரீதியாக வகைப் படுத்துவது அறியத்தக்கது. சொற்களைப் பொதுவாக நான்கு வகையாக இவர் பிரித்து, ஒவ்வொரு பிரிவுக்கும் படலம் என்று பெயர் கொடுக்கிறார். உயர்திணைப் படலம், அஃறிணை உயிர்ப்பொருள், அஃறிணை உயிரில் பொருள், குணநாமப் படலம் என்பன அவை. இந்த நான்கு படலங்களையும் வர்க்கம் என்று பாகுபாடு செய்து ஒவ்வொரு வர்க்கத்தையும் ஒரு தனித் தொகுதி ஆக்கியிருக்கிறார்.

உயர்திணையில் தெய்வ வர்க்கம், மானிட வர்க்கம் என இரண்டு வகை. இவை திவாகரத்துள் வரும் முதல் இரு தொகுதிப் பெயர்களாகும் - தெய்வப்பெயர், மக்கட்பெயர். இரண்டாவது அஃறிணை உயர்திணைப் படலத்தில் இவர் ஐந்து வர்க்கங்கள் கூறுகிறார். நாற்கால் உயிர்ப்பொருள், பறவை உயிர்ப்பொருள், ஊர் உயிர்ப்பொருள், நீர்வாழ் உயிர்ப்பொருள் - இவை நான்கு வர்க்கங்களும் திவாகரத்திலுள்ள மூன்றாவது விலங்கின் பெயர்த் தொகுதியாகும். ஐந்தாவது தாவர உயிர்ப் பொருள் வர்க்க மென்பது. மூன்றாவது அஃறிணை உயிரியல் படலம் என்பது ஐந்து வர்க்கங்களைக் கொண்டது. இவற்றுள் முதலாவது இயற்கைப் பொருள் வர்க்கமென்பது திவாகரத்தில் ஆறாவது பல்பொருட் பெயராகச் சொல்லப்பட்டது. இரண்டாவது செயற்கைப் பொருள் வர்க்கமானது ஏழாவது செய்கை வடிவப் பெயர்த் தொகுதியாகவும், மூன்று இடவர்க்கமென்பது ஐந்து இடப்பெயர்த் தொகுதியாகவும் சொல்லப்பட்டன. நான்கு

கால வர்க்கம் என்பது, காலப் பொருள்கள் எல்லாம் தெய்வ அம்சம் என்பதனால், திவாகரத்தில் முதல் தெய்வப் பெயரில் சொல்லப்பட்டன. ஐந்தாவது சினை வர்க்கமென்பது உறுப்புக் களைக் கூறுவது. திவாகரத்தில் மக்கள், விலங்கு முதலியவற் றின் உறுப்புக்களாகச் சொல்லிய பகுதிகளைத் தனியே எடுத்து அமைத்திருக்கிறது. நான்காவது குண நாமப் படலம் என்பது திவாகரத்தில் சொல்லிய பண்பு, செயல், ஒலி, பற்றிய பெயர்த் தொகுதிகளாகும். மனக் குணவர்க்கம் என்பது பண்பு, வாக்குக் குணம் என்பது ஒலி. செயற்குணம் என்பது செயல். நான்காவது உயிரியல் பொருட்குணம் என்பது முன் தொகுதிகளில், பண்பு முதலியவற்றில் சொல்லாது நின்றவற்றைத் தொகுத்ததாகும். இவ்வாறு இவ்வாசிரியர் செய்திருப்பது 19ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகள். மேலைநாட்டுப் பகுத்தறிவு உணர்வும், அறிவியல் உணர்வும், அச்சும் தோன்றிய பின் இவர் நூல் செய் தமையால், நூலுள் இவ்வளவு விரிவுகளை அமைத்துக் காட்டு கிறார். இது போற்றத்தக்கது என்பதில் ஐயமில்லை.

### ஆங்கில நூல் நோக்கு

இங்கு ஆங்கில மொழிக் கண்கொண்டு இரு பொருள் களை நோக்குகிறோம். ஒன்று நிகண்டிற்கு இடப்பட்ட பெயர்; இரண்டு நிகண்டில் அமைந்த பொருள். இன்று நாம் அறிந்த வரையில், 9ஆம் நூற்றாண்டில் தோன்றிய நிகண்டு நூலுக்கு 16ஆம் நூற்றாண்டு வரையில் நிகண்டு என்ற பெயர் அமைய வில்லை. உரிச்சொல் என்ற பெயரே அமைந்திருந்தது. திவாகரம் பிங்கலத்தை உரிச்சொல் (நூலின் பெயரே இது) கயாதரம் என்ற நான்கு நூல்கள், உரிச்சொல் என்ற பெயராலேயே வழங்கப் பெற்றன. 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மண்டல புருடர் இந்தப் பெயரை விட்டு, தம் நூலை முதல்முதல் நிகண்டு சூடா மணி என்று குறிப்பிட்டார். இப்பெயர் நிலைத்துவிட்டது.

இதே நூற்றாண்டின் இறுதியில் நிகண்டு நூல் செய்த ரேவண சித்தர் என்ற புலவர் (1594) தம் நூற் பொருளைப் பழமை தழு வாது, புது முறையில் அகர வரிசையில் அமைத்தார். இதைக் குறிப்பிடும் முறையில் அகராதி என்ற புதிய ஒரு சொல்லைப் படைத்துத் தம் நூலுக்கு அகராதி நிகண்டு என்று பெயர் வைத்தார். அக்காலம் முதல், தமிழ் மொழியில் சொற்பொருள் உணர்த்தும் நூலுக்கு அகராதி என்ற பெயர் நிலைத்து விட்டது.

அகராதி என்றால் இன்று எல்லோருக்கும் நன்கு தெரியும். இதை முன்னுள்ள ஒரு தலைப்பில் விரிவாக விளக்கினோம்.

இவ்வாறு அகராதி என்ற சொல்லும் பொருளும் தமிழ் மொழியில் எழுநூறு ஆண்டுக்காலம் வளர்ச்சி பெற்றுப் பின் அழகான உருவம் ஏற்றன. இங்கு அகராதி என்ற சொல் உருவாகி யிருந்தாலும், அது நிகண்டு என்பதற்கு அடைமொழியாகவே பயன்பட்டிருக்கிறது. ஆங்கில மொழி இன்று எவ்வளவோ ஏற்றம் பெற்றிருந்த போதிலும் கூட, அம்மொழியிலும் அகராதி என்ற கருத்தைக் குறிப்பிடுவதற்கு இன்று வழங்கும் டிக்ஷனரி என்ற சொல் 18ஆம் நூற்றாண்டில் தான் அமைந்தது என்பது அறியத் தகுந்தது.

இரண்டாவது நூற்பொருள், நாம் பேசுகின்ற நிகண்டு நூலில் மூன்று பொருள்கள் அடங்கியுள்ளன என்று குறிப்பிட்டோம். இவற்றுள் மூன்றாவதாகிய பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி, தொகையகராதி என்பது. இது தமிழுக்கும் வடமொழிக்கும் உரியது. ஆங்கிலத்தில் இப்பகுதிக்குச் சிறப் பான பொருள்களுமில்லை, ஆட்சியுமில்லை. மற்ற இரு பொருள் களும் முறையே ஒரு பொருட் பல்பெயர்த் தொகுதியும் ஒரு சொல் பல்பொருள் பெயர்த் தொகுதியும் ஆகும். இவற்றுள் முதற்பொருள், திவாகரத்திலும் பிற சிறப்பான நிகண்டுகளிலும், முதல் பத்துத் தொகுதிகளாயிருக்கும். இரண்டாவது பொருள், பதினொராவது தொகுதி; இப்பொருளாவது ஒரு சொல் பல் பொருள் தொகுதியாகும்; அதாவது ஒரு சொல்லுக்குரிய பல வகைப் பொருளையும் சொல்வதாகும். இதையே நாம் இன்று தமிழில் அகராதி என்றும் ஆங்கிலத்தில் டிக்ஷனரி என்றும் சொல்கிறோம். நுனித்துணராத பெரும்பான்மையோர், நிகண்டு என்றாலே டிக்ஷனரி (செய்யுள் வடிவில்) என்று எண்ணு கிறார்கள். இது பிழையாகும். டிக்ஷனரி என்றால், நிகண்டின் பதினொராந் தொகுதி மட்டுமே; இந்தப் பயன் கருதியே இதை மட்டும் மனப்பாடம் செய்யும் பழக்கம் மிகுதியாக இருந்தது. இத்தொகுதிக்கு மட்டுமே பதினொராவது நிகண்டு என்ற பெயரும் வழங்கிற்று. பத்துத் தொகுதிகளும் அகராதியல்ல. அப்படியானால், அவற்றுக்கு நேரான ஆங்கில நூல் உண்டா என்பது கேள்வி. இப்பத்துத் தொகுதிகளும், ஒரு பொருளைக் குறிக்க மொழியில் வழங்கும் எல்லாப் பெயர்களையும் தொகுத்துச் சொல்லும் பகுதிகள் என்பது நினைவிருக்க வேண்டும்.

ஆங்கிலத்தில் திஸாரஸ் * என்ற ஒரு நூல் உள்ளது. 1852-இல் பீட்டர் மார்க் ரோஜெட் என்பவர் அந்நூலைத் தொகுத்தார். அவர் பல துறைப் புலமையுடைய ஒரு வைத்தியராய் இங்கிலாந்தில் தொழில் நடத்தியவர். பொழுதுபோக்காய் இத்தொகுப்பைச் செய்தார். இந்தத் திஸாரஸ் என்பது டிக்ஷனரிக்கு நேர்மாறானது. எதிர்ப்பட்ட ஒரு சொல்லுக்குப் பொருள் தெரியாமல் டிக்ஷ னரியில் தேடிக் கண்டு பிடிக்கிறோம். இப்பொருள் நமக்குத் தெரியாது. அல்லது தெரிந்தாலும் சந்தேகம். டிக்ஷனரியைப் பார்த்துப் பொருள் இன்னது என்று உறுதி செய்து கொள் கிறோம். திஸாரஸ் இப்படியல்ல: இங்குப் பொருள் அல்லது கருத்து நம் மனத்தில் இருக்கிறது; அதற்கேற்ற சொல்லும் நமக்குப் பழக்கமாகியிருந்தாலும், அந்த நேரம் முன்வந்து நிற்க வில்லை. திஸாரஸைப் புரட்டுகிறோம். நம் மனத்திலுள்ள கருத்தை யொட்டிய பல சொற்கள் நம் கண்முன்னே வருகின்றன. நம் கருத்துக்கு மிகவும் பொருத்தமானதைத் தேர்ந்து கொள் கிறோம். இதுவே திஸாரஸ் செய்யும் உதவி. சொல்லுக்குப் பொருள் தெரியாதபோது உதவுவது டிக்ஷனரி; கருத்துக்குச் சொல் கொடுத்து உதவுவது திஸாரஸ். நிகண்டின் முதல் பத்துத் தொகுதி களும் திஸாரஸ்; பதினொராவது தொகுதி டிக்ஷனரி, அகராதி.

ஆங்கில மொழியில் திஸாரஸ் ஏற்பட்டது 19ஆம் நூற் றாண்டின் இடைப்பகுதியில் (1852). தமிழில் திஸாரஸ் ஏற்பட்டது 9ஆம் நூற்றாண்டின் இறுதியில்: ஆயிரம் ஆண்டுகளுக்கு முன். ஆங்கிலத்தில் டிக்ஷனரி, திஸாரஸ் இரண்டும் விரிவான வெவ்வேறு நூல்கள். தமிழில் இரண்டும் சுருங்கிய அளவில் ஒரே நூல், நிகண்டு. ஆங்கிலத்தில் இரண்டு நூல்களும் அச்சு ஏற்பட்டு நெடுநாள் கழித்தே செய்யப் பெற்றன. ஆகவே அச் சாகி, எளிதில் புரட்டிப் பார்க்கத் தக்கதாய் உதவின. ஆனால் தமிழில் மிக நெடுங்காலம் முன்னமே இவை ஓலையில் எழுதி வைக்கப்பட்டிருந்தன. புரட்டிப் பார்த்தல் எளிதன்று; ஆகவே புலவர்கள் இதை மனப்பாடம் செய்து வைத்தார்கள். தமிழ் நிகண்டு, செய்யுள் செய்பவர்களுக்கே பயன்பட்டது; ஆங்கிலத் திஸாரஸ் உரைநடை எழுதுபவர்களுக்கே பயன்பட்டது; பழ மொழி, 'காரிகை கற்றுக் கவிபாடுதல்' என்பது. இதன் பொருள் யாப்பிலக்கணப்படி பாட்டை அமைக்கத் தெரிதல்

* ஆங்கிலத்தில் டிக்ஷனரி என்றாலும் லெக்ஸிகன் என்றாலும் ஏறக்குறையப் பொருள் ஒன்றே. ஆனால் திஸாரஸ் என்பது வேறு; இச்சொல் களஞ்சியம் அல்லது பொக்கிஷம் என்று பொருள் படுவது

என்பது, இதை மாற்றி 'நிகண்டு கற்றுக் கவிபாடுதல்' என்று சொல்லலாம் போல் தெரிகிறது; நிகண்டுணர்வு தான் இடத்துக்குத் தகுந்த சொல்லைத் தேர்ந்து எடுத்துத் தருகிறது.

அடுத்துத் திஸாரஸின் பொருள் அமைப்பு முறையையும் நிகண்டின் தொகுதி முறையையும் ஒப்பிட்டுச் சில கருத்துக்களைச் சொல்லி இப்பகுதியை முடிப்போம். திஸாரஸ் நூலானது சொற்களைக் கருத்தை ஒட்டி ஆறு தொகுதிகளாய்ச் சொல்கிறது.

1. பண்புத் தொடர்புகள் : இருத்தல், சார்பு, அளவு, ஒழுங்கு, எண், காலம், மாற்றம், தோற்றம்.
2. இடம் : இடம், இட அளவு, வடிவம், இயக்கம்.
3. பொருள் : உலகு; உயிரில் பொருள்; உயிருள் பொருள் - பிராணன்; தன் மாத்திரைகள்.
4. புத்தி : கருத்து, கருத்தை உணர்தல்.
5. விருப்பு : தனி, சமூகம்; பொது, உடைமை.
6. பற்று : பொது; இன்பதுன்பம்; உயர்வுதாழ்வு; விருப்பு வெறுப்பு; நன்மை தீமை; சமய உணர்வு.

சிலவற்றைத் திவாகரர் பொருள் தொகுதிகளோடு ஒப்பு நோக்கும்போது, பின்வருமாறு அடக்கிக் கூறலாம்.

1. தெய்வப்பெயர் - 6;
2. மக்கள் - 3;
3. விலங்கு - 3;
4. மரம் - 3;
5. இடம் - 2;
6. பல்பொருள் - 5 முதலாயின.
7. செயற்கை வடிவம் - 1, 2 முதலாயின.
8. பண்பு - 6;
9. செயல் 5;
10. ஒலி - 4.

திஸாரஸில் கருத்துக்களையும் பொருளையும் நன்கு ஆராய்ந்து மொத்தம் 1000 தலைப்புக்களாகப் பிரித்து வைக்கப் பட்டுள்ளன. தமிழில் திவாகரத்தின் பின் யாரும் எந்த வளர்ச்சியையும் அமைக்கவில்லை. நாமதீப நிகண்டுடையார் ஒருவரே சிறிது விரிவுசெய்து காட்டியிருக்கிறார்.

### நிகண்டுக்குரிய யாப்பு

தமிழ் நிகண்டு எழுதுவதற்கு ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் ஆகிய யாப்புக்கள் முறையாகப் பயன்பட்டன என்பதை நிகண்டுகளின் வளர்ச்சியைக் காட்டும் அட்டவணையிலிருந்து நன்கு அறியலாம். திவாகரரும், பிங்கலரும் நூற்பாவில் நிகண்டு செய்தார்கள், பின்வந்தோர் ஏன் நூற்பாவை விட்டு வேறு யாப்பை மேற்கொண்டார்கள் என்பது ஒரு சுவையான

கேள்வி. இதற்குப் பொருத்தமான பல விடைகள் உள்ளன. எளி தாகச் சொல்லத்தக்கது. ஏனைய பாக்கள் எளிதாக மனப் பாடம் செய்ய உதவும் என்பது. ஆசிரியப்பா மனப்பாடத்திற்கு எளிதன்று. வெண்பா அதைவிட எளிதானது. எதுகையும், மோனையும், தளையும் பாவின் வடிவத்தை மனத்தில் நன்கு நிறுத்தும். கலித்துறையில் இம்மூன்றினுடன் எழுத்து வரை யறையும் சேர்ந்து உதவி புரிகின்றது. இந்த அம்சங்களோடு விருத்தப்பாவில் எளிதான ஓர் இசையும் பொருந்தியிருக்கிறது. நூற்பாவையும் விருத்தத்தையும் ஒருமுறை படித்தாலே போதும் இரண்டிற்கும் உள்ள வேற்றுமை நன்கு விளங்கும். மற்றொரு காரணம், மாறுதல் உலகத்து இயற்கையென்பது. இலக்கியம் தோன்றிய தொடக்க காலத்தில் இலக்கியம் காப்பியம் முதலிய எல்லா நூல்களும் ஆசிரியப்பாவில்தான் இயன்றிருந்தன. கலிப்பா விலும் வஞ்சிப்பாவிலும் இலக்கண நூல்கள் என்றுமே தோன்றியதில்லை. இவையிரண்டும் போக, காலப்போக்கில் வேறு வேறு யாப்புக்கள் இடம்பெற்றன. நிகண்டு நூலும் மாறிற்று. சொற்செட்டும், செறிவும் உள்ள பழைய நடை மாறி, எளிமையும் நெகிழ்ச்சியும் ஓட்டமும் உடைய புதிய தமிழ்ப் பாடல்கள் வளரலாயின. திவாகரம் - பிங்கலந்தையில் நூற்பா வாக இருந்த நிகண்டு நடை மாறி, ஐந்தாறு நூற்றாண்டுகளில் மண்டல புருடர் விருத்தப்பாவை மேற்கொண்டதற்கு இதுவே காரணம். மற்றுமொரு காரணம் சொல்லத்தக்கது. நிகண்டு செய்தார் அடிப்படையில் முன்னிருந்த நிகண்டுகளில் சொல் தொகுதிகளைப் பெரும்பான்மையும் ஏற்றுக் கொண்டு அப் படியே பெயர்த்தெழுதினார்கள். எழுதித் தம் காலத்து மொழி வளர்ச்சியினால் புதிதாகத் தோன்றிய செய்யுள் வழக்கிலும் உலக வழக்கிலும் கண்ட சொற்களைச் சேர்த்துக் கொண்டார் கள். இவ்வாறு சேர்த்த பொழுது பழைய யாப்பைப் பயன் படுத்தினால் பழம் பாடலை எடுத்து வைத்ததாகத் தோற்ற மளிக்குமேயன்றி, ஆசிரியர் புது நூல் செய்ததாகத் தெரியாது. ஆதலால் யாப்பில் புதுமைக்காக மட்டுமன்றி, கருத்தின் புதுமைக்காகவும் பின்வந்த ஆசிரியர் வேறு யாப்பை மேற் கொண்டு பாடினார்கள்.

ஓர் உதாரணத்தால் நன்கு விளக்கலாம். திவாகரர் பல் பொருள் கூட்டத்து ஒரு பெயர்த் தொகுதி என்ற பன்னிரண் டாவது தொகுதிக்குத் தோற்றுவாயாக ஒரு நூற்பா அமைத் திருக்கிறார்.

கூறியது கூறினும் குற்ற மில்லை
வேறொரு பொருளை விளக்கு மாயின்
முன்னரெய்த பதினொரு தொகுதி யுள்ளும்
வந்தன வாலொரு சொற்பல் பொருட்பெயர்த்
தொகுதியின் வந்த சொற்க ளென்னெனில்
ஆண்டுச் சிறப்பு வகைக்கெய் தியவை
ஈண்டுப் பொதுவகைக் கெய்தவும் படுமே.*

*யாப்பருங்கல விருத்தியுரைகாரர், கூறியது கூறினும் குற்ற மாகாது; என்னை, 'கூறியது கூறினும் குற்றமில்லை; வேறொரு பொருளை விளக்குமாயின்' என்று திவாகரச் சூத்திரத்தை அப் படியே எடுத்துக் காட்டுவதும் குறிப்பிடத்தக்கது.*

*பதினாலாம் நூற்றாண்டில் உரிச்சொல் நிகண்டு பாடிய காங்கேயர் இத்தொகுதி தொடங்கும் போது இதே கருத்தை வெண்பாவில் அமைக்கிறார்.*

கூறியதே கூறினும் குற்றமிலை நற்பொருள்
வேறுபெறி னென்றே விதித்தலால் – தேறுரைகொள்
ஏகமே வீடு மறுமையோ டிம்மையென்று
ஆகும் இருமை அறி.

*அடுத்து வந்து கயாதரர் இத்தொகுதியைப் பாடவில்லை. ஆகவே இக்கருத்தை அவர் நூலில் நாம் காண்பதற்கில்லை. ஆனால் அவருக்கும் பின்னால் பதினாறாம் நூற்றாண்டில் விருத்த யாப்பில் மண்டலபுருடர் நிகண்டு சூடாமணி பாடும்போது இப்பொருளையே தாமும் சொல்கிறார்.*

கூறிய கூறி னாலுங் குற்றமொன் றிலைஅ ருத்தம்
வேறுள தாயினென்று விதித்தலின் விரித்து முன்னம்
ஊறிலாச் சிறப்பு வர்க்கம் உரைத்திவட் பொதுவர்க்கத்தில்
ஏறிய ஊழுஞ் சொல்வாம்; ஏகமே வீடு பேறு.

*யாப்பு மாறுவதிலேயே ஒரு சுவை இருப்பதனால் ஒவ்வொர் ஆசிரியரும் யாப்பை மாற்றிக் கொண்டார்கள்; அம்மாறுதல்*

---

* *இதைப் பின்பற்றியே பிங்கலரும் செய்திருத்தல் வேண்டும். ஆனால் சிவன் பிள்ளை அச்சிட்ட பிங்கலந்தையில் இது காணப்படவில்லை. அந்நிகண்டில் ஐயர் வகை என்ற பிரிவும் பல்பொருட் கூட்டத்து ஒரு பெயர் வகை என்று இருக்க வேண்டிய ஒரு பிரிவும் கலந்து குழம்பியுள்ளன என்பதை எமது பத்தாம் நூற்றாண்டு வரலாற்றில் விளங்கக் காட்டியிருக்கிறோம் - அத்தியாயம் நான்கு பார்க்க.*

ஆசிரியம், வெண்பா, கலித்துறை, விருத்தம் என்ற முறையில் காலத்தில் இடம்பெற்றது.

முதல் ஆறு நிகண்டுகளில் மட்டும் ஏற்பட்ட யாப்பு வேறு பாட்டை ஓர் அட்டவணையாகப் பின்வருமாறு காட்டலாம்.

| நிகண்டுகளின் யாப்பு வளர்ச்சி | | | | |
|---|---|---|---|---|
| எண் | நிகண்டு | ஆசிரியர் | யாப்பு | நூற்றாண்டு |
| 1. | திவாகரம் | திவாகரர் | நூற்பா | 9 |
| 2. | பிங்கலத்தை | பிங்கலர் | நூற்பா | 10 |
| 3. | உரிச் சொல் | காங்கேயர் | வெண்பா | 14 |
| 4. | கயாதரம் | கயாதரர் | கட்டளைக் கலித்துறை | 15 |
| 5. | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | விருத்தம் | 16 |
| 6. | அகராதி நிகண்டு | ரேவணசிந்தர் | நூற்பா | 16 |

நூற்பா வெண்பா கலித்துறை விருத்தம் என்ற யாப்பு வளர்ச்சி நிகண்டில் மட்டுமன்றி, பாட்டியல் உவமான சங்கிரகம் முதலிய நூற்பிரிவுகளிலும் காணப்படுகிறது.

## திவாகரருக்கு முந்திய நிகண்டுக் குறிப்புக்கள்

திவாகரமே இன்றுள்ள முதல் நிகண்டாயினும், இவர் நூல் செய்வதற்கு முன்னமேயே, சொற்பொருளும் சொற்களின் தொகுதியும் பற்றிய கருத்துக்கள் நூல்களிலும் உரைகளிலும் காணப்படுகின்றன. இக்குறிப்புக்கள் அனைத்தையும் தொகுத் தறிவது வரலாற்றுணர்ச்சிக்கு இன்றியமையாததாகும். அதுபற்றி, அத்தகைய குறிப்புக்கள் அனைத்தையும் இங்கு காண்கிறோம்.

### 1. நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்

இவர் நற்றிணையுள் 382ஆம் பாடல் - நெய்தல் பாடியவர். நற்றிணை பதிப்பித்த சிறந்த புலமை படைத்த பின்னத்தூர் நாராயணசாமி ஐயர், பாடினோர் வரலாற்றில் இவ்வாசிரியர் பற்றி எழுதியுள்ளது.

'மான்கொம்பை நிமிர்த்திக் கைக்கோலாகக் கொண்டமை யால் இவர் கலைக்கோட்டுத் தண்டனெனப்பட்டார். இவர் இயற்பெயர் புலப்படவில்லை. நிகண்டன் என்ற அடைமொழி

யால் இவர் தமிழில் நிகண்டொன்று செய்தாரென்று தெரிகிறது; அதுவே கலைக்கோட்டுத் தண்டெனப்படுவது. அதனை இடு குறிப் பெயரென்று கொண்டார் களவியலுரைகாரரும் நன்னூல் விருத்தியுரைகாரரும்(சூத்.49); அஃது இதுகாறும் வெளிவந் திலது.'

இது மிகவும் விசித்திரமான விளக்கம். நிகண்டன் என்ற அடைமொழி விளக்கமும் கலைக்கோட்டுத் தண்டு விளக்கமும் பொருந்தாதவை. நிகண்டன் நிகண்டு நூல் செய்தமையால் வந்த பெயர் அன்று. நிர்க்கந்தன் என்ற வடசொல் வடிவம் நிகண்டன் என்று வரும். நிர்க்கந்தன் கந்தமில்லாதவன், அருகக் கடவுள். கந்தம் ஐந்து, உருவம் வேதனை குறிப்பு பாவனை விஞ்ஞானம்; இவை ஒவ்வொன்றும் பல பிரிவுகள். 'கந்தமைந்தும் அறு முத்தி' என்பது சிவப்பிரகாசம் (50). இது நிகண்டவாத மெனப்படும். நிகண்ட வாதத்தை மணிமேகலை குறிப்பிடுகிறது. (27 - 167) அருகமதத்துள் நிகண்டவாதம் ஆசீவகம் என்று இரு பிரிவுகள் என்று சொல்லி, இரண்டையும் பல பாடல்களில் சித்தியார் பரபக்கம் மறுப்புக் கூறுகிறது. ஆகவே இங்கு நிகண் டன் என்பது நிகண்டவாதப் பிரிவைச் சேர்ந்த சைனன் என்று பொருள்படுமேயன்றி, நிகண்டு நூல் செய்தவன் என்று பொருள் படாது.

## 2. நிகண்டு நூல் கலைக்கோட்டுத் தண்டு

இறையனார் களவியலுரை நிகண்டைக் குறிப்பிடுகிறது. நூல் பெயர் பெறும் முறைகளைச் சொல்லி வரும்போது சொல்லுகிறது. 1. இடுகுறியாற் பெயர் பெற்றன நிகண்டு நூல் கலைக்கோட்டுத் தண்டு என இவை. இவை என்ற பன்மையால், இது குறிப்பிடுவது ஒன்றுக்கு மேற்பட்ட நூல்கள். நமசிவாய முதலியார் பதிப்பில் நிகண்டு, நூல், கலைக்கோட்டுத் தண்டு என நிறுத்தற் குறிகள் பெய்து மூன்றாகக் காட்டப்பட்டுள்ளது. இப்பெயரைக் குறித்துச் சொல்லும் மயிலை நாதர் நன்னூற் பாயிர உரையில் நிகண்டு கலைக் கோட்டுத்தண்டு முதலாயின என்று மட்டும் சொல்லுகிறார். எனவே, இங்கு பொருள் நிகண்டு கலைக் கோட்டுத்தண்டு என்ற இரண்டு மட்டுமே என்று தெரிகிறது. நிகண்டாகிய கலைக்கோட்டுத் தண்டு அல்லது நிகண்டு நூலாகிய கலைக் கோட்டுத் தண்டு என்று கொள்ள வேண்டுமா என்பது விளங்கவில்லை. களவியலுரைகாரரும் மயிலைநாதரும், நிகண்டன் கலைக் கோட்டுத் தண்டன் என்ற

பெயரைப் பார்த்து இவ்விதம் கொள்கிறார்களா, ஒருகால் இப்படி ஒரு நூலை இவர்கள் அறிந்து கொள்ளவில்லையா என்றெல்லாம் ஐயுற வேண்டியிருக்கிறது. களவியற் கூற்றைப் பின்பற்றி மயிலைநாதரும் சங்கர நமசிவாயரும் அப்படியே எடுத்து வைத்துக் கொள்கிறார்கள். மேலும், களவியலுரைகாரர் முன்னும் பின்னும் சொல்லியவற்றால், சொல்லியது வடநூற் பெயர் அன்று, தமிழ் நூலே என்பதும் தெரிகிறது: செய்தானாற் பெயர் பெற்றன; அகத்தியம், தொல்காப்பியம் என இவை; செய்வித்தானாற் பெயர் பெற்றன சாதவாகனம் இளந்திரையம் என இவை; இடுகுறியாற் பெயர் பெற்றன: நிகண்டு நூல், கலைக்கோட்டுத் தண்டு என இவை; அளவினாற் பெயர் பெற்றது பன்னிரு படலம் என்பது.

இளந்திரையம் கலைக் கோட்டுத் தண்டு என்ற பெயர்கள் தமிழ்ச் சொற்கள் ஆதலால், உடன் வரும் சொற்களாகிய சாதவாகனம் நிகண்டு என்பனவும் தமிழ் நூல்களையே குறிக்கின்றன என்பதும் தெளிவு. எவ்வாறு கருதினும், நிகண்டு நூல் கலைக் கோட்டுத் தண்டு என்பதற்கு விளக்கமில்லை. நாம் கருதிவரும் நிகண்டு என்று இவர்கள் கூறுவார்களாயின் இது, வடசொல், இடுகுறி என்பது பொருந்தாது.

### 3. யாப்பருங்கல விருத்திக் குறிப்புக்கள் சில

யாப்பருங்கல விருத்திகாரரர், சொற்கள் நான்கு வகைய பெயர்ச்சொல், தொழிற்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்று கூறி, நான்கு வாய்ப்பியச் சூத்திரங்களைக் காட்டி மேலும் எழுதுகிறார். 'இனி யொருசாராசிரியர் இயற்சொல், திரிசொல், திசைச்சொல் என்று உரைப்பர். அவற்றுள் திரிசொற் சில வருமாறு:

> பைஞீலம் பைதிரம் விரற்றலை யோர்பித்தை
> பூழிலவம பீளை துருவையனல் தொடுப்பகை பிறடி
> கருவுள நவிரல் வசிதலையால் நிவப்பு
> செப்பிய பிறவுந் திரிசொல் லாகும்.

ஆடு, எருது, விடை, ஏறு, மோத்தை, சேவல், ஒருத்தல், கலை, களிறு, ஏற்றை, கடுவன், கூரன், பகடு என இவை ஆண் பெயர்; மகடு, ஆ, பிடி, குமரி, கன்னி, பிணவு, முடுவல் என்றின்னவை பெண் பெயர்; குழவி, மகவு, மறி, குருளை என்று இன்னவை இளமைக்கு எய்திய பெயர்.

பெயரிவை மும்மையும் பிறவுமிப் பொருட்கண்
இயைபெதி ரியலு மென்றுணர்ந் தியையக்
குறியொடு காரணங் கொளவகுத் தொழிந்தது
அறிய உரைப்போன் ஆசிரி யன்னே.

என இவற்றின் விரிவறிந்து வந்துழிக் காண்க. இடைச்சொல்லும் உரிச்சொல்லும் தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன் மொழிவரி முதலியவற்றுட் காண்க'. இங்கு விருத்தி யுரைகாரர் நான்கு பொருள்கள் சொல்லுகிறார். 1. திரிசொற்கள் 2. விலங்குகளின் ஆண் பெண் இளமைப் பெயர் 3. ஆசிரியன் தகுதி 4. இடைச்சொல் உரிச்சொல் கூறும் நூல்கள். நிகண்டை ஆராயும் இடத்து இவை பற்றி இங்கு சில கூறத்தக்கன.

பைஞ்ஞீலம் என்று இங்குக் காட்டிய நூற்பாவானது 17 திரிசொற்களைக் கூறுகிறது. இந்நூற்பா ஒரு இலக்கண நூலுக் குரியது என்பது வெளிப்படை. இது நிகண்டு நூலாகவும் இருக்கலாம்.

விலங்குகளின் ஆண் பெண் இளமைப் பெயர்; இவை ஒரு நிகண்டிலிருந்து எடுத்தவை போலவே தோன்றுகின்றன. ஆசிரியர் இவ்வாறு நிகண்டை எடுத்து எளிதாக எழுதிக் கொண்டே போகி றார். பின்னால் நேரிசை என்ற சொல் பற்றிய குறிப்பையும் பார்க்க.

ஆசிரியன் தகுதி - நமக்கு இங்கு தொடர்பில்லை.

தக்காணியம் முதலான நூல்கள், நிகண்டு என்பதைக் குறிப்பிட வழங்கிய பழமையான ஒரு சொல் உரிச்சொல், என்பது. இதைத் தொல்காப்பியம், தக்காணியம், அவிநயம், நல்லாறன், மொழிவரி முதலியவற்றுள் காண்க என்று உரைக்காரர் எழுதுகிறார். இங்குக் கூறிய நான்கு நூல்களுள், தொல்காப்பியம் நன்கு தெரிந்தது. அவிநய மென்பது அவிநயனார் செய்தது, இறந்து போன நூல்; எழுத்து, சொல், யாப்பு, பாட்டியல் என்ற பகுதிகள் இதனுள் இருந்தமை தெரிகிறது. நல்லாறன் மொழி வரியை இவ்விருத்திகாரர் வேறிடங்களிலும் காட்டுகிறார். அதுவும் யாப்பதிகாரம் வரை கூறுகின்ற நூல் என்று அங்குள்ள மேற்கோள் பாடல்களால் தெரிகிறது. தக்காணியத்தைப் பற்றி வேறெதுவும் தெரியவில்லை. எனினும், வடமொழி நூற்களில் காணப்படும் ஒரு கருத்துச் சிந்திக்கத்தக்கது. அணியிலக்கணம் (அலங்கார சாஸ்திரம்) பற்றிய பரத சாஸ்திரப் பகுதியில் உரை யாசிரியர் பிறமொழி அணியிலக்கணங்கள் அனைத்தையும்

குறிப்பிடுகிறார். தமிழைக் குறிப்பிடவில்லை. ஆனால் தாஷிணாத்யம், என்று ஒரு நூலைக் குறிப்பிடுகிறார். இது என்ன மொழி என்று அவர் சொல்லவில்லை. ஒரு கால் இங்குக் காட்டிய தக்காணியம் என்ற நூலாயிருக்கலாமோ என்று ஐயப்பட இடமுண்டு. அங்ஙனமாயின் இந்நூல் பரதருடைய சாஸ்திரத்துக்கு முற்பட்டதாகும். பரதர் நூல் தொல்காப்பியத்தின் பின் வந்தது என்றும் சொல்வர். அங்ஙனமாயின் தக்காணியம் தொல்காப்பியத்துக்கு உடன்கால நூலாகலாம்; ஆகவே மற்ற அவிநயம் நல்லாறன் மொழிவரி இரண்டும் தொல்காப்பியத்தின் உடன் கால நூலாதல் கூடும்.

*கலிப்பா என்பதன் பொருளைக் கூறுமிடத்து, சீர் பொருளிசைகளாலெழுச்சியும், பொலிவும், கடுப்பும், உடைத்தாகலின் கலி என்பதும் காரணக்குறி (சூ. 55 உரை)*

**கலித்தல் கன்றல் கஞறல் பம்மல்**
**எழுச்சியும் பொலிவும் எய்தும் பெயரே.**

**கம்பலை சும்மை யழுங்கல் கலிமுழக்**
**கென்றிவை யெல்லாம் அரவப் பெயரே.**

எனவும் சொன்னாராகலின், இந்த இரு நூற்பாக்களையும் பார்க்கும்போது, இவையும், அமைப்பாலும் பொருளாலும் ஒரு நிகண்டுக்குரியனவாக இருக்கலாம் எனத் தெரிகிறது.

### 4. யாப்பருங்கல விருத்திக் குறிப்பு; நேரிசை என்ற சொல்

குறள் சிந்து முதலிய வெண்பாப் பெயர்கள் காரணக் குறியால் பெயர் பெறும் என்பதைச் சொல்லிவிட்டு, இவ்விருத்திக் காரர், நேர் என்பது மாறாதற் கண்ணும், ஒத்தற் கண்ணும் தனிமைக் கண்ணும், மிகுதிக் கண்ணும், நுட்பத்தின் கண்ணும், சமனாதற் கண்ணும், உடம்படுதற் கண்ணும், பாதிக் கண்ணும், தலைப்பாட்டின் கண்ணும், நிலைப்பாட்டின் கண்ணும். கொடைக் கண்ணும் நிகழும். என்னை? "நேர்ந்தாரரணம் பல கடந்த வடுப்போர்ச் செழியன்" எனவும், "நேர்பொருணிறுத்தனன்" எனவும், "நாற்சீர் கொண்டது நேரடி" எனவும், "நேரின மணியை நிரல்படவைத்தாங்கு" எனவும், "நேரசை" எனவும், "நேரே நல்லன நேரே செல்வன எனவும்", "நேர் நூல் நேராடை" எனவும், "நாற்சீர் கொண்டது நேரடி எனவும்", "நெட்டெழுத் தானேரெப்படும்" எனவும் "நேர்போகி" எனவும், "நேர்பட்ட விரண்டு படையும்" எனவும், "நேர்ந்திரந்தன" எனவும், "நேராமற் கற்பது கல்வியன்றே" எனவும், "நேரா நோன்பு" எனவும்,

"நேராநெஞ்சத்தா னட்டானல்லன்" எனவும், "நேரிழை மகளிர்" எனவும் வழங்குவராகலின் என்றெழுதுகிறார்.

இசை என்பது ஓசைக் கண்ணும், சொல்லின் கண்ணும், புகழின் கண்ணும் நிகழும்; என்னை? "இசையெலாமிசைய", "இசையெலாமார்ப்ப" எனவும்,

> நுவற்சி நொடியே கிளவி யிசைத்தல்
> புகற்சி யனைய சொல்லின் பாலே

எனவும்

> இசையிற்பெரியதோ ரெச்சமில்லை

எனவுஞ் சொல்லப் படுதலின். இனியொரு சாராசிரியர் 'இயை' என்பதனை 'இசை' என்று வழங்குவரெனக் கொள்க.

நேரிசை வெண்பா, பெயர் பெற்றமையைக் குறிப்பிடுபவர். நேர் இசை என்ற இரு சொற்களின் பொருளைக் கூறுகிறார், கூறுகின்ற பொருள் ஒரு நிகண்டிலிருந்து எடுத்து விளக்குவது போலத் தெரிகிறது. நேர் என்பது மாறாதற் கண்ணும் எனவும் சொல்லப்படுதலின் - என்று சொல்லி மேலும் இசைக்குப் பொருள் விளக்கம் எழுதிக் கொண்டு போகிறார். நேர் என்ற சொல்லுக்கு இவர் சொல்லியுள்ள பொருள்கள் பதினொன்று. பதினொன்றுக்கும் பண்டை நூல் மேற்கோள் தந்திருக்கிறார். மேற்கோள் தந்த சிலவே இடம் விளங்குகின்றன; சில விளங்க வில்லை. இவர் கூறுகின்ற முறையைப் பார்க்கும் போது, முந்தைய நூல் ஒன்றைத் தழுவி அல்லது எடுத்துச் சொல்வது போல் உள்ளது. அன்றியும் 'நுவற்சி நொடியே' என்று இவர் காட்டும் நூற்பாவும் காண்க. இவர் சொல்லும் பொருள்களும் இந்நூற் பாவும் இருக்கத் தக்க இடம், இவருக்கு முன்னிருந்த திவாகரம் பிங்கலம் என்ற இரு நிகண்டுகளே. இந்நூற்பா இவ்விரு நிகண்டு களிலும் இல்லை. நேர் என்ற சொற்பொருள், திவாகரம் பதி னொன்றாவது பல்பொருட் பெயர்த் தொகுதியுள் காணப்படுகிறது.

> உடன்படல் உவமை ஒத்தல் நுட்பம்
> சமன் பாதி மிகுதி தலைப்பாடு தனிமைஎன
> நிகழ்ந்த ஒன்பானும் நேரென் கிளவி

என்பது சூத்திரம். இங்கு விருத்தி கூறும் பொருள்களில் மாறு நிலைப்பாடு கொடை என்ற மூன்றும் இல்லை; உவமை என்பது அதிகமாக உள்ளது. இந்த நிலைமையைப் பார்க்கும் போது, இவர் தம் கருத்துக்களைத் திவாகரத்திலிருந்து எடுக்கவில்லை, வேறொரு நிகண்டிலிருந்து எடுத்தார் என்றே கருதத் தோன்றுகிறது.

## 5. பாரத வெண்பாக் குறிப்பு : அக்குரோணி

*பெருந்தேவனார் பாரத வெண்பா 398-399ஆம் பாடல்கள் அக்குரோணி சேனையின் அளவைக் கூறுகின்றன. இவற்றின் பின், ஆசிரியர் தாமே செய்த உரைநடைப் பகுதியில், அக்கு ரோணியை உரைக்கும் நூற்பாக்களைத் தருகிறார்.*

ஒரு பெருந் தேரும் இரு பெருங் களிறும்
துரகம் நான்கும் படைஞர் ஐவரும்
கொண்டது பதாதி யென்ப தாகும்
பதாதி முறைவழு வாமன் மும் மடங்கு
கொண்டது சேனை என்ப தாமே
ஆங்கது மும்முறை கொண்டது குன்மம்
குன்மம் மும்முறை கொண்டது அனீகினி
அனீகினி ஐம்பதிற் றிரட்டி யொடாயிரம்
கொண்டது அக்குரோணி யென்ன மொழிந்தான்
மூவகை உலகமும் முறைப்பட வேத
பாரதம் பகர்ந்த பராசரன் மகனே

*என்றிவ்வகை சொல்லப்பட்ட அக்குரோணியால் வந்த சங்கை யினை யிவ்வாசிரியரிடத்துக் கண்டு கொள்வது.**

இங்குக் கூறியுள்ள அக்குரோணியின் பொருளை இங்கு ஆராய வேண்டுவதில்லை; நூற்பாக்களை மட்டுமே ஆராய் வோம். இங்கு வந்துள்ள நூற்பாக்களில், முதல் மூன்று வரிகளை மட்டும், திவாகரத்தின் இறுதியாகிய 12 பல்பொருட் கூட்டத் தொரு பெயர்த் தொகுதியின் முடிவில் எடுத்துரைத்துப் பிற பொருள்களைத் திவாகரர் வேறு வகையாகச் சொல்வார்.

பதாதி மும்மடி சேனா முகமே
சேனாமுக மும்மடி தானாம் குமுதம்
குமுத மும்மடி கொண்டது கணமே
கணமும் மடியின் பெயர்வா கினியே
வாகினி மும்மடி ஆகும் பிரதனை
பிரதனை மும்மடி ஆகும் சமூகம்
சமூக மும்மடி அனீக மாகும்
அனீகம்ஐ யிருமடி அக்கு ரோணி

இதற்கும் மேற்கோட் பாடல்களுக்கும் நிரம்ப வேறுபாடு காணப் படுகிறது. பாரத மேற்கோளைவிட இதில் விரிவு அதிகம் உள்ளது.

---

* பண்டித அ. கோபாலையர் பதிப்பு 1925 காணத்தக்கது. பதாதி வகைப் பெயர்: ஒரு பெருங்களிறும் ஒருபெருந்தேரும், புரவி நான்கும் படைஞர் ஐம்பதின்மரும், பதாதி யென்று பகரப்படுமே.

அக்குரோணி முதலான அளவுகளிலெல்லாம் தமிழ் மன்னரும் தமிழர் படைகளும் ஓங்கி இருந்த அக்காலத்தில் நிகண்டிற் சொல்லுதற்குரிய பொருள் ஆகி இருந்தன. இம்மேற்கோட் சூத்திரங்களும் ஒரு நிகண்டுக்குரியனவாயிருக்கும்; பெருந் தேவனார் காலம் கி.பி. 850க்கு முன் ஆகும்; திவாகரர் காலம் 880க்குப் பின் என்று பின்னால் காட்டுவோம். ஆகவே பெருந் தேவனார் காட்டும் நூற்பாக்கள் பழையதொரு நிகண்டுக்குரியன வாயிருக்கும். அதிலிருந்து முதல் நான்கு அடிகளை மட்டும் திவாகரர் எடுத்தமைத்துக் கொண்டார் என்று கருதுவது பொருத்தம். பாரத மேற்கோளில், இவ்வாறு அக்குரோணியின் அளவுகளை வியாசர் கூறியுள்ளதாகக் குறிப்பிட்டது காணத்தக்கது.

## 6. இளம்பூரணர் உரைக் குறிப்பு

தொல்காப்பியம் சொல்லதிகாரம் 390ஆம் சூத்திரவுரை யில், 'அருமை, இருமை, கருமை, சேண்மை என்னும் தொடக்கத் தனவற்றைப் பிறநூலார் இருமை, பெருமையும் கருமையும் செய்யும் என்றும், தொன்றென் கிளவி தொழிற்பயில் வாகும் என்றும் எடுத்தோதுப என்பதும் அது' என்றெழுதுகிறார். இத்தொடர்கள் ஒரு நிகண்டு போல் தெரிகின்றன.

இவை இவருக்கு முன்வந்த திவாகரம் பிங்கல நிகண்டு களிற் காணப்படவில்லை. ஆகவே பிறிதொரு நிகண்டு போன்ற நூல் வழக்கிலிருந்தது என்று நாம் கருதுகிறோம். அது யாது என்பது விளங்கவில்லை.

## 7. திவாகர வெண்பா வொன்று

> வெட்சி நிரை கவர்தல்; மீட்டல் கரந்தையாம்;
> வட்கார் மேற் செல்வது வஞ்சியாம்; – உட்காது
> எதிரூன்றல் காஞ்சி; எயில் காத்தல் நொச்சி;
> அது வளைத்தல் ஆகும் உழிஞை; – அதிரப்
> பொருவது தும்பையாம்; போர்க் களத்து மிக்கார்
> செருவென் றது வாகை யாம்.

என்ற பாடல் பஃறொடை வெண்பா; இது வெட்சி முதல் வாகை வரையுள்ள புறத்திணைப் பிரிவுகள் இன்னவை என்று குறிப்பிடுகின்றது. வீரசோழிய உரையில் இது காணப்படுகிறது. அன்றி, அதற்கு முன்னுள்ள பிங்கல நிகண்டிலும், திவாகர நிகண்டிலும் இது காணப்படுகிறது. நச்சினார்க்கினியர் இதைக் குறிப்பிடுகிறார். முழுமையும் நூற்பாவாலான திவாகர நிகண்டில்

இந்த வெண்பாவுக்கு முறையான இடம் இல்லை. ஆதலால், இது முன்னமே இருந்த ஒரு தனிப்பாடல் அல்லது வேறு ஒரு நிகண்டின் பகுதி என்றே கருதத் தோன்றுகிறது. திவாகரத்தின் இவ்வெண்பா தவிர வேறு யாப்புடைய பாடல்கள் இல்லை.*

## 8. எண்வகை மணம் கூறும் நூற்பா

எண்வகை மணம் என்பதற்கு இறையனார் களவியல் உரையும் தொல்காப்பிய இளம்பூரணர் உரையும் ஒரு நூற்பாவை மேற்கோள் தருகின்றன.

> அறநிலை ஒப்பு பொருள்கோள் தெய்வம்
> யாழோர் கூட்டம் அரும்பொருள் வினையே
> இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய
> மறையோர் மன்றல் எட்டவை: அவற்றுள்
> துறையமை நல்யாழ்த் துணைமையோர் புணர்ப்பிதன்
> பொருண்மை யென்மனார் புலமை யோரே.

இந்த நூற்பாவில் மணங்கள் அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், யாழோர் கூட்டம், அரும்பொருள் வினை, இராக்கதம், பேய்நிலை என்று எட்டுத் தமிழ்ப் பெயர்களால் சொல்லப்படு கின்றன. (இராக்கதம் தெய்வம் மட்டும் வடசொல்) களவியல் உரை இந்நூற்பாவைத் தந்த போதிலும் கூட, விளக்கம் எழுதும் இடத்து பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தர்வம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்ற எட்டு வடமொழிப் பெயர்களால் விளக்கம் உரைத்து, உடன் தமிழ்ப்பெயரையும் தருகிறது. இளம்பூரணர் உரையும் தொடக்கத்தில் பிரமம் முதலான வடமொழிப் பெயர்களைச் சொல்லி விளக்கத்தை யும் தந்து, பின்னர் இந்நூற்பாவையும் எழுதி, என்பதனாலும் கொள்க என்று முடிக்கிறது. திவாகரமோ தமிழ்ப் பெயர் களைச் சொல்லவில்லை.

> பிரமம் பிரசா பத்தியம் ஆரிடம்
> தெய்வம் காந்தர்வம் ஆசுரம் இராக்கதம்
> பைசாசம் என்னப் பகரும் எண்மணமே

என்று வடமொழிப் பெயர்களையே சொல்லுகிறது. திவாகரத் துக்குச் சற்று முந்தியதாகக் கருதப்படுகின்ற தமிழ்நெறி விளக்கம்

---

* பிங்கலத்தில் இப்பஃறொடை வெண்பாவும் வேறு நான்கு வெண்பாக்களும் உள்ளன.

என்ற நூல், இந்த நூற்பாவைத் தராதபோதிலும் கூட, தமிழ்ப் பெயர்களையே சொல்லி விளக்கம் தருகிறது. அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம் அரும்பொருள் நிலை, வலிநிலை, பேய்நிலை, கந்திருவம் என்று பெயர் சொல்லுகிறது. இங்கு இராக்கதம் என்பதை இவர் வலிநிலை என்று தமிழாகச் சொல்லுகிறார்; யாழோர் கூட்டம் என்ற தமிழ்ச் சொல்லைக் கந்திருவம் என்ற வடசொல்லால் குறிப்பிடுகிறார். இருப்பினும், மேற்காட்டிய நூற்பாவைக் கருத்தில் இருத்தியே இவர் எழுது வது நன்கு விளங்கும். இந்நூற்பாவைத் திருவிருத்த வியாக்கி யானத்தில் வாதிகேசரி அழகிய மணவாள சீயர் தருகிறார்.

இவ்வாறு பல்வேறு ஆசிரியர்கள் இந்நூற்பாவை மேற் கோள் தரும்போது, இது ஒரு பழைய நிகண்டு நூலாய் இருக் கலாமோ என்ற எண்ணம் உதிக்கிறது. திவாகரத்தில் இது இல்லை; ஆதலால் முற்பட்ட நிகண்டு என்பது ஐயமில்லை. அன்றியும், நிகண்டு என்று இடுகுறியால் பெயர் பெற்ற நூல் ஒன்றைக் குறிப்பிடுகின்ற களவியல் உரைகாரர் இதைத் தருவ தால், இதுவும் அவர் காலத்துக்கு (அதாவது அவ்வுரை செய்யப் பட்ட 8 ஆம் நூற்றாண்டுக்கு) முற்பட்ட ஒரு நிகண்டு நூலுக்கு உரியதாயிருக்கும் என்று நாம் கருதலாம். சிலப்பதிகாரம் அரங்கேற்றுக் காதையுரையில், தாழ்குழற் றண்ணுமை என்ற தொடருக்கு அடியார்க்கு நல்லார் எழுதிய உரையில், தோலாற் செய்யப்பட்ட கருவிகள் 31 கூறி, 'பேரிகை படகம்' என்று தொடங்கும் ஒரு நூற்பாவைத் தருகிறார். (இதை 255ஆம் பக்கத்தில் காணலாம்.) இந்நூற்பாவும் இங்கு கூறிய பழைய நிகண்டுக்குரியதாகலாம்.

இதுவரை கூறிய பல கருத்துக்களையும் ஒரு தொகுப்பாக நோக்கும் போது, களவியல் உரை குறிப்பிடுகின்ற நிகண்டு ஒன்று உண்மையாகவே இருந்தது என்று கொள்ள வேண்டியிருக்கிறது.

### இலக்கண நூலெழுச்சி

இத்தனையும் ஒரு தொகுப்பாய்க் கருதும் போது, பொருத்த மான ஒரே ஒரு முடிவு புலப்படுகிறது, எமது எட்டாம் நூற் றாண்டு வரலாற்றில், இலக்கண நூல் வளர்ச்சி பற்றிய பல செய்தி களைக் கூறுகிறோம். ஏழாம் நூற்றாண்டின் சம்பந்தராலும் பிறராலும் இயல் தமிழுக்கும், இசைத் தமிழுக்கும் விளைந்த ஒப்பற்ற ஆக்கம் காரணமாக, அடுத்த காலமாகிய எட்டாம்

நூற்றாண்டில் இலக்கணத் துறையில் ஒரு பெருங் கிளர்ச்சியும் எழுச்சியும் ஏற்பட்டன. பலதுறை அறிஞர்களான இலக்கணப் புலவர்களைத் தம் மாணாக்கராய்க் கொண்ட ஒரு பேராசிரியர் அகத்தியர் என்ற பெயர் படைத்தவராய் வாழ்ந்தார். இவர் பாட்டியல் முதலான பல துறைப் புது இலக்கண நூல்கள் செய்தார். இவருடைய மாணாக்கர் பலர்; தொல்காப்பியர் முதலான பண்டைப் பெயர்களையே இவர்கள் தரித்திருந்தனர். இத்தொல் காப்பியரே ஒரு பாட்டியல் செய்தார். இத்தொல்காப்பியரும் பிற பதினொரு புலவரும் சேர்ந்து பன்னிரு படலம் என்ற புறப்பொருள் இலக்கண நூல் பாடினார்கள். புதுப் பாட்டியல் நூல்கள் எண்ணற்றன தோன்றின; யாப்பிலக்கண நூல்கள் தோன்றின. அணி இயல் என்ற பெயரால் முதன்முதல் ஓர் அணியிலக்கண நூலும் தோன்றிற்று. இதுவரை கருதி வந்த பழைய நிகண்டு நூலொன்றுந் தோன்றிற்று. பரத சேனாபதியம் என்ற இசை நூலுந் தோன்றி அடுத்த நூற்றாண்டில் பஞ்ச மரபு தோன்றுவதற்கு வழிகாட்டிற்று. மதிவாணனார் நாடகத் தமிழ் நூல் என்ற நாடகத் தமிழிலக்கண நூலும் இக்காலம் தோன் றிற்று. இறையனார் களவியல் என்ற அகப்பொருள் இலக்கண நூலும், அதன் உரையும் இக்காலம் தோன்றின. இவையன்றி அவிநயம், இந்திர காளியம் என்ற இரு பேரிலக்கண நூல்கள் தோன்றியிருந்தன. இந்திரகாளியம் சிறப்பான இசைத்தமிழ் இலக்கண நூல், புது நெறியை வகுத்துத் தந்திருக்கிறது. அன்றி, அவிநயம் என்ற மற்றொரு பேரிலக்கண நூலை அவிநயனார் செய்திருக்கிறார். இது எழுத்து, சொல், பொருள், யாப்பு, பாட்டியல் ஆகிய பொருள்களைச் சொல்வது. வரலாற்றில் காணும்போது அகத்தியனார், அவிநயனார், இந்திரகாளியம் செய்த யாமளேந்திரர் ஆகிய மூவரும் வேறான மூன்று இலக்கண நெறிகளை வகுத்துக் காட்டினர் என்று திட்டமாய்த் தெரிகிறது.

மேற்குறித்தபடி அவ்வெட்டாம் நூற்றாண்டில் இசைத் தமிழில் எல்லாப் பிரிவுகள் பற்றியும் - எழுத்து, சொல், அகப் பொருள், புறப்பொருள், யாப்பு, அணி, நிகண்டு, பாட்டியல் (கூற்றியல், திணை நூல்) ஆகிய பொருள்கள் பற்றியும் - இசைத் தமிழ் பற்றியும், நாடகத்தமிழ் பற்றியும், புது நூல்கள் எழுந் திருந்தன என்பதைத் தெளிவாய்க் காண்கிறோம். இப்பிரிவு களில் நிகண்டும் ஒரு புதுப்பிரிவு; முக்கியமான பிரிவு; பின்னால் பெரிதும் வளர்ந்தது.

## திவாகரம்

**முன்னுரை**

தமிழ்மொழியின் ஆதி நிகண்டு, திவாகரமாகும்.* இந்த நூலுக்கு இதுவரை நல்ல பதிப்பு வராதது பெரும் குறை. திவாகரரைப் பொறுத்த வரையில் எடுத்த இடம் எல்லாம் குழப்பமும் தெளிவின்மையும். நூல் முழுமையும், பன்னிரண்டு தொகுதிகளும் குறைவின்றிக் கிடைக்கின்றன. கிடைத்துங் கூட இக்குழப்பம் நூல் செய்த ஆசிரியர் திவாகரர்தானா? இப்படி ஒருவர் இருந்தாரா? இவருடைய காலம் யாது? இன்று அச்சில் உள்ளபடி நூல் ஏட்டில் உள்ளதா என்பன எல்லாம் ஐயத்திற் குரிய இடமாக ஆராய்ச்சியாளர் கருதுகிறார்கள். இதன் 11ஆம் தொகுதி மட்டும் ஏட்டில் உள்ளபடி அச்சிடப் பெறவில்லை. முதல் முதல் அச்சிட்ட தாண்டவராய முதலியார் ஒரு பெரும் மாற்றத்தைச் செய்து விட்டார். அவர் காலத்தில் நூல்களை அச்சிடும் முறை பழக்கத்துக்கு வந்துவிட்டது. ஆகவே அச்சிட்ட நூலைப் பயிலுவதற்கு வசதியாக இருக்கும் பொருட்டு அவர் நூற்பாக்களை உள்ளபடி இல்லாமல் வேறு முறையில் தொகுத்து அச்சிட்டார். முன் இருந்தது எதுகை முறை. இம்முறையில் நூற்பாக்கள் எதுகைத் தொடர்பு பெற்று மனப்பாடம் செய்ய எளிதாய் இருந்தன. முதலியார் இதை மாற்றிச் சொற்களை நூற்பா முதலில் சொல்லப்பட்டவை நூற்பா இறுதியில் சொல்லப் பட்டவை என்று தனித்தனியாகப் பாகுபடுத்தி, இரண்டையும் தனி அகராதி வரிசையாக மாற்றி அச்சிட்டார்.❖ அகராதி முறையானது மனப்பாடம் செய்யாமல் பக்கத்தைப் புரட்டிப் பார்த்துக் கண்டுபிடிக்க எளிதானது என்பதில் ஐயமில்லை.

இங்கு மேற்குறிப்பிடப்பட்ட குழப்பங்கள் அனைத்தையும் தக்க ஆதாரங்களின் மீது தெளிவு செய்கிறோம்.

நூற்பெயர் திவாகரம் என்பதே. 10, 14 ஆம் நூற்றாண்டு களில் பிங்கலர் பெயரால் பிங்கல நிகண்டும், கயாதரர் பெயரால் கயாதர நிகண்டும் பெயர் பெற்றமை போல, 9 ஆம் நூற்றாண்டில்

---

* திவாகரத்திற்கு முன்னமே கூட பழைய நிகண்டு இருந்திருக்கக் கூடும் என்ற கருத்து விரிவாக முன் ஆராயப்பட்டது.

❖ இதை வையாபுரிப் பிள்ளையவர்கள் நன்கு விளக்கியிருக்கிறார். எம்மிடமுள்ள இரு திவாகர ஏடுகளைப் பரிசோதித்தபோதும் முதலியார் செய்த மாற்றம் தெரிய வந்தது.

திவாகரர் பெயரால் மிகவும் பழமையான திவாகர நிகண்டின் பெயர் அமைந்தது என்று கருதுதல் பொருத்தமே ஆகும். ஆசிரியர் பெயர் ஒருபுறம் இருக்க, ஒரு நூலுக்குத் திவாகரம் என்று பெயர் அமைப்பதில் எத்துணையோ அழகும் பொருத் தமும் அமைந்துள்ளன. சொற்பொருள் உணர்த்தும் தனி நூல் எதுவும் முன் இல்லாமையால் இருளை அகற்றி ஒளியைத் தருவது என்ற பொருளுடைய திவாகரம் என்ற பெயர் இம்முதல் நூலுக்கு அமைவது பெருஞ்சிறப்புடையது அல்லவா?

இந்நூல் முழுமையும் கிடைத்து அச்சிடப்பட்டுள்ளது. செய்வித்தோன் பெயரைச் சேர்த்து இதைச் சேந்தன் திவாகரம் என்று வழங்குவதுமுண்டு. இது பற்றி ‘இதற்கு முன் ஒரு திவா கரம் இருந்தது. அது ஆதிதிவாகரம், இது சேந்தன் திவாகரம், ஆதலால் அது ஆதி திவாகரம் என்பது பொருத்தமே’ என்று சிலர் ஒரு போலி வாதம் செய்யக் காண்கிறோம். இது உண்மை யன்று. ஆதி திவாகரம் என்ற வழக்கு எங்குமே இருந்ததில்லை. பிற்காலத்தில் நிகண்டுகளைக் குறிப்பிடுகின்ற சூடாமணி உடை யார், அகராதி நிகண்டு உடையார், ஆசிரிய நிகண்டுடையார் முதலியோர் முறையாக தங்களுக்கு முன்னிருந்தவற்றைத் திவாகரம், பிங்கலம் என்றும் உரிச்சொல், கயாதரம், சூடாமணி, அகராதி நிகண்டு என்றும் மட்டுமே சொல்லக் காண்கிறோம். திவாகரம் இரண்டல்ல ஒன்றே. ஆதி நிகண்டாதலால் ஆதி திவாகரம் என்ற பெயரும் இதற்கே பொருந்தும். செய்வித்தோனாகிய சேந்தன் பெயரையும் சேர்த்துத் திவாகரர் தம் நன்றி மிகுதியால் சேந்தன் திவாகரம் என்று வழங்கலானார் என்று சொல்வதில் பிழை யில்லை. செய்வித்தோனாற் பெயர் பெற்றன - சாதவாகனம் இளந்திரையம் என்ற இறையனார் களவியல் கூற்றும் கருதத் தக்கது. எனவே, திவாகரம் ஒன்று என்ற கூற்றை விட்டு வேறு மேற்கொள்ளும் ஆராய்ச்சிகள் பயனற்றவை. திவாகரம் என்பது ஒரே நூல்தான். அது முழுமையும் இன்றுள்ள நூலே, வேறு நூலு மில்லை, வேறு பகுதிகளுமில்லை, வேறு குறிப்பும் இல்லை.

சீனிவாச பிள்ளையவர்களும் தம் இலக்கிய வரலாறு பிற் பாகம் பக்கம் 192-193இல் இதை விளக்கி எழுதியிருக்கிறார். அவர் கூறுவதன் சுருக்கம்: ‘ஆதிதிவாகரம் என்று விரிவாய் அள வின்றிப் பரந்து கிடந்தது ஒரு நிகண்டு; அதைச் சுருக்கிப் பிங்கலர் நூல் செய்தார் என்பர். சேந்தன் திவாகர அமைப்பும் பிங்கலர் அமைப்பும் வேறானவை. இத்திவாகரம் அளவால் சிறியது. சேந்தன் திவாகரம் போலவே பிங்கலந்தை செய்யப்

பெற்றது என்று சூடாமணி நிகண்டு கூறுகிறது. அடியார்க்கு நல்லார் காட்டுவதும் ஐயரவர்கள் குறிப்பிடுவதும் சேந்தன் திவாகரமே. பெரிய நிகண்டு இருந்தால் அதை நல்லார் ஆண்டிருப்பார் - நன்னூலார் பெரியதான பிங்கலந்தையைச் சொன்னாரேயன்றி, திவாகரம் சிறியதானமையின் சொல்ல வில்லை. எனவே பெரிய ஆதி திவாகரம் இல்லை, உரையாசிரியர் களால் காட்டப் பெறவும் இல்லை, உள்ள திவாகரமே ஆதி நிகண்டு ஆனபடியால் ஆதிதிவாகரம் எனப்பட்டது'.

இலக்கிய வுணர்வுக்குத் துணையாயிருப்பது, சொற்களின் உண்மையான திருத்தமான பொருளறிவாகும். இதற்கான கருவி யாகத் திவாகரர் அமைத்துள்ள நிகண்டை இப்போது பார்க் கிறோம். இதனால் செய்வதிலுள்ள அருமைப்பாடு கொஞ்சமும் விளங்காது. திவாகரர் எவ்வாறு செய்ய முயன்றார் என்பதை ஆக்கமுறையில் நாம் சிறிது எண்ணிப் பார்த்தால் இது நன்கு விளங்கும். சொற்களை எப்படிப் பாகுபாடு செய்வது - என்ன அடிப்படையில், பெயர் வினை உரி இடை என்றா, இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்றா - என்று எண்ணிப் பார்த்தால் இப்பாகுபாட்டின் சிறப்பு நன்கு புலப்படும். திவா கரர் சொற்களைப் பாகுபாடு செய்திருக்கும் முறையே மிக்க அருமைப்பாடுடையது. அருள்வாக்கு என்று சொல்வார்கள்: ஆங்கிலத்தில் 'இன்ஸ்பையர்டு' என்பார்கள். இத்தகைய ஓர் உள்ளுணர்வால் உந்தப்பட்டுத்தான் இவர் தம் நூலில் பாகு பாடுகளைச் செய்திருக்கிறார். தெய்வம், மக்கள், விலங்கு, மரம், இடம் இவற்றிலடங்காத பிறபொருள், செயற்கை வடிவம், பண்பு, செயல், ஒலி என்ற பத்துப் பகுதிகளுள் நிகண்டு அடங்கி வருகிறது. அடுத்து ஒருசொற் பல்பொருள்: இதுவே 'டிக்ஷனரி'. பின் பல பொருட்கூட்டத் தொகுதி பெயராகிய தொகையகராதி. இவ்வாறு அமைத்த இவ்வாசிரியர் தர்க்கவுணர்வு கொண்டே தம் நூலைச் செய்திருக்கிறார். இவரை அடுத்து நிகண்டு நூல் செய்த பிங்கலர் இந்தத் தொகுதி முறையை மாற்றி வேறு வகையில் செய்ய முயன்றிருக்கிறார். ஆனால், பின்வந்த எல்லா நிகண்டு ஆசிரியர்களும், திவாகரர் செய்த பாகுபாட்டையே பின்பற்றி யிருக்கிறார்கள். ஒருவர் கூடப் பிங்கலத்தைப் பின்பற்றவில்லை.

### மனப்பாடம்

பழங்காலத்தில் தமிழ் நூல்கள் யாவுமே ஓலை ஏட்டில் எழுதி வைக்கப் பெற்றிருந்தன. இரண்டு வகைப் பனையோலைகள்.

ஒன்று சாதாரணப் பனை. மற்றொன்று சீதாளப் பனை. சீதாள ஓலை என்று சொல்வதும் உண்டு. இது தாளிப் பனையின் ஓலை. முந்தியதைப் பார்க்க அகலமும் நீளமும் உடையது. மெலிவானது. அதனினும் மிகவும் விரைவாக இந்த ஓலை கறுத்து விடும். இன்று அச்சாகி நமக்குக் கிடைக்கின்ற எல்லா நூல்களும் - திவாகரம் மட்டுமல்ல. தொல்காப்பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், புறநானூறு, தேவாரம் போன்ற எல்லாம் இவ்விருவகை ஓலை ஏட்டில்தான் எழுதப்பட்டிருக்கின்றன. சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் கூட பெரும்புலவர் பலர் தங்கள் பாடல்களை ஏட்டில்தான் எழுதினார்கள். 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்கிற நமக்கு எந்தப் புத்தகமும் அச்சிட்டு எளிதாகக் கைக்குக் கிடைக்கிறது. எது தெரிய வேண்டுமானாலும் பக்கத்தைப் புரட்டிப் பார்த்துத் தெரிந்து கொள்ளுகிறோம். ஆனால் அச்சடிக்கும் தொழில் பெருகு வதற்கு முன், நூல்களை இவ்வளவு எளிமையாகப் பயன்படுத்த முடியாது. ஓலைச் சுவடியை நினைத்த போதெல்லாம் எடுத்து அவிழ்த்துப் பார்த்துப் பின் கட்டிவைப்பது எளிதன்று. ஆகவே, இந்த நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளில் கூட, சிறந்த கல்வி யாளர் அனைவரும் முக்கியமான எல்லா நூல்களையும் மனப் பாடம் செய்தார்கள். தமிழில் மட்டுமல்ல, வடமொழியிலும் இப்படித்தான். பல்லாயிரக் கணக்கான பாடல்களை மனப் பாடம் பண்ணுதல் கற்றறிந்தோருக்கு அரிய காரியமன்று.

இலக்கியத்தை மட்டும் இப்படிப் பயின்றார்கள் என்ப தில்லை. இலக்கிய உரைகளையும் இலக்கண நூல்களையும் இப்படிப் பயின்று மனப்பாடம் செய்தார்கள். சொற்பொருள் உணர்த்தும் கருவி நூல்களான நிகண்டு நூல்களை வாய்பாடு போல மனப்பாடம் செய்யும்படி சிறு பிள்ளைகளைப் பழக்கி னார்கள். மனப்பாடம் செய்தலாகிய பயிற்சி 4-5 வயதிலேயே தொடங்கி விட்டது. இளம் பருவத்திலிருந்து தொடர்ந்து பழக்கி வந்தால் எவ்வளவு கொடுத்தாலும் மனம் அவ்வளவையும் உள்ளே வாங்கி அடக்கி வைத்திருக்கும் ஆற்றல் வாய்ந்தது. மனப்பாடம் செய்வது மிகவும் கடினம் என்பது இக்காலக் கல்வி யாளர் மனத்திலுள்ள ஒரு தவறான நினைப்பு. மனப்பாடம் செய்ய அஞ்சுதல் மனத்தில் இந்த ஆற்றலை வளர்த்துக் கொள் ளாத குறைதான். எளிதாக அச்சுப் புத்தகம் கிடைக்கும் போது, வருந்தி மனப்பாடம் செய்வது எதற்கு என்று கேட்கிறார்கள்.

பொருத்தமான ஆட்சேபம் போல இது தோன்றும். ஆனால் மனப்பாடம் செய்து பழகும் பயிற்சியானது, மனத்திற்கு ஒரு நிலைத்த விழிப்பைத் தந்து, எந்தப் பொருளையும் நினைவில் வைத்திருந்து முறைப்படுத்தி உணரத் துணை புரிகிறது. இது தமிழறிவுக்கு மட்டுமன்றி, வாழ்க்கையின் எல்லாத் துறைகளுக்கும் பெரும் உதவியாயிருக்கவல்ல ஆற்றலாகும்.

திண்ணைப் பள்ளிக் கூடங்களால் விளைந்த ஒரு நற்பயன் இந்த மனப்பாடப் பயிற்சி. திண்ணையில் எழுதப் படிக்கத் தெரியாத வயதிலேயே 8-9 வயதுள்ள ஒரு பையன் ஒரு வரியைச் சொல்ல 5-6 வயதுள்ள பிள்ளைகள் பின்பற்றிச் சொல்லிப் பழகி வந்தார்கள். சிறுபிள்ளைகள் கணக்கு உணர்வதற்கான மனவளர்ச்சி பெறுவதற்கு முன்னமே வாய்ப்பாடு, எண் சுவடி முழுமையும் (1/320 என்ற பின்ன வாய்பாடு வரை) நெட்டுருச் செய்யும் பழக்கமும் நம் தமிழ்நாட்டில் இந்த இருபதாம் நூற்றாண்டின் முற்பாதி வரையில் இருந்தது. இதுபோலவே, இந்த நூற்றாண்டின் முதல் இருபது ஆண்டுகள் வரை திண்ணைப் பள்ளிக் கூடங்களில் சிறுபிள்ளைகள் நிகண்டு நெட்டுருச் செய்து வந்தார்கள்* சங்கர நமசிவாயர் கூறுவதன் கருத்தும் இதுவே. பொருள் தெரியாமலே பிள்ளைகள் மனப்பாடம் செய்தார்கள். செய்த நிகண்டு, பெரும்பாலும் சூடாமணி நிகண்டின் பதினொராம் தொகுதி. இது பற்றி இத்தொகுதி மட்டும் பதினொராம் நிகண்டு என்றும் வழங்கப் பெற்றது. நூல் அச்சிட்டோர் இதை மட்டும் தனிநூலாகவும் அச்சிட்டு வழங்கி வந்தார்கள். 19ஆம் நூற்றாண்டில், அச்சிட்ட அகராதியைக் கண்ணால் கண்டவர்கள், அகராதியமைப்பு எளிது என்று கருதி இத்தொகுதியையும் அகராதி முறைப்படுத்தி வைத்தார்கள். ஆனால், இது மனப்பாடம் செய்ய எளிதன்று என்றும், எதுகை முறையில் (ஏட்டில் உள்ளது போல) இருந்தால் தான் மனப்பாடம் செய்வது எளிது என்றும், ஒருமுறை படித்துப் பார்த்தால் நன்கு விளங்கும். சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் ‘பகவனே ஈசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்’ என்று இப்பகுதியை யாம் நெட்டுருச் செய்த சூழ்நிலை இன்றும் எம் கண்முன்னால் வருகிறது. திவாகரத்தையே இவ்வாறு மனப்பாடம் செய்திருந்தோர் சிலரை யாம் அறிவோம்.

---

* அமெரிக்க நாகரிகத் தாக்குதலின் முன் தமிழ்நாடு தலை கவிழ்ந்து இந்த நல்ல பழக்கத்தைக் கைவிட்டு விட்டது.

இவ்வாறு நெட்டுருச் செய்ததனால் விளைந்த நற்பலன்கள் பல. ஒன்று இந்நிகண்டு நூல்கள் பல அழிந்து போகாமல் காப்பாற்றப்பட்டன. சிறந்த இலக்கியங்கள் பல முழுமையுமோ பகுதிகளோ இறந்துபோய் விட்டன. ஆனால், இலக்கியமே அல்லாத திவாகரம் பிங்கலந்தை சூடாமணி போன்ற நிகண்டு கள் முழுமையும் இன்று நமக்குக் கிடைப்பதற்கு இந்த நிலை யும் ஒரு முக்கிய காரணம். இரண்டாவது, பொருளையுணரும் பிற்காலத்தில், உணராமலே நிகண்டு நெட்டுருச் செய்த மாணாக் கனுக்குச் சொல்வளப் பெருக்கம் ஏற்பட்டது. எந்த நூலை எடுத்துப் படித்தாலும் சந்தி பிரித்துப் படிக்கவும் கடுஞ்சொற் களின் பொருளை உணர்ந்து நூலை அனுபவிக்கவும் ஆற்றல் ஏற்பட்டது. இதுவே அக்காலத்துக் கற்றவர் அனைவரும் எந்த நூலையும் படித்துணரும் புலமை பெற்றிருந்ததற்குக் காரணம்; இக்காலத்தில் புலவர் பட்டம் பெற்றவருக்குக் கூட அப்புலமை இல்லை என்பது நன்கறிந்த செய்தி. இனி மூன்றாவதாக, அக்காலத்துச் செய்யுள் செய்வதே கற்றவர் அனைவருக்கும் பழக்கமாக இருந்தது. நிகண்டு கற்ற இளைஞன் செய்யுள் இயற்ற விரும்பிய பிற்காலத்தில் இச்சொல் வளம் அவனுக்குக் கை கொடுத்தது. எதுகை மோனை அமைப்பதில் சொற்கள் நான் முந்தி நான் முந்தி என்று எதிர்ப்பட்டு ஏவல் செய்தன.

அச்சு இயந்திரம் வந்த பிறகு ஒன்றை நூறு ஆயிரம் பதினாராயிரமாகப் பெருக்கிக் கொள்வது மிகவும் எளிது.* ஆனால் முற்காலத்தில் பனையோலையில் எழுதியபோது, ஒவ்வொன்றையும் தனித்தனியே எழுத்தாணி பிடித்துக் கையால்தான் எழுத வேண்டும். பெருக்குவதற்கு வழியில்லை. ஓலையில் எழுதுவது ஓர் அரிய கலை. ஓலையும் இரண்டு பக்கமும் எழுதியிருக்கக் காணலாம். கையில் பிடித்துக் கொண்டு எழுத வேண்டும். ஒரு பக்கம் எழுதும்போது ஏடு பொத்துப் போகக்கூடாது. ஏட்டில் பொதுவாக அடித்தல் திருத்தல் இருக்கும் வழக்கமில்லை. வரிகள் நேராகத் தான் இருக்க வேண்டும். வளைய முடியாது. இத்தகைய காரணங்களால் ஏடு

* எளிதானமையினாலேயே கீழ்த்தரமாகவும் ஆகியிருக்கிறது. அரசாங்கத் தமிழ்ப் பாட புத்தகங்கள் லட்சக்கணக்கான பிரதிகள் அச்சிடுகிறார்கள். பிள்ளைகள் கையிலுள்ள புத்தகத்தைப் பார்த்தால், எழுத்துக்கள் தேய்ந்து மைகரைந்து, மையம் கடந்து விழுந்த புகைப்படம்போல அருவருப்பாயிருக்கிறது. இவ்வச்சுப் புத்தகங்களை வைத்துப் படிப்பது, நம் பிள்ளைகள் செய்த பாவம்.

மிக மிக அருமையாகக் கருதப்பட்டது. இந்தக் காலத்தில் இப்படியில்லை. புலமை படைத்தவர்கள் தவிர மற்றவர்கள் குப்பைக் காகிதத்துக்கும் புத்தகத்துக்கும் வேற்றுமை பார்ப்ப தில்லை என்பது இன்றுள்ள துர்ப்பாக்கியமான நிலைமை.

**ஆசிரியர்**

திவாகரம் செய்தவர் திவாகரர். திவாகரன் என்ற சொல் லுக்குப் பகலைச் செய்பவன், சூரியன் என்று முன்னமே பொருள் சொல்லப்பட்டது. இவர் தம் நூலில் சூரியன் பெயர்களுள் ஒன்றாகத் திவாகரன் என்ற பெயரையும் சொல்லுகிறார். இப்பெயர் இவருடைய இயற்பெயர் என்றே கருத வேண்டும். பின்வந்த சிறப்பான இரண்டு நிகண்டு நூல்களும் இவருடைய பெயர் திவாகரன் என்றே சொல்லுகின்றன. 'செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த பிங்கல முனிவன்' என்பது பிங்கல நிகண்டின் சிறப்புப் பாயிரம். இதையே எடுத்துச் சூடாமணி நிகண்டுடை யார் 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர்' என்று அப்படியே அமைத்துக் கொள்கிறார். ஆதலால் இவருடைய இயற்பெயர் திவாகரர் என்றே பிறர் கொண்டமை தெளிவு. இவர் நூலுக்குச் சிறப்புப் பாயிரம் எதுவும் கிடைக்கவில்லை.

திவாகரர் சோழ மரபு என்று சொன்னாரும் உளர். இது ஆதாரமற்ற கூற்று: திருத்தக்கதேவர் சோழமரபு என்றும் தோலாமொழித் தேவர் சேரமரபு என்றும் சொல்லி வைப்பதில் சில புலவர்களுக்கு ஒரு மகிழ்ச்சி: அது போன்றதே இதுவும்; ஆராயத் தகுந்தன்று.

திவாகர முனிவர் என்றும் இவர் சொல்லப்பட்டுள்ளார். முனிவர் என்பதனாலேயே இவர் துறவி என்பது பொருள் அல்ல. நூல் செய்த பண்டைப் பெரியோரை முனிவர் என்பது ஒரு மரபு. அகத்திய முனிவர் தொல்காப்பிய முனிவர் என்ற வழக்குகள் இருப்பதும் காணத்தக்கது. அகத்திய முனிவர் உலோபா முத்திரை என்ற மனைவியுடையவர். ஆகவே முனிவர் என்பது மகரிஷி என்ற பெயர்க்குரிய பெரும் மதிப்பைத் தருவதாகும்.

இவரைப் பற்றி யாதும் தெரியவில்லை. முனிவர் என்றமை யால் இவர் சைனர் என்று ஆராயாது எளிதாகச் சொல்லி விடுகின்றனர். அது பிழை என்பதைப் பின்னால் இவரது சமயம் என்ற தலைப்பில் விரிவாக விளக்கியிருக்கிறோம். இவருடைய ஊர் முதலியன நேர்முகமாகத் தெரியவில்லை. ஆயினும் சோழ

நாட்டில் அம்பரில் வாழ்ந்த அருவந்தைச் சேந்தன் என்ற வள்ளலை அதிகமாக இவர் புகழ்வதனால், இவர் அந்த ஊரில் வாழ்ந்து அவனுடைய ஆதரவைப் பெரிதும் பெற்று அனுப வித்தவர் என்பது நன்கு தெரிகிறது. இவர் சேந்தனைப் பன்னிரு தொகுதிகளின் இறுதியிலும் வேறு ஏழு இடங்களிலும் சிறப்பிக் கிறார். அவ்விடங்களாவன: வாகை, கழகம், நிதிகள், கழல், அறிமடம், கொடை மடம், பொறை என்ற சொற்களின் பொருள் கூறும் இடமாகும். பின்னே இப்பத்தொன்பதையும் ஒரு சேரத் தொகுத்துத் தந்து இவற்றின் பொருளை ஆராய்ந்திருக்கிறோம்.

நீலகண்ட சாஸ்திரியார், 'திவாகரன் என்று சொல்வதெல் லாம் கற்பனை, உண்மையில் நூல் செய்தவன் அம்பரில் வாழ்ந்த சேந்தன் என்பவன்'* என்ற பொருள்பட எழுதியுள்ளார். இது பரம்பரையாக வழங்கி வருகின்ற வரலாற்றை, புதுமையாக ஒன்று சொல்ல வேண்டும் என்பதற்காகச் சொல்லியது போலத் தோற்றுகிறதேயன்றி, உண்மையோடு பொருந்துவது ஆகாது: இவர் எழுதியுள்ள கருத்துக்கள் பொருந்தாதன என்று அம்பர்ச் சேந்தன் என்ற தலைப்பில் காட்டியிருக்கிறோம்.

திவாகரர் நூலைக் கொண்டு ஆராயும் போது, ஆசிரிய ருடைய சிறப்பு நமக்கு நன்கு தெரிய வருகிறது. இவர் சிறந்த இல்லற வாழ்க்கை உடையவர். இல்லறத்திலிருந்து அனுபவிக் கத்தக்க அனைத்தையும் இவர் நன்கு அனுபவித்தவர் என்பதை இவர் காட்டுகின்ற வீடு, வீட்டிலுள்ள பொருள்கள், ஆடை வகை, உணவு வகை, கருவி வகை, அலங்காரப் பொருள் வகை முதலியவற்றால் நாம் நன்கு அறியலாம்; பூ மாலை வகை முத லியனவும் காணத்தக்கன. இவர் சிறந்த சைவர். பிற்காலத்தில் நிகண்டுகள் புலால் என்பதற்குப் பல சொற்கள் கூறியிருக்க, இவர் எதுவுமே சொல்லவில்லை.❖ எந்தப் பொருளை எடுத்தாலும் அது அதுவாகவே நின்று பேசுவது சிறந்த ஆசிரியருடைய இயல்பு; இருப்பினும் இவர் உழவுக் கருவிகள் முதலியவற்றையும் பசுச் செல்வத்தையும் விதந்து கூறியிருக்கின்ற தன்மையால், இவர் விருந்தோம்புகின்ற சிறந்த வேளாளர் வாழ்க்கையினர் என்று கருதத் தோன்றுகிறது.

---

* பிங்கலச் சிறப்புப் பாயிரம், சூடாமணி நிகண்டு.

❖ 'கோவதை முதலாயின வாக்காலும் சொல்லப்படாமையின்' என்று எழுதுகிற புறநானூற்றுரையாசிரியரின் மனப்பக்குவத்தை இங்குக் கருதுக.

சிறந்த போர் வீரராயும் இருந்திருக்கிறார்.* படைக்கலங்கள் பற்றி இவர் காட்டியிருக்கின்ற விரிவைக் காண்க. திவாகரர் வாழ்ந்த காலம் சோழர் நாடு தலை தூக்க முயன்ற காலம். எவ்வளவு சிறந்த நிலையுடையவரும் போரில் ஈடுபட வேண்டி வந்திருக்கும். சென்ற உலக யுத்தங்களின் போது இங்கிலாந்தில் வாழ்ந்த கவிஞர் எல்லாம் கைத்துப்பாக்கி ஏந்திப் போர் புரிய வேண்டி வந்தது. ரூபர்ட் ப்ருக் என்ற புகழ் வாய்ந்த இளங் கவிஞன் முதல் யுத்தத்தில் போரில் உயிர் துறந்தான். பண்டைய ரோமாபுரியில் தளபதியாக இருந்து வெற்றி பெற்றுத் திரும்பிய சின்சினாட்டஸ் என்பவன் போர் முடிந்ததும் கலப்பை எடுத்து உழச்சென்றான் என்று அறிகிறோம். திவாகரரும் அதுபோலவே இருந்திருப்பார் என்று தெரிகிறது.

திவாகரர் எல்லாத் துறைகளிலும் புலமை மிக்கவர். வேதம் அறிந்தவர். வடமொழிப் புலமை மிக்கவர். அட்சதை என்ற சொல்லை அச்சுதம் என்று இவர் கூறுவது கருதத்தக்கது. போதும் என்று பொருள்படுகின்ற அமையும் என்ற சொல்லுக்கு அலம் என்ற வடசொல்லை அமைப்பது இங்கு குறிப்பிடத்தக்கது. அதுபோல எண் வகை மணங்களுள் ஒன்றான அசுர மணம் என்பதைப் பிறர் எல்லோரும் அசுரம் என்றே கூறியிருக்க, இவர் வடமொழி இலக்கண மரபு அறிந்து, ஆசுரம் என்று சொல்வது கருதத் தகுந்தது. இவருடைய தமிழ்ப் புலமை கடல் போன்றது. நிகண்டு முழுமையும் இதற்குச் சான்று பகரும். பின்னால் நூல் ஆராய்ச்சியில் இவர் புலமை பற்றிய பல செய்திகள் எடுத்துக் காட்டப்படும். இலக்கணச் செய்திகள், 28 அணிகள், புறப் பொருள் செய்திகள், வாச்சியங்கள், இசைத்தமிழ்ச் செய்திகள் முதலியவற்றை இவர் விரிவாக விடாமல் கூறியிருப்பது இவ ருடைய பெரும் புலமையைக் காட்டும். இவர் மரபு தவறாது பொருள் அமைக்கிறார். அது மட்டுமல்ல; மரபு இல்லாத இடத்துப் புது மரபையும் தாமே தோற்றுவிக்கிறார்: இன்று நாம் பாலாறு என்று சொல்வதை, இவர் பால்யாறு என்றும் யாறு என்றும் எங்குமே சொல்வதைக் காண்க.

புலமை உடைமைக்கு அழகு 64 கலைகளிலும் வல்லவராய் இருத்தல் என்பது பண்டைய மரபு. இது வெறும் உபசாரம் என்று நாம் கருதுகிறோம். காரணம், நம்மை வைத்தே பழமை

---

* இவருடைய புதல்வனான பிங்கலர் சிறந்த போர்வீரராய் இருந்தார் என்பதை எமது பத்தாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் காட்டியிருக்கிறோம்.

யையும் கணிக்கிறோம். இன்று நமக்குத் தமிழைத் தவிர வேறு எந்தக் கலையுமே தெரியாது ஆகையால், பண்டைப் புலவர் களும் இப்படியே ஒரு நுட்பமும் தெரியாதவர்களாக இருந் திருப்பார்கள் என்று கூசாமல் சொல்லுகிறோம். இது பிழை என்பதைத் திவாகரர் நூலால் அறியலாம். அறிவியற் கலையில் எந்தக் கலையைத் தான் அவர் பாக்கி வைத்திருக்கிறார்! விலங்கு, புள், தாவரம், மலை, உலோகம் முதலியன காண்க. ஆடையைக் கூறும் போது பருத்தி ஆடை, பட்டாடை, நல்லாடை, மயிர்ப் படாம், கம்பளிப்படாம் என்றெல்லாம் விரிக்கிறார். இது மட் டுமா? பட்டு விகற்பம் என்று சொல்லுகிறார். அக்காலத்தில் ஏது பட்டு விகற்பம்? நினைத்துப் பார்த்தால் இன்று நமக்கு மிக்க ஆச்சரியமாக இருக்கிறது.

திவாகரர் பெருங்காப்பியம் செய்யும் ஆற்றல் பெற்றவர். நினைத்தால் செய்திருக்கலாம். ஆயினும் அவர் செய்யாமல் நிகண்டு செய்தார். காரணம் பின்னே கூறியிருக்கிறோம். தமிழ் இலக்கிய வரலாற்றைப் பார்க்கும் போது ஒவ்வொரு காலத்திலும் ஒவ்வொன்று சிறப்பு அடைவதைக் காண்கின்றோம். இதைத் தான் தமிழ் மக்களுடைய தவம் என்று சொல்லுகிறோம். தமிழ்த் தெய்வம் இவர் மனத்துள் புகுந்து இந்த நூற்றாண்டில் இப்படி ஒரு புது மரபு தோற்றுவிக்க, புதுத் துறையில் நூல் செய்ய, தூண்டியிருக்கிறது. இதன் பயனை நாம் நன்கு அறிவோம். திவாகரம் மட்டுமல்ல; அடுத்த பிங்கலம் முதல் நேற்றுத் தோன்றிய அகராதி வரையில் எழுந்துள்ள நூல் ஆராய்ச்சி அனைத்துக்கும் வித்து திவாகரரின் நூலாகும்.

திவாகரருடைய புதல்வர் பிங்கலர் என்பது வழக்கு. பிங் கலத்தின் சிறப்புப்பாயிரம் 'திவாகரன் பயந்த பிங்கல முனி' என்று கூறுவதே இதற்கு ஆதாரம். அவர், இவர் பெற்ற பிள்ளை யாகவும் இருக்கலாம். ஞானபுத்திரராகிய மாணாக்கராகவும் இருக்கலாம். இருவர் நூலையும் வைத்து நாம் ஆராயும்போது காலமும் அரசியல் நிலையும் விளைவித்த வளர்ச்சியையும் மாற் றத்தையும் நன்கு காண முடியும்.

பின்னே காலம் என்ற தலைப்பில் நிருபதுங்கவர்மன் சாச னத்தின் இறுதியில் தந்துள்ள குறிப்பையும் பார்க்க.

### திவாகரர் சமயம்

திவாகரன் என்பது சூரியனுடைய பெயர் (திவா - கரன் பகலைச் செய்பவன்). இவர் சைவர் என்பதில் எவ்விதக் கருத்து

வேற்றுமையும் இல்லாத போதிலும் கூட, சமணத்துக்கே பெருமை தர வேண்டும் என்று கருதிய பலரால் இவர் சைனர் என்றும் சொல்லப்பட்டதுண்டு. சொல்வோர் நிகண்டுத் துறையில் தமிழை வளர்த்தோர் சைனரே என்று எழுதியிருக்கிறார்கள்; இது எவ்வளவு பிழைபட்ட கருத்து என்பதை உடன் உள்ள நிகண்டுகளின் அட்டவணையைப் பார்த்தால் விளங்கும். அங்குள்ள 18 நிகண்டு நூல்களில் சைனர் செய்த நூல் 16ஆம் நூற்றாண்டுக்குரிய சூடாமணி நிகண்டு ஒன்றே; ஏனைய யாவும் சைவர் செய்தவையே. இவ்வாறு ஒருவர் ஒரு கூற்றைச் சொல்ல, ஆராயாது பலரும் அதை அப்படியே ஏற்றுக் கொள்வதால் பிழைபட்ட கருத்து மலிகிறது. எம்மைப் பொறுத்த வரையில் திவாகரத்தைச் சைனரே செய்திருந்தாலும் சரியே. உண்மையைக் கண்டு ஆதாரத்தோடு காட்ட வேண்டும் என்பதே எமது கருத்து.

இங்கு திவாகரரைப் பார்ப்போம். முதல் தொகுதியான தெய்வப் பெயர்த் தொகுதியைச் சிவனை வைத்தே தொடங்கு கிறார்; இந்நூற்பா, வரிசையில் பிந்தி இருந்தாலும் இக்கருத்து மாறாது; சிவனுக்கு இவர் கூறும் பெயர்கள் 64, அருகனுக்கு 43. இதனால் எவரைத் திவாகரர் பிரதானமாய்ச் சிறப்பிக்கிறார் என்பது நன்கு விளங்கும். சைனர் சிவனைச் சிறப்பிப்பதில்லை. பின்வந்த சூடாமணி நிகண்டைப் பார்த்தால் இது புலப்படும். அதன் ஆசிரியர் மண்டல புருடர் சைனர். தம் நூலை அருகன் பெயரை வைத்தே தொடங்குகிறார். இது இயல்பே. அருகனுக்கு அவர் கூறும் பெயர்கள் 90, சிவனுக்கு 61. சிவனைச் சம்பிர தாயத்தை ஒட்டி ஏகன் என்று அவர் சொல்லிய போதிலும் கூட, அவர் சிறப்புத் தருவது தம் தெய்வமாகிய அருகனுக்கே. ஆதலால் சிவனைச் சிறப்பிக்கும் திவாகரர் சைவர் என்பதில் தவறில்லை. உமாதேவியின் பெயர்களைச் சிறப்பாகச் சொல் வதும் இக்கருத்தை ஆதரிக்கும். மேலும் பின் வந்த சைனர், ஈசானன் தற்புருடன் அகோரன் வாமதேவன் சத்தியோசாதன் என்பன அருகன் பெயராகவே கூறுவர்; ஆனால் திவாகரர் சைவ மரபை ஒட்டி ஈசற்குரிய ஐம்முகங்கள் இவையென்று சொல்வது குறிப்பிடத்தக்கது. இவர் தத்துவம் இருபத்தைந்து என்று கூறுவது சைவ சித்தாந்த மரபை யொட்டியுள்ளது. இவ்வாறே இவர், ஊர்தி படைகொடி கூறும் இடம் போன்ற ஏனைய இடங்களில் சிவனையே முதற்கண் சொல்லுவார்; அருகனைச் சொல்வதில்லை. இவற்றால் இவர் சிறந்த வைதிக சைவர் என்பதை நன்கு உணரலாம். சாணம் புண்ணிய சாந்தம்

என்று குறிப்பிட்டிருக்கிறார்; இதை முன்னமே விளக்கினோம். இதுவும் சைவர் என்ற கருத்துக்குச் சான்று பகரும். சாணத்தைச் சுட்டுத் திருநீறாக்குகிற சைவருக்கு அது புண்ணிய சாந்தமாகுமே யன்றி, ஏனையோருக்கு ஆகாது.

நிகண்டுகளை இதுவரை யாரும், வையாபுரிப் பிள்ளை யைத் தவிர, விரலால் கூட தொட்டுப் பார்த்ததில்லை என்று பல இடங்களில் குறிப்பிட்டிருக்கிறோம். வையாபுரிப்பிள்ளை தமது ஆங்கில நூலில் திவாகரர் பற்றிய சில கருத்துக்கள் குறிப்பிடு கிறார்.* பலதுறை நூல் செய்வதில் சைன ஆசிரியர் புகழ் பெற் றிருக்கிறார்கள். இலக்கியமன்றி நிகண்டு இலக்கணம் என்ற துறைகளிலும் இவர்கள் கவனம் செலுத்தியிருக்கிறார்கள். தமிழில் முதன்முதல் தோன்றிய அகராதிப் பொருளாகிய நிகண்டு திவாகரம் என்பது. இது ஒரு சைன நூல். இதை மறந்துவிட்டு ஏடு எழுதும் சைவரும் சைவப் பதிப்பாளரும் சைன மரபிற்கு மாறாக சிவபெருமான் பெயரை இந்நூலின் முதல் தொகுதியின் தொடக்கத்தில் எடுத்து அமைத்திருக்கிறார்கள் என்பது அவர் கூற்று. மேலே நாம் கூறியவற்றால் இக்கூற்று கொள்ளத் தக்கது அன்று என்பது நன்கு விளங்கும். பிள்ளையவர்கள் திவாகரர் சைனர் என்பதை ஒரு கூற்றாகச் சொல்லிக் கொண்டு போகி றாரேயன்றி, ஆராய்ந்து நிறுவவும் இல்லை, ஆதாரங்களைக் காட்டவும் இல்லை.

முன்னமே கூறியவற்றுக்குத் துணையாக ஒரு கருத்தை மட்டும் இங்கு சுட்டிக் காட்டலாம். ஒன்பதாவது தொகுதியின் இறுதியில், அம்பர் காவலன் சேந்தன் அம்பிகை மீது அந்தாதி பாடினான் என்று சொல்லவந்த திவாகரர், இரண்டு வரிகளால் அம்மையைப் பெரிதும் புகழ்கிறார்.

அண்ணல் செம்பாதிக் காணி யாட்டியை
பெண்ணணங்கை மூவுலகும் பெற்ற அம்மையைச்
செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த
நாவலன் அம்பர் காவலன் சேந்தன்.

என்று பாடுகிறார். இவ்வாறு சிறப்பாய் அம்மையைப் புகழ்ந்து பாடுதல் ஒரு சைனருக்கு இயல்வதன்று; ஒரு சைவரே இதைச் செய்தார் என்பதில் எந்த ஐயத்துக்கும் இடமில்லை.

---

* அவருடைய தமிழ் மொழி இலக்கிய வரலாறு ஆங்கில நூல், பக்கம் 164.

மற்றுமொன்று, வேதம் பற்றிய பொருள்களை ஒலி பற்றிய பெயர்த் தொகுதியிலும் பின்னர் பல்பொருட் கூட்டத்தோடு பெயர்த் தொகுதியிலும் சொல்லுமிடத்து இவர் நால் வேதம் உபநிடதம் வேதசாகை என்ற வைதிகப் பொருள்களைச் சொல் லுகிறாரேயன்றி, சைன ஆகமம் மூன்று வேதம் நான்கு என்ற பொருள்களைச் சுட்டவே இல்லை. அருகனுடைய முக் குடையைக் கூடச் சொல்லவில்லை. இதனாலும் இவர் சைன ரல்லர், வைதிக சமயத்தவர் என்பது மிகவும் தெளிவு.

சரபம் என்ற புராண ஐதிகப் புள்ளைச் சொல்லுகிறார்; வடமொழிச் சொற்களும் தமிழ்ச் சொற்களும் இங்கு உள்ளன. நரசிங்க வடிவெடுத்த திருமாலின் உக்கிரத்தைத் தேவர் வேண் டச் சிவபிரான் சரபப்புள் வடிவெடுத்துப் போக்கினார் என்பது சிவ மகாபுராண வரலாறு. சரபம் எண்காற் புள். இதற்கொரு நூற்பா அமைத்து உரைக்கின்ற ஆசிரியர் சிறந்த சைவர் என்பது நன்குணரத் தகும்.

ஆராய்ச்சிப் பேரறிஞரான தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், தமது சமணத் தமிழ் இலக்கிய வரலாற்றுள் (1961) பின்வருமாறு எழுதுகிறார்: 'நிகண்டுத் துறையிலும் தமிழை வளர்த்தவர்கள் சமணப் பெரியோர்களே என்று கூறலாம். கிடைக்கும் நிகண்டு களில் பழமையானது திவாகரம். ஆதிதிவாகரம் என்று ஒரு சிலர் கூறுவதும் இதுவே. இன்று சிவன் பெயரோடு இந்நூல் தொடங்கி னாலும், சமண நூலென்று பலர் இதனைக் கருதுகின்றனர். இதற்குப் பிந்தியது பிங்கலந்தை. இதனை இயற்றியவர் பிங்கலர். திவாகரரின் புதல்வர் என இவரைக் கூறுவர். ஆனால் இந்தத் திவாகரர் மேலைய நிகண்டியற்றியவரோ என்பது ஐயத்திற்கு இடமாம்'. இக்கூற்றுக்கள் யாவும் எந்தச் சான்றும் காட்டாமல் சொல்லப்பட்டவை; 'இவ்வரலாறு என்னுடைய ஊனக்கண் கொண்டு கண்ட வரலாறு ஆதலின், இதனையே முடிந்த முடிபெனக் கனவிலும் யான் காணவில்லை' என்று அவரே தம் முகவுரையில் சொல்லுகிறார். இக்கூற்று அவையடக்கம் என்று கருதினாலும் கூட, அக்கருத்துக்களைக் கொள்ள எந்த நியாய மும் இல்லை. 'திவாகர பிங்கல நிகண்டுகளைச் சைவர் செய்தனர்' என்று சீனிவாச ஐயங்கார் தம் ஆங்கில நூலில் (1914) எழுதுகிறார்.

**திவாகரர் காலம்**

**1.** பொதுவாகத் தமிழறிஞர், வரலாற்று ஆராய்ச்சியில் அதிகம் புகவில்லையாதலால், பல நூல்களின் காலத்தைத்

திருத்தமாய் வரையறை செய்யாதது போல, இந்நூலின் காலத்தையும் திருத்தமாய் வரையறை செய்யவில்லை. வையாபுரிப் பிள்ளை ஒருவரே, இலக்கிய உணர்வுக்குச் சொற்களின் பொருள் வளர்ச்சியை உணர்வது இன்றியமையாதது, இதன் பொருட்டு நிகண்டுகளைப் பயில்வது அவசியம் என்றும் கருதியவர்.

நிகண்டுகளின் அடிப்படையில் ஒரு தமிழ்ப் பேரகராதி தொகுக்கும் அவசியத்தை அவர் பின்வருமாறு கூறுகிறார்:* 'நிகண்டுகளனைத்தையும் பயன்படுத்தித் தொகுக்கப் பெற்ற அகராதி இதுவரை வெளிவரவில்லை. பல வகையானும் நிரம்பிய பேரகராதி வெளிவருதற்குரிய பெருமுயற்சியைத் தமிழ்நாடு முழுவதும் ஒருமுகப்பட்ட உள்ளத்துடன் மேற்கொள்ளும்படி இறைவன் அருள் புரிவாராக. நூதன ஆங்கிலப் பேரகராதியைக் குறித்துத் தமிழன்பர்கள் அறிவார்கள். இச்சீரிய பெரு நூல் காலகதியிற் பற்பல கோலஞ் சமைந்து சொற் செல்வி நடனஞ் செய்யும் அரங்கமாக விளங்குகின்றது. நாடோறும் புதிது புதி தாகத் தோன்றிக் கொண்டிருக்கும் சொற்களின் பிறப்பகமாக வுந் திகழ்கிறது. இவ்வகராதியின் சரித முழுமையும் இடை விடாத உழைப்பினாலும் சலிப்பறியாத மனவொருமையினாலும் நிரம்பியுள்ளது. இதன் பொருட்டுத் தம்மையே தத்தஞ்செய்து முயன்று வந்தோர் ஒருவர் இருவரல்லர்; பல அறிஞர்களும் தங்களாயுட் காலத்தையும் ஆத்ம சக்தியையும் இவ்வகராதி யொன்றிற்கே உரிமையாக்கினர். இவ் அறிஞர்களும் ஒரு தலை முறையினர் அல்லர்: அடுத்தடுத்து வந்த நான்கு தலைமுறை யினர் அகராதிக்கென உழைத்து வந்தனர். இங்கிலாந்து தேசத் தினர் மட்டுமன்று இங்ஙனம் உழைத்து வந்தவர்; ஆங்கிலம் பேசும் மக்களுள் தேசப் பகுதிகளனைத்தும் இயன்றவரை கூட்டுறவு செய்து வந்தன. இந்நூதன ஆங்கிலப் பேரகராதியோடு எவ்வகையில் நோக்கினும் ஒத்து நிற்கக் கூடிய அகராதிப் பொருள்கள் நமது தமிழன்னையிடத்தே உள்ளன. அவற்றை யறிந்து பயன்படுத்தும் மக்களை அவள் பெற்றிலளென்று உலகம் பழியாமைப் பொருட்டுத் தமிழ் மக்களாயுள்ளோர் அனைவரும் ஒருமுகமாக உழைத்தல் வேண்டும்'.

ஏனையோர் யாருமே நிகண்டுகளை எடுத்துப் பார்த்த தில்லை. இக்காரணத்தால் நிகண்டுகளின் கால வரையறை யாரும் செய்யவில்லை. பிள்ளையவர்கள் தாம் பதிப்பித்த நிகண்டுகளின்

* இலக்கிய மணிமாலை, 1954, பக்கம் 193-4.

முகவுரையில்* நிகண்டுகளின் வளர்ச்சியை ஆராய்ந்திருக்கிறார். திவாகரத்தின் காலம் பற்றி அவர் கூறியுள்ளது இங்கு அறியத் தகும். (நாமதீப நிகண்டு, முகவுரை; இலக்கிய மணிமாலை பக்கம் 210 - 212)

'தமிழ் நாட்டுப் பெருவேந்தர் மூவர் பெயர்களும் அவர் களையடுத்து 'வேள் புலவரசர்சளுக்கு வேந்தர்' என வேள்புல வரசர் பெயரும், பின்னர் குருநில வேந்தர் பெயர்களும் முறையே அந்நிகண்டில் கூறப்படுகின்றன. தமிழ் வேந்தர் கொடியோ டொப்பச் சளுக்கிய அரசர்க்குரிய கேழற் கொடியும் விதந்து ஓதப்படுகின்றது. சளுக்கு வேந்தர்க்கு வேறு பெயர்களில்லா திருப்பவும், அவர்கள் இன்னாரென ஆட்சி புரிந்த நிலம் பற்றி வலிந்து உணர்த்தப்படுகின்றார்கள். இக்காரணங்களால் சளுக்கிய மரபினர் பிரபல மன்னராய் விளங்கிய காலத்து அஃது இயற்றப் பட்டிருக்க வேண்டுமென்று கருதுதல் தகும். இக்காலம் கி.பி. 6 - 8ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டதாகவேனும், 10 - 12 ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்டதாக வேனும் இருத் தல் வேண்டுமென்பது தென்தேச சரிதத்தால் உணரலாகும். பிற் கூறிய காலத்தின் இறுதியில் வாழ்ந்தாராகக் கொள்ளத் தகும் இளம்பூரணர், அந்நிகண்டினை யெடுத்தாளுதலின் (தொல். சொல். 390) அஃது அவர் காலத்துக்கு முற்பட்டதென்பது தேற்றம். குறுநில வேந்தர் பெயராக அரட்டர் என்பது திவாகரப் பிரதி சிலவற்றில் காணப்படுகிறது; இராஷ்டிரகூடர் (அரட்டர்) குறு நில வேந்தராயிருந்த காலத்து இப்பெயர் தோன்றியிருக்கலா மென்று ஊகித்தற் கிடமுண்டு. இராஷ்டிரகூடர் பிரபலராய் விளங்கிய காலம் கி.பி. 750 முதல் 950 வரையாம். இக்காலத் திற்குப் பின் நூல் தோன்றியதாதல் பெறப்படும். ஆகவே, 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதி திவாகரம் இயற்றப்பெற்ற காலமெனக் கொள்வது பொருந்துமெனத் தோன்றுகிறது. நூலிற் கூறப்பட்ட விஷயங்களும் இம்முடிவையே வலியுறுத்துகின்றன'.

**2.** பிள்ளையவர்கள் கொள்ளுகின்ற நெறி கொள்ளத்தக்க தாயினும், முடிவு கொள்ளத் தக்கதன்று. மொழி வரலாற்றில் பொதுவாக உடன்காலச் செய்திகள், காரணம் பற்றியல்லாது ஆட்சி பெறமாட்டா. பண்டைக் காலச் செய்திகளே நிகண்டு போன்ற மொழி நூலில் இடம் பெறும். ஆகவே பிள்ளையவர் கள் கூறுவது போல, ஒடுங்கிப் போன சளுக்கியரைக் குறித்து

* இவையே பின்னர் இலக்கிய மணிமாலையில் மூன்றாம் அத்தியாயமாகத் தொகுக்கப் பெற்றன.

வேள்புல அரசர் என்றும், அவர்களுக்குக் கேழற்கொடி என்றும் இவர் வலிந்து கூறுகிறார் என்றால், பழமை நோக்கி சளுக்கியச் செய்திகள் மக்கள் வாழ்க்கையிலும் மொழியிலும் பொருந்தி விட்டமையால், நூலாசிரியர் அவற்றை ஏற்றுக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. அரட்டர் (இராஷ்டிரகூடர்) குறுநில வேந்தர் என்று குறிப்பிடுவது தெரியாமையால் அல்ல: உடன் காலத்தில் வெற்றி பெற்று ஓங்கி வருபவர்களை யாரும் அங்கீ கரிப்பதில்லை. அவர்களைக் குறித்த ஆட்சிகள் மொழியில் உடனே புகுந்து விடமாட்டா. சிறிது பழமை ஏற்பட்ட பின் தான் இவர்களைக் குறித்த நல்ல சொல்லாட்சி தமிழில் ஏற்பட முடியும். சளுக்கியர் சிறப்பாக ஆண்ட காலம் கி.பி. 500 - 750; ஆகவே இக்காலத்திற்குச் சுமார் நூறு ஆண்டுகள் கழித்து வாழும் ஆசிரியர், தம் மொழியில் இவ்வாட்சியின் பிரதிபலிப்புப் பொருந்தியிருப்பதை நன்குணர்ந்து எழுதுவதுதான் இயல்பு; இராஷ்டிர கூடர் சிறப்பான ஆட்சி, சுமார் 725 முதல் 912 வரை. உடன் காலத்தில் வாழ்கின்ற ஆசிரியர், இவர்களது மேம்பாட்டை அங்கீகரிக்க மனமில்லாதிருப்பது இயல்பு. இவர்கள் அன்னிய ராதலால் இன்னும் இவர்கள் குறுநில மன்னரென்றே இவர் நினைத்தல் இயல்பு.* இவர் நூலும் இந்த நினைப்பையே பிரதி பலிக்கும். ஆகவே இராஷ்டிர கூடர் ஆதிக்கம் ஓங்கி நூறு வருஷம் ஆன பின்னும் ஆசிரியர் அதைப் போற்ற மாட்டார். இந்த வாழ்க்கை நியதி, இலக்கிய மரபு ஆகிய நியாயத்தைப் பொருத்திப் பார்த்தால், பிள்ளையவர்கள் சொல்வது போல நம்மாசிரியர் காலம் 6-8 நூற்றாண்டுகளும் ஆக முடியாது. 10 - 12 நூற்றாண்டுகளும் ஆக முடியாது; இரண்டுக்கும் இடைப்பட்ட காலமாகவே இருக்கும் என்பது மிகவும் தெளிவு. உத்தேசம் 9 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியாகலாம் என்று கருத வேண்டும். அன்றியும் இறையனார் உரை மேற்கோள் பற்றி முன்கூறிய குறிப்பும் 9ஆம் நூற்றாண்டு என்பதை வலியுறுத்துகிறது.

**3.** மேலும், 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று சொல் வதில் ஓர் இடர் உண்டு. இந்தப் பகுதியில் தோன்றிய பெருநூல் யாப்பருங்கல விருத்தி என்று வேறிடத்தில் தெளிவுபடுத்தி யிருக்கிறோம். இதன் காலம் சுமார் 1015 - 1040. விருத்திகாரர்

* இன்று புதிதாய்ப் பதவிக்கு வந்துள்ள கட்சிகள் பற்றித் தொடக் கத்தில் மக்கள் மனதில் நிலவிய எண்ணத்தோடு இதை ஒப்பு நோக்கிப் பார்க்கலாம். எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற் றாண்டு நூலில் காண்க.

திவாகரத்தில் இருந்து பல சூத்திரங்களை எடுத்துக் கொண் டிருக்கிறார் என்று குறிப்பிட்டிருக்கிறோம். திவாகரமும் இந்த நூற்றாண்டில் தோன்றியதானால், அது வழங்கத் தொடங்கு வதற்கும், அதை விருத்திகாரர் பயின்று எடுத்துக் காட்டுவதற்கும் போதிய கால இடையீடு இல்லை. மேலும் திவாகரர் சிறந்த சைவர். விருத்திகாரர் விரிந்த மனப்பான்மை கொண்டவரா யிருப்பினும்,* சைனரான இவர் உடன் காலச் சைவ நூலைப் பயில்வது நடைபெறாத ஒன்று. ஆகவே எவ்வகையாகப் பார்த் தாலும், திவாகரர் காலம் 11ஆம் நூற்றாண்டின் முற்பகுதியாய் இருக்க முடியாது.

**4.** மேலும், நூலகத்தே காணப்படும் வேறு சில குறிப்புக்கள் திவாகரர் காலத்தைத் திட்டமாக வரையறை செய்ய உதவு கின்றன. ஒரு குறிப்பு பாகவதர் என்ற சொல்லைப் பற்றியது. நாராயண சமயத்தோர் பெயர் பாகவதர் என்று சொல்லுகிறார். பகவத் பக்தி பூண்டு ஒழுகுபவர் பாகவதர்; அதாவது திருமாலின் அடியார். இச்சொல் சிவனடியாரைக் குறிப்பிடப் பயன்பட்ட தில்லை; திருமாலடியாரை மட்டுமே குறிக்கும். திருமால் பாடலாக எழுந்த அருட்பாசுரங்கள் நாலாயிரப் பிரபந்தங்கள். இவற்றுள் திருவாய் மொழி பாடிய நம்மாழ்வார் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தார். அவர் வரலாறும் காலமும் வேறிடத் தில் விரிவாகச் சொல்லப்படுகின்றன. அவர் காலம் வரையில் பாகவதர் என்ற சொல் ஆட்சிக்கு வந்ததாகத் தெரியவில்லை. அவருக்குப் பிறகே, திருமாலுக்குப் பக்தி செய்து அவரைத் துதிக்கும் நாலாயிர திவ்வியப் பிரபந்த அருட் பாசுரங்களை ஆலயங்களில் திருமால் திருமுன்பு ஓதி ஆடியும் பாடியும் வந்த அடியவர் பாகவதர் எனப்பட்டனர். இவ்வடியவர் குழாம் பாகவத கோஷ்டி எனப்பட்டது. சைவத்தில் அடியவர் திருக் கூட்டம் என்பது போல, வைணவத்தில் இந்தக் கோஷ்டி. எனவே இந்தச் சொல்லாட்சி, நம்மாழ்வாருக்குப் பின் எழுந்தது. மேலும் நாதமுனிகள், குடந்தை ஆராவமுதன் மீது எழுந்த 'ஆராவமுதே அடியேனுடலம் நின்பால் அன்பாயே' என்ற அருமைத் திருப் பாசுரத்தைப் பாகவதர் ஓதக் கேட்டு, அப்போதுதான் நம்மாழ் வார் பாடிய ஆயிரம் பாசுரங்கள் உண்டு என்று முதன்முதலாக அறிந்தார். பின் திருக்குருகூர் சென்று நம்மாழ்வார் சந்நிதியில் மதுரகவியின் சீடரான பராங்குசதாசரின் துணை கொண்டு, நாலாயிரம் பாசுரங்களையும் பெற்றார் என்பது வைணவ

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

ஆசாரிய சம்பிரதாய வரலாற்றுத் தொடக்கம். நாலாயிரத் திவ்வியப் பிரபந்த சேவையும், திருமால் திருப்பதிகளின் வழி பாடும், அடியவர்களின் கூட்டமும் இவர் தொடங்கியே நாட்டில் பிரசித்தமாயின. இவர் காலம் கி.பி. 825 - 918 என்பர். வரலாறும் வேறிடத்தில் காணலாம். இவர் வைணவ சமய ஆசாரியராகிய வைணவ அடியார்களைத் திரட்டி அவர்களைக் கொண்டு ஆலய வழிபாடும், அவர்களுக்குச் சமய உபதேசமும் நடத்தி வந்தார். இவருக்குப் பின் சிறந்த ஆசாரியராக விளங்கியவர் இவருடைய பேரரான யமுனைத் துறைவர் என்னும் ஆள வந்தார். நாதமுனிகளே பாகவத கோஷ்டியைத் தொடங்கியவர். இத்தொடக்கத்தையும் இவ்வடியவர் திறனையும் நேரில் கண்டு, திவாகரர் இவர்கள் பெயரையும் பாகவதர் என்று தம் நூலில் அமைத்தார். இது, சாளுக்கியரும், இராஷ்டிர கூடரும் போல, தமிழ்நாட்டுக்குப் புறம்பாக, அல்லது தமிழ் நாட்டில் எங்கோ நடந்த ஓர் இயக்கம் அல்ல. சோழநாட்டில் அம்பர்ச் சேந்தனால் ஆதரிக்கப்பெற்று வாழ்ந்த திவாகரரைச் சூழ்ந்து நடந்த செய்தி. இது நாதமுனிகள் ஊராகிய காட்டுமன்னார் கோயிலிலும், திருக் குடந்தையிலும், திருவரங்கத்திலும் தொடக்கமாயிற்று. ஆதலால் இவர் தம்மைச் சுற்றிலும் நடந்த நிகழ்ச்சிகளை நன்கறிந்து குறிப் பிடுகிறார் என்று கருத வேண்டும். அங்ஙனமாயின், திவாகரர் நூல் செய்த காலம் 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று கொள் வது பொருத்தமாகும்.

**5.** மற்றொரு குறிப்பு, இராகப் பெயர் பற்றியது. ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில், இராகம் ஏழு என்று கூறுகின்ற ஒரு சூத்திரத்தில் நிருபதுங்க ராகம் என்று ஓர் இராகப் பெயரைக் குறிப்பிடுகிறார். இது அபூர்வமான பெயர். வழக்கில் இல்லாதது. நாம் அறிந்த வரையில் இராகப் பெயராகக் கேள்விப்படாதது. இப்படி ஒன்றை இவர் குறிப்பிடுவதில் ஏதேனும் பொருள் இருக்க வேண்டும். உண்மையில் ஒரு பொருளும் இருக்கிறது. ஒன்பதாம் நூற்றாண்டின் தமிழ்நாட்டு அரசியலை ஆராய்ந்தால் இப்பொருள் தெளிவாக விளங்குகிறது.

அக்காலத்தில் தமிழ் நாட்டு மன்னர், சேரர் இல்லை, பாண்டியர், சோழர், பல்லவர் என்போர். இவர்கள் மூவர் வரலாற்றையும் தொகுத்துப் பார்த்தல் அவசியம். பாண்டி மன்னன் இரண்டாம் வரகுணன் (862 - 880). இவன் மிகச் சிறந்த சிவபக்தன். பட்டினத்தார் இவனைப் பெரிதும் போற்றிப் பாடு கிறார். இவன் பெருவீரன். அனேகம் போர்களை வென்று

பாண்டியர் ஆட்சியை ஓங்கச் செய்தான், இவன் சோழ நாட்டின் மீது படையெடுத்துச் சென்று இடவை என்ற நகரில் சோழனோடு பெரும் போர் செய்து வெற்றி பெற்றான். பாண்டி நாட்டில் களப்பிரர் புகுந்த காலத்தில் சோழர் ஆட்சி ஒடுங்கி விட்டது. நாட்டின் வட பகுதி பல்லவர் வசமும், தென் பகுதி பாண்டியர் வசமும் இருந்தன. சோழ மன்னர் இருந்த இடம் தெரியாமல் ஒடுங்கி உறைந்தனர். நல்லூழும் காலமும் துணை செய்த தன் பயனாக, விசயாலயன் என்ற சோழ வீரன் தோன்றித் தஞ்சையைக் கைப்பற்றி அங்கு சோழ மரபை மீண்டும் நிலை நாட்டினான்.

'தொண்ணூற்றாறு புண்கொண்ட பெருவீரன்' என்று இலக்கியங்களில் இவன் சிறப்பிக்கப் பெறுகிறான்.* இவன் ஆட்சிக்காலம் 845 - 881. இவனினும் பெரு வீரனாக ஆட்சி புரிந்தவன், இவன் மகனாகிய ஆதித்த சோழன் (871 - 907). இவன் இளம் பருவமாக இருந்த போது, இடவைப்❖ போர் நடந்தது. அப்போரில் முதியவனான விசயாலயன் பங்கு கொள்ளவில்லை; ஆதித்தனுக்கு அப்போரில் பெருந்தோல்வி. வெற்றி பெற்ற வரகுண பாண்டியன் இடவையில் பல நாள் தங்கித் தன் வெற் றியை வலுப்படுத்தினான். அங்கு தங்கியிருந்த போது, அவன் திருவிடை மருதூரை வழிபட்ட சிறப்பான செய்திகளைப் பட்டினத்தார் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் போற்றிப் பாடியுள்ளார். தோற்ற ஆதித்த சோழன், பிறகு பல்லவ மன்னனைத் தனக்குத் துணையாகக் கொண்டு மீண்டும் ஒரு முறை வரகுணனைத் திருப்புறம்பயம் என்ற போர்க்களத்தில் சந்திக்கிறான். அது, சோழர் விதியை நிர்ணயிக்கின்ற ஒரு பெரும் போராக அமைந்தது. அக்காலம் அவன் பேரரசனாக ஆக வில்லை. காலம் 880. ஆதித்தன் அப்போது அரசியல் தந்திரம் அதிகம் கைவந்தவனாக இருந்து, காஞ்சியில் மூன்றாம் நந்தி வர்மன் புதல்வனாய் அரசாண்ட நிருபதுங்கவர்மனை (850 - 882) தனக்குப் படைத் துணையாகத் தேடிக் கொண்டான். நிருப துங்கன் முதியவன் ஆதலால் தன் புதல்வன் அபராசிதவர்மனைக் கங்க மன்னனாகிய பிருதிவிபதியின் துணையோடு கூட ஆதித் தனுக்கு உதவி செய்ய அனுப்பினான். இக்காலத்து ஆதித்தன் சிற்றரசனே அன்றித் தனியாட்சியுடையவனல்லன். நடந்த போரில்

* விக்கிரம சோழன் உலா கண்ணி 15; சங்கர சோழன் உலா கண்ணி 15; எமது தமிழ் இலக்கியவரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

❖ இடைவை, இடையலூர் - சம்பந்தர் திருமுறை 3 - தல வரலாறு . இடவை நாராயண பட்டர் தருமம்.

துணை வந்த பிருதிவிபதி இறந்தான். பல்லவரும் சோழரும் சிறந்த வெற்றி பெற்றனர். வரகுணன் தோற்றுத் தன் நாட்டைச் சுருக்கிக் கொள்ள வேண்டியதாயிற்று. உதவி செய்த நிருப துங்கவர்மனுக்கு ஆதித்தன் பெரிதும் கடமைப்பட்டிருந்தான் என்பதில் ஐயமில்லை. எனினும், நிருபதுங்கன் 882இல் இறந்து போகவே, அவன் மகன் அபராசிதன் காலத்தில் மெல்ல மெல் லப் பல்லவர் பிடியிலிருந்துத் தன்னை விடுவித்துக் கொண்டு, ஆதித்தன் தனிப் பேரரசனாகத் தன்னை ஆக்கிக் கொண்டான்.

திவாகரர் இவ்வாதித்தன் காலத்தில் வாழ்ந்து, நடந்த இரு பெரும் போர்களையும், அரசியல் நிகழ்ச்சிகளையும் நேரில் நன்கு உணர்ந்திருக்கிறார். நாட்டுப்பற்று மிக்கவர் ஆதலினாலே, தமது சோழ நாட்டு மன்னன் முதலில் வரகுண பாண்டியனிடம் தோற்றபோது உளம் சோர்ந்தும், பின்னர் புறம்பயப் போரில் அவன் வெற்றி பெற்ற போது எழுச்சி பெற்றும் இருந்திருப்பார் என்பதில் ஐயமில்லை. தமது மன்னன் வெற்றி பெறுவதற்கு உதவிய நிருபதுங்கவர்மனிடம் இவர் மிக்க நன்றி உணர்வு கொண்டிருந்தார் போலும். இவரை ஆதரித்தவனாகிய அம்பர்ச் சேந்தனும் ஒருகால் ஆதித்தனிடம் படைத் தலைவனாய் இருந் திருக்கலாம். எனவே, புலவர் தம் நன்றி அறிவின் காரணமாக, நிருபதுங்க வர்மனைச் சிறப்பிக்கும் பொருட்டு ஓர் இராகத்துக்கு நிருபதுங்க இராகம் என்று பெயர் கொடுத்தார் அல்லது அரு மையாய் வழங்கிய பெயரைத் தம் நூலில் அமைத்துக் கொண் டார் என்று கருதத் தோன்றுகிறது. இப்பெயர் ஓர் அசாதாரண மான பெயர். இராகங்களின் பெயர்கள் அக்காலத்தில் மிகவும் எளியனவாய் இருந்தன. இப்பெயர் அவ்வாறு இல்லை. காரணம், நாம் இங்கு குறிப்பிட்ட வரலாற்றுச் செய்தியேயாகும்.

எனவே, திவாகரர் நிருபதுங்கவர்மன் பெயரைக் குறிப் பிட்ட காரணத்தால் இவர் அவன் காலத்துத் திவாகரம் செய் தார் என்று கருதுவது இவ்வரலாறுகளுக்குப் பொருத்தமாக உள்ளது. போர் நடந்தது 880இல்; நிருபதுங்கன் இறந்தது 882இல்;* ஆதலால் 880 - 882 ஆகிய காலத்துக்குள் திவாகரர் தமது நிகண்டைச் செய்தார், அல்லது இந்த இராகக் குறிப்பை அமைத்தார் என்று நாம் முடிவு செய்கிறோம். ஒருகால் திவா கரர் நிருபதுங்கன் இறந்த சில ஆண்டுகளில் பழைய நன்றியை

* நிருபதுங்கவர்மன் பின்னும் சில ஆண்டுகள் இருந்தான் என்றும் அறிஞர் எழுதுவர்.

நினைவு கூர்ந்தும் இந்நூலைச் செய்து இருக்கலாம். எங்ஙன மாயினும் நூலின் காலம் 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்பது மிகவும் தெளிவு.

பொருளிலிருந்து ஆராயும் பொழுது, பல வகையான இலக்கிய இலக்கணச் செய்திகளைச் சொல்கின்ற இவர், பின் உள்ள இலக்கணங்கள் சொல்வதுபோல, காப்பிய இலக்கணத் தைச் சொல்லவில்லை. காவிய இயற்கை என்று சொன்ன சூத் திரத்தில் இவர் சொல்வது காப்பியங்களுக்குப் பொருந்தாது. இவருக்கு முன் இருந்த காப்பியங்கள் சிலப்பதிகாரம், மணி மேகலை, பெருங்கதை என்பன. அவற்றைக் கருதி இவர் இலக் கணம் செய்யவில்லை. அவை மூன்றும் ஆசிரியப்பாவால் இயன்ற நூல்கள். இவர் காலத்தில் கம்ப ராமாயணமும், சிந்தாமணியும் தோன்றவில்லை போலும். தோன்றியிருந்தால் அவற்றின் தன்மை யைத் தொகுத்து இவர் காப்பிய இலக்கணப் பகுதி அமைத் திருக்கக்கூடும். அவற்றின் காலமும் ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி. ஆதலால், திவாகரத்துக்கு, முன் சொன்ன கால எல்லை அவற்றாலும் உறுதி பெறுகிறது.

**6.** நிருபதுங்க வர்மனுடைய சாசனக் குறிப்பொன்றும் இங்கு சொல்லத் தக்கது. சோழ நாட்டுத் திருக்கண்டியூர் வீரட் டானேசுவரர் கோயிலில் உள்ள கல்வெட்டொன்று நிருபதுங்க வர்மனுடைய 21ஆம் ஆட்சி ஆண்டுக்குரியது (கி.பி. 871) 'ஆர்க் காட்டுக் கூற்றத்துப் பிரம்ம தேயம் திருக்கண்டியூர் சபையோம் இவ்வூர்ச்சேரி விசயநல்லுழான் மாறங்காளி கொண்ட தீபம் ஒன்றுக்கு செம்பொன் சம்பிராணிப் பழங்காசினோடு உரை முப்பது ஊராடு கல்லால் நூற்றொருபதின் கழஞ்சு இவ்வூர்க் காளா படாரியார்க்கு ஏழுக்கவிப்புறமாகப் பத்துச் செய்யும் ஏழுக்குப் புறமாக ஒருமாச் செய்யும் ஆகப் பதினொருமாச் செய்யும் எங்கள் பிர்ம்ம.......றுக் கொடுத்த நிலத்துக் கெல்லை தானை....ரஞ் சேந்தனும் இவன் தம்பி திவாகர நக்கனும்......கள் நிலத்துக்குக் கிழக்கும் பழையத் தளித் தேவ தானமான நிலத் துக்குத் தெற்கும்...... இன்னும் இதற்கே விற்கின்ற நிலத்திற்கு எல்லை ஊருடைய பெருமானடிகள் வேலிப் பெருஞ் செய்யில் ஆளுகின்ற நிலத்துக்குக் கிழக்கும் காமக்காணி சலாகன் திரு மழவாடியும் தம்பிமாரும் காமக்காணி சேந்தன் பிராமணி திவாகரன் புண்டும் நிலத்திற்குத் தெற்கு.*

---

* எண் 572, S.I.I. தொகுதி 5.

இவற்றால் நிருபதுங்கவர்மன் காலத்தில், சேந்தன், திவாகரன் என்ற பெயருடைய இருவரும் வாழ்ந்தார்கள் என்பது தெரிகிறது. ஆதலால் மேலே நாம் யூகித்துச் சொன்ன செய்திகள் உண்மை என்பதில் ஐயமில்லை.

7. மற்றொரு குறிப்பும் சொல்லத் தோன்றுகிறது. தெய்வப் பெயர்த் தொகுதி சொல்லிய இடத்து, தேவர் அசுரர் பெயர் களைச் சொல்லி, மாவலி என்ற அவுணனைக் கூறுகிறார். 'வைரோசனனே மாவலி யவுணன்' என்பது சூத்திரம்.

வேறு எந்த அவுணனையோ தேவனையோ குறிப்பிடாத இவர், மாவலியைக் கூறுவதன் காரணம் என்ன? சற்றே இது ஆராயத்தக்கது.

இராமாயணம் பால காண்டத்துள், எட்டாவதாக வேள்விப் படலத்தைக் கம்பர் அமைத்திருக்கிறார். இங்கு விசுவாமித்திரர் இராம இலக்ஷ்மணரை அழைத்துக் கொண்டு சென்று தாம் வேள்வி செய்வதற்குத் தேர்ந்தெடுத்துள்ள ஒரு சோலையைக் காட்டுகிறார். அதைப்பற்றி இராமன் கேட்க அவர், அங்கு மாவலி என்ற அவுணர் தலைவன் ஆட்சி புரிந்து பெரும் தானங்கள் செய்து வாமன மூர்த்தியாக வந்த திருமாலுக்கு மூவடிமண் தானம் கொடுத்தது மூலமாகத் திருமாலால் ஆட் கொள்ளப் பெற்றான் என்ற வரலாற்றை இருபது பாடல் களால் சொல்லுகிறார். இந்த இடம் கம்பர் பாடியிருக்கின்ற அமைப்பும் நாடகப் பொலிவும், உலக இலக்கியம் முழுவதிலும் காண்பதற்கு அரிய கவிதைப் பண்புடையது. அவுணன் என்றும் கொடியவன் என்றும் புராணங்களும் இதிகாசங்களும் சொல்லிய மகாபலிச் சக்கரவர்த்தியை இவர் நகைச்சுவையோடு அரிய ஒரு திருமால் அடியவனாகக் காட்டுகிறார்.

கம்பர் 885இல் இராமாயணத்தை அரங்கேற்றினார் என்பது வரலாறு. அதற்கு முன் அக்கதையைப் பிரசங்கித்து வந்தார். அரங்கேற்ற வேண்டுமென்று பலரிடமும் கொண்டு போய்க் காட்டினார் என்றெல்லாம் கதைகள் உரைக்கும். இவ்வாறு அவர் இராமாயணத்தைப் பரப்ப முயன்ற காலத்தில் அவருடைய பிரசங்கத்தை ஆண்டு 885க்குச் சற்று முன்னாகத் திவாகரரும் ஒருகால் கேட்டிருக்கலாம். கேட்டபோது, கம்பர் கூற்றாக இவர் மகாபலியின் பெருமையை நன்குணர்ந்திருக்கிறார். ஆத லால் தான் இந்தச் சிறந்த சக்கரவர்த்தியின் பெயரும் தம் நூலில் அடங்க வேண்டும் என்பதற்காக ஒரு சூத்திரம் செய்தார்.

முன்னே நாம் காட்டியபடி 880க்குள் இவர் தம் நிகண்டை எழுதி முடித்துவிட்டார், பின்னால் இச்சூத்திரத்தைச் செய்து சேர்த்துக் கொண்டார் என்று கருதுவதில் இழுக்கில்லை அல்லது முன்னால் கம்பர் பிரசங்கம் கேட்டு இவர் நிகண்டு செய்தார், பின்னால்தான் இராமாயண அரங்கேற்றம் என்று கருதினாலும் தவறில்லை. அறிஞர் இக்கருத்துக்களைச் சிந்திப்பார்களாக. இதனாலும் திவாகரரது காலம் கம்பர் இராமாயண அரங்கேற்றத்தை ஒட்டிய காலம் என்பது வரையறை பெறுகின்றது.

8. இனிமையும் நீர்மையும் தமிழ் எனலாகும் என ஒரு சூத்திரம் பிங்கல நிகண்டில் காணப்படுகிறது. திவாகரத்தில் தமிழுக்கு இப்படிப் பொருள் சொல்லவில்லை. இது நன்கு சிந்திக்கத்தக்க ஒரு செய்தி. திவாகரருக்கும் பிங்கலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் இச்சொல்லுக்கு இப்பொருளாட்சி வந்திருக்கிறது. தமிழ் ஒரு சிறப்புடைச் சொல்லாதலால், தம் காலத்தில் இப்பொருள் எங்கேனும் பயின்றிருந்தால் இவர் இதைச் சொல்லியிருப்பார் என்று நாம் நம்பலாம். அவ்வாறு பயிலவில்லை. முதன்முதல் சீவக சிந்தாமணியில் தான் தமிழ் இனிமை என்ற பொருளில் ஆட்சிக்கு வருகிறது (1026)

> தமிழ்தழிய சாயலவர் தங்குமலர்த் தூநீர்
> உமிழ் கரகம் ஏந்தஉர வோன் அமர்ந்துபூசி
> அமிழ்தனைய பஞ்சமுக வாசமமைத் தாய்ந்த
> கமழ்திரையும் காட்டஅவை கொண்டுகவு ளடுத்தான்.

இங்கு தமிழ்தழிய சாயலவர் - இனிமை தழுவிய சாயலையுடையவர் என்று நச்சினார்க்கினியர் பொருள் எழுதுகிறார். எனவே, பிங்கலர் நிகண்டு செய்தபோது, சிந்தாமணி தோன்றிவிட்டது, திவாகரர் காலத்தில் தோன்றவில்லை என்று நாம் திட்டமாய்க் கருதுவது பிழையாகாது. பிங்கலருடைய காலம் 10ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்று நிறுவப்பெற்றுள்ளது.* பிங்கலர் திவாகரருக்குப் புதல்வர் (அல்லது மாணாக்கர்) என்பது வரலாறாதலால், அது கொண்டு திவாகரர் காலமும், இடையே சிந்தாமணியின் காலமும் வரையறை பெறுகின்றன. 880-2 இல் நிகண்டு செய்த திவாகரர் தமிழ் - இனிமை என்று கண்டவர் இல்லை; அடுத்துச் சிந்தாமணி இப்படி சொல்கிறது. இதைக் கண்டு பிங்கலர் இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும் என்று சொல்கிறார் என்பது தெளிவு.

---

* எமது தமிழ் இலக்கியவரலாறு 10ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

**9.** சிற்பத் தொழிற் பத்துறுப்பு : மேற்கூறிய கருத்துக்களுக்கு ஆதரவு தரும் வகையில் இக்குறிப்பு அமைந்துள்ளது. பன்னிரண்டாவது பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி என்ற பகுதியில், பத்து என்ற எண்ணுக்குரிய பல பொருள்களில் சிற்பத் தொழிலும் ஒன்று, சூத்திரம் பின்வருவது:

> **கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்**
> **மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்**
> **கண்டசருக் கரையும் மெழுகும் என்றிவை**
> **பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாவன.**

இவை சிற்பத் தொழிலுக் குறுப்பல்ல; சிற்பத் தொழில் செய்தற்கு ஏற்ற பொருள்கள். இங்கு பத்தினுள், கல்லும் உலோகமுமே இன்று வரை வழிபாட்டுக்கான சிலை வடிக்கும் பொருள்களாயுள்ளன. தந்தம் விலையுயர்ந்தது, இக்காலத்தில் பொருட் காட்சிக்குச் செய்வதற்காகவே உபயோகப்படுகிறது. மெழுகு அயல் நாடுகளில் காட்சிப் பொருள் செய்யவே பயன்படுகிறது. மண் வண்ணம் கண்டசருக்கரை* என்பன உடனே கரைந்து விடும் தன்மையுடையவை: அவற்றால் சிற்பம் செய்தால் அழிந்து விடும். செங்கல்லும் மரமும் சிறிது காலம் இருக்கும், பின்னர் அழிந்து போகும், மரத்தால் செய்த சிற்ப வடிவங்கள் தமிழ் நாட்டுக் கோயில் தேர்களில் மட்டுமே காணப்படுகின்றன. சுதை என்பது, செங்கல்லாலும் சுண்ணாம்பாலும் செய்வது, சிவாலயங்களில் சில சமயம் துவாரபாலகர் சிலைகளும் இலக்குமி சிலைகளும் இச்சுதைச் சிற்பமாகச் செய்யப் பெறுதல் உண்டு. இது அபூர்வம். வேறு சுதை வடிவங்கள் இருப்பதில்லை. விமானத்திலும் கோபுரத்திலும் உள்ள எல்லா வடிவங்களும் சுதையால் அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் திருமால் ஆலயங்களில், பல பெருங் கோயில்களில், மூல மூர்த்தியே சுதையால் செய்யப் பெற்றிருக்கும்; அதுபற்றி அம்மூர்த்திக்கு எப்போதும் நீரால் அபிஷேகம் செய்வதில்லை. எடுத்துக்காட்டாக, கோயில் என்று பிரசித்தி பெற்ற திருவரங்கத்தில் பள்ளி கொண்டு எழுந்தருளியுள்ள திருவரங்கநாதன் திருவுருவத்தையே கூறலாம்.

திவாகரர் இப்பத்தையும் தேடி எடுத்துப் பத்தெனக் கணக்கிட்டுச் சொல்வதில் ஒரு பொருத்தம் இருப்பது தெரிய

---

* வெல்லப் பிள்ளையாரைக்கிள்ளி அவருக்கே படைத்தல், வெல்லப் பிள்ளையார் எந்த இடத்தில்தான் தித்திக்காது என்ற பழமொழிகள் இவ்வுருவத்தைக்கொண்டு எழுந்தனவாகல் வேண்டும்.

வருகிறது. இவர் நிகண்டு செய்த காலம், சோழர் பேரரசு ஆதித்த சோழன் தலைமையில் தலையெடுக்கத் தொடங்குகிற காலம். இவர் சோழ நாட்டினர். ஆதித்த சோழன் காவிரியாற்றின் இரு மருங்கும் உள்ள பல சிவாலயங்களை மலைபோன்ற கற்றளி களாக எடுத்தான் என்று அன்பில் செப்பேடுகளில் காணும் வடமொழிப் பகுதி கூறுகிறது. கோயில்கள் ஆகமங்களில் விதித்தவாறு கட்டப் பெற்றன. ஆகமங்களின் சிற்பப்பகுதி, சிற்பம் அமைக்கும் முறையையும் கூறுகிறது. ஆதித்த சோழன் காலத்தில் ஆகமங்கள் சிறப்பான முறையில் ஆட்சியில் இருந் திருக்கின்றன. இந்த நிலையைத் திவாகரர் நேரில் கண்டுணர்ந்து அதையொட்டியே தமது நூலில் சிற்பம் அமைப்பதற்குரிய பொருள்களை இவ்வாறு எண்ணிட்டுச் சொல்கிறார் என்று கருத வேண்டும். எனவே, இந்தச் சூத்திரம், இவர் நூல் செய்த காலம் ஆதித்தசோழன் காலம், 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்று கொண்ட முடிவுக்குத் துணை செய்வதைக் காணலாம்.

**10.** இதுவரை, நிருபதுங்கராகம், மாவலியவுணன், தமிழ் என்ற சொற்களின் பொருளை ஆராய்ந்து அவற்றின் துணை யால் திவாகரர் காலம் 9ஆம் நூற்றாண்டின் இறுதி என்று நிறுவினோம். மற்றொரு சொல்லும் இதற்குப் பெருந்துணை புரிகிறது. பல்லவர் என்ற சொல். இதுபற்றிய ஒரு விரிவான குறிப்பை யாம் பிங்கலர் காலம்* குறித்து ஆராய்ந்த இடத்துக் காணலாம். அக்கருத்தை இங்கு சுருக்கிக் கூறுகிறோம். சேர சோழ பாண்டியர் (குறுநில வேந்தர் - சளுக்கியர்) என்றெல்லாம் விரிவாகச் சொல்லுகின்ற திவாகரர் பல்லவரைச் சொல்ல வில்லை. பல்லவர் உதவி பெற்று ஆதித்த சோழன் வரகுண பாண்டியனை வென்றது காரணமாக, இவர் பல்லவ மன்ன னாகிய நிருபதுங்கனைச் சிறப்பித்தார் என்று காட்டினோம். ஆயினும் பல்லவர் சோழநாட்டின் அன்றைய சக்கரவர்த்திகள்; சோழன் சிற்றரசன். ஆகவே நாட்டுப்பற்று மிகுதியும் கொண்ட திவாகரர் நிருபதுங்கனுக்கு நன்றி பாராட்டினும் பல்லவரை ஏற்றுக் கொள்ளச் சித்தமாயில்லை. ஆகவே பல்லவரைச் சொல்லவில்லை; சொன்னால், சோழ நாட்டின் அதிபதி என்று சொல்ல வேண்டுமே! இவ்வாறு சொல்ல அவருக்கு மனம் ஒருப்படவில்லை. ஆகவே தெரிந்தே, வேண்டாமென்றே, இச் சொல்லை விட்டு விட்டார்.

---

* எமது தமிழ் இலக்கியவரலாறு 10ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

அடுத்து வருகிறார் பிங்கலர் (கி.பி. 900 - 925). இவர் திவா கரருடைய புதல்வர் (அல்லது ஞானபுத்திரர்). இவர் கீழோர் பெயர் என்று பெயர் சொல்லும் போது, 'பல்லவர் கயவர் நீசர் பதகர்....வெளிறர் அற்பர் கீழோர் பெயர்' என்கிறார். சக்கர வர்த்திகளான பல்லவர் இவருக்குக் கீழோர் ஆகிறார்கள். எப்படி முடியும்? இளம் ரத்தம்; நாட்டுப்பற்றுக் காரணமாக, எஜமான் நிலையிலிருந்த பல்லவர் வமிசம் அழிந்தவுடனே, இது இப்படிக் கீழிறக்கிப் பழிக்கிறது. முதியவரான திவாகரர் கௌரவமாக, நாட்டுப்பற்றுக் குறைவில்லாதிருந்தும், இந்தச் சொல்லைச் சொல்லாமல் விடுகிறார். இந்த நிலையை ஆழ்ந்து சிந்தித்தா லும், திவாகரர் காலம் 9ஆம் நூற்றாண்டின் இறுதி என்பது தெளிவாகப் புலப்படும்.

### அம்பர்ச் சேந்தன்*

சேந்தன் என்ற பெயர் தமிழிலக்கியங்களிலும் வரலாற்றி லும் பல நூற்றாண்டுகளில் வருகிறது. அது காரணம் பற்றியே அப்பெயர் சிறிது குழப்பத்துக்கும் இடம் கொடுக்கிறது. சங்க காலம் தொடங்கியே சேந்தர் பலர் இருந்து வந்திருக்கிறார்கள். ஆகவே அனைவர் பெயரையும் தொகுத்து, எளிதில் புரிந்து கொள்ளும் பொருட்டு ஓர் அட்டவணையாக இங்குத் தரு கிறோம். சேந்தன் என்பது முருகனுக்குரிய பெயர் என்பதும் நினைவு கூரத்தக்கது. (சேந்தன் - சிவந்த நிறமுடையவன்) பொதுவாகத் தமிழ்நாட்டினர் பழுப்பு நிறம் அல்லது கருநிற முடையவர்கள்; இவர்களுள் இவ்வம்பர்ச்சேந்தன் மரபினரும் கருநிறமுடையவர்களே. இவனொருவன் மட்டும் சற்றே சிவந்த நிறம் பெற்றிருந்தமையால் சேந்தன் எனப்பட்டான் போலும். இராசராச மன்னனுடைய தந்தையான இரண்டாம் பராந்தகன் சிவந்த நிறம் பெற்றிருந்தமை பற்றிச் சுந்தரச்சோழன் எனப் பட்டமையும் இங்குக் கருதுக. (பாண்டிய மன்னர் ஓரளவு வடமொழி மோகம் உடையவர்களாதலால் சேந்தன் என்பது ஜயந்தவர்மன் என்பதன் தமிழ் வடிவம் என்றும் கூறுவர்; அட்டவணையில் 4ஆம் பெயர்)

---

* அம்பர், நன்னிலம் தாலுக்காவில் பூந்தோட்டத்தருகே உள்ள பாடல்பெற்ற தலம்; கோச்செங்கட் சோழர் கட்டிய மாடக் கோயில். பெயர் அம்பர் என்பதே தவிர, அம்பல் அல்ல; அம்பர், அம்பல் என, பந்தர் - பந்தல் போல, மரூஉ மொழியாக வழங்கும். அம்பற் சேந்தன் என்பது பிழை; அம்பர்ச்சேந்தன் என்றே கொள்ளற்பாலது; இன்னம்பர் நல்லம்பர் என்ற பெயராட்சிகளையும் காண்க.

**சேந்தன் என்ற பெயர் அட்டவணை**

| எண் | பெயர் | ஊர், தந்தை முதலான உறவு | நூல் | பாடியவர், வரலாறு | காலம் |
|---|---|---|---|---|---|
| 1 | அம்பர் கிழான் அருவந்தை | அம்பர்; ஒரு சேந்தன் தந்தை போலும் | புறம் 385 | பாடியவர் கல்லாடர். அம்பர் கிழவோன் நல்லரு வந்தை. | சங்க காலம் |
| 2 | சேந்தன் தந்தை அழிசி | ஆர்க்காடு சோழநாடு | குறுந்தொகை 285 | ஏந்து கோட்டியானைச் சேந்தன் தந்தை : பரணர். | சங்க காலம் |
| 3. | பூதஞ் சேந்தனார் | தந்தை பூதன்; மதுரைத் தமிழாசிரியர் | இனியவை நாற்பது | – | 7ஆம் நூற்றாண்டு. |
| 4. | செழியன் சேந்தன் | பாண்டி மன்னன், நெடுமாறன் தந்தை | சரித்திர வரலாறு | வேள்விக்குடிச் சாசனம்; மண்மகளை மறுக்கடிந்த சேந்தன். | 625 - 640 |
| 5. | அம்பர்ச்சேந்தன் | அம்பர் | திவாகரத்தில் | 19 இடத்தில், அருவந்தையின் தந்தை; 'இன்னமுதமூட்டி' என்ற பாட்டு | 850 - 880 |
| 6 | சேந்தன் | பொன்பற்றி | வீரசோழியம் உரைப்பாடல் | பொன்பற்றி காவலன் | 11ஆம் நூற்றாண்டு |
| 7 | செப்புறைச் சேந்தர் | செப்புறை | திருப்பல்லாண்டு | 'பறைச் சேந்தர்' நம்பியாண்டார் நம்பி. | 950 |
| 8. | சேந்தன் - தூமாண் தமிழின் கிழவன் | வள்ளல் | சூளாமணியில் | தோலா மொழித்தேவர் | 11ஆம் நூற்றாண்டு |
| 9. | நாங்கூர்ச் சேந்தன் | நாங்கூர் | பட்டினத்தார் பாடல் | அரசன் தளையிட்ட செய்தி (மத்தளை தயிர் என்ற பாட்டு.) | 14ஆம் நூற்றாண்டு |
| 10. | கூத்தப் பெருஞ்சேந்தன் | - | தொல். எச்சவியல் உரை மேற்கோள் வெண்பா | சேனாவரையர் | - |

சேனாவரையர் எச்சவியலில் (460 நூற்பாவுரை) கூத்தப் பெருஞ்சேந்தனைக் குறித்த வெண்பா வொன்று தருகிறார்.

**கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்**
**வைகலும் ஏறும் வயக்களிறே – கைதொழுவல்**
**காலேக வண்ணனைக் கண்ணாரக் காண எம்**
**சாலேகம் சார நட.**

'எம் சாலேகம் சார நட' என்ற தொடர் முத்தொள்ளாயிரத் தொடர். இப்பாடலினாசிரியர் ஒருகால் 9ஆம் நூற்றாண்டுக் குரியவராயிருக்கலாம். இவர் பற்றியோ இச்சேந்தன் பற்றியோ விளக்கமில்லை. இச்சேந்தன் அம்பர்ச் சேந்தனாயிருத்தலும் கூடுவதே.

இப்பலருள்ளும் நாம் இங்கு கருதுவது, அம்பர்ச் சேந்தன் (எண் 5) என்ற வள்ளலை. இவனே திவாகரருக்கு மிக்க ஆதரவு தந்து அவரைக் கொண்டு இந்நிகண்டு செய்வித்திருக்கிறான். அம்பர் என்ற ஊர், சோழ நாட்டிலுள்ள பாடல் பெற்ற தலம். அம்பர் கிழான் அருவந்தை என்பவன் கடைச்சங்க காலத்தில் இவ்வூரில் வாழ்ந்திருக்கிறான் என்பது, கல்லாடனார் இவனைப் பாடியிருப்பதால் (புறம் 385) அறிகிறோம்;

**– என் பசி களைந் தோனே**
**காவிரி யணையும் தாழ் நீர்ப் படப்பை**
**நெல்விளை கழனி அம்பர் கிழவோன்**
**நல் அரு வந்தை வாழியர்.**

காவிரி இங்கு அரிசிலாறு; இவ்வாறு காவிரியின் கிளை நதி. இன்றும் அம்பர் அருகே ஓடுகிறது. அம்பரில் வாழ்ந்தவன் இப்பாடலில் குறிப்பிட்டுள்ள அம்பர் கிழான்* அருவந்தை; குணச்சிறப்பினால் இவன் நல் அருவந்தை எனச் சொல்லப்

---

* *அம்பர் கிழான் என்ற தொடரை இளம்பூரணர் காட்டுகிறார்; காலம் 11ஆம் நூற்றாண்டு. நற்றிணையிலும் குறுந்தொகையிலும் சேந்தன் தந்தை அழிசி என்றொரு தலைவன் சொல்லப் பெறுகிறான்; இவனும் 'காவிரிப் பல நாடு பெருந்துறை மருதொடு பிணித்த ஏந்து கோட்டு யானைச்சேந்தன்' தந்தை அழிசி; இவன் ஊர் ஆர்க்காடு (குறுந்தொகை 258). அம்பரும் ஆர்க்காடும் காவிரி நாட்டில் உள்ளவை. இவ்வழிசி, அம்பர்ச்சேந்தனுடைய தந்தையா என்பது தெரியவில்லை. அம்பர் நாடன் ஆலங்குடிக்கோன் என்று ராசராசன் 1 திருக்கோவலூர்க் கல்வெட்டு கூறுகிறது.*

பெறுகிறான். அருவந்தை என்பது குடிப்பெயர் என்று சிலர் கருதுவர்; அருவன் தந்தை அருவந்தை என்று அடுத்துக் காட்டு கிறோம்.

திவாகரர் திவாகரத்துள் 19 இடங்களில் அம்பர்ச் சேந்தனைக் குறிப்பிடுகிறார். இவற்றுள் பன்னிரண்டு இடங்கள் பன்னிரண்டு தொகுதிகளின் முடிப்புரையாகும். பிற ஏழு இடங்கள் வாகை, கழகம், சங்கநிதி பதுமநிதி, கழல், அறிமடம், கொடை மடம், பொறை என்ற பொருள்களை விளக்கும் இடம். பொருள் விளக்கத்துக்காக இவ்வாறு குறிப்பிடும் இடங்கள் பத்தொன் பதையும் ஒரு சேரத் தொகுத்துத் தொடர்பாகப் பின்னே தரு கிறோம். ஏடுகளில் சில தொகுதிகளின் இறுதியில் முடிப்புரைக்கு ஒரு தலைப்புரையும் தரப்பட்டுள்ளது. இத்தலைப்புக்களையும் உரிய இடங்களில் தந்திருக்கின்றோம். இவற்றால் சேந்தனைக் குறித்த பல செய்திகள் விளக்கமாகின்றன.

1. வடநூற் கரசன் தென்தமிழ்க் கவிஞன்
கவியரங் கேறும் உபயகவிப் புலவன்
செறி குணத்து அம்பர் கிழவோன் சேந்தன்
அறிவுகரி யாகத் தெரிசொல் திவாகரத்து
முதலாவது தெய்வப் பெயர்த்தொகுதி முற்றும்.

2. சேந்தன் பெருமையின் பெயர்

கற்ற நாவினன், கேட்ட செவியினன்
முற்று முணர்ந்த மூதறி வாளன்
நாகரிக நாட்டத்தன், ஆரியன் அருவந்தை
தேருங் காட்சிச் சேந்தன் திவாகரத்து
இரண்டாவது மக்கட் பெயர்த் தொகுதி முற்றும்.

3. காதல் ஈகையிற்* போதியிற் பெருந்தவன்
தெவ்வடு கால வைவேல் எழிலி
அவ்வை பாடிய அம்பர் கிழவன்
தேன்றார்ச் சேந்தன் தெரிசொல் திவாகரத்து
மூன்றாவது விலங்கின் பெயர்த் தொகுதி முற்றும்.

---

* காதலி கையில் என்று சிலர் அச்சிட்டுள்ளனர்; இது ஏடு படிக்கத் தெரியாமையால் வந்த பிழையாகும். 'காதல் - உயிர்களிடத்து அன்பு . போதியிற் பெருந்தவன் - புத்தன். எழிலி - மேகம்.

4. *திவாகர வரலாற்றின் பெயர்*

நாடேபிற நாட்டிற் குவமை, யாறே
காலம் அறிந்துதவுங் காவிரி தானே,
ஆடவர் திலகன் அம்பர் மன்னன்
நீடிசைத் தலைவன் அருவந்தைச் சேந்தன்*
ஆய்ந்த திவாகரத்து அரும் பொருள் விளக்கும்
நான்காவது மரப்பெயர்த் தொகுதி முற்றும்.

5. *திவாகர வரலாற்றின் பெயர்*

ஒருவர்க் கொருவ ராகி உதவியும்
பரிசின் மாக்கள் பற்பல ராயினும்,
தன்னொரு வன்னே, தரணி மானவன்
செந்தமிழ்ச் சேந்தன் தெரிந்த திவாகரத்து
ஐந்தாவது இடப் பெயர்த் தொகுதி முற்றும்.

6. *திவாகர வரலாற்றின் பெயர்*

வருநற் கங்கை வடதிசைப் பெருமையும்
தென்றிசைச் சிறுமையும் நீக்கிய குறுமுனி
குண்டிகைப் பழம்புனற் காவிரிப் பெரும்பதி
அம்பர்க் கதிபதி சேந்தன் திவாகரத்து
ஆறாவது பல் பொருட் பெயர்த் தொகுதி முற்றும்.

7. முற்றவப் பயனோ கற்றவப் பயனோ
சாபத் திழுக்கிய தேவ சாதரில்
தோற்ற முடையனென அம்பர்த் தோன்றிய
இயற்கைச் சேந்தன் தெரிந்த திவாகரத்து
ஏழாவது செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி முற்றும்.

8. *திவாகரச் சேந்தன் பெருமைப் பெயர்*

மறக்குறும் போட்டி அறத்தின் வழி நின்று
கவிகைத் தண்ணளி புவிபெற ஆணையின்
ஐம்புல னாளும் அம்பர்த் தோன்றிய
திண் பெருஞ் சேந்தன் திவாக ரத்து
எட்டாவது பண்பு பற்றிய பெயர்த் தொகுதி முற்றும்.

---

* *அருவந்தை என்ற சொல்லுக்குப் பொருள் தேடி இடர்ப்பட வேண்டியதில்லை. சங்கநூல்களில் நாகன் தந்தை நாகந்தை; சாத்தன் தந்தை சாத்தந்தை இவை போல அருவன் தந்தை அருவந்தை; அருவந்தையின் பெயர் சேந்தன்; அவ்வளவே.*

9. *சேந்தன் பிரதாபப் பெயர்*

அண்ணல் செம்பாதிக் காணி யாட்டியை,
பெண்ணணங்கை, மூவுலகும் பெற்ற வம்மையை
செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த
நாவலன் அம்பர் காவலன் சேந்தன்
இயல்வுற்ற திவாகரத்து ஒன்பதாவது
செயல் பற்றிய பெயர்த் தொகுதி முற்றும்.

10. *சேந்தன் கவித் திறத்தின் பெயர்*

அரக்கரைப் பொருத முரட்போர் வில்லும்
பாரதம் பொருத பேரிசைச் சிலையும்
தாருகற் கடிந்த வீரத் தயிலும்
பாடிய புலவன் பதியம்பர்ச் சேந்தன்
பயில்வுற்ற திவாகரத்துப் பத்தாவது
ஒலி பற்றிய பெயர்த் தொகுதி முற்றும்.

11. புலவி நீக்கிய கல்விச் செல்விக்கு
அமிழ்து சுவையீந்த அரும்பெற லின்பத்து
ஒரு பெருஞ் செல்வன் அருவந்தைச் சேந்தன்
பகர்வுற்ற திவாகரத்துப் பதினோ ராவது
ஒரு சொற் பல் பொருட் பெயர்த் தொகுதி முற்றும்.

12. *திவாகரஞ் சிறப்பித்த சேந்தன் பெருமைப்பெயர்*

செம்பொற் குடையான், அம்பர்ச் சேந்தன்
நன்ன ராளன், நலமிகு நாட்டத்தன்
பன்னிய சிறப்பிற் பன்னிரண்டாவது
பல் பொருட் கூட்டத் தொரு பெயர்த் தொகுதி முற்றும்.

*இவையன்றி, நூலினிடையிலும் சேந்தனைக் குறிப்பிடுகிறார்.*

*13. நான்காவது மரப்பெயர் தொகுதி; (வரம்பில்லாத கல்வியிலும் படையிலும் கொடையிலும் பிறரை வெல்லுநர் அணியும் வெற்றிப்பூவின் பெயர்): வாகை.*

நல்லிசை அம்பர்ச் செல்வச் சேந்தனில்
வல்லிற் கல்வியில் படையில் கொடையில்
வெல்லுநர் அணி வாகை வெற்றிப் பூவே*

---

* *இப்பாடல் அச்சுப் பிரதியில் காணப்படவில்லை என்று வையா புரிப்பிள்ளையவர்கள் தமது நிகண்டுகள் என்ற கட்டுரையில் குறிப்பிட்டிருப்பது (இலக்கிய மணிமாலை, பக்கம் 205) பிழை யாகும்; எமது ஏட்டில் உள்ளது, அச்சிலும் உள்ளது.*

14. *ஐந்தாவது இடப் பெயர்த் தொகுதி*

செல்லல் தீய்க்கும் பல் புகழ்ச் சேந்தனில்
வல்லுநர் நாவலர் வாய்ந்த இடமும்,
மல்லும் சூதும், படையும், மற்றும்
கல்வி பயிலும் களமும் கழகம் ஆகும்.

15. *ஆறாவது, பல் பொருட் பெயர்த் தொகுதி*

செங்கை நிதி அம்பர்ச் சேந்தன் செங்கையில்
சங்கின் வடிவினது சங்க நிதியே;
தேமலர் அலங்கல் சேந்தன் கையில்
தாமரை வடிவினது பதும நிதியே.

16. *ஏழாவது செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி*

கெழுதகை அம்பர்க் கிழவோன் சேந்தனில்
விழைவுறு தியாகத்து வீரத்து வீக்கிய
கழலே ஆடவர் கால் மிசை அணிவடம்.

17. *எட்டாவது தொகுதி: அறிமடம்*

பெருஞ் சேந்தன் அம்பர்ப் பெருமான் போலத்
தெரிந்து பிறரறிவின் சோர்வு புறமறைத்து
அறிந்தும் அறியார் போறல் அறிமடம்.

18. *ஒன்பதாவது தொகுதி: கொடை மடம்*

திடமொழி அம்பர்ச் சேந்தனை ஏய்ந்த
கொடை மடம் வரையாது கொடுத்தலாகும்.

19. *பதினொன்றாவது, ஒரு சொல் பல்பொருட்பெயர்த் தொகுதி, அந்தத்துப் பொருள்:*

மலை சுமை பாரம் அம்பர்ச் சேந்தனோடு
உலவிய பொறுமை பார் ஐந்தும் பொறையே.

*இத்தனை குறிப்புக்களும் சேந்தன் தன்னைத் தானே சொல்லிக் கொண்டவை என்று ஓர் ஆராய்ச்சியாளர் சொல்வாரானால், அவருடைய ஆராய்ச்சியின் திறத்தை நாம் பெரிதும் வியக்கத் தான் வேண்டும்.*

*இனி திவாகரப் பாடல்கள் குறிப்பிடுகின்ற சேந்தன் பற்றிய செய்திகளைத் தொகுத்துக் கூறலாம். இவன் அம்பர் காவலன் (16 இடங்களில் 2, 5, 11 தவிர ஏனைய யாவும் அம்பரைக் கூறு கின்றன). தலைவனாக விளங்கினான்; மறக்குறும் போட்டி அறத்தின் வழி நின்று தன் கவிதையின் தண்ணளி புவி பெறும்படி*

செய்தான். ஐந்திணை நிலங்களிலும் ஆட்சி புரிந்தவன். அருவந்தைக் குடியில் தோன்றியவன். மக்களுட் சிறந்தவன் (அது பற்றி ஆரியன் எனப்படுகிறான்). இவனது நாடு, பிற நாட்டுக்கு உவமையாகச் சொல்லத்தக்கது. இங்கு ஓடும் நதி காவிரி. இது குறுமுனியின் கரகத்திலிருந்து வந்தது. இந்நதி மக்களுக்குக் காலம் அறிந்து உதவுவது.

நாகரிகம் பொருந்தியவன்;* கண்ணோட்டமுடையவன் பொறுமை மிக்கவன். உயிர்களிடத்து நிறைந்த அன்பினாலும் ஈகையினாலும் புத்தரை ஒப்பவன்; (காதல் - அன்பு; ஈகை - கருணையால் அளித்தல்) வரையாது வழங்குபவன். கல்வி, கேள்வி நிரம்பி, முற்றுமுணர்ந்து அறிவும் குணமும் செறியப் பெற்றவன். வடநூலும் தென் தமிழும் நன்குணர்ந்தவன்; இரு மொழிப் புலமை காரணமாகக் கவியரங்கேறும் உபயகவிப் புலவன் என்று ஆசிரியர் இவனைக் கூறுகிறார். பிறர் அறியாமையைக் கண்டவிடத்து அதை வெளிப்படுத்தாது அறிந்தும் அறியார் போல மறைந்து ஒழுகுபவன். இவ்வளவு அதிகமாக பாராட்டுரை வேறெந்த வள்ளலுக்கும் ஒரு புலவர் வழங்கியதாக நாம் காண வில்லை. சேந்தன், சிவபிரானது திருவுடலில் செம்பாதியைக் காணியாகப் பெற்ற உமாதேவியின் தாருகனைக் கடிந்த கோலத்தைச் சிறப்பித்துச் செந்தமிழ் மாலை அந்தாதி❖ பாடினான்; இது காரணமாகக் கல்விச் செல்விக்கு அமிழ்து சுவை ஈந்தான் என்று பாராட்டப் பெறுகிறான். இவன் திவாகரர் செய்த திவாகர நூலை நன்கு பயின்றான்.

10ஆம் எண்ணுக்குரிய பாடல் பற்றிய சில கருத்துக்களைக் குறிப்பிடலாம். அரக்கரைப் பொருத முரட்போர் வில் என்பது இராமன் இராவணனை வதைத்த செய்தியைச் சொல்வது: பாரதம் பொருத பேரிசைச் சிலை என்பது அருச்சுனன் தன் காண்டீவத்தால் வெற்றி கொண்ட பாரதப் போரைக் குறித்தது. தாருகற்றடிந்த வீரத்தயில் என்பது காளிதேவி தாருகாசுரனைக் கொன்ற செய்தியைக் குறித்தது. இம்மூன்றையும் பாடிய புலவன் பதியம்பர்ச் சேந்தன் என்று இப்பாடல் குறிப்பிடுகிறது. ஒருகால் சேந்தன் இராமன் கதையையும் பாரதக் கதையையும் காளி கதையையும் நூலாகப் பாடியிருக்கலாம். தனி நூல்களாகவே

* 12ஆம் பாடலில், நலமிகு நாட்டத்தன் - நனி நாகரிகன் என்ற ஒரு தொடரும் ஏடுகளில் காணப்படுகிறது.

❖ இவ்வந்தாதி இக்காலத்தில் கிடைக்கவில்லை.

பாடியிருக்க வேண்டும். மற்றுத் தனிப்பாடல்களாகப் பாடினான் என்றால், இராமனைப் பாடலாம். காளியைப் பாடலாம்; இடையிலுள்ள பாரதம் பொருத வில்லைப் பாடச் சந்தர்ப்பம் இல்லை. ஆகவே பெருநூலாகவோ சிறு நூலாகவோ தனியே பாடியிருக்க வேண்டும். முந்திய குறிப்பில் 'அம்மையை அந்தாதி புனைந் தான்' என்று சொல்லப்பட்டதற்கும் இது பொருந்தவே உள்ளது. தாரு கற்றடிந்த வீரத்தயிலைப் பாடியது இவ்வந்தாதியாகவே இருக்கலாம்; இந்நூல்கள் இன்று கிடைக்கவில்லை.

இத்தகைய சிறப்புக்களெல்லாம் அமைந்த சேந்தனால் பெரிதும் ஆதரவு தரப்பட்ட திவாகரர் தம் நன்றியறிதல் உணர்ச்சியினால், தாம் செய்த இந்த நிகண்டு நூலைச் சேந்தன் பெயராலேயே வழங்கச் செய்தார். அது சாரணமாகவே இது சேந்தன் திவாகரர் என்று சொல்லப் பெறுகிறது. உண்மையில் நூல் செய்தவர் திவாகரரே; சேந்தனைப் புகழ்வதால் சேந்தன் செய்தான் என்று எல்லா விடங்களிலும் சொல்லி விட்டார்; இது காரணமாகத்தான் சில இடங்களில் சேந்தன் தன்னைத் தானே இவ்வாறு தற்பெருமையாகப் புகழ்ந்து கொள்வானா என்று கேட்கும்படி இருக்கிறது.

இவ்வாறு ஒருவர் செய்து மற்றொருவர் பெயரில் வழங்கச் செய்வது வடமொழி வரலாற்றில் அதிகம். தமிழிலும் இவ்வாறு பல செய்திகள் உள்ளன. நிலக்கோட்டை சமீன்தாரும் அரியலூர் சமீன்தார்களும் ஆக்கம் குன்றிய பிறகு, ஆதரவிழந்து கண்ணும் தெரியாமல் பெரிதும் துன்புற்ற சுப்பிரதீபக் கவிராயருக்கு இத்தாலி தேசத்துப் பெஸ்கி என்ற பாதிரி, வாழ்நாளின் கடைசிக் காலத்தில் பேராதரவு அளித்தார். தம் நன்றியறிவு காரணமாகக் கவிராயர் பெஸ்கி விரும்பிய வண்ணம் தேம்பாவணி பாடிக் கொடுத்தார். சதுரகராதி தொகுத்துக் கொடுத்தார். வேறெத் தனையோ நூல்கள் செய்து கொடுத்தார். யாவும் பெஸ்கி பெயரா லேயே வெளியாயின (காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம்)

19ஆம் நூற்றாண்டில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை, தமது மாணாக்கரான வல்லூர்த் தேவராச பிள்ளை என்ற செல்வருக்காகக் குசேலோபாக்கியானம் பாடிக் கொடுத்துச் சிறப்புப்பாயிரமும் எழுதி அவர் பெயரிலேயே வழங்கச் செய் தார்; சூதசங்கிதையும் அப்படியே தேவராசப் பிள்ளை பெயரி லேயே வழங்குமாறு எழுதிக் கொடுத்தார். (ஐயரவர்கள் எழுதி வெளியிட்ட மீனாட்சி சுந்தரம் பிள்ளை சரித்திரத்தில் இந்நிகழ்ச் சிகள் விளங்க உரைக்கப்பட்டுள்ளன) தேசிக விநாயகம்பிள்ளை

தம் உறவினர் பெயரில் ஒரு தோத்திர நூல் எழுதிக் கொடுத்து வெளியிட்டார் என்று எம்மிடம் அவரே சொல்லியிருக்கிறார்; முதல் இரு பதிப்புக்களில் யாம் எழுதிய அவர் சரித்திரத்திலும் இச்செய்தி வெளியாகியிருக்கிறது. 1930 - 40க்கு இடைக்காலத்தில், பெருந்தமிழ்ப் புலவரொருவர், இலக்கியங் கண்ட தமிழ் மன்னனொருவன் வரலாற்றை ஆராய்ந்து அரிய நூலாக எழுதி, தம் பெயரையே அதற்குச் சூட்டாமல், ஒரு சரித்திரப் பேராசிரியருக்கே கொடுத்து விட்டார் என்பதைச் சிலரே அறிவர். வடமொழியில் இவ்வாறு நூலை வள்ளல் பெயரால் வழங்கச் செய்தல் அதிகம் என்பர்.

இச்செய்திகளை நன்குணர்ந்தால், திவாகரர் தம் நூலைச் சேந்தன் பெயரால் சேந்தன் திவாகரம் என்று வழங்கச் செய்தது ஒப்புக்கொள்ள முடியாத கூற்றாகத் தோற்றாது.

மற்றொரு குறிப்பு 'தெவ்வடு காலவைவேல் எழிலி' அவ்வை பாடிய அம்பர் கிழவோன்* என்பது மூன்றாம் பாடல். அவ்வை பாடிய அம்பருக்குத் தலைவன் என்று இதைக் கொள்ள வேண்டும்.

மேற்குறிப்பிட்ட வரிகளில் திவாகரர் அருவந்தையை மூன்று இடங்களில் குறிப்பிடுகிறார். 2, 4, 11 சங்க நூலில் சொல்லப் பட்ட அம்பர் கிழான் அருவந்தையின் மரபில் சுமார் ஏழு நூற்றாண்டுகள் கழித்துச் சேந்தன் என்று பெயருடைய மற்றொருவன் தோன்றியிருக்கின்றான். இவனும் சிறப்புடைய பெருவள்ளலாக வாழ்ந்தவன். காலந்தோறும் அருவந்தை என்ற பெயராலும் சேந்தன் என்ற பெயராலும் பலர் வாழ்ந்து எல்லோரும் தங்கள் பண்பினால் நல்லவர்கள் என்று பெயர் பெற்றிருக்கிறார்கள். சங்க காலத்துக்கு முன்னமே கூட இந்த நல்ல பண்பு பொருந்தி இருந்தது போலும். இது காரணமாக அருவந்தைக்கு நல்லருவந்தை என்ற பெயர்; ஊருக்குமே நல்லம்பர் என்ற பெயர் பொருந்திப் பிற்காலத்தில் 'நல்லம்பர் நல்ல குடியுடைத்து' என்று பாடலில் சிறப்பித்துப் பாடும் அளவுக்குப் புகழ் பெற்றிருக்கிறது. அம்பரை அவ்வை பாடியதாவது:

---

* ஏடுகளிலும் சில அச்சுப் பிரதிகளிலும் எழிலி என்றே உள்ளது. எழிலி - மேகம். நீலகண்ட சாஸ்திரியார் இதை எழினி என்று கொண்டிருப்பது பிழையாகும். அதியமான் மகன் பொகுட்டெழினியை அவ்வை பாடினார் ஆனால் அவனுக்கும் அம்பருக்கும் சம்பந்தமில்லை.

நல்லம்பர் நல்ல குடியுடைத்து; சித்தன் வாழ்வு
இல்லந் தொறும் மூன் றெரியுடைத்து; – நல்லரவப்
பாட்டுடைத்து சோமன் வழி வந்த பாண்டிய, நின்
நாட்டுடைத்து நல்ல தமிழ்.

என்பதாகலாம். ஆயின், இப்பாடல் பாடிய அவ்வையின் காலம் திவாகரர் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிக்கு முற்பட்டதாகும். இப்பாடலைப் பிற்காலத்தில் இலக்கிய மேற்கோளாக நச்சினார்க்கினியர் அவ்வையார் பாடியதென்று எடுத்துத் தருகிறார்.

வையாபுரிப்பிள்ளை, அவ்வை சேந்தன் காலத்தில் வாழ்ந்து அவனைப் புகழ்ந்து ஒரு நூல் பாடினார் என்று எழுதியிருக் கிறார்:* இது ஏற்கத்தக்கதன்று. ஒன்று, இப்படியொரு நூல் இல்லை, இருந்ததாக எந்த வரலாறும் இல்லை. இரண்டு, அவ்வை எத்தனையோ பேரைப் பாடினார் என்று பல வரலாறுகள் இருக்க, இச்சேந்தனைப் பாடினார் என்ற வரலாறு இல்லை. அன்றி, அவ்வை அம்பரைச் சுட்டிப் பாடிய பாடல் தமிழுலகம் நன்கறிந்தது. இங்கு அவ்வை சொல்லியது, 'நல்லம்பர் நல்ல குடியுடைத்து' என்பது. இது உண்மை என்பதை வரலாறு ஒப்புக் கொள்ளும். சங்ககாலந் தொடங்கி 12ஆம் நூற்றாண்டு வரை அம்பரின் புகழ் நூல்களிலும் பாடல்களிலும் உரைகளிலும் சாசனங்களிலும் சுட்டப்படுகிறது. ஆகவே நல்லம்பர் நல்ல குடியுடைத்து என்பது பொருளுடைய சொல். நல்லம்பர் வேறு ஊரல்ல; நல்ல குடியுடைமையால், நல் என்று அடை கொடுத்து அவ்வையார் கூறுகிறார். இதனால் நாம் முடிவு செய்வது, திவாகரம் குறிப்பிடும் சேந்தனுக்கு முன்னாக ஓர் அவ்வை இருந்து நல்லம்பர் என்று பாடியிருக்கிறார் என்பது மட்டுமே.

யாப்பருங்கல விருத்தி மேற்கோளாக வரும் பாடலொன்று அம்பர்ச் சேந்தனைக் குறிப்பிடுகிறது.

இன்னமிழ்தம் ஊட்டி, எழில்வளைசேர் முன்கைக்கொண்டு
என்னையர்பேர் சொல்என்று இரந்தாலும் – தென்னம்பர்ச்❖
செஞ்சுடர்வாள் வெஞ்சினவேல் சீர்ச்சேந்தன் என்னுமால்,
கிஞ்சுகவாய் அஞ்சொற் கிளி.

---

* அவருடைய தமிழிலக்கிய வரலாறு ஆங்கில நூல், 1959, பக்கம் 165.

❖ தனிச்சீர் தென்னயம்பை என்று உள்ளது. இது தென்னம்பர் என்றே இருந்திருக்கத்தக்கது. சேந்தன் என்ற தொடர்பால் இவ்வூர்ப் பெயர் இதுதான் என்று திட்டமாய்ச் சொல்லலாம். அம்பரை அம்பை என்று சொல்வதும் ஒக்கும்.

இப்பாட்டு அம்பர்ச் சேந்தனைப் போற்றுவது. விருத்தியுடையார் காலம் 11ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதி. இது கூறும் அம்பர்ச் சேந்தன் திவாகரரை ஆதரித்த அம்பர்ச் சேந்தன் என்று கருதுகிறோம்; காலம் 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி. அக்காலத்தில் தோன்றிய ஒரு தனிப்பாடலை 125 ஆண்டுகள் கழித்து வந்த யாப்பருங்கல விருத்திகாரர் எடுத்துக் காட்டுவது இயல்பே. சேந்தனைத் திவாகரர் போற்றுகின்ற முறையால், அவனைப் பின்னும் எத்தனையோ பெரும் புலவர்கள் பாடி யிருத்தல் கூடும் என்று நாம் யூகிக்கலாம். புலவர்கள் அவனைப் பாடலாலும் நூலாலும் போற்றியிருப்பார்கள். மிகவும் அழகான இந்தப்பாடல் அவற்றுள் ஒன்றென்று கொள்வது பொருத்தமே.

சரித்திர வல்லுநரான நீலகண்ட சாஸ்திரியார் ஆங்கிலத்தில் எழுதிய 'சேந்தன் திவாகரம், என்ற கட்டுரையில் முன் காட்டிய முதல் 12 பாடல்களையும் தந்து, பின்வரும் கருத்துப்பட எழுதி யுள்ளார். 'பிங்கல நிகண்டின் பாயிரத்தாலும் சூடாமணி நிகண்டின் பாயிரத்தாலுமே திவாகரன் என்ற பெயர் வழக்கத் துக்கு வந்தது; முந்தியது திவாகரர் நிகண்டு செய்ததாகச் சொல்ல வில்லை. பிந்திய தொன்றே திவாகரர் நிகண்டு செய்தார் என்று சொல்கிறது. இப்பாடலைச் செய்த மண்டல புருடர் வெறும் யூகமாகத்தான் திவாகரர் பெயரைக் குறிப்பிடுகிறார். ஆதலால் திவாகரர் என்று ஒருவர் இருந்ததும் அவர் திவாகரம் செய்ததும் வெறும் கற்பனை; பிங்கலர் ஒருவரே தம் பெயரால் நிகண்டு செய்தவர். திவாகர நிகண்டானது 12 பாடல்களிலும் சொல்லி யுள்ளமை போல அம்பர்ச் சேந்தனால் செய்யப்பட்டது. அப்படி யானால், சேந்தன் தன்னைப் பற்றியே இவ்வளவு தற்புகழ்ச்சி யாகப் பாடல் செய்து கொள்வானா? கொள்வான். திருஞான சம்பந்தர் தேவாரம் முழுமையிலும் தம்மைப் புகழ்ந்து சொல்லிக் கொள்ளவில்லையா? இனி 'கொடைமடம் என்பது, அம்பர்ச் சேந்தனைப் போல் வரையாது கொடுத்தல்' என்று தன்னைத் தானே இவ்வளவு சிறப்பாகப் புகழ்ந்து கொள்ள மாட்டார் என்று சொல்ல வியலாது. டாக்டர் ஜான்சன் என்ற ஆங்கிலப் புலவர் தம் அகராதியில் சில சொற்களுக்குப் பாதி நகையும் பாதி குத்தலு மாகப் பொருள் எழுதியது போல இவரும் எழுதியிருக்கலாம்'.

இக்கூற்றுக்கள் அனைத்துக்கும், மேலே நாம் ஆராய்ந்த அம்பர்ச் சேந்தன் வரலாறு போதிய விடையும் விளக்கமும் தரும். கொடைமடம் என்பதொன்றைச் சிறிது விளக்குவது அவசியம்.

சாஸ்திரியார் தம் கட்டுரையின் இறுதி அடிக்குறிப்பில், 'மடம் என்பது வடசொல்; துறவிகள் உறையுமிடம். இது அன்ன சத்திரம் என்றும் வழங்கும்; சத்திரம் என்ற வட சொல்லுக்கு வரையாது உணவு கொடுத்தல் என்ற பொருளுமுண்டு. உணவு கொடுத்தல் என்பது பிறவும் கொடுத்தல் என்று பொருள் விரிந்து விட்டது' என்றும் எழுதி, 'ஆனால் மடம், மடமையிலிருந்து வந்ததென்பர். புறநானூறு 142 உரை பார்க்க' என்று முடிக்கிறார். புறப்பாட்டு 142இல், 'வள்ளல்பேகன்,

> கொடைமடம் படுதல் அல்லது
> படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

'கொடையிடத்துத் தான் அறியாமைப் படுதலல்லது, பிறர் படை வந்து கலந்து பொரின் தான் அறியாமைப்படான்' என்று சொல்லுகிறது. இவ்வளவு பழமையான தமிழ் மரபு கொடை மடம் படுதல் என்ற தொடருக்கே இருக்கும்போது, சாஸ்திரி யார், மடம் என்றால் சத்திரம், சத்திரம் என்றால் உணவு கொடுத்தல், ஆகவே கொடை மடம் என்றால் உணவு கொடுத் தல் என்று சொல்லிக் கொண்டு போவது பொருந்தாத வாதமா கும். சேந்தன் தானே நூல் செய்து அதனுள் தன்னைப் போலக் கொடை மடம் படுதல் என்று கூறிக் கொள்ளலாம் என்பதற்கு ஆதரவாக இக்கொடை மட வரலாறு வந்தவிடத்து, இது பொருந்தாமற் போகவே, சேந்தன் தன்னையே இவ்வாறு கூறிக் கொள்ளலாம் என்பதும் ஆதரவற்றுப் போகிறது; சாஸ்திரியார் கூற்றைப் பகுத்தறிவு ஆமோதிக்காது.

## நூற் பிரிவுகள்

திவாகரம் 12 பிரிவுகளையுடையது; ஒவ்வொன்றும் ஒரு பெயர்த் தொகுதி எனப்படும். தொடக்கத்தில் விநாயகர், காப்புச் செய்யுளொன்று உள்ளது.

> தந்திமுகத் தெந்தைச் சதங்கைப் பதம்போற்றிச்
> சிந்தை விளக்காம் திவாகரத்துள் – வந்த
> தொகுதியொரு பன்னிரண்டும் சோராமல் நேரே
> பகுதியுற மனமே பற்று.

இது ஆசிரியர் செய்ததன்று; பிற்காலத்தில் நூலைப் படித்தோர் அல்லது ஏடெழுதினோர் செய்து கொண்டது.

ஒவ்வொரு தொகுதியின் முடிவிலும், 'சேந்தன் திவாகரத்து இன்ன பெயர்த் தொகுதி முற்றும்' என்று குறிப்புடைய சில

நூற்பா வரிகள் உள்ளன. இவற்றை முன்னர் ஒரு சேர எடுத்துக் காட்டினோம். மொழித் துறையில், உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் வழங்கிய எண்ணற்ற சொற்களை யெல்லாம், பொருளால் பத்துத் தொகுதிகளாகத் தொகுத்துக் கொண்ட திவாகரர் இப்பத்துத் தொகுதிகளும் ஏறக்குறைய சம அளவின வாகவும் ஒன்றிற் சொல்லிய பொருள் மற்றொன்றில் வராமலும் அமைத்திருப்பது, மிக்க அருமைப்பாடுடையது, வியப்புக்குரியது. சம அளவினவாக அமையும் அவசியமில்லை, அமைவதும் இயைவதன்று; எனினும், இவர் இச்சாதனையை நிகழ்த்தியிருக் கிறார். திருக்குறளை ஒப்பு நோக்கலாம். பால்கள் மூன்று; அறம் (பாயிரம் உட்பட) 38 அதிகாரம்; பொருள் 70, காமத்துப்பால் 25; இந்த அளவிலுள்ள வேறுபாட்டை ஒப்பு நோக்கும்போது, திவாகரப் பாகுபாட்டில் ஒத்த அளவுடைமையின் அழகு நன்கு புலப்படும்.

### 1. தெய்வப் பெயர்த் தொகுதி

இங்கு சொல்லப்பட்ட பொருள்கள் - தெய்வங்கள், தேவர், பஞ்சபூதம், கோள், இராசி, நாள், பொழுது, காலம் என்பன. தெய்வம் மட்டுமன்றி, பூதங்கள் நாள் கோள் காலம் முதலியனவும் தெய்வ அம்சமென்றே அக்காலத்தில் கருதப் பெற்று வந்தன. சில பொருள்களுக்குச் சொல்லப்பட்ட பெயர் களின் தொகை பின்வருமாறு: சிவன் 64, திருமால் 38, பிரமன் 27, இந்திரன் 2, கணபதி 6, முருகன் 25, அருகன் 43, புத்தன் 25, திருமகள் 12, நாமகள் 25; தேவியைக் கூறும்போது, உமை 8, காடுகாள் 7, காளி 14, பகவதி 22 என நான்கு தலைப்பில் பெயர் அமைத்திருக்கிறார்; காமக் கோட்டி* என்ற பெயரையும் சொல் லுகிறார். சிவன், திருமால், பிரமன், அருகன், புத்தன் முதலிய தெய்வப் பெயர்களைச் சொல்லும் போது நாமம் இன்னமும் பலவே, இன்னும் அனந்தம் பெயரே என்றும் சொல்கிறார். பஞ்ச பூதங்களில் காற்று, தீ, நீர் என்ற மூன்றிலும் பல பாகுபாடு களைக் கூறுகிறார். ஆனால் நிலம் என்ற பூதத்தை இங்கு சொல்லவில்லை. ஒன்பது கிரகம் 27 நட்சத்திரம் என்பன விரி வாய்ச் சொல்லப்பட்டுள்ளன: சூரியன் பெயர் 33; சந்திரன் 20;

---

* காமக் கோட்டி - காமக் கோட்டத்தில் உறையும் தெய்வம்; காமக் கோட்டம் - அம்பிகை கோயில் என்று பிற்காலக் கல்வெட்டுக்களில் காணப்படும். 'கச்சி வளைக்கைச்சி காமக்கோட்டம்' என்று அடியார்க்கு நல்லார் மேற்கோள் காட்டும் கரிகாலனைப் பற்றிய பாடல் காண்க.

நட்சத்திரத்தைச் சொல்லும் போது இன்ன தெய்வத்துக்குரிய தென்றும் சொல்லப்படுகிறது. கோள்களுக்கெல்லாம் பரியாயப் பெயர்கள் பல சொல்வது வியப்பாயுள்ளது. 27 நட்சத்திரங் களுக்கும் அனேகம் பெயர்கள் சொல்கிறார். இவை அக்கால மக்கள் சொல்லாட்சியைப் பிரதிபலிப்பன. தீர்த்தர் பட்டாரகர் - தேவர் பொதுப் பெயர் என்கிறார். மாதத்தின் ஒன்று முதல் ஐந்து வரையுள்ள பக்கங்கள் முறையே நந்தை, பத்திரை, சயை, இரித்தை, பூரணை. பிங்கலன் என்பது குபேரன் பெயர்களுள் ஒன்று.

நெருப்பின் பெயராக 21 பெயர்கள் உள்ளன; பின்னால் தீக்கடவுள் பெயர் என்று பாவகன் அத்தீக்கடவுள் பெயரே என்று ஒரு சூத்திரம் தரப்பட்டுள்ளது. இவற்றுள் பிழை இருக்கு மென்று தோன்றுகிறது; நெருப்பின் பெயருள் தீக்கடவுள் பெயர் களே பெரும்பான்மை தரப்பட்டுள்ளன. பின் வந்த பிங்கலத்தை ஒப்பு நோக்குக. தலையல் - மழை பெய்து விடுதல்; ஆசாரம் - பெருமழை; என்பன ஒத்தசில இன்று ஆட்சியில் இல்லை.

**2. மக்கட் பெயர்த் தொகுதி**

அருந்தவர்; அறிஞர், அரசர், பரிவாரங்கள், தொழிலாளர், கீழ் மக்கள், பெண்டிர், நானில மக்கள், உறவினர், படைகள், உடலுறுப்புக்கள் என்ற முறையில் பெயர்கள் வரிசைப் படுத்தப் பட்டுள்ளன. இங்கு காணப்படும் சில செய்திகள் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கன. சைவ தவப்பாலோர் என்று மாவிரதியர், காளாமுகர், பாசுபதர் என்ற மூவரையும் குறிப்பிடுகிறார். இவர் கள் எவரும் சிறந்து வாழ்ந்ததாக இலக்கியத்திலோ சமயத் திலோ வரலாறு இல்லை. ஒருகால் இவர் காலத்தில் சைவர் அனைவருமே வெள்ளையாடை அணிந்திருந்தனர் போலும். அப்பர் துறவியே யானாலும் வெள்ளையாடையே அணிந் திருந்தார். பிற்காலத்தில் (16ஆம் நூற்றாண்டு) ஆசாரியர்களா யிருந்த கமலை ஞானப்பிரகாசர், குருஞானசம்பந்தர், நமசிவாய மூர்த்தி ஆகியோர் வெள்ளுடையே உடுத்திருந்தனர்; பின்னிரு வரும் துறவிகள். செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போத்தந்தார்' என்று ஆண் டாள் கூறுவதும் இங்குக் கருதத் தக்கது; செங்கல் பொடிக் கூறை என்பதற்குச் சொல்லிய உரை பிரம்மசரியம் தோற்றுதல் என்பது. திவாகரர் குறிப்பிட்ட மாவிரதியராதியோர் மட்டும் துவராடை உடுத்திருந்தமையால் அவரைச் சைவ தவப்பாலோர் என்று குறிப்பிட்டார் என்று கருதவேண்டியிருக்கிறது; சைவர்

அன்று துவராடை உடுக்கவில்லை. சைவ தவப்பாலோர் என்று மாவிரதியர், காளாமுகர், பாசுபதர் என்று கூறுகிறார்; இவர்கள் இருந்தார்கள் என்பது பொருளன்று; முன் இருந்தோரைக் குறிக்க இச்சொற்கள் வழங்கின என்பதே பொருள். ஆசீவகரைச் சமண ரென்றே இவர் கூறுவதும் அறியத்தக்கது.

(பிற்காலத்தில் ஆசீவகர் சமணர் அல்லர் என்ற கருத்தும் சொல்லப்படும்)

அறிவுடையோர் ஆரியர் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டுப் பின்னர், மிலேச்சர் ஆரியர் என்றும் சொல்கிறார்; முதல் ஆரியர் ஐயர் என்றும், பின் ஆரியர் அன்னியர் என்றும் பொருள்படு வனபோலும். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே' என்று சூத்திரமும் இங்குக் காணப்படுகிறது. தமிழ் மூவேந்தரையும் குறிப்பிடும் போது கோச்சேரன், கோச்சோழன், கோப்பாண் டியன் என்கிறார்; இவர்கள் முடி மன்னராயிருக்க, மன்னர் மர பினரான வேறு சிலரும் இருந்தனர் போலும். இவ்வாறு முடி மன்னரல்லாதோர் இருந்தனர் என்பதைச் சங்க நூல்களால் அறிகிறோம். அரட்டரைக் குறுநில மன்னர் என்கிறார். சேரனைப் பொருநைத் துறைவன் என்கிறார்; ஆன் பொருநை என்ற நதிக் குரியவனாதலினாலே. சேரன் பெயரில் கேரளன் என்ற சொல் காணப்படுகிறது. மூவேந்தர் பெயர்களைப் பலர் சூடிக் கொண் டனர் போலும்; அதனால் இவர் கோச்சேரன் கோச்சோழன் கோப்-பாண்டியன் என்று தலைமை கொடுத்துக் கூறுகிறார்.

அபயன் என்ற சொல்லை இரண்டு இடங்களில் சொல்லு கிறார். ஒன்று சோழன் பெயராகவும், மற்றொன்று அருகன் பெயராகவும். இச்சொல், முதற் குலோத்துங்க சோழனுக்கு வழங்கிய சிறப்புப் பெயராயினும், சோழருக்கு வழங்கிய பொதுப் பெயர்; முதல் ஆட்சி இச்சொல்லுக்குத் திவாகரமே என்று தோன்றுகிறது. இப்படியே அகளங்கன் என்ற சொல்; விக்கிரம சோழனுக்குரிய சிறப்புப் பெயர். இச்சொல் இங்கு புத்தன் பெயராக வருகிறது, சோழன் பெயராக வரவில்லை.

நாராயண சமயத்தோர் பெயர் பாகவதர் என்கிறார். பழங் காலம் முதலே, ஆரிய ஆதிக்கத்தின் விளைவாகத் தமிழிலும் வருணப் பாகுபாட்டுணர்ச்சி நிலவியிருந்தது. அதனால் இவர் வேளாளர் சூத்திரர் என்கிறார். இயவுள் கடவுள் என்ற பொருளில் வருவதுண்டு; இவர் புகழாளன் என்கிறார். கூவநூல் என்று கிணறு அல்லது நீர் காணும் கலையைக் குறிப்பிடுகிறார்.

பெண்பாற் பெயர்களில், கோமான்,* ஆசாள் அடிகளத்தை என்று இவர் சொல்லுவது அபூர்வமாயுள்ளது. அப்படியே சூளை❖ - பரத்தை, பைஞ்ஞீன் - மக்கட்பரப்பு; பாடினி - பாட்டி என்பன குறிப்பிடத்தக்க சில சொற்கள். திரண்டோர் என்போரைக் குறிக்கச் சொல்லும் சங்கம், குழு முதலான சொற் களோடு இவர் கழகம் என்ற சொல்லைச் சொல்லவில்லை. வேறிடத்தில் சொல் கிறார்; அங்கு பொருள் சூதாடுமிடம். குரு குலத்தரசர் பெயர் சொல்கிறார்; ரகு குலம் போன்ற பிறவற் றைச் சொல்லவில்லை.

இக்காலத்தாருக்கும் சொல்லாக்கத்துக்குத் திவாகரம் பயன் படுவது என்பதை ஒரு சொல்லால் காட்டலாம். டிராவலர்ஸ் - பங்களா என்ற ஆங்கிலத் தொடருக்குத் தமிழ் காணுவதில் பேரிடர்; முசாபுரி பங்களா (பழைய ஆட்சி), வழிச் செல்வோர் மாளிகை, பயணிகள் மாளிகை, பிரயாணிகள் விடுதி என்றெல் லாம் தமிழாக்கத்தைக் காணலாம்.

**பதிகர் என்ப வழிச்செல் வோரே.**

என்பது திவாகரச் சூத்திரம்; பதிகர் என்று எளிதாக ஒரு சொல்லைப் படைத்துத் தருகிறது. 'அந்நாளில் ஒரு வணிகன் பதிகனாகி அணைவான்' என்ற தொடரில் (2376) பெரிய புரா ணம் இச்சொல்லைக் குறிப்பிடுகிறது. கம்மாளருள் யவன ரைக் குறிப்பிடுகிறார். மூக்கர்-கீழ் மக்கள் என்கிறார்; மூக்கம்- கீழ்மை; அப்பர் தேவாரத்துள் இச்சொல் வருகிறது; மூர்க்கப் பாம்பு என்றும் திருத்தியிருக்கிறார்கள்.

பல இடங்களில் ஆண்பாலுக்கும் பெண்பாலுக்கும் என்று சொற்களைப் பிரித்துத் தருகிறார். ஆண்பால் 9 சொல்; பெண்பால் 22; கூடா வொழுக்கத்தாற் பெறும் பிள்ளைகளை மூவகையாகக் காட்டுகிறார். ஆண் மயிர் பெண் மயிருக்குத்

---

* னகரமெய்யீறு பெற்ற பெண்பாற் பெயர்களைச் சாசனங்களிற் காணலாம் - அக்கன் நக்கன் என.

❖ அப்பர் தேவாரத்துள் 'உந்திநின்றார் உன்றன் ஓலக்கச் சூளைகள் வாய்தல் பற்றி' என்ற ஒரு வரி வருகிறது. சூளை பரத்தை என்று நிகண்டில் வரும் தொடரை வைத்து, வேசிகள் என்று இச் சொல்லுக்குப் பெரும் பண்டிதர் உரை எழுதியிருக்கிறார்கள். வாய்தல் பற்றி நிற்பவர் வாயில் காவலரேயன்றி வேசிகள் அல்லர்; எனவே, அருளாளர் சொல்லாட்சிகள், நிகண்டையும் கடந்த பொருள் தருவன என்றறிதல் வேண்டும். திவாகரர், அப்பருக்கு இருநூறு ஆண்டுகள் பிற்பட்டு வாழ்ந்தவர்.

தனித் தனியே 9, 14 சொற்கள். மைந்தர் மயிர் 3, பிற மயிர் 6, பின்னும் இது பற்றிய சொற்கள் 18. ஏழு பருவப் பெண்களைக் கூறுகிறார்; உலாப் பிரபந்தம் 8ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் எழுந்தமையால் இது பொருந்துவதே. (கொஞ்ச காலம் கழித்துப் பன்னிரு பாட்டியல் ஏழு பருவ ஆடவரையும் வயதையும் கூறுகிறது) உறவினரைக் கூறுமிடத்து அக்காள் (அக்கை) என்ற சொல்லை இவர் கூறவில்லை.

உடலுறுப்புக்களைக் கூறும் போது, பல்வேறு எயிறு வேறு என்று கருதுமாறு இவர் இரு தனிச் சூத்திரங்கள் செய்கிறார்; 'தந்தமும் தசனமும் தட்டமும் பல்லாம்'; 'முறுவலும் நகையும் மூரலும் எயிறும்' என்ற இரு சூத்திரங்களையும் காண்க. இதன் பொருளாவது, திவாகரர், பல் என்பதை உடல் உறுப்பாகக் கொண்டு, எயிறு என்பதை நகை, முறுவல் என்று அதன் செயலாக மட்டும் கொண்டிருக்கிறார். ஆனால் பிற்காலத்தில் இந்தப் பொருள் வரையறை கைவிடப்பட்டது போலும். இவருக்கு அடுத்து வந்த பிங்கலரே இந்தப் பொருள் வரை யறையைக் கைவிட்டார்; 'எயிறும் தந்தமும் தசனமும் பல்லே' என்று சொல்லிவிட்டு, அடுத்து 'முறுவலும் நகையும் மூரலு மாகும்' என்றும், 'எயிற்றின் பெயரே விளிம்பென இயம்பும்' என்றும் வேறு இரு சூத்திரங்கள் அமைத்திருக்கிறார். (1039, 1040, 1042) கடைசியில் சொல்லியது, எயிறு என்ற சொல் மருவி இன்று ஈறு (பல்லீறு) என்று வழங்குவதாகும். முதல் சூத்திரத்தில், எயிறு பல் என்று இவர் திட்டமாகக் கூறி விட்டார். சூடாமணி நிகண்டுடையார் இவரைப் பின்பற்றி, 'எயிறு தந்தம் மேவிய தசனம் பல்லே' என்றும், 'முறுவன் மூரல் பல்லுமாம் நகையு மாகும்' என்று பாடிவிட்டார்.

இவ்வாறுள்ள சொல்லாட்சிகளையும் விளக்கங்களையும் காணும் போது, எவ்வளவு விழிப்பாயிருந்து, சிறந்த மொழியிய லாசிரியராய்த் திவாகரர் நூல் செய்கிறார் என்பது நன்கு புலப்படும்.

**3. விலங்கின் பெயர்த் தொகுதி :**

விலங்கு என்ற பெயரில் இவர் கூறுவது, மக்கள் தேவர் தாவரம் அல்லாத பிற அனைத்துமாகும். வன விலங்குகளான சிங்கம், புலி, யானை; யாளி, நாட்டு விலங்குகள்; இவற்றுள் மூவேந்தர் ஊரும் மாக்கள் - கனவட்டம், பாடலம், கோரம்; குறுநில மன்னர் மா-கந்துகம். ஆடு பல வகை; ஆடு பற்றிய 41 சொற்கள். கழுதைப் பெயர்களுள் அத்திரி என்பதும் ஒன்று.

பின் நூற்றாண்டுகளில், இச்சொல்லின் பொருள் கோவேறு கழுதை என்றும் குதிரை என்றும் மாறியிருக்கிறது. பின்னர் உடும்பு, அணில் போன்றன. (இங்கு தொல்காப்பியம் மரபியலுட் சொல்லப்பட்டுள்ளமை போல, ஒரு சொற் பல் பொருள் விளக்கம் 38 சூத்திரங்கள். இவற்றுக்கு, மற்ற இடங்களில் சூத்திரந் தோறும் பெயர் எண்ணி இத்தனை என்று சொல்லும் எண் குறிக்கப் படவில்லை. எனவே, பின்னால் 11ஆம் தொகுதியுள் இருக்க வேண்டியவை தவறுதலாக ஏட்டில் இங்கு சேர்க்கப்பட்டன என்று கருதத் தோன்றுகிறது). அடுத்து விலங்குகளின் உறுப்புக் களின் பெயர்; பின் புட்கள்: 38 வகை; அவற்றின் உறுப்புக்கள், நீர் வாழ்வன; யானையை விழுங்குவது திமிங்கிலம், திமிங்கி லத்தை விழுங்குவது திமிங்கில கிலம் என்கிறார். கோடி ஆண்டு களுக்கு முன் வாழ்ந்த பிராணிகளையும் இவர் அறிந்து சொல் வது வியப்பாயுள்ளது. இவற்றால் அக்காலத்துத் தமிழ் மக்கள், ஆழ்கடலிற் சென்று திமிங்கல வேட்டையிலும் ஈடுபட்டு வந் தார்கள் என்று அறிகிறோம். அடுத்து யானையை அது பிறந்த நிலத்தைச் சார்த்தி மூன்று வகையாகச் சொல்கிறார்; மலை யைச் சார்ந்து வாழ்வது கிரிசரம், காட்டைச் சார்ந்து வாழ்வது வனசரம், ஆற்றைச் சார்ந்து வாழ்வது நதிசரம். யானையை ஒரு பொருட்காட்சிச் சாலையிலோ சர்க்கஸிலோ மட்டும் பார்த் துப் பழகிய நமக்கு, அவர் கூறும் பாகுபாடுகளைச் சுவைப்பது கூட இயலாதது. பிராணி நூல் வல்லார், இந்திய யானை ஆப்பிரிக்க யானை என இருவகை யானைகள் இருப்பதாகப் பாகுபாடு செய்து காட்டுவதும் இங்கு உணரத்தக்கது.

'யானையுடைய படை காண்டல் மிக இனிதே' என்பது பாட்டு. யானையைக் குறித்து இவர் ஆறு சூத்திரங்கள் சொல் லிய தோடன்றி, யானைச் செவி முதுகு வால் மதம் கவுள் மும் மதம் தாள் என்பன பற்றியும் வேறு ஏழு சூத்திரங்கள் அமைத் திருக்கிறார். யானைப் படையை உடன் இருந்து இவர் நன்கு அறிந்து பழகியவர் என்பதை இவை புலப்படுத்தும்.

பசுவின் பொது, ஆண் பசு, பெண் பசு என்று சொற்களைப் பாகுபடுத்திக் காட்டுகிறார். 'பசுவினத்தின் பொதுவாக இன்று வழங்கும் பெயர் மாடு (எருமையும் உட்பட). அக்காலத்தில் பசு என்பதே காளைக்கும் பசுவுக்கும் உரிய பொதுப் பெயராக, இனப்பெயராக வழங்கியது என்று அறிகிறோம். 'பசு ஏறும் எங்கள் பரமன்' என்பது தேவாரம். இது, திவாகரம் கூறும்

இலக்கணம், அதற்கு இரு நூற்றாண்டுகளுக்கு முன்னும் ஆட்சியிலிருந்தது என்பதற்குச் சான்று பகர்கிறது.

ஒருசார் விலங்கேற்றின் பெயருள் சேவல் என்ற சொல்லும் உள்ளது. 12 பெயர்களைக் கூறி, ஒவ்வொன்றின் பெயர் விரிவைப் பின்னே தனித்துக் காட்டுகிறார். ஆண் பெயர், பெண் பெயர், பிள்ளை பெயர். வண்டின் ஆணைத் தனியே சுரும்பு என்கிறார்; இது பொருளுடையது. பிற்காலத்தில் 'மலகரி குறிஞ்சி தேசி பயிரவி சுரும்பு பாடும் வயலருணை மங்கை பாகரே' என்பது பாட்டு. ஆண் தேனீ மட்டுமே பாடும் (இறக்கையால் ஒலி எழுப்பும்), பிற ஈக்கள் இசை எழுப்பமாட்டா என்பதைத் தேனீ வளர்ப்போர் அறிவர். 38 வகைப்புட்களைச் சொல்கிறார். இன்று நாம் அறிவோமோ இத்தனை? தமிழ் ஆராயும் புலவர் அறிவார்களா? வண்டு முதலான பூச்சி வகைகளைச் சொல்லிய பிறகு (இன்றைய) கொசுகை இரண்டு சூத்திரங்களாற் சொல்லுகிறார். அடுத்த தலைமுறையில் இது பிங்கல நிகண்டில் நான்காகி விட்டது. ஒரு தலைமுறைக்குள்ளாகக் கொசுகு அவ்வளவு பெருகி, சொற்களும் அதிகமாயின போலும். நண்டு, ஆண் நண்டு என்று சொல்கிறார்: எப்படிக் கண்டார்?

ஞலவல் என்ற சொல் நுளம்பின் பெயர்; 'அஞலமு ஞலவலு நொள்ளல் நுளம்பே' என்பது சூத்திரம். அஞலமும் ஞலவலும் என்று சொற்களைப் பிரிக்க வேண்டும்; முதல் திவாகரப் பதிப்புக்களில் இவை சரியாக உள்ளன. இவ்வாறு பிரிக்க அறியாமல் 1862இல் பண்டிதர்கள் உதவி கொண்டு அகராதி அச்சிட்ட வின்ஸ்லோ, 'அஞலம் முஞல் வலு' என்று மூன்று சொற்களாகப் பிரித்து மூன்றும் கொசுகு என்று உரை எழுதினார். இம்மூன்றும் அப்படியே தமிழ்ப் பேரகராதியில் (லெக்ஸிகன்) ஏறியுள்ளன. பிங்கலந்தையில் அஞலம் ஞலவல் என்றே உள்ளது.

சிறப்பாய்க் குறிப்பிடத்தக்க மற்றொரு பொருள் சரபம் என்பது, இது ஒரு புள் என்பார்கள், ஐதிகப் பிராணி. உக்கிரம் அடங்காத நரசிம்ம மூர்த்தியை அடக்குவதற்காக, தேவர்கள் வேண்ட, சிவபெருமான் இவ்வுரு எடுத்து வந்தார் என்பது புராணம். இதன் புகழைக் கூறவென்றே சரப புராணம் என்ற ஒரு புராணம் 16 ஆம் நூற்றாண்டில்* எழுந்தது. சரபம் எட்டுக்

---

* எமது தமிழிலக்கிய வரலாறு, 16ஆம் நூற்றாண்டு, பாகம் 1 அத்தியாயம் 4 பார்க்க.

காலுடையது. சிங்கம் போன்ற தலை; இரு சிறகுகளும் பொருந்தியது; சிங்க உடல், வால். சரப மூர்த்திக்கு மூன்றாம் குலோத்துங்கசோழன் பெருஞ்சிறப்புச் செய்திருக்கிறான். இம் மூர்த்திக்கென்றே திருவிடை மருதூருக்கு அருகிலுள்ள திருபுவனத்தில் பெருங்கோயிலெடுத்திருக்கிறான். இக்கோயில் எல்லா வகையான சிறப்பும் வாய்ந்தது.

சரபத்தின் பெயரால் ஓர் உபநிடதம் இருப்பதும் குறிப்பிடத்தக்கது. சரபோபநிஷத் என்பது பெயர். சரபத்துக்கு முன்னமே வழங்கிய தமிழ்ப் பெயர் சிம்புள். சிம்புள் என்ற பறவை உண்மையிலேயே இருந்ததாகப் பெருங்கதை கதை நடத்திச் செல்கிறது. இச்சிம்புள் உதயணன் தாயாகிய மிருகாவதியைப் பார்த்து, அவள் போர்த்தியிருந்த சிவந்த ஆடையால், ஊன் என்று கருதித் தூக்கிச் சென்றது என்று சொல்லுகிறார். இச் சிம்புளைப் பல்வலிப் பறவை என்கிறார். சரப மூர்த்தியை, ஒன்பதாம் திருமுறையில் திருமாளிகைத் தேவர் குறிப்பிடுகிறார். இவ்வாசிரியர் இருவரும் காலத்தால் திவாகரருக்கு முற்பட்டவர்கள். திவாகரர் சரபத்துக்கு,

> **சிம்புள் வாருண்டகம் சம்பரந் துரோணம்**
> **எண் காற் சரபத் தின் பெய ராகும்.**

என்றொரு சூத்திரம் செய்கிறார். பின்னூல்களில் வருடை என்றொரு சொல், சரபத்தைக் குறிப்பிட வழங்குவதுண்டு. வருடையே வாருண்டகமாக வந்திருக்கலாம். வருடை ஆட்டின் பொதுப் பெயரென்று திவாகரர் சொல்கிறார். பின்னால் வரையாட்டின் பெயராக இது நிகண்டுகளில் வருகிறது. எப்படியும் இவர் சரபத்தை இத்தனைச் சொற்களால் குறிப்பிடுவது ஒரு தனிச்சிறப்பு.

விலங்கின் பெயர்த் தொகுதியிலும் மரப்பெயர்த் தொகுதியிலும் திவாகரர், விலங்கு புட்களின் ஆண் பெண், இளமைப் பெயர்கள், ஓரறிவுயிர்ப் பெயர்கள் முதலியவற்றைப் பெரும்பான்மையும் தொல்காப்பிய மரபியலைத் தழுவி ஏற்ற மாறுதல்களோடு செய்திருப்பது அறிந்து இன்புறத்தக்கது. விரிவஞ்சி அவற்றை இங்கு விளக்கவில்லை.

**4. மரப் பெயர்த் தொகுதி :**

தேவதாருவில் தொடங்கி மூங்கில் வரையில் 79 மரங்கள் மூங்கில் மட்டும் 25 பெயர்கள். பின் மரத்தின் உறுப்புகள்.

*புண்ணாற்றும் சல்லிய ராணி, துணிந்த உறுப்பைச் சேர்க்கும் சந்தான கரணி, தழும்பு நீக்கும் சமனிய கரணி, உயிர் தரும் மிருத சஞ்சீவினி, பின் செடிகள், நெல் முதலான வகை, பூக்கள் முதலியன. மாலைவகை மட்டும் 27 பெயர்கள் சொல்லுகிறார். இவற்றுள் சிலவே இன்று வழக்கிலுள்ளன. இத்தனைப் பெயர் களை இவர் சொல்வது, அரசர் வீரர் அணியவும், பெண்டிர் சூடவும், தெய்வத்துக்குச் சாத்தவும் மலர் தொடுக்கும் தொழில் எத்தகைய சிறப்புடைய தொழிலாயிருந்தது என்பதை நன் குணர்த்தும். (வசதியுள்ள பெருங்கோயில் நிர்வாகிகள் இவற்றை உணர்ந்து செயற்படுத்துவது தமிழ்க் கலையைக் காக்கத் துணை புரியும்) அகக் காழ்மரம் ஆண் மரம், புறக்காழ் மரம் (பனை கமுகு தெங்கு மூங்கில்) பெண் மரம் என்பது புதுமை.*

*மூங்கிலைக் குறித்த சொற்கள் 25 : மக்கள் வாழ்க்கையில் மூங்கிலுக்கு இருந்த அதிகமான இடத்தை இது காட்டும்; இன்றும் அப்படியே. மரம் மட்டுமன்றிப் புல்வகை பூ ஒடு பலவும் விரிவாய்க் கூறுகிறார்.*

**5. இடப் பெயர்த் தொகுதி :**

*மோக்கம் என்று தொடங்குகிறது. உலகு திசை மலை கடல் ஆறு ஐந்திணை நகரம் என்பன சொல்லப்பட்டுள்ளன. நகரங்களுள் உறையூர் மதுரை சிதம்பரம் திருவாரூர் புகார் காஞ்சி; அவந்தி காசி மிதிலை அயோத்தி அரித்துவாரம். இங்கு சோழர் பதி மட்டும் நான்கு சொல்வது காணலாம். நாடுகளுள் கடாரம் சிங்களம். பின், தெரு, வீடு, வீட்டின் பாகங்கள், வயல் இடப்பொது என்பன சொல்லப்பட்டுள்ளன. யானை சேர்விடம், யானை செல்வழி, யானை துயிலிடம் என்பன சிறப்பாகக் கூறி யிருப்பது, அக்காலத்து அரசர் வாழ்க்கையில் யானை பெரும் பங்கு கொண்டிருந்ததைப் புலப்படுத்துகிறது. (அடுத்த நூற் றாண்டில் பிங்கலர் யானை பற்றிய செய்திகளை இதனினும் பலமடங்கு விரித்திருப்பது காலக் கண்ணோடு காணத்தக்கது) மோக்கத்தின் பெயர்கள் 12 சொல்லப்பட்டுள்ளன. இங்கு எல்லாச் சமயங்களும் கூறும் முத்தி நிலைக்குரிய சொற்கள் அமைக்கப்பட்டிருப்பது அழகுடையது:*

**அமுதம் கேவலம் அபிவருக்கம் வீடு**
**சிவம்கை வல்லியம் சித்தி மீளாக் கதி**
**பரகதி யோடு முத்தி பஞ் சமகதி**
**நிர்வாணம் மோக்கம் என நிகழ்த் தினரே.**

ஊரைக் குறிக்க 27 பெயர்கள், பல இன்றும் வழக்கில் உள்ளன. சுரந்த நீரும் வயலும் சூழ்ந்த ஊர் கிராமமாகக் கிளக்கப்படும். குடி ஐந்நூறு குறைவற நிறைந்தது - பெருங் கிராமமாகப் பேசப்படும். பட்டும் நொச்சியும் பள்ளியும் சிற்றூர்; நொச்சி இன்று வழக்கிலில்லை. ஒருவந்தம் - ஏகாந்தம், தனியிடம் என் பது புதிய ஆட்சி; பின் வந்த நிகண்டுகள் இதைச் சொல்கின் றன. எந்திர வாவி சிலப்பதிகாரத்திலும் சொல்லப்படும். நகர நிர்மாணத்தில் சலதாரைகளும் இடம்பெற்றன.

சேந்தனைப் பற்றிய குறிப்புக்களில், எண் 14, கழகம் என்ற சொல்லின் பொருள் கூறுகிறது; நாவலர் இடம், மல், சூது, படை, கல்வி-பயில் களம் என்பன கழகம் என்று கூறுகிறது; சூது படை கொடைபயில் இடம் கழகம் என்று கயாதரம் கூறுவதும் காணத்தக்கது; கழகம் என்றே எடுத்ததற்கெல்லாம் பெயர் வைப்பவர்கள் இப்பாவைச் சிந்திப்பார்களாக. கல்வியூரி கல்லூரி யாகும் என்கிறார். கல்வியூரி என்ற பிரயோகம் இல்லை; கல்லூரி என்று சிந்தாமணியில் வருகிறது.

**6. பல்பொருட் பெயர்த் தொகுதி :**

பிற தொகுதிகளில் சொல்லவியலாத எல்லாப் பொருள் களும் இங்கு சொல்லப்படுகின்றன. அவையாவன - உலோகம், மணி, அலங்காரப் பொருள்கள், உணவு வகை முதலாயின. பொன்னை வைத்தே இத்தொகுதியைத் தொடங்குகிறார். ‘ஆடகம் மாசை ஈழம் ஏமம்’ என்பது தொடக்க வரி. மாசை ஈழம் என்ற இரு சொற்களையும் இங்கு கருதலாம். மாசை வட மொழியில் இதே வடிவிலுள்ள சொல் தற்சமமாக வந்தது; அங்கும் பொன் என்ற பொருளது. மாசை ஒரு காசு வகை என்று பெருங்கதையால் அறிகிறோம், காசு அல்லது நாணயத்திலிருந்து இச்சொல் பொன்னுக்கும் வழங்கப்பட்டது எனக் கொள்ளலாம். ஈழம் என்றது மற்ற சொல், இது தமிழ்ச் சொல்லே. ஈழக்காசு என்று சாசனங்களில் இது வழங்குகிறது. ஈழநாட்டுப் பொற் காசாயிருந்து, அதற்குரிய பெயரே பொன்னுக்குரிய சொல்லா யிற்றுப் போலும்.

கலப்புலோகங்களில் இவர் மூன்றைக் கூறுகிறார்: வெண் கலம் பித்தளை தரா என்பன. இவை செம்புடன் முறையே ஈயம் காரீயம் அல்லது துத்தநாகத்தைக் கலப்பதால் வரும் கலப்பா கும். இவ்வாறு தெரிந்து குறிப்பிடுவது சிறப்பு. ஆனால் நாகம்

காரீயம் என்று ஒரு சூத்திரம் கூறுகிறது. நாகம் வேறு காரீயம் வேறு; இரண்டும் ஒன்றாக இவர் கூறுவதில் பிழை இருக்கு மென்று தோன்றுகிறது.

உணவு பற்றிய பெயர்கள் 100க்கு மேல். சோறு என்ற பொரு ளில் சொற்கள் 24; ஆனால் கள் என்ற பொருளில் 48 சொற் கள்! இவை அனு போகப் பொருள் வகை என்றும் வேறு நிகண்டுகளிற் சொல்லப்பெறும். சிற்றுண்டி என்று திவாகரத்தில் காணப்படுவது சிறப்பு.

> அப்பம் பிட்டோடு அஃகுல்லி இடிஎனச்
> செப்பிய எல்லாம் சிற்றுண்டி யாகும்.

என்று இங்கு சொல்லிய வகைகளோடு எதிர்காலத்தில் வரக் கூடியவற்றையும் தொகுத்துக் கூறுவது போல இவர் சூத்திரம் செய்திருப்பது நயமுடையது. மேலும் அப்பவர்க்கத்தைக் கூறுகிறார்.

> பூரிகம் நொலையல் கஞ்சம் தோசை
> பேறு வகைப் பெயர் அப்பமாகும்.

(பூரிகம் - இன்றைய பூரி) இன்றைய பூரியும் தோசையும் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே இங்கு இதே பெயர்களோடு வழங்கின என்றறியப் பெரும் வியப்புண்டாகிறது. (பிங்கலமும் இவற்றைக் கூறுகிறது). இன்று அரிசியால் செய்த அன்னத்துக்குச் சாதம் என்பதே நடுத்தர வகுப்பாரிடம் வழங்கும் சொல்; இதன் மூலம் விளங்கவில்லை; பிரசாதம் என்பதன் சுருக்கம் என்பார் கள். இச்சொல் பிற்காலத்தில் காணப்படுகிறது; திவாகரத்தில் இல்லை. சாணி-புண்ணிய சாந்தம் என்பார்; கோமயமானது பஞ்ச கவ்வியத்துக்குப் பயன்படுதலினாலும், திருநீறு செய்யப் பயன்படுதலினாலும், சகல சுத்திக்கும் பயன்படுதலினாலும் இவ்வாறு கூறினார் போலும். பிங்கலர் இதை அப்படியே எடுத் துரைக்கிறார். இப்பகுதியின் இறுதியிலுள்ள ஆறு சூத்திரங்கள் வேறிடத்துக்குரியன.

### 7. செயற்கை வடிவப் பெயர்த் தொகுதி :

இதற்குத் தொடக்கமாக,

> எண்ணிய எழுவகை உலோகத்தின் மரத்தின்
> மண்ணின் தோலின் நூலின் மற்றும்
> திண்மை செய்வடிவே செயற்கைவடி வாகும்.

என்ற ஒரு சூத்திரத்தை அமைத்துப் பின் பொருளைச் சொல்லிக் கொண்டு போகிறார்.

சிவபிரான் ஆயுதங்களான சூலம் மழுவில் தொடங்குகிறது. படை பற்றிய சூத்திரங்கள் 50. பின் அணிகலன், பிற பாத்திரங் கள், ஒலிக்கும் கருவிகள் 32 சூத்திரம். நாற்படைகள், வீட்டி லுள்ள பொருள்கள், ஆடை வகை. சாப்பை என்பது புற்பாய்; இது இன்று இந்தியிலும் சாப்பாய் என்று அப்படியே உள்ளது. நேத்திரம் காம்பு-பட்டு விகற்பங்கள். இப்பகுதியில், பிற இடங் களில் சொல்லப்படாத பொருள்கள் ஒன்றுவிடாமல் அதிக மாகத் தொகுத்து, திவாகரர் மிகவும் விரிவாகக் கூறியிருக்கும் திறன் பார்த்து வியக்கத்தக்கது.

## 8. பண்பு பற்றிய பெயர்த் தொகுதி :

வடிவம், அளவு, நிறம், அழகு, அறிவு, அன்பு, பண்புகள், ஒழுக்கம், சுவை. அழகில் கட்டழகு, அழகு, பேரழகு என்று மூவகை சொல்லுகிறார். இன்பம் 4 சொல்; துன்பம் 48 சொல்; நன்மை 8 சொல் குற்றம் 27!

பண்பு பற்றிய பெயர்த் தொகுதியில் பல கருத்துக்களுக்கு இரண்டு சூத்திரங்கள் காணப்படுகின்றன. திவாகரர் இரண்டி லுள்ள சொற்களைச் சொல்பவரானால், ஒரு சூத்திரமாகவே செய்திருப்பார். இரண்டாக்குவதற்கு ஆசிரியருக்கு அவசிய மில்லை, ஆகவே இரண்டில் முதற்சூத்திரமே அவர் செய்த தென்றும், அதே பொருள் பற்றிய இரண்டாம் சூத்திரம் பிற் காலத்தோர் இக்கருத்தும் இருக்கட்டும் என்ற எண்ணத்தால் சேர்த்தது என்று எண்ணத் தோன்றுகிறது. நறு நாற்றம்-துர்க் கந்தம் என இரண்டு தனிச்சொற்கள் இவர் கூறுவதால், இவர் காலத்திலேயே, நாற்றம் என்ற சொல் பொதுத்தன்மையில் இருந்து ஒதுங்கி, துர்நாற்றத்துக்கு மட்டும் வழங்கத் தொடங்கி யிருக்கும் என்று அறிகிறோம்.

## 9. செயல் பற்றிய பெயர்த் தொகுதி :

செய்தல் என்ற வாய்பாடாக வரும் எல்லாச் சொற்களும் இங்கு தரப்பட்டுள்ளன. மகளிர் விளையாட்டு 11 சொற்கள். கூத்து வகைக்கு 20 சூத்திரங்கள் குறிப்பிடத்தக்கவை. பாணிக் கிரணம் என்பதைக் கைப்பற்றல் என்கிறார். கலத்தல் கலம்பகம் என்கிறார். இந்த நூற்றாண்டில் தான் நந்திக் கலம்பகமாகிய முதல் கலம்பகம் தோன்றிற்று. சுமார் கி.பி. 850. அதைத் தெரிந்தே

இவர் பாடியிருக்கலாம். ஆடல் வகைகளைக் கூறும்போது இவர் கூற்றுக்கும் அடியார்க்கு நல்லார் மேற்கோள் பாடல்களுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. இவர் மரக்கால் மாயோன் ஆடல், துர்க்கை ஆடல் என இருமுறை சொல்கிறார்; அடியார்க்கு நல்லார் துர்க்கை மட்டும்; கபாலம் சிவனாடலாக இவர் அதிக மாய்ச் சொல்கிறார்; முருகனுக்குக் கொட்டியும் குடையும் சொல்கிறார்; கொட்டி என்பது பிழை, துடி என்றிருத்தற் குரியது. மேலும் இவர் சத்த மாதராடலும் துடியே என்று உம்மை கொடுத்துச் சொல்வது காண்க; அவர் சத்த மாதரைச் சொல்லவில்லை.

பதினோராடலும் பற்றிய விரிவான சூத்திரங்கள் யாப்பருங் கல விருத்தியுள் காணப்படுகின்றன; அவை ஒரு கால் முந்திய நிகண்டுச் சூத்திரங்களோ என்றும் கருதற்குரியன. செருகு சொருகு இரண்டும் இலக்கிய வடிவமே என்று காண்கிறோம். தூங்கல்-உறங்கல் அன்று, நிரம்பாத் தூக்கம்.

## 10. ஒலி பற்றிய பெயர்த் தொகுதி :

சொல்லுதல், சொற்கள், வேதம், பாட்டு வகை, இசைப் பாட்டு வகை, ஏழிசை, இவற்றின் பெயர் ஓசை எழுத்து மாத் திரை பிறப்பிடம் மணம் ஈசர் என்பன; இராகப்பெயர் ஏழில் நிருபதுங்க ராகம்* என்பது ஒன்று. இவ்வேழும் அன்றி, பண் 26, மற்றவை 13. இங்கு சொல்லப்பட்டவற்றுள் சிலவே தேவா ரத்துள் காணப்படுவன. இறுதியில் ஒலி ஓசை என்ற பொருள் கள். இசைப்பகுதிக்கு இவர் அதிகமான நூற்பாக்களை அமைத் திருப்பது தேவார காலத்தின் பின் மீண்டும் தமிழ் மொழி யிலும் சமயத்திலும் இசைத்தமிழ் புத்துயிர் பெற்று வளர்ந்து வந்த நிலையை நினைப்பூட்டுவதாகும்.

ஒரு நிலையையும் குறிப்பிட வேண்டும். இத்தொகுதியின் தொடக்கத்தில் சொல்லுதலுக்கு 12 சொற்களும் சொல் என்ப தற்கு 33 சொற்களும் இவர் காட்டுகிறார். பார்க்கும்போது இத்தனைச் சொற்கள் இருப்பது சொல்வளத்தைக் காட்டும் சிறப்பு என்று பெருமை கொள்ளத் தோன்றும். ஆனால் சில சொற்கள் நீங்கப் பெரும்பான்மையான சொற்கள் பொருள் வேற்றுமை இல்லாமலே வழங்கப்படுகின்றன. உதாரணமாக,

---

* இந்த ராகத்தைச் சமீபத்தில் வெளியான 'பஞ்ச மரபு' என்ற இசை நூல் குறிப்பிடுகிறது.

பகர்தல் செப்பல் இயம்பல் கூறல் புகறல் சொற்றல் விளம்பல் என்ற சொற்களைப் பார்க்கலாம். நெடுங்காலமாகத் தமிழ்ப் புலவர்கள் இவ்வகைச் சொற்களை வெறும் பரியாய நாமங் களாக வழங்கி வந்திருக்கிறார்களேயன்றி, ஒவ்வொரு சொல் லுக்கும் தனித்த பொருள் வேறுபாடு உண்டு என்று உணர்ந்து வழங்குவதாகத் தெரியவில்லை. பண்டையாசிரியர் மட்டுமன்றி இக்காலத்துப் பெரும் பண்டிதர்களும் எல்லாச் சொற்களையும் ஒன்று போலவே இன்றும் வழங்குவதால், சொற்களுக்குப் பொருள் வேறுபாடு இல்லாமல், எந்த ஒரு சொல்லும் எந்த ஒரு சிறப்புப் பொருளையும் உணர்த்தும் ஆற்றல் இல்லாது போய்விட்ட நிலைமையையும் காண்கிறோம்.

கட்டளைக் கலித்துறை யாப்புக்குக் காரிகை என்ற பெயர் பதினோராம் நூற்றாண்டில் செய்யப்பட்ட யாப்பருங்கலக் காரிகையின் சிறப்பினால் வந்தது. திவாகரர் காலத்தில் இப்பொருளில் இச்சொல்லாட்சி இல்லை. ஆனால் அச்சிட்ட திவாகரத்தில்,

> அழகும் அழகுடை மாதரும் அதனொடு
> கட்டளைக் கலித்துறையும் காரிகை என்ப.

என ஒரு சூத்திரம் காணப்படுகிறது; இது இடைச்செருகலாதல் பொருந்தும்.

தொல்காப்பியச் சூத்திரங்கள் பல இங்கு அப்படியே எடுத்துச் சொல்லப்பட்டுள்ளன.

### 11. ஒரு சொற் பல்பொருட் பெயர்த் தொகுதி:

அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளது. இது ஆதியிற் பொருள் அந்தத்துப் பொருள் என இரு பகுதியாக உள்ளது. எந்தச் சொல்லுக்குப் பொருள் சொல்லப்படுகிறதோ, அந்தச் சொல் சூத்திரத்தின் முதலில் வந்தால் அது ஆதியிற் பொருள் என்றும், சூத்திரத்தின் இறுதியில் வந்தால் அந்தத்துப் பொருள் என்றும், செயற்கையாக ஒரு பாகுபாடு செய்யப் பெற்றிருக்கிறது. வாயே இடனும் மெய்யும் வாக்கும்-வாய் முதலில் வருகிறது; இது ஆதி. யானையும் கோழியும் சங்கும் வாரணம்-வாரணம் அந்தத்தில் வருகிறது; இது அந்தம். இவ்வமைப்பு (ஆதி அந்தம் என்பது) திவாகரர் செய்யவில்லை.

திவாகரர் சொல்லாராய்ச்சி செய்வது போல இங்கு ஒரு நூற்பா செய்திருப்பது அறியத்தக்கது. அரி என்ற சொல்லை எடுத்து அதற்கு 23 பொருள்கள் தந்து இவற்றுள் 15 தமிழ்ப் பொருள் என்றும் ஏனைய எட்டும் வடமொழியிலிருந்து வந்த பொருள் என்றும் கூறுவதும் அறியத்தக்கது.

கண்வரி கடல்பொன் கிண் கிணிப் பெய்பரல்
மண்ணிறம் குதிரை தவளை குரங்கு
பகைவாள் சயனம் வலிவண்டு ஐம்புகை
எனப்பதி னைந்தும் அரியெனப் புகல்ப;
சிங்கந் திருமால் திகிரி இரவி
இந்திரன் காற்றே யமனே அங்கி என்று
அங்கண் வடமொழிச் சிதைவின் அரியாகும்.

இத்தொகுதியின் இரு வகைப் பொருளும் (ஆதி அந்தம்) தனித்த அகராதி வரிசையில் அச்சிடப்பட்டுள்ளது. இவ்வரிசை ஏட்டி லில்லை. அச்சிட்டோரால் கொள்ளப்பட்டது என்று முன்னமே கூறினோம்.

### 12. பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த்தொகுதி :

இது பிற்காலத்தில் தொகையகராதி எனப்பட்டது.

கூறியது கூறினும் குற்றமில்லை
வேறொரு பொருளை விளக்குமாயின்.*

என்ற முன்னுரையோடு, ஒன்றில் தொடங்கி முப்பத்து மூன்று வரையில் தொகைப் பொருள்களைக் கூறுகிறார். இந்த முன்னுரை யைப் பின் வந்தோர் அப்படியே பெய்து பாடுகின்றனர்; உரிச் சொல் நிகண்டு, சூடாமணி நிகண்டு பார்க்க. பின்னர் ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரையில் கூறுகிறார். அடுத்து, காவிய இலக் கணம், ஆண்பால் பெண்பால் பிள்ளைப் பாட்டின் இலக்கணம் எழுதுகிறார். இவர் காலத்தில் பிள்ளைத் தமிழ் பாடப் பெற்ற தாக வரலாறு இல்லை. வழக்கிலும் நூல் இல்லை; பெரியாழ்வார் பாசுரப் பகுதிகள் மட்டுமே உள்ளன. பின் பேடியிலக்கணம் மிக்க விரிவாக உள்ளது; 30 சேட்டைகள் குறிப்பிடுகிறார். பிங்கலர் இதை அப்படியே எடுத்தமைக்கிறார். இதன்பின் கரந்துறை கோள் என்று பல குறிப்பிடுகிறார். இவற்றின் தோற்றம் நாட் டுக்கும் அரசுக்கும் நன்மையோ தீமையோ விளைவிக்கும் என்ற

* இந்தக் கருத்தைப் பின்வந்த பிங்கலர் மண்டல புருடர் முதலான அனைவரும் அப்படியே எடுத்துக் கொண்டார்கள்.

கருத்து இன்று போல அன்றும் நிலவியமையால், இவர் தனியே இவற்றைக் கூறுகிறார் போலும். பின்னர் திருப்பொறி. பெரும் தலைவராயிருக்குந் தகுதியுடையோருக்கு இப்பிறவியில் அமைந் துள்ள ரேகைகள். 'அரசு வீற்றிருக்கும் திருப்பொறி உண்டென்று உரை செய்தவன்' என்ற சிலப்பதிகாரம் காண்க. பின்னர் தெய்வம், அரசர் முதலியோருடைய ஊர்தி படை கொடி யானை இலக் கணம், கீழ்மக்கள், படைவகைகள், பேரெண்கள் - இவ்வாறு திவாகர நிகண்டு முடிகிறது. இறுதியிலுள்ள பகுதி முழுமையும் ஆசிரியர் உரிய இடத்தில் சொல்ல மறந்து பின்னர் எழுதிச் சேர்த்த வரிகளோ என்று கருதும் படி உள்ளன. பிள்ளைத் தமிழிலக் கணம் போன்றன ஒருகால் பிற்காலச் சேர்க்கையுமாகலாம்.

ஆறு சமயங்கள் என்று இவர் வைசேடிகம் நையாயிகம் மீமாம்சம் ஆருகதம் பௌத்தம் உலகாயதம் என்று குறிப்பிடு கிறார்; இவை இன்று நாம் அறிகின்ற முறையில் உள்ள ஆறு சமயங்களுமல்ல, ஆறு தரிசனங்களுமல்ல.

மக்களிடம் வாங்கப்படும் இறை மூன்று எனக் கூறுகிறார்- அரசிறை, சுங்க இறை, குடியிறை என. மரங்களைக் குறிப்பிடும் போது அகக்காழ், புறக்காழ் என்று தொல்காப்பியக் கருத்தையே எடுத்து வைத்திருக்கிறார். அரசருக்குரிய ஆறங்கங்களான படை குடி முதலியவற்றைக் கூறிய பிறகு, அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும், அறநிலை, மற நிலை என்ற இரு வகையாக- ஆக ஆறு வகையாக உள்ளன என்று சூத்திரஞ் செய்கிறார்.

அறநிலை அறமும் மறநிலை அறமும்
அறநிலைப் பொருளும் மறநிலைப் பொருளும்
அறநிலை இன்பமும் மறநிலை இன்பமும்
என ஆறு வகைத்தே உலகி னடையே.

வருணக் காப்பிற் பிறழா நெறிநிலை
பெறுவது பொருளாற் பேணும் பெற்றி
அறநிலை அறமென்று அறைந்தனர் புலவர்.

ஆநிரை மீட்டல் அரும்பகை தெறுதல்
ஊனமில் செஞ்சோற்று உதவிப் போர்வயின்
ஈனஞ் செய்தலும் மறநிலை அறமே.

நெறி வழி நின்று நெறியா லுழந்து
பெறும் பொருளென்ப அற நிலைப்பொருளே.

அமருழந்து கொண்டவும் அருந்திறை கொண்டவும்
தவறு செய் தீயோர் தண்டல் பொருளும்
கவர் சூது வென்றவும் மறநிலைப் பொருளே.

ஒத்த குலமும் ஒத்த ஆயமும்
ஒத்த செல்வமும் ஒத்த நலனும்
அத்தக வுடையது அறநிலை இன்பம்.

ஏறுதழுவல் இலக்க மெய்தல்
கூறு பொருள் கொடுத்தல் வலிதிற் கோடல்
மாறு படு நிலையும் மறநிலை இன்பம்.

இவ்வாறு இவர் கூறியிருக்கும் கருத்துக்கள் மிகவும் புதுமை யானவை. அரசன் பேறு எழுவகை என்கிறார்.

அறம் பொருள் இன்பம் அன்பு பொறுமை
திறம்பாப் புகழ் மதி என்றிவை ஏழும்
பெருஞ் செங் கோலின் எழுவகைப் பேறே.

அட்டாங்க யோகத்துள் இயமம் நியமம் இரண்டையும் எண் வகையாக விரிக்கிறார். 'வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தை யாம்' என்ற பஃறொடை வெண்பா இங்கு எண்வகை வெற்றி என்ற தலைப்போடு காணப்படுகிறது. தசாங்கம் சின்ன மென்றும் பெயர் பெறும் என்கிறார். அணிகள் 28 என்கிறார்; இவற்றுள், பொருளணி மட்டுமன்றிச் சில சொல்லணிகளையும் கலந்துரைக் கிறார். தண்டியலங்காரம் கூறும் பொருளணி மட்டும் 35 என் பது இங்கு கருதத்தக்கது.

பிள்ளைத் தமிழ் பற்றி, ஆண்பாற் பிள்ளைப் பாட்டு பெண்பாற் பிள்ளைப்பாட்டு என்று இவர் தனியே இரண்டையும் விரித்துக் கூறுகிறார். இவர் ஓரளவு கற்பனையாகவே இவை இவ்வாறு அமைதல் வேண்டும் என்று கருதி, பெரியாழ்வார் பாடல்களையும் தழுவி இலக்கணம் அமைத்தார் என்று கொள்ள வேண்டும். இவர் கூற்றுக்கள் பின் வந்த பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்களுக்குப் பொருந்தமாட்டா. ஆண்பாற் பிள்ளைப்பாட்டு: திங்களிரண்டில் தெய்வக் காப்பு. திங்கள்; ஐந்து-செங்கீரை, ஏழு-தாலப்பாட்டு, எட்டு-இன்னமுதூட்டல், ஒன்பது-சப்பாணி, பத்து-முத்தங் கூறல், ஆண்டு-ஈண்டு வருக என்றல், ஈரெண் திங்கள்-அம்புலி காட்டல், இரண்டாமாண்டு-சிறு பிறை கொட்டல், மூன்றாமாண்டு-சிற்றில் சிதைத்தல், நாலாமாண்டு-சிறு தேருருட்டல், முந்நான் காண்டெல்லை

வரையில்-கச்சிற்சுரிகை காமுறப் புனைதல்: ஆக இங்கு சொல்லப்பட்ட செய்திகள் 12, கால வரையறையும் வேறுபடு கிறது. இங்குள்ள இன்னமுதூட்டல், சுரிகை புனைதல் என்ற இரண்டும் பிள்ளைத் தமிழில் வருவதில்லை. பெண்பாற் பிள்ளைப் பாட்டு வகை: ஓராண்டு வரை முன் உரைத்தன- அதாவது வருகைப் பருவம் வரை; பின்னர் மூன்றாமாண்டு- குழமகன் மொழிதல்;* ஐந்து முதல் ஒன்பதின்காறும்-ஐங்கணைக் கிழவனை ஆர்வமொடு நோற்றல், பணிநீர் தோய்தல், பாவை யாடல், சிறுசோறடுதல், சிற்றிலிழைத்தல், ஊசலாட்டு என்றிவை என்கிறார். இங்கு 16 உறுப்புகள் உள்ளன. குழமகன், காமனை நோற்றல், பாவையாடல், சிறு சோறடுதல் என்பன பின் இல்லா தவை. காமன் நோன்பு ஆண்டாள் பாடலில் சொல்லப்பட் டுள்ளது. இவற்றால் இவர் முன்வந்த நூல்களை நன்கு பயின்ற வர் என்பதும் புலப்படும். பிற்காலத் தெழுந்த சிவகாமியம்மை பிள்ளைத்தமிழ் ஒன்று மட்டும் பத்துக்கும் அதிகமான பருவங் களைக் குறிப்பிடுகிறது: அவற்றுள் சிற்றிலிழைத்தலும் ஒன்று. பிங்கல நிகண்டு முழுமையும் திவாகரத்தை அடியொற்றியே இரு பாலுக்கும் பருவங்களையும் ஆண்டுகளையும் குறிப்பிடு கிறது. அரசவாகை விரிவாகக் குறிப்பிடுகிறார். சோழர் பேரரசின் எழுச்சிக் காலம் என்பதை இக்குறிப்பு நன்கு புலப்படுத்துகிறது.

இந்த ஆராய்ச்சியுரையில் சொல்வன யாவும், அச்சிடப் பட்டுள்ள நூலை மட்டும் ஆராய்ந்து சொல்பவை; சில இடங் களில் ஏட்டையும் பார்த்து, நன்கு ஆராயப்பெற்ற செம்மை யான ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு வெளி வருங்கால், இதற்கண்ட சில கருத்துக்கள் மாறவும் நேரலாம்.

சில விசித்திரமான செய்திகளும் உள்ளன. பதினெண் பாடை என்பது ஒன்று. திராவிடம் என்கிறார்; இது விசித்திரமே; தமிழ் என்று சொல்லியிருக்கலாம்; இவர் காலத்தில் தெலுங்கு கன்னடம் மலையாளம் என்பன இலக்கியம் பெற்ற சிறப்பு மொழிகளாக வளர்ச்சி பெறாமையால் இவர் குறிப்பிடவில்லை என்று கருது வது பொருத்தமே. எனினும் பின்னும் சில செய்திகள் இது பற்றிக் கருதத்தக்கன. துளுவம் கொங்கணம் என்று குறிப்பிடுகிறார்: இவை இன்னும் கூட வளர்ச்சி பெறாத மொழிகள். இவற்றைக் குறிப்பிடும் நிலை எப்படி வந்தது? வேறு இவர் குறிப்பிடுகின்ற

* குழமகன் மொழிதல் என்பது தான் வைத்து விளையாடும் பாவைக்கு மணம் பேசுதல்.

பல பாடைகள், தங்களுக்கு என்று ஒரு தனிநிலை இருந்தால் அது திரிந்து இந்தி என்று மட்டும் சொல்லும் படியாக இன்று நிற்கின்றன. சோனகம், சிங்களம், சாவகம், சீனம் என்று குறிப் பிடுகிறார். இவை ஒருகால் அன்றைய தமிழ் மக்களுக்குக் கடல் கடந்தும் வியாபகம் இருந்தது என்பதைப் புலப்படுத்துவன ஆகலாம். தொண்ணூற்றாறு வகை என்று பாசண்டத் துறையைக் கூறுகிறது; இது சொல்லும் தொடர், 'பாசாண்டத் துறை' என்பது. சிலப்பதிகாரம், 'தொண்ணூற்றாறு வகை பாசண்டத் துறை' என்று கூறுகிறது. அடியார்க்கு நல்லார் உரையில் 'பண்ணாற் றிறத்தில் பழுதின்றி மேம்பட்ட தொண் ணூற்று வகைக் கோள வயும் வல்லவன்' என்ற வளையாபதி வரிகளை எடுத்துக்காட்டி, இவற்றிற்கு முதலாயுள்ள சாத்திரங்களைப் பயின்றவனாதலின் சாஸ்தாவுக்கு மகாசாத்திரன் என்பது பெயராயிற்று என்று எழு துகிறார் பாசண்டன்-புறச்சமயத்தான். பிற்காலத்தில் 96 என்ற தொகை எண்ணுக்குரிய பொருள்களாக 96 தத்துவங்கள், 96 பிரபந்தங்கள் என்றெல்லாம் சொல்லப்பெறும்.

### திவாகரரும் பரிசிலும்

மிகவும் விசித்திரமான செய்தியொன்று பரிசிலைக் குறித்தது. திவாகரரை அடுத்து வந்த பிங்கலர் தமது நூலில், ஆறாவது அனுபோக வகை என்ற பகுதியில், பிள்ளைத் தமிழ் இலக் கணத்தை மூன்று பாட்டில் சொல்லிய பிறகு, பாட்டுடைத் தலைவன் புலவனுக்குச் செய்யத்தக்க பரிசிலைப் பற்றிக் கூறு கிறார்: நான்கு நூற்பாக்கள் செய்திருக்கிறார். முதல் பாடலானது (1370) 36 அடி கொண்டது; பாட்டுடைத் தலைவன் செய்யத் தக்க சிறப்புக்களைக் கூறுகிறது; 28 அணிகளும் அமையப்பெற்ற செய்யுள் செய்யும் பாவலன், வயது முப்பது கழிந்து எழுபதுக் குக் குறைந்தவனாய், உள்ளவனுடைய கவிதையைத் தலைவன் கொள்ளும்போது, எல்லா மங்கலங்களோடும் நூலைப் போற்றிக் கேட்டு, பொன்னும் ஆடையும் பூணும் கடகமும் பிறவும் நல்கி, ஏழடி நிலம் பின் சென்று, நில்லென நிற்றல் கடன் என்று கூறு கிறது. பரிசில் நல்காவிட்டால் (1371), புலவன் பாடலில் வேறு பெயர் சேர்த்து அமைத்தானாகில், இவன் திருவிழந் திடர்ப் படுவன், மற்றவனுக்குத் திரு சேரும். பரிசில் பெறாத புலவன் மனம் நொந்து, பாடலைத் தீயிலிட்டுக் கொளுத்தினால், பாட் டுடைத் தலைவன் பன்னிரு திங்களிற் சாவான் (1372).

> பரிசில் ஈயாப் பாவிதன் பனுவலைத்
> தெரிதர எழுதிச் செம்பூச் சூடிச்
> தன் மனைப் புறத்தினும் சாமுண்டி முன்றினும்
> பன்னகம் வாழும் பழம்பதி தன்னினும்
> மயானத் திடத்தினும் மறுகு தன்னினும்
> தியானித் திருந்து செந்தீக் கொளுத்த
> ஈரறு திங்களின் இறுதியாம் என்பதும்
> ஆதிப் புலவன் அறைந்த மொழியே.

ஆதிப் புலவனாவான், அகத்தியன், பின்வந்த பாட்டியல் நூல் களான வச்சணந்தி மாலை முதலியன இக்கருத்துக்களைக் கூறு கின்றன; வச்சணந்தி மாலை நாமங்களைத் தவிசில் இருத்தி வழிபட்டு அகலக் கவி கேட்க என்கிறது. 16ஆம் நூற்றாண்டில் வந்த சிதம்பரப் பாட்டியல் பிரபந்த மரபியல் முதலான பாட்டியல் நூல்கள், பரிசில் ஈயாவிட்டால் தலைவன் அழிவான் என்று ஆதிப் புலவன் விதித்ததாகவே சொல்கின்றன. பிங்கல நிகண்டின் அடுத்த நூற்பா (1373), கேட்டிருந்த கிளைஞரும் கெடுவர் என்று கூறுகிறது. இதனால் நாம் ஒன்று தெளியலாம். பிங்கலர் வரலாற்றில் அவர் போர் வீரராயிருந்திருப்பார் என்று குறிப்பிட்டிருக்கிறோம்.* அவர் மிக்க வறுமையில் உழன்றிருக் கக் கூடும். அந்த நிலையில் அவர் பாடலைப் பெற்ற தலைவன் அவரைத் தக்கவாறு போற்றவில்லை போலும்; அதனால் தான் அவர் தாம் செய்த நிகண்டு நூலில், பரிசில் ஈயாத பாட்டுடைத் தலைவன் அழிவான் என்று விரிவாக இத்தனை சூத்திரங்கள் செய்திருக்கிறார்.

இந்த நிலைக்கு மாறாக, இவருக்கு முன் நிகண்டு பாடிய திவாகரர் பரிசில் குறித்து எதுவும் சொல்லவில்லை. அரங்கேற்றம் பற்றியோ, பரிசில் அளித்தல் பற்றியோ இவர் எதுவும் சொல்ல வில்லை. இதுவும் நமக்கு ஓர் உண்மையைப் புலப்படுத்துகிறது.

திவாகரர் அம்பர்ச்சேந்தனுடைய பேராதரவில் வாழ்ந்த வர். சேந்தன், கல்வி வீரம் கொடை ஆகிய பண்புகளை இவர் பெரிதும் போற்றுகிறார். பல நூற்பாக்களில் மிக்க பெருமை யோடு சொல்கிறார். ஆதலால் பெருஞ் செல்வனாயும் தலைவ னாயும் வாழ்ந்த சேந்தனுடைய வள்ளன்மையைக் குறைவறப் பெற்று அனுபவித்தவராதலினால் இவர், பரிசில் தேடும்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 10ஆம் நூற்றாண்டு அத்தியாயம் 4.

சாமானியப் புலவர் நிலையையே அறியாது வாழ்ந்திருக்கிறார்.* ஆகவே பரிசிலைப் பற்றி, கொடுப்பதையோ கொடுக்காமலிருப் பதையோ பற்றி இவர் பாட எண்ணவே இல்லை.

**திவாகரரும் முன்வந்த நூல்களும்**

தமக்கு முன் வந்த நூல்கள் பலவற்றிலிருந்து திவாகரர் செய்திகளைத் தொகுத்துக் கொண்டிருக்கிறார். இது இயல்பே. தெரிந்த சிலவற்றை இங்கு குறிப்பிடுவோம்.

தொல்காப்பியத்திலிருந்து சூத்திரங்கள் பலவற்றை இவர் அப்படியே எடுத்துத் தம் நூலுள் வைத்திருக்கக் காணலாம்.

**நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு**
**ஓரினப் பொருளை ஒரு வழி வைப்பது**
**ஒத்தென மொழிப உயர் மொழிப் புலவர்.**

**ஒரு நெறி இன்றி விரவிய பொருளால்**
**பொது மொழி தொடரின் அதுபடலமாகும்.**

என்ற இரண்டும் (தொல். பொருள் 473, 474) அப்படியே எடுத்து ஒலி பற்றிய பெயர்த்தொகுதியுள் வைக்கப் பெற்றுள்ளன.

பின்னும் இங்கு தொல்காப்பியம் எழுத்து சொல் அதிகாரங் களுக்குரிய 31, 32, 514, 548, 756, 758, 763 முதலான பல சூத்திரங் களை அப்படியே செய்திருக்கவும் காணலாம்.

புறத்திணை 77 ஆம் சூத்திரத்திலிருந்து,

**நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து**
**தனி மகள் புலம்பிய முது பாலையும்.**

என்ற வரிகள்,

**நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து**
**தனி மகள் புலம்பல் முதுபாலை யாகும்.**

என்று அதே தொகுதியுள் அமைக்கப் பெற்றுள்ளன.

**வினை பயன் மெய் உரு என்ற நான்கே**
**வகைபெற வந்த உவமத் தோற்றம்.**

என்ற சூத்திரம் (273),

---

* காலம் என்ற தலைப்பில் நிருபதுங்கவர்மனுடைய கல்வெட் டொன்று தரப்பட்டுள்ளது. அதிலுள்ள சில தொடர்களால், திவாகரர் சேந்தன் தம்பியாக இருக்கலாமென்றும், இருவரும் சிலகாலம் கண்டியூரில் வாழ்ந்திருத்தல் கூடுமென்றும் நினைக்கத் தோன்றுகிறது. இது மேலும் ஆராயத்தக்கது.

வினையுவமம் பயனுவமம் மெய்யுருவம் உருவுவமம்
என நான்கு வகைத்தே உவமத் தியல்பே.

என்று பண்பு பற்றியே பெயர்த் தொகுதியின் இறுதியில் அமைக்கப் பெற்றுள்ளது. இவை போல்வன பின்னும் பல. இன்று கிடைக்காமற் போன அவிநயம், அணியியல் முதலான பல நூல்களுள் இவர் வேறு பல சூத்திரங்களையும் எடுத்தமைத் திருக்கக் கூடும்.

சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும் ஊமும் செவிடும்
மாவும் மருளும் வாய்பட வாழ்நர்க்கு
எண்பே ரெச்சம் என்றிவை யெல்லாம்
பேதைமை யல்லது ஊதியம் இல்.

என்பது புறநானூறு 28. அதைத் திவாகரர் பதினோராம் தொகுதியுள்,

சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும் ஊமையும் செவிடும்
முடமும் உறுப்பும் மருளும் மக்கட்குத்
தண் சிறப் பில்லா எண்பெய ரெச்சம்.

என்று அமைக்கிறார்; இத்தொகை பின்னால் சூடாமணி நிகண்டிலும் இப்படியே எடுத்து வைக்கப்பட்டுள்ளது. 'குற ளொடு செவிடு மூங்கை கூன் மருள் குருடு மாலே, உறும் உறுப்பில்லாப் பிண்டம் ஓதிய எண் மெய்யெச்சம்.'

உயிர்கள் எவ்வாறு ஐம்புலன்களின் கவர்ச்சியினால் உயிர் இழக்கின்றன என்று ஒரு சூத்திரம் கூறுகிறது.

ஆனை யூற்றின், மீனது சுவையில்,
அசுணம் இசையில், அளி நாற் றத்தில்
ஏனைப் பதங்கம் உருவம் கண்டு, உயிர்
இழப்ப வாகும் என் மனார் புலவர்.

என்மனார் புலவர் என்றமையால், இது ஆன்றோர் கருத்தென் றும், முந்திய நூலொன்றில் கூறப்பட்டிருக்குமென்றும் கருத லாம். சாந்தி புராணம் என்ற பண்டைய நூலொன்றில் இக் கருத்தும் சொற்களும் அப்படியே காணப்படுகின்றன.

ஆனை ஊற்றின், மீன் சுவையில்,
அசுணம் இசையில், அளி நாற்றத்து
ஏனைப் பதங்கம் உருவம் கண்டு
இடுக்கண் எய்தும்; இவ் வனைத்தும்
கான மயிலஞ் சாயலார்
காட்டிக் கௌவை விளைத்தாலும்
மான மாந்தர் எவன்கொலோ
வரையா தவரை வைப்பதே.

*என்பது காண்க.* இந்நூல் இன்று இல்லை; இதன் பாடல்கள் சில புறத்திரட்டு என்ற 14ஆம் நூற்றாண்டு இலக்கியத்தொகுப்பு நூலில் திரட்டப்பட்டுள்ளன. அவற்றுள் இதுவுமொன்று (292). இப்பாடல் யாப்பருங்கல விருத்தியிலும் மேற்கோளாய்த் தரப்பட்டுள்ளது.*

நட்சத்திரம் இருபத்தேழையும் சொல்லி முடித்துப் பின் அருந்ததியைச் சொல்கிறார்: 'அருந்ததி சாலி வடமீன் ஆகும்'. இவ்விரு பெயர்களும் சிலப்பதிகாரத்துட் காணப்படுவனவே. அவற்றைவிட்டு இவர் வேறு சொல் சொல்லவில்லை. பின்னால் பிங்கலம் சூடாமணி நிகண்டு வரையில் இச்சொற்களே வழங்குகின்றன.*

படைகுடி கூழ் அமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.

*என்ற குறட்கருத்தை,*

படையும் குடியும் கூழும் அமைச்சும்
அரணும் நட்பும் அரசியல் ஆறே.

*என்று அப்படியே எடுத்தமைத்திருக்கிறார். ஒன்பதாவது தொகுதியில் ஊராண்மை பேராண்மை என்ற இரண்டும் முறையே மிக்க செயல் அரிய செயல் என்று குறிப்பிடுகிறார். படைச் செருக்கைக் கூறும்போது,*

பேராண்மை என்ப தறுகண்; ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

---

* *ஒன்பதாம் நூற்றாண்டில் திவாகரர் சாந்தி புராணச் செய்யுளைப் பயன்படுத்தியிருப்பதால், அப்புராணத்தின் காலம் இதற்கு முந்தியதென்று தெளிவாய்த் தெரிகிறது.*

என்று குறளாசிரியர் கூறுகிறார்; திவாகரர் இங்கிருந்து இவ்விரு சொற்களையும் எடுத்தார் என்பது வெளிப்படை. 'மக்களும் மாவும் ஐயறிவினவே' என்று கூறி, அடுத்து ஆறறிவுயிரைக் கூறும் போது, 'மனத்தோடு ஆறறிவினரே மக்கள், ஒருசார் விலங்கும் அது பெறற்குரிய' என்று சூத்திரம் செய்திருக்கிறார். இவர் கருத்தின்படி, பகுத்தறிவில்லாது விலங்காகவே கருதத்தக்க மக்களுமுண்டு, விலங்குகளிலும் கூர்மையான அறிவு பெற்று மேல்நிலையில் வைத்துக் கருதத்தக்கவையும் உண்டு என்றாகிறது. இது அபூர்வமான கருத்து. இக்கருத்து இவர் தொல்காப்பியத் திலிருந்து எடுத்தார் என்று தெரிகிறது.

> மக்கள் தாமே ஆறறி வுயிரே
> பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே
> ஒருசார் விலங்கும் உளவெண மொழிப.

என்று தொல்காப்பியர் 'மொழிப' என்று கூறியதை இவர் 'அது பெறற்குரிய' என்று உரிமையாகவே சொல்லி விட்டார்.

**திவாகரரும் பின்வந்த நூல்களும்**

திவாகரரை யடுத்துப் பின்வந்த பிங்கலர் இவர் நூற் சூத் திரங்களை அப்படியே எடுத்து வைத்துக் கொள்வது இயல்பு. பகுதிகளை மட்டும் மாற்றியிருக்கிறாரே யன்றி, அவர் நூல் முழுவதும் இதை வைத்துப் பெருக்கியதாகும்.

> அந்நாற் சொற்றிறம் அரில்தப முழுதும்
> செங்கதிர் வரத்தால் திவாகரன் பயந்த
> பிங்கல முனிஎனத் தன்பெயர் நிறீஇ
> உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை.

என்பது பிங்கலத்தின் சிறப்புப்பாயிரம்; பிங்கலர் திவாகரரின் புதல்வர் என்று கூறுகிறது. நன்னூலார் பிங்கலத்தை மட்டுமே குறிப்பிடுகிறார், திவாகரத்தைச் சொல்லவில்லை. குறிப்பிட்ட இடத்து, அவருடைய கருத்துக்கு ஒன்றைச் சொல்வதே போதி யது; விரிவுகருதி அவர் பிங்கலத்தைக் குறிப்பிட்டார் போலும். மிகவும் பிற்காலத்தில் உரைசெய்த சங்கர நமசிவாயர், 'பிங்கலம் திவாகரம் சூடாமணி' என மூன்றின் பெயர்களைக் குறிப்பிடு கிறார்; காலமுறைப்படி அல்ல என்பது தெளிவு.

சூடாமணி நிகண்டு பழைய செய்தியை மிகவும் விரித்துச் சொல்கிறது. அருகக் கடவுள் முதனூல் சொன்னார்; கணதரர்

*வழி நூல் சொல்ல, பிறர் சார்பு நூல் சொல்லினர். இவ்வாறு மூன்று நூல்கள் உதித்தன.*

அங்கது போய பின்றை அலகில் நூல் பிறந்த மற்றும்
செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர் சிறப்பின் மிக்க
பிங்கலர் உரைநூற் பாவில் பேணினர் செய்தார்.

*என்பது அந்நூலின் கூற்று. 'செங்கதிர் வரத்தால் தோன்றும் திவாகரர்' என்று பிங்கலச் சிறப்புப் பாயிரமும் சூடாமணி நிகண்டும் ஒரே தொடர்களில் சொல்வது சிந்திக்கத்தக்கது. அப்படியே, அகராதி நிகண்டு செய்த ரேவண சித்தர்.*

தெரிதரு பிங்கலம் திவாகரம் முதலாய்ப்
பரவிய நிகண்டு பல எடுத்து ஆராய்ந்து
அதிற்சில திரட்டி அகரம் முதலாய்
மதித்தெழு வகார வர்க்கம் ஈறாய்.

*தாம் நூல் அமைத்ததாகப் பாடுகிறார். ஆசிரிய நிகண்டு செய்த ஆண்டிப் புலவரென்பவர், முந்திய ஐந்து நிகண்டுகளை ஆராய்ந்து செய்ததாகச் சொல்லுகிறார்:*

முந்துள திவாகரம் பிங்கல நிகண்டுசீர்
முந்து காங்கய னுரிச்சொல்
முறைபெறு கயாதரம் பகரும் அகராதியிவை
முற்று மொன்றாய்த் திரட்டி.

*இவர் ஐந்து நிகண்டுகளைக் குறிப்பிட்டிருப்பது, முழுமையும் கால முறையை ஒட்டியிருப்பது பெரிதும் ஆச்சரியகரமாய் உள்ளது. திவாகரத்துக்குப் பின் வந்த நிகண்டுகள் கால முறைப் படி பிங்கலம், உரிச்சொல், கயாதரம், சூடாமணி என்பனவாகும். இந்நான்கினுள், பிங்கலம் மட்டும் திவாகரத்தின் நூற்பா யாப் பிலேயே செய்யப் பெற்றிருந்தும் கூட, பொருட் பாகுபாட்டில் அதைப் பின்பற்றவில்லை; முற்றிலும் வேறாக அமைத்திருக் கிறார். ஆனால் மற்ற மூன்று நிகண்டுகளும் முழுமையும் திவா கரத்தையே தழுவியுள்ளன.* இம்மூன்றையும் அகராதி நிகண் டையும் திரட்டித் தாம் நூல் செய்ததாகப் புலவர் கூறுகிறார். இறையனார் களவியலுரைகாரர் ஆடவர் குணம் நான்கு பெண் டிர் குணம் நான்கு என்று கூறுவார். இவையிரண்டும் திவா*

---

* *எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு நூலில் உள்ள அட்டவணையைப் பார்க்க.*

கரத்தில் சொல்லப்பட்டன. பெண்டிர் குணம் அச்சம் நாணம் மடம் பயிர்ப்பு என்பன உலக வழக்கால் பழமை என்றாலும், ஆடவர் குணமான அறிவு நிறை ஓர்ப்பு கடைப்பிடி என்றவற்றை இவர் திவாகரத்திலிருந்து எடுத்தார் என்றே கொள்ளத்தகும். களவியலுரை ஏட்டில் எழுதப்பெற்ற காலம் பத்தாம் நூற் றாண்டு ஆதலால், திவாகரம் இதற்கு முற்பட்டது என்று வரை யறை செய்து கொள்ளவும் இக்குறிப்பு உதவுகிறது.

திவாகர நிகண்டின் அடியொன்றைப் பொருளதிகாரவுரை யில் இளம்பூரணர் எடுத்துத் தருகிறார். யாப்பருங்கல விருத்தி யுரையாசிரியர் வணிகர் கடமை. வேளாளர் கடமை. சித்திரக் கவி என்ற இதன் சூத்திரங்கள் அப்படியே எடுத்து வைத்திருப் பதும் அறியத்தக்கது. அன்றி இவர், காவிய இலக்கணம் என்று திவாகரம் (தொகுதி 12) கூறுவதை யாப்பருங்கல ஒழிபியலில் (மாலை மாற்றே சக்கரம் சுழி குளம் என்ற, சித்திரக் கவிக்கு உரை எழுதுமிடத்து, விளம்பனத் தியற்கை என்ற தொடருக்கு விளக்கமாகப் பின்வரும் சூத்திர மொன்றைக் காட்டுகிறார்.

விளம்பனத் தியற்கை விரிக்குங் காலை
ஆரியந் தமிழொடு நேரிதின் அடக்கிய
உலகின் தோற்றமும் ஊழி யிறுதியும்
வகைசால் தொண்ணூற் றறுவர தியற்கையும்
வேத நாவின் வேதியர் ஒழுக்கமும்
ஆதி காலத் தரசர் செய்கையும்
அவ்வவ நாட்டார் அறியும் வகையால்
ஆடியும் பாடியும் அறிவரக் கிளத்தல்.

இது, காவிய இயற்கை என்ற பெயரால் திவாகரத்தில் உள்ள சூத்திரம் முழுமையும் அப்படியே எடுத்து அமைத்ததாகும்.

காவிய இயற்கை விரிக்குங் காலை
ஆரியந் தமிழால் நேரிதின் அடக்கி
உலகின் தோற்றமும், ஊழியின் இறுதியும்
வகை சால் தொண்ணூற் றாறு வாதியரும்
வேத நாவினர் வேதியர் ஒழுக்கமும்
ஆதிக் காலத்து அரசர் செய்தியும்
அவ்வவர் நாட்டில் அறியு மாற்றலும்
ஆடியும் பாடியும் அறிவு வரக் கிளத்தல்

என்பது காண்க. காவிய இயற்கை என்று இங்கே சொல்வது, புராணக் காப்பிய மென்றே கொள்ள வேண்டும்; இவர் சொல்லும் இலக்கணம் பிற காப்பியங்களுக்குப் பொருந்தாது; நால்வகைப் புலமையையும் விரிவாகக் கூறுகிறார். சித்திரக்கவி கூறும் மாலை மாற்று என்ற நூற்பா யாப்பருங்கல விருத்தியிலும் தண்டியலங்காரத்திலும் காணப்படுவது இங்கு உள்ளது. இது உண்மையாகவே திவாகரர் செய்து, பின் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் எடுத்துக் கொண்டிருக்கலாம்.* முரட்கை-கலிப்பா என்பது திவாகரம். விருத்தியில் 'முரற்கை' என்று காணப்படுகிறது. அடுத்த சூத்திரத்தில் வித்தார கவியைக் கூறுமிடத்து,

> மும்மணிக் கோவையும் பன்மணி மாலையும்
> மறமும் கலிவெண் பாட்டும் மட லூர்ச்சியும்
> கிரீடையும் கூத்தும் பாசாண்டத் துறையும்
> விருத்த கவிதையும் இயலிசை நாடகத்தொடு
> விரித்துப் பாடுவது வித்தார கவியே.

என்று திவாகரர் கூறுகிறார். இக்கருத்து அவ்விருத்தியுள் வித்தார கவியாவான் மும்மணிக் கோவையும், பன்மணி மாலையும், மறமும், கலிவெண்பாவும், மடலூர்ச்சியும் முதலிய நெடும் பாட்டும், கோவையும் பாசண்டமும் கூத்தும் விருத்தமும் கதை முதலாகிய செய்யுளும் இயலிசை நாடகங்களோடும் கலை நூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவி எனக் கொள்க என்று வருகிறது. இது திவாகரச் சூத்திரத்தை உரை நடையாக அமைத்தது என்பது தெளிவு. இங்கு சொல்லப்பட்ட பிரபந்தங்களுள் பல முன்னமே இருந்தன. அவற்றை அறிந்தே இவர் இவ்வாறு சூத்திரம் செய்கிறார் என்று கருதவேண்டும். மும்மணிக்கோவை, சேரமான் இளம் பெருமானடிகள், அதிராவடிகள் செய்தவை. பன்மணி மாலை, மறம் நூல்கள் இருந்தனவாக இன்று தெரியவில்லை. கலி வெண்பா - சேரமான் செய்த திருக்கயிலாய ஞான உலா முதலாயின. மடலூர்ச்சி-திருமங்கையாழ்வார் செய்த சிறிய திருமடல் பெரிய திருமடல். கோவை - பாண்டிக்கோவை. பாசண்டம்-இவரே பாசண்டத்துறை தொண்ணூற்றாறு என்கிறார்; 'பண்ணாற் றிறத்திற் பழுதின்றி மேம்பட்ட-தொண்ணூற்றறு

* திவாகரத்துக்கு இன்று வரை செம்மையான பதிப்பு இல்லாதபடியால், இதுபற்றி எல்லா ஏடுகளையும் ஒப்பு நோக்கியாகிற வரையில் உண்மை எது என்று சொல்லவியலவில்லை.

வகைக் கோவையும் வல்லவன்'* என்ற வளையாபதிப் பாடலை அடியார்க்கு நல்லார் எடுத்துக் காட்டுகிறார்; வேறு விளக்க மில்லை. கூத்து-யாப்பருங்கல விருத்தி காட்டும் விளக்கத்தனார் கூத்து போல்வன. கதை-பெருங்கதை. கிரீடை-விளக்கமில்லை; ஒரு கால் காப்பியங்களில் சொல்லப்படும் பூம்புனலாடல் (சலக் கிரீடை) ஆயினும் ஆகலாம்.

சிலப்பதிகார உரைகாரர் இருவரும் திவாகரத்தை எடுத்துத் தருகிறார்கள். அரும்பதவுரைகாரர் துணங்கைக் கூத்துக்குத் திவாகரச் சூத்திரத்தையே பெயர் சொல்லாமல் மேற்கோள் காட்டுகிறார்;

**பழுப்புடை இருகை முடக்கி அடிக்கத்**
**தொடக்கிய நடையது துணங்கையாகும்.**

இதையே பாடபேதத்தோடு அடியார்க்கு நல்லாரும் தருகிறார். நீரின்றி வேனில் தெறு நிலம் பாலை பருத்தி நூல் பட்டுநூல் அமைத்தாடை ஆக்கலும், சுமத்தலும் பிறவும் காருக வினைத் தொழில். ஆசே சிறுமையும் குற்றமும் ஆகும்;

**ஆதி யரிவஞ்சம் நல்லரி வஞ்சம்**
**ஏமத வஞ்சம் இரண வஞ்சம்**
**தேவ குருவ முத்தர குருவமெனப்**
**போக பூமி அறுவகைப் படுமே.**

என்ற நான்கு பிற மேற்கோள்கள் அடியார்க்கு நல்லார் காட்டுவன. இங்கெல்லாம் திவாகரம் என்ற பெயர் சொல்லாமலே திவாகர மேற்கோளைக் காட்டியிருப்பது தெளிவு. ஒரு செய்தியும் உடன் குறிப்பிடுதல் தகும். வையாபுரிப்பிள்ளை திவாகர நிகண்டு 11ஆம் நூற்றாண்டுக்கு உரியதாக இருக்கலாம் என்று ஓரிடத்தில் குறிப்பிட்டார். அது பொருந்தாது. அரும்பதவுரை 11ஆம் நூற்றாண்டுக்குரியது.❖ ஆதலால் அதனுள் பயிலும் திவாகர நிகண்டு 11ஆம் நூற்றாண்டுக்கு உரியதாக இருக்க முடியாது, காலத்தால் முற்பட்டிருக்க வேண்டும் என்பது தெளிவு. (விரிவை காலம் என்ற தலைப்பில் பார்க்க)

---

* காவியத்தியற்கை கூறிய சூத்திரத்தில் தொண்ணூற்றாறு வாதியரும் என்றது பாசண்டத் துறையேயாகும். பாசண்டம் என்பது புறச் சமயத்தின் தருக்க வகை.

❖ காலம்1025; எமது தமிழிலக்கிய வரலாறு 11 நூற்றாண்டு நூலில் காண்க

### மேற்கோள்

திவாகரத்தை மேற்கோளாய்ச் சொல்வோருள், மலையாள லீலா திலக ஆசிரியரையும் குறிப்பிட வேண்டும். 12ஆம் நூற் றாண்டிறுதி - (13ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் மலையா ளத்தில் சீராமகவி என்பவர் இராம சரிதம் பாடியவர். அந் நாட்டு மலையாள நூல் தமிழாகவே இருக்கும். இச்சரிதம் முழுமையும் தமிழே; வடமொழிக் கலப்பே இதில் இல்லை. ஒன்றிரண்டு சொற்களே மலையாளச் சொல் முடிபு ஏற்றவை. பின்னர் மலையாளத்தில் வடமொழிக் கலப்பு அதிகமாகி விட் டது. இவ்வாறு வளர்ந்த இலக்கியம் மணிப்பிரவாள இலக்கியம். இதற்கு இலக்கணம் வகுக்க எழுந்தது லீலா திலகம். இதன் ஆசிரியர் பெயரும் உரையாசிரியர் பெயரும் தெரியவில்லை; இதன் காலம் 14ஆம் நூற்றாண்டாகும் என்பர்.* இதனுள் நான் காம் சிற்பம் என்ற பகுதியுள் சொற்குற்றங்கூறும் 67ஆம் நூற் பாவுரையில், நாட்டுமொழி நிகண்டு என்று பெயர் சொல்லி 'முகை நனை கலிகை' என்ற மரப்பெயர்த் தொகுதிச் சூத்திர மொன்றையும், 'வித்துருமம் துகிர்' என்ற பல்பொருட் பெயர்த் தொகுதிச் சூத்திரமொன்றையும் மேற்கோளாய்த் தருகிறார்❖ இரண்டும் திவாகரச் சூத்திரங்கள். வடமொழியைப் பெரிதும் போற்றி இலக்கணம் செய்கின்ற இவ்வாசிரியர், திவாகரம் வட மொழியல்லாமையாலே, நாட்டுமொழி நிகண்டு என்று இங்கு குறிப்பிட்டார் போலும்.

### பின் வந்த நிகண்டுகள்✞

திவாகரம் பிங்கலம் சூடாமணி நிகண்டு ஆகிய மூன்றும் பல முறை குறிப்பிடப்பட்டன. திவாகரத்துக்கு இன்று வரை நல்ல பதிப்பு இல்லை. சூடாமணி நிகண்டு நாவலர் அச்சகத் தாரால் தொடர்ந்து பலமுறை நன்முறையில் பதிப்பிக்கப் பெற்று வந்திருக்கிறது. வையாபுரிப்பிள்ளை கயாதரம், அரும்பொருள் நிகண்டு, பொதிகை நிகண்டு, நாமதீப நிகண்டு என்ற நான்கை யும் ஆராய்ச்சிக்கேற்ற முறையில் பதிப்பித்தார். அகராதி நிகண்டு பொருள் தொகை நிகண்டு என்ற இரண்டும், மதுரைத் தமிழ்ச்

---

* லீலாதிலகம் தமிழ்ப் பதிப்பு, ம்ா. இளைய பெருமாள் 1971, முன்னுரை பக்கம் vii;

❖ மேற்படி 109.

✞ இங்கு குறிப்பிட்டவற்றினும் அதிகமான நிகண்டுப் பெயர்களுள்ள ஓர் அட்டவ்ணையை எமது தமிழிலக்கிய வரலாறு 10ஆம் நூற் றாண்டு, அத்தியாயம் 4-பிங்கல நிகண்டுப் பகுதியில் காண்க.

## அச்சான நிகண்டுகளின் வரலாற்று அட்டவணை - சுருக்கம்

| எண் | நிகண்டு | ஆசிரியர் | சமயம் | நூற்றாண்டு | யாப்பு | பகுதி | சூத்திரம் | சொல் | பதிப்பித்தார் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | திவாகரம் | திவாகரர் | சைவர் | 9 | நூற்பா | 12 | 2180 | 9,500 | தாண்டவராய முதலியார் | 1839 |
| 2 | பிங்கலம் | பிங்கலர் | சைவர் | 10 | நூற்பா | 10 | 4121 | 14,700 | சிவன்பிள்ளை | 1890 |
| 3 | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் | சைவர் | 14 | வெண்பா | 12 | 287 | 3,200 | குமாரசாமிப் புலவர் | 1906 |
| 4 | கயாதரம் | கயாதரர் | சைவர் | 15 | கலித்துறை | 11 | 566 | 10,500 | வையாபுரிப் பிள்ளை | 1939 |
| 5 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | சைனர் | 16 | விருத்தம் | 12 | 1197 | 11,000 | ஆறுமுக நாவலர் முதலான பலர் | பல |
| 6 | அகராதி நிகண்டு | ரேவண சித்தர் | வீர சைவர் | 16 | நூற்பா | 10 | 3334 | 12,000 | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 1921 |
| 7 | அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமந்தைய தேசிகர் | சைவர் | 18 | விருத்தம் | 18 எதுகை | 700 | 12,000 | வையாபுரிப் பிள்ளை | 1931 |
| 8 | பொதிகை நிகண்டு | சாமிநாத கவிராயர் | சைவர் | 18 | I விருத்தம்<br>II நூற்பா | 10 அகர வருக் | 500<br>2228 | 14,500 | வையாபுரிப் பிள்ளை | 1934 |
| 9 | பொருள் தொகை நிகண்டு | சுப்பிரமணிய பாரதி | சைவர் | 18 | நூற்பா | - | 1000 | 1,000 தொகை | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 1920 |
| 10 | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியச் கவிராயர் | சைவர் | 19 | வெண்பா | 16 | 800 | 1,200 | வையாபுரிப் பிள்ளை | 1930 |
| 11 | நானார்த்த தீபிகை | முத்துசாமிப் பிள்ளை | சைவர் | 19 | விருத்தம் | 18 எதுகை | 1110 | 5,432 | அனவரத விநாயகம்பிள்ளை | 1936 |

சங்கத்தாரால் நன்முறையில் பதிப்பிக்கப் பெற்றன. அனவரத விநாயகம் பிள்ளை, நானார்த்த தீபிகை என்னும் நிகண்டைச் சென்னை சர்வகலாசாலை வெளியீடாக அழகு பெறப் பதிப் பித்து வெளியிட்டார். உரிச்சொல் நிகண்டும் பிங்கலமும் சிவன் பிள்ளையால் ஓரளவு நன்முறையில் பதிப்பிக்கப் பெற்றன. இவற்றைக் குறித்த ஒரு விளக்க அட்டவணை உடன் உள்ளது. பின்னும் பல நிகண்டுகளையும் சேர்த்துக் குறிப்பிட்ட ஓர் அட்டவணை பிங்கல நிகண்டு ஆராய்ச்சியில் காணப்படும். ஆனால் மேற்குறித்த பதினொன்றைத் தவிர ஏனைய நிகண்டுப் பதிப்புக்கள் எவ்வாராய்ச்சிக்கும் பயன்படுவனவல்ல.

இந்நிகண்டுகளைக் குறித்துச் சுருக்கியேனும் சில சொல்ல இங்கு இடமில்லை. எனினும் இரண்டொரு சொற்கள் சொல் வது பொருத்தமாகும். பொதுவாக எல்லா நிகண்டுகளும் திவாகரத்தைப் பின்பற்றியே தொகுதிகளையும் பொருளையும் அமைத்திருக்கின்றன. பிங்கலம் வேறு என்பது சொல்லப்பட்டது. அளவால் மிகவும் சிறியது உரிச்சொல் நிகண்டு. சூடாமணி நிகண்டுடையார், திவாகரமும் பிங்கலமும் கற்பது எளிதல்ல என்றுணர்ந்து, முறை திவாகரத்தைப் பின்பற்றி, பிங்கலச் சொற் களும் சேர்த்துச் செய்வதாகச் சொல்கிறார். அகராதி நிகண்டு, அகராதி முறையைப் பின்பற்றுகின்றமையால், தொகுதியமைப்பு இதில் இல்லை. முதலெழுத்தை மட்டும் ஒட்டி அ முதல் வௌ வரையில் கிரமமாக நூற்பாக்கள் அமைக்கப் பெற்றன. அமைப் பிலும் இதுவன்றி மற்றோர் ஒழுங்குமுண்டு. ஒரு பொருளுடைய சொற்கள் முதல் நாற்பத்தாறு பொருளுடைய சொல்வரையில் எண் வரிசையில் நூற்பாக்கள் அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டு; அ : அம்முதல் ஒரு பெயர், அம்முதல் இரு பெயர், முப்பெயர், நாற்பெயர்....நாற்பத்தாறு பெயர்; வைம் முதல் ஒரு பெயர், இருபெயர், நாற்பெயர் எண்பெயர்-என்பன காண்க. அடுத்து அரும்பொருள் விளக்க நிகண்டில் பொருட்பாகுபாடு இல்லை; அகரம் முதல் னகரம் வரை எதுகையாகவே உள்ளது; இந்நூலில் அமைந்துள்ள பெயர்கள் பெரும்பாலும் அடை மொழியின்றிச் செப்பமாக அமைக்கப் பெற்றுள்ளன.

இந்த நிகண்டு தோன்றிய காலத்தின் பின் தோன்றியதே சதுரகராதி. இது சுப்பிரதீபக் கவிராயர் செய்து, அவர் பார்வை யிழந்தபின், அவரிடம் கல்வி கற்ற பெஸ்கி பெயரால் வெளி யிடப் பெற்றது. இவ்வகராதி தோன்றியும் கூட, மனப்பாடம்

செய்து பழக்கமுள்ள தமிழ் மக்களுக்கு நிகண்டினிடம் இருந்த ஈடுபாடு குறையவில்லை. ஈடுபாடு அறவே நீங்கியது. இருபதாம் நூற்றாண்டின் இரண்டாம் கால் பகுதியில்.

பொதிகை நிகண்டு இரு பகுதிகளாக உள்ளது, முதற்பகுதி விருத்தப்பா; 9 பகுதிகள் வழக்கம் போல் முடிந்தபின், பத்தாம் பகுதி எதுகையகராதி, ஒரு சொல் பல் பொருட் பெயர்த் தொகுதி; பிற்பகுதி அகரவரிசை - மோனை அமைப்பு அல்லது எழுத்து வருக்கம். நூற்பா; 'அ' வில் தொடங்கி 'வெள' வில் முடிவது. பொருள் தொகை நிகண்டு என்பது தொகையகராதிப் பொருளது. நாமதீப நிகண்டு திவாகரர் வழியில் தொகுதிகளை அமைக்காது புது வழியில் அமைக்கிறது. நிகண்டுகள் வரிசையில் இதுவும் உரிச்சொல் நிகண்டுமே வெண்பா யாப்பில் செய்யப்பட்டவை. நானார்த்த தீபிகை என்பது எதுகை யமைப்பிலேயே அமைந்து, வடமொழிச் சொற்களை அதிகமாகக் காட்டுவது; பெரிதும் அடையின்றியே பொருள்களைச் சொல்வது.

ரேவணசித்தர் 16ஆம் நூற்றாண்டில் படைத்த புதுச்சொல் அகராதி என்பது; இதைச் சுப்பிரதீபக் கவிராயரும் பயன்படுத்திக் கொண்டார்; ஆனால் இச்சொல்லுக்கு 19ஆம் நூற்றாண்டு முடியச் சிறப்பான ஆட்சியில்லை; 20ஆம் நூற்றாண்டில் இதற்கு அதிகமான ஆட்சி.

நாமதீப நிகண்டு செய்த சிவ சுப்பிரமணியக் கவிராயர் தமக்கு முன் எண்ணற்ற நிகண்டுகள் இருந்திருந்தன. அவற்றை யெல்லாம் தாம் ஒரு சேரத் தொகுத்து தம் நூலில் கூறியிருப் பதாகக் கூறுவது அறியத்தக்கது.

> பல்லா யிரநிகண்டில் பண்டிதர்கள் சொன்னபொருள்
> எல்லாம் எளிதாய் இனிதுணரக் – கல்லிடையூர்
> மன்னுசிவ சுப்ர மணியன் கவிராசன்
> பன்னுதமிழ் நாம தீபம்.

இவர் குறிப்பினால் அனேக நிகண்டுகள் இருந்தன என்பது தெரி கிறது. பல்லாயிரம் என்பதனாலே, இருந்தன அனைத்தையும் இவர் பார்த்தார் என்பது பொருளன்று. இவர் ஆய்ந்தன சிலவே இருக்கலாம். வேறு பல இருந்தன என்பதை மட்டும் இவர் சுட்டுகிறார் என்றே கொள்ள வேண்டும்.

### சொல்லும் பொருளும்

இனி, சொற்களின் பொருள் வளர்ச்சியை அறிவது எவ்வளவோ சுவையுடையது. நெய் என்பது பாலிலிருந்து எடுக்கும் நெய்க்கும் தாவர வித்தில் எடுக்கும் நெய்க்கும் வழங்கிய பொதுப் பெயராய் இருந்தது. காலக்கிரமத்தில் மாறி, இது பாலிலிருந்து எடுக்கும் நெய்க்கு மட்டுமே உரிய பெயராக ஒதுங்கி விட்டது. தாவர வித்துக்களிலிருந்து எடுப்பது எண்ணெய் என்ற பெயரைப் பெற்றது. இது ஒரு விசித்திரம். எள்ளில் இருப்பது எண்ணெயே தவிர, தாவர வித்துக்கள் அனைத்துக்கும் இவ்வொரே சொல் பொருந்தி வராது. எனினும், இன்றுள்ள பெயர் எண்ணெய் தான் - அது தேங்காயிலிருந்து வந்தாலும் சரி, கடலையிலிருந்து வந்தாலும் சரி, எள்ளிலிருந்து வந்தாலும் சரி; எல்லாம் எண்ணெய்தான். இதே நிலைமை வட மொழியிலும் இருக்கிறது. வடமொழியில் 'நெய்'யைத் தைலம் என்கிறோம். திலத்திலிருந்து வருவது தைலம் (திலம்-எள்) என்பதே முறை. ஆனால் அங்கும் இது போல எல்லா வகை நெய்ப் பொருளுக்கும் தைலம் என்ற சொல்லே பயன்படுகிறது என்று அறிவது சுவையுடையது.*

நாற்றம் என்பது மற்றொரு சொல்-நறிய மணம், தீய மணம் இரண்டுக்கும் உரிய பொதுச் சொல்லாயிருந்தது. இன்று தீயதாகி, பொதுச் சொல் சிறப்புச் சொல்லாகி விட்டது.

மேற்சொன்ன இரண்டு சொற்களும் தமிழ் கற்பவர் அனைவருக்கும் தெரிந்தவை. அத்திரி என்ற சொல் அவ்வளவு தெரியாது. திவாகரர் காலத்தில் இச்சொல் கழுதையைக் குறிப் பிட வழங்கிற்று. அடுத்த சில நூற்றாண்டுகளில் இது கோவேறு கழுதையைக் குறிப்பிட்டது. பின்னும் சில காலம் சென்று இதே சொல் குதிரையைக் குறிப்பிடுகின்றது. இத்தகைய சொற்பொருள் ஆராய்ச்சிகளுக்குத் தோற்றுவாயாக விளங்கவல்லது திவாகரம்.

நிகண்டு பயிலுதலும் ஆராய்தலும் மிகவும் சுவையுடையது. வாழ்க்கையில் இளம் பருவத்தைக் கடந்திருப்பவர்கள் பெற்ற அனுபவம் அதிகம். இவ்வனுபவத்தோடு சொல்லாராய்ச்சியில்

---

* இதிலிருந்து ஒன்று சொல்லத் தோன்றுகிறது. எண்ணெய் தைலம் - இரு சொற்களும் சிறப்புப் பொருளைக் குறிப்பன; காலப் போக்கில் இரண்டுமே பொதுப்பொருள் பெற்றுவிட்டன. இரு நிலையிலும் இரண்டுக்கும் பொருள், எள், எள்ளில் நெய் என்பதே. இதைப் பார்க்கும்போது இதன் வடசொல்லைப் பயின்று பழகி நடமாட விட்டவரும் தமிழரே என்று சொல்லத் தோன்றுகிறது.

இறங்கும் போது, பெறுகின்ற இலக்கிய அனுபவம் மிக்க சுவை யுடையது. சொற்கள், அவற்றின் வடிவ மாறுதல், பொருள், பொருளில் ஏற்படும் வளர்ச்சி, அவை உணர்த்தும் வாழ்க்கை முறைகள் ஆகியவை எந்தப் பருவத்தில் தான் மனத்துக்கு உவப்பு அளிக்கமாட்டா?

அத்திரி போலவே எண்ணற்ற சொற்கள்; சாணத்துக்கு இவர் சொல்லும் பெயர்களில் புண்ணிய சாந்தம் என்பதும் ஒன்று. இவர் தேவாரங்களில் தோய்ந்து சம்பந்தருடைய திருநீற்றுப் பதிகத்தையும் உணர்ந்ததனாலல்லவா இப்படியொரு கருத்து இவரிடம் பிறக்கிறது? உலகத்துப் பிராணிகளையெல்லாம் விட வலிமை வாய்ந்தது நரசிங்கம் என்ற தெய்வக் கற்பனை வடிவம். அதனிலும் ஆற்றல் மிக்கது சரபம் என்ற ஐதிகப்புள், எண் காற்புள், சிம்புள் என்கிறார். வாழ்க்கையின் இன்பம் துன்பம் இரண்டையும் இவர் காட்டும் சொற்களாலேயே நாம் அறிந்து கொள்ளலாம். அஞுலமும் ஞல்வலும் நுளம்பு, மசகம் கொசுகு* என இரு நூற்பாக்களால் இவர் கொசுகைக் கூறும்போது, அக் காலத்திலும் இவ்வுபத்திரவம் இருந்து துன்புற்றார் என்று அறி கிறோம். பிங்கலர் காலத்தில் இது இன்னும் பெருகி நான்கு நூற்பாக்களால் (2289-92) 14 பெயர்கள் சொல்லும் நிலைமைக்கு வளர்ந்திருக்கிறதென்று இன்று அறியும் போது, இன்றைய நாகரிகப் பெருக்கமும் அதன் தவிராத அங்கமாகிய கொசுகுப் பெருக்கமும் அக்காலத்திலும் தோன்றியமை யுணர்ந்து வியக்க வேண்டியிருக்கிறது. வாழ்க்கையின் இன்பம் என்பது நாம் குறிப் பிடுவது உணவுப் பண்டத்தை. இன்றைய பூரியும் தோசையும் (இதே வடிவில் சொல்லிலும் பொருளிலும்) ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்னும் திவாகரத்தில் இருந்திருக்கிறது. இது வும் சுவையுடைய அரிய ஒரு செய்தியல்லவா?

பசு என்ற சொல்லை முன்னே குறிப்பிட்டிருக்கிறோம். முற்காலத்தில் இச்சொல் மாடு என்பது போல, ஆணுக்கும், பெண்ணுக்கும் வழங்கும் சொல்லாகவே இருந்திருக்கிறது. திவாகரர் ஆண் பசு என்றும் பெண் பசு என்றும் சொல்லுகிறார். இவருக்கும் முன்னால், இச்சொல் தேவாரத்துள் 'பசுவேறும் எங்கள் பரமன்' (2396 சம்பந்தர்) என்றும், 'பசு வேறிந் நனை

* கொதுகு என்பதே இலக்கிய வடிவம், இவ்வடிவம் பிங்கலத்தில் உள்ளது. திவாகரப் பதிப்புக்களில் கொசுகு என்று காணப்படுவது பிழையாகும்.

*கவிழ்வாய் மத்தம் மதயானை யுரிபோர்த்த மணவாளன்' (8036 சுந்தரர்) என்றும் வருவன போல்வன காண்க. இவை போன்ற இடங்களில் பசு என்ற சொல் அக்காலத்தில் காளை என்றே பொருள் பட்டிருந்ததாக திவாகர நிகண்டு கொண்டு இப்போது நாம் அறிகிறோம்.*

## மொழியியல் துறை

*திவாகரமுடையார் எழுத்து நான்கு வகை எனக் குறிப்பிட்டு, பத்தாவது ஒலி பற்றிய பெயர்த்தொகுதியில் ஒரு சூத்திரம் செய் திருக்கிறார்.*

> **பெயரெழுத்து முடிவெழுத்து வடிவெழுத்துத் தன்மை**
> **யெழுத்தென எழுத்தின் பெயர் இயம் பினரே.**

*பெயர், முடிவு, வடிவு, தன்மை என நான்கு வகைப்படுத்த எழுத்து என்பது இவர் கூற்று. பிற நிகண்டுகள் யாவும் திவாகரர் கூற்றை அப்படியே வைத்துப் பெருக்கியுள்ளன என்று குறிப்பிட்டோம். பிங்கலந்தை கூறுவது (2087).*

> **வடிவு பெயர் தன்மை முடிவு நான் கெழுத்தே.**

*இது நான்கு என்று எண்ணிட்டுச் சொல்கிறது. கயாதரம் சுருங்கிய நிகண்டு, எழுத்தைச் சொல்லவில்லை. சூடாமணி நிகண்டு சொல் கிறது; 'மற்றுறு பெயரெழுத்து வடிவு தன்மையில் எழுத்தாம்' (712). இது முந்தியவற்றிலுள்ள முடிவெழுத்து என்பதை விட்டுச் சொல்கிறது. இவை நாம் காண்கின்ற நிகண்டுக் குறிப்புக்கள்.*

*இலக்கணத் துறையில் பார்ப்போமானால், திவாகரர் கூற்றுக்கு விளக்கம் கிடைக்கிறது. நன்னூல் எழுத்ததிகாரம் இறுதிச் சூத்திர உரையில் (256), இவ்வதிகாரத்துப் புறநடை என்று சொல்லி, ஒன்பது சூத்திரங்களை மேற்கோளாய்த் தந்து, திவாகரர் கூறிய நான்கையும் விளக்கியுரைக்கிறார். இவர் காட்டு பவற்றுள் முதல் ஐந்தும் யாப்பருங்கல விருத்தியினுள்ளும் காட் டப்பட்டன. அதன் பகுதி பின்வருவது:*

*'இனி, எழுத்து நான்கு வகைய; உருவெழுத்தும், உணர் வெழுத்தும், ஒலியெழுத்தும், தன்மையெழுத்தும் என. என்னை?*

*அவற்றுள்,*

> **உருவே உணர்வே ஒலியே தன்மையென இரு வகை**
> **யெழுத்து மீரிரண் டாகும்.**

*என்றாராகலின், அவற்றுள், உருவெழுத்தாவது எழுதப்படுவது: என்னை?*

காணப் பட்ட வுருவ மெல்லாம்
மாணக் காட்டும் வகைமை நாடி
வழுவி லோவியன் கைவினை போல
எழுதப் படுவ துருவெழுத் தாகும்.

என்றாராகலின்.

உணர்வெழுத்தாவது:

கொண்டவோர் குறியாற் கொண்ட அதனை
உண்டென் றுணர்வது உணர்வெழுத் தாகும்.

ஒலியெழுத்தாவது

இசைப்படு புள்ளி னெழாஅல் போலச்
செவிப்புல னாவது ஒலியெழுத் தாகும்.

தன்மை யெழுத்தாவது

முதற்கா ரணமுந் துணைக்கா ரணமும்
துணைக்கா ரணத்தொடு தொடரிய வுணர்வும்
அவற்றொடு புணர்ந்த வகத்தெழு வளியின்
மிடற்றுப் பிறந் திசைப்பது தன்மை யெழுத்தே.

என எழுத்தினது விகற்பமும் எழுத்தினது புணர்ச்சியும் எழுத் ததிகாரத்தினுட் காண்க.

இங்கு காட்டப்பட்ட நான்கினுள், திவாகரம் காட்டும் பெயர் முடிவு என்ற இரண்டுக்கும் பதிலாக உணர்வு ஒலி என்ற பெயர்கள் சொல்லப்படுகின்றன. மயிலைநாதர் முன்காட்டிய ஐந்து சூத்திரங்களையும் எழுதி, 'என்னும் இப்பகுதியுள் ஒலி யெழுத்தே செவிப் புலனாய்ப் பொருள் தருஞ்சிறப்பு நோக்கி, அதனை எடுத்தோதினார்; ஒழிந்தன மூன்றும் ஈண்டே உரைத் துக் கொள்க. இவ்வாறன்றி,

வடிவு பெயர் தன்மை யுண் முடிவு நான்காய்
நடை பெறு நாவலர் நாடிய வெழுத்தே.

கட்புல னல்லாக் கடவுளைக் காட்டுஞ்
சட்டகம் போலச் செவிப்புல வொலியை
யுட்கொளற் கிடுமுரு பாம்வடி வெழுத்தே.

வடிவு முதன் மும்மையின் வழங்கு மெழுத்திற்
படு பல பகுதிக் கிடு பெயர் பெயரே

தான முயற்சி தரக்கொளச் செவிப் புல
னாய வொலி தன்மை யெழுத்தா கும்மே.

உருபு முதன் மும்மையோ டொன்றிய வியல்பை
மருவுளந் துணிவுற வருமுடி பெழுத்தே.

இவ்வாறு பகுத்துரைக்கப்படும் எழுத்துக் கூறுபாடும் என்று பின்னும் ஐந்து சூத்திரங்களைத் தந்து எழுதுகிறார். இந்நான்கு வகையும் திவாகரர் கூறுபவற்றுக்கு வேறுபாடின்றி உள்ளன. இப்பத்துச் சூத்திரங்களும் எங்கு உள்ளன என்பது விளங்க வில்லை. யாப்பருங்கல விருத்தியில் காட்டப்பட்ட முதல் ஐந்தும் அந்நூலிலுள்ள தொடர்பால் வாய்ப்பியம் என்ற இறந்து போன நூலுக்குரியனவாகலாம். உருவெழுத்து (வடிவெழுத்து) என்ப தற்கு இங்கு கூறப்பட்ட விளக்கத்தைக் கொண்டு, அது எகிப்து போன்ற நாடுகளில் மக்கள் வளர்ச்சியின் தொடக்க நிலையில் வழங்கிய சித்திர எழுத்தெனக் கருதலாம். உணர்வெழுத்தென் பதும், அது போலவே எடுத்துத் தருங் குறிப்பினால் விளையும் உணர்வைச் சுட்டுவதாகலாம். ஒலியெழுத்தும் தன்மையெழுத்தும், அவ்வச் சூத்திரங்களில் கூறியபடி, அவற்றின் பிறப்பினுக்குரிய ஒலியும் தன்மையும் காரணமாய்ப் பெற்ற பெயராகலாம். பெயர் முடிபு இரண்டையும் ஒரு வகையாகப் பொருள் கொள்ளலா மாயினும், விளக்கமில்லை.

இங்கு இவற்றை நாம் சுட்டவந்தது, இக்கருத்துக்களை யெல்லாம் சிந்தித்துத் திவாகரர் நூல் செய்திருக்கிறார், அவர் தரும் குறிப்புக்கள் எழுத்துக்களின் வரிவடிவ ஆராய்ச்சிக்குத் துணைபுரிவன என்பதற்காகவேயாகும்.

## முடிவுரை

திவாகரர் தம் நூலைச் செய்யத் தொடங்கியது ஒரு புனித மான நேரம். பொதுவாக, எந்த மொழியிலும் ஒரு புதுப்படைப்பு வருவது மொழி செய்த தவம் என்றே சொல்வார்கள். அவ்வாறு தமிழ் மொழியின் தெய்வம், இவர் மனத்துள் புகுந்து ஒரு சுப முகூர்த்தத்தில் இவரை இப்படி ஒரு நூல் செய்யுமாறு தூண்டி யிருக்கின்றது. இவர் மேற்கொண்ட புது முயற்சியானது பின்னால் பலவாய்க் கிளைத்து ஓங்கி இருக்கின்றது. திவாகரர் தம் நூலைச் செய்த பிறகு பலமுறை அதுபற்றி மிகவும் சிந்தித்திருக்கிறார். அறிஞர் கூறுவர் என்று சில இடங்களில் கூறுகிறார். புகன்றனர் புலவர், உரைப்பர் உணர்ந்திசினோரே என்று இவர் அருமை யாய்ச் சில இடங்களில் எழுதியிருப்பது இதைக் காட்டுகிறது. மேலும் சில சமயம், ஒரே பொருளுக்கு இரண்டு சூத்திரங்கள்

அமைத்திருக்கிறார். முதல் சூத்திரம் இவர் முறையாக நூல் செய்தபோது செய்தது என்றும், இரண்டாவது சூத்திரம் இவரே பின்னால் சிந்தித்துப் பார்த்துச் சேர்த்துக் கொண்டது என்றும் கருத வேண்டும்; இடைச்செருகல் என்று இவை எல்லாவற்றை யும் ஒதுக்கி விடுதல் பொருந்தாது.

ஒரே சொல்லுடைய பெயரைக் குறிப்பிடும் போது, அது பாதி வரியில் முடிகின்றது; மற்றப் பாதி வரிக்கு வேறு பொரு ளுடைய வேறு சொல்லை அமைத்து வரியை முடிக்கிறார்; பின்னர் புதிய கருத்துத் தோன்றும்போது, தனி நூற்பா செய்து முந்தியதோடு ஒட்டுகிறார். பின்வரும் உதாரணங்களைக் காண்க: செயல் பற்றிய பெயர்த்தொகுதி:

1. கதுவாய் வடுப்படுதல்; கண்டூதி தினவே;
சொறி என் கிளவியும் சொல்லுப அதற்கே.

2. அடுத்தல் கூடுதல்; ஆறலை வழிப்பறி;
அதர்கோளும் மற்றதற்கு ஆகும் என்ப.

இங்கு ஆசிரியர் முதல் முறையாகவே தொடர்ந்து இச்சூத்திரங் களைச் செய்திருப்பாரானால், கண்டூதி, தினவு, சொறி என்று தொடர்ந்து ஒரு சூத்திரமாகவும், ஆறலை, வழிப்பறி, அதர் கோள் என்று தொடர்ந்து ஒரு சூத்திரமாகவும் செய்திருக்க முடியும். இங்கு இரண்டிடங்களிலும் வெவ்வேறு சொற்களாய் இருந்த போதிலுங் கூட, கதுவாய் கண்டூதி, அடுத்தல் ஆறலை என்று மோனை நயத்தோடு அமைத்திருத்தல் காணத்தக்கது.

சில சமயம், இவர் சொற்களை எண்ணி, ஒரு பொருள் பற்றி இத்தனை சொல் என்று எண்ணிட்டுக் காட்டுவதும் குறிப் பிடத்தக்கது.

தம் நூலின் பகுதிகளைப் பிரித்து அமைத்துக் கொள்வ தற்கு இவர் எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பார் என்பதை இன்றும் கூட நாம் உணர்வது அருமை. பாதை முதலில் போட்டுக் கொடுப்பது எவ்வளவோ கடினம். போட்ட பாதையில் செல்லு வது எல்லோருக்கும் எளிது. இந்த எண்ணம் எப்படி இவருக்கு உண்டாயிற்று?

'அம்மையைச் செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த நாவ லன் அம்பர்ச் சேந்தன்' என்கிறார். ஒரு கால் அவ்வாறு தமது பேரன்புக்குப் பாத்திரமான சேந்தன் ஓர் எளிய அந்தாதி

அமைக்கச் சொற்களைத் தேடித் துன்புற்றதை இவர் உடன் இருந்து பார்த்திருப்பார். அப்போது, இதற்கான ஒரு கருவி நூல் இருந்தால் அவனுக்குப் பேருதவியாய் இருக்குமே என்று இவர் எண்ணியுமிருப்பார். அந்த எண்ணம் முதிர்ந்து, தாமே இக்கருவி நூல் செய்ய முன்வந்தார் போலும். இவ்வாறு இவர் எழுதிய நூல் சேந்தனுக்கு மட்டுமன்றி, இன்று வரை தமிழ் கற்பவர் அனைவருக்குமே பேருதவியாய் இருக்கின்றது.

இதை விவகார உலகில் உள்ள ஓர் உதாரணத்தால் விளக்க முடியும். சிங்கர் என்பவர் தம் மனைவியிடம் மிகுந்த அன்பு கொண்டவர். அவள் ஏராளமாகத் துணி தைக்க வேண்டியிருந்தது. தினந்தோறும் இதன் பொருட்டு அவள் பட்ட துன்பத்தைக் கண்டு அதைக் குறைப்பதற்கு ஏதேனும் வழியுண்டா என்று, மனைவியின் பால் மிக்க அன்புகொண்ட சிங்கர் சிந்தித்தார். அச்சிந்தனையின் விளைவே சிங்கர் தையல் இயந்திரம். அவருடைய அன்பினால் உதித்த இந்தத் தையல் இயந்திரம், அவர் மனைவிக்கு மட்டுமின்றி, உலக மக்கள் அனைவருக்குமே உபகாரமாய் இருந்து வருகிறது. இது போன்ற ஒரு முயற்சியே திவாகரருடைய கருவி நூல் என்று எமக்குத் தோன்றுகிறது.

திவாகரர் நூற்பா யாப்பில் நிகண்டு செய்து காட்டிய பிறகு, நிகண்டுகள் பெருகின. அவர் செய்த தொகுதிப் பாகுபாட்டை மாற்றியும் பல நூல்கள் எழுந்தன. வெண்பா, கட்டளைக் கலித்துறை, விருத்தப்பா முதலான பாக்களிலும் நூல்கள் தோன்றின. ஒரு பகுதியை மட்டும் எடுத்து விரித்தெழுதிய நூல்களும் தோன்றின. நெடுங்காலத்துக்குப் பின் நமக்கு இன்று பழக்கமான அகராதி நூல்களும் பல்கலாயின. எல்லாம் திவாகரர் காட்டிய வழியே.

சொல் வளம், அகராதி என்பது மேற்கட்டடம்: அதை எல்லோரும் அறிவார்கள். அதை அலங்கரித்து வர்ணம் தீட்டி அழகுபடுத்தக் காண்கிறோம். யாரேனும் அக்கட்டடத்தின் அடிப்படையை (அஸ்திவாரத்தை) நினைத்துப் பார்ப்பார்களா? அஸ்திவாரம் எப்போதும் மூடியே இருக்கும். அதனுடைய நீளம் அகலம் ஆழம் அதன் கட்டிட அமைப்பு அடுக்கு - ஒருவர் கண்ணிலும் படுவதில்லை. அதுபோல, திவாகரத்தினுடைய பெரும் சேவையும் யார் கண்ணிலும் படவில்லை. காலக்கண் கொண்டு பார்க்கும் போது இது ஒப்பற்ற பெரும் சாதனை. தமிழ் இலக்கிய இலக்கண ஆராய்ச்சியும், தமிழ் மொழியியல்

ஆராய்ச்சியும் விரிவடைந்து வருகின்ற இந்த இருபதாம் நூற் றாண்டின் பிற்பாதியில் கூட, இந்நூலுக்கு ஓர் ஆராய்ச்சிப் பதிப்பு வெளிவரவில்லை என்பது, ஆராய்ச்சியுலகில் வெளிப்பூச்சு மோகந்தான் ஆட்சி புரிகிற தென்பதையே காட்டும்.

திவாகரம் பெரிதும் பயிலப்பட்டு வந்ததென்பதற்குத் தமிழ் நாட்டில் கிடைக்கும் ஏட்டுச் சுவடிகளே சான்றாகும். எல்லாப் பகுதிகளிலும் திவாகரர் சுவடிகளே அதிகமாய்க் கிடைக்கின்றன. இது ஒன்றே இந்நூலுக்கிருந்த பெரும் ஆட்சியை உணர்த்தும். திவாகரமும் சூடாமணி நிகண்டுமே பெரிதும் பயிலப்பட்டு வந்தன. திவாகரத்திலும், முதலாவது தெய்வப் பெயர்ப் பகுதிக்கு மட்டும் பல ஏடுகள் கிடைக்கின்றன. இதற்கு ஒரு காரணமும் சொல்ல முடியும் ஓர் ஆசிரியரிடம் இலக்கியப் பயிற்சி உடைய மாணாக்கர் பயில வந்த காலத்து, அவரை வேறு நூல்களைப் பிரதி செய்யும் வேலையில் ஈடுபடுத்துவது உண்டு, இது மாணாக் கராய் வருவோர் அனைவருக்கும் கொடுக்கப்படும் பயிற்சி யாகும். இவ்வாறு பயிற்சிக்கென்று எழுதப்பட்ட ஏடுகள் பல இருத்தல் கூடும். இதை மடங்களில் நன்கு பார்க்கலாம். ஒரே சாத்திரத்திற்குப் பல பிரதிகள் எழுதி வைக்கப் பெற்றிருக்கும்; பயிற்சிக்காக எழுதிக் கொள்ளப்பட்டவை என்பதே இதற்குக் காரணம். இவ்வாறு எழுதும்போது, எழுதினோரது கல்வித் தரக்குறைவால் பிழைகள் ஏற்படுவதும் உண்டு. இத்தகைய ஏடுகளை மூலம் தெரியாமல் ஆதாரமாய்க் கொள்ளும்போது, இப்பிழைகளைப் பாடபேதங்கள் எனக் கொள்ளவும் நேர்கிறது. இதனால் பாடபேதங்கள் பெருகி இருப்பதையும் காண்கிறோம். ஆனால் தேர்ச்சியுடைய ஏடு பரிசோதகராய் இருப்பின், அவர் மாணாக்கர் எழுதிய ஏடு என்பதை எளிதில் கண்டறிந்து, அதில் காணும் பாட வேறுபாடுகளுக்குப் பெரும் மதிப்புத் தரமாட்டார்.

தமிழ்மொழி வரலாறு இலக்கிய வரலாறு ஆகிய இரண் டின் ஆராய்ச்சிக்கும் திவாகர ஆராய்ச்சி இன்றியமையாதது. இந்நிகண்டு, பல்லவ ஆதிக்கம் வீழ்ந்து சோழர் ஆதிக்கம் ஓங்கத் தலைப்பட்ட தொடக்க ஆண்டுகளில் செய்யப்பெற்றது; 9ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி என்று குறிப்பிட்டோம். இதற்கு முன்னமே சங்க நூல்கள், பதினெண் கீழ்க்கணக்கு, பெருங்காப் பியங்கள், சைவ, வைணவ அருட்பாசுரங்கள் யாவும் செய்தாகி விட்டன. பிற்காலத்தில் எழுகின்ற முக்கியமான நூல்கள் பெரிய

புராணம் திருப்புகழ், இலக்கணங்கள், புராணங்கள், உரைகள் என்பனவே. ஆகவே இந்த நிலையை நாம் ஊன்றிப் பார்க்கும் போது, திவாகரமானது இருபெரும் இலக்கியத் தன்மைகளை பிரித்துக் காட்டுகின்ற ஓர் எல்லையாக அமைந்து நிற்பது எளிதில் விளங்கும். இதன்கண் அமைந்துள்ள சொற்கள் சுமார் பத்தாயிரம். இந்தச் சொற்கள் இப்போது நமக்குக் கால வரையறையோடு கிடைக்கின்றன. இவற்றைக் கூர்ந்து ஆராய்வது எத்தனையோ விதங்களில் கால வரையறைக்கும் பொருள் வரையறைக்கும் பெரும் பயன் தரும் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

## திவாகரப் பதிப்பு

1. திவாகரம் தாண்டவராய முதலியார் பதிப்பு 1839 (சாலி வாகன 1762 விகாரி). இதன் முகப்பேடு: சேந்தன் றிவாகரம். இஃது புத்தகங்க டோறுமொன்றற் கொன்றொவ்வாது வழூஉக்களாற் பொதிவுற்றுக் கிடந்தமையால் அவ்வழூஉக்களைப் பல புத்தகங் களைக் கொண்டு களைந்தும் வேண்டுமிடத்துப் புதுச் சூத்தி ரங்கள் செய்து உடுக்குறியீட்டுச் சேர்த்தும் பெயர் பிரித்தும், இவ்வாறெட்டுத் தொகுதிகாறும், சென்னைக் கல்விச் சங்கத்து தமிழ்த் தலைமைப் புலமை நடாத்திய தாண்டவராய முதலியா ராலும், அவ்வாறே மேலிரண்டு தொகுதிகளும் அவரநுமதிப் படி மேற்படிச் சங்கத்து வித்துவானாக விருந்த பு. நயநப்ப முத லியாராலும் வழுவறுத்துப் புதுக்கப்பட்டு அக்கல்விச் சங்கத் துப் புத்தக பரிபாலகராகிய கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளையால் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.... மற்றையிரண்டு தொகுதிகளும் பின்னர் வெளிப்படுத்தப்படும்.'

இப்புத்தகம், இம்பீரியல் என்று வழங்கிய அளவினதாய், ஒவ்வொரு பக்கமும் நடுக்கோடிட்டு, இடப்புறம் திவாகர மூல மும் வலப்புறம் சொற்களும் விரித்து அச்சிடப்பட்டுள்ளது. 245 பக்கம் சென்னை தி. விசாகப் பெருமாளையரது கல்வி விளக்க அச்சுக்கூடத்தில் அச்சிற் பதிப்பிக்கப்பட்டது. இதில் உள்ளவை பத்துத் தொகுதிகள். சூத்திரங்கள் எண்ணிடப்பட்டு, மொத்தம் 2286 என்று காட்டுகிறது. இதுமுறையே தொகுதிதோறும் 159, 233, 229, 258, 246, 128, 304, 264, 282, 183 ஆகும். காலம் 1839 ஆகும். ஆகவே குறிலான எகர ஒகரங்கள் புள்ளி வைக்கப் பெற்றிருக் கும். தாண்டவராயர் சேர்த்த சூத்திரங்கள் மிகச்சில; செயற்கை வடிவப் பெயர்த்தொகுதியில்தான் சற்று அதிகம். பதிப்பித்த போது இவர் விசாகப்பட்டணம் போய் விட்டார். உடனிருந்து

பார்க்கவில்லை. அங்கிருந்து 7-8-1839இல் இராமசாமிப் பிள்ளைக்கு இதுபற்றிப் பின்வருமாறு எழுதுகிறார். 'மஹா ஸ்ரீ. கொற்றமங்கலம் இராமசாமிப் பிள்ளையவர்களுக்கு விஜ்ஞாபனம். நாம் அச்சிற் பதிப்பிக்கத் தொடங்கிய சேந்தன் றிவாகரத்திலொன்பான்றொகுதி தொடங்குவதற்கு முன்னெனக்கு வாய்த்த வேறுதேயத் திருக்கையாலும், பிறிது கருமத்தைக் கனவிலும் தீண்ட வொண்ணாக் கருமந்தலைப்படலாலும், நான் கருதியவாறு முற்றுவித்தற்கியலாத மற்றைத் தொகுதிகளையு மொருவாறு புதுக்குவித்துச் சேர்த்துப் புத்தகத்தை நிறைத்து வெளிப்படுத்துவீராக வென்ற வென்வேண்டுகோளை மேற்கோண்டு அவற்றிலிரண்டாயினுஞ் சேர்த்தமைக்காக மகிழ்வுறா நின்றேன். மறவியால் விடுபட்ட சில பொருள்களுஞ் சொற்களும் பின்னர்ச் சேர்ப்பித்தற் பொருட்டு நான் முன் குறித்திருந்த குறிப்பேடெனக்குக் காணப்பட்டாற் காலந் தாழ்க்காமற் பயன் படுத்துவேன். இங்ஙனம் தாண்டவராய முதலியார்.'

இக்கடிதம் இப்பதிப்பின் முகப்பில் அச்சிடப்பட்டுள்ளது.

திவாகரம் முதல் முதலில் தாண்டவராய முதலியாரால் 1835இல் பதிப்பிக்கப்பட்டது என்று வையாபுரிப் பிள்ளை எழுதியிருக்கிறார். அங்கு அவரே பல சூத்திரங்களை இடைப் பெய்தார் என்றும் குறிப்பிட்டார். 11ஆம் தொகுதி, ஏடுகளில் இப்போது அச்சிட்டுள்ள மாதிரி இல்லை; அங்கு சூத்திரங்கள் ஓரளவு எதுகை நயத்தோடு அமைந்துள்ளன. ஆனால் தாண்டவராய முதலியாரே அவற்றைப் பிரித்து; அகராதி வரிசைப்படுத்தியிருக்கிறார்; ஏட்டில் ஆதியிற் பெயர் அந்தத்துப் பெயர் என்ற பாகுபாடும் காணப்படவில்லை.

2. மற்றொரு பழம் பதிப்பு. 1850ஐ ஒட்டியதாகலாம்; முகப்புப் பகுதி இல்லாமையால் ஆண்டு சொல்ல முடியவில்லை. இங்கும் எ ஒ புள்ளி பெற்றுள்ளன. புதிய சூத்திரங்கள் இங்கும் உடுக்குறி பெற்றுள்ளன. இவ்விரு பதிப்புக்களிலுமே, மூன்றாம் தொகுதி, 'காதலீகையில்' என்று அச்சிட்டிருந்தும் பின்வந்தோர் அனைவரும் காதலிகையில் என்று பிழையாக அச்சிட்டுள்ளனர். ஒருவர் காதலிகையில் என்பதற்கு விரிவான வியாக்கியானமே எழுதியுள்ளார்.

3. திவாகரத்துள் தெய்வப் பெயர்த் தொகுதி மட்டும் 1868இல் புஷ்பரதச் செட்டியாராலும் பின்னர் பலராலும் பலமுறை

பதிப்பிக்கப்பட்டிருக்கிறது. பதிப்பித்தோர் ஒரு கால் முழுமையும் பதிப்பிக்க எண்ணித் தொடங்கிப் பிறகு நிறுத்தி விட்டார்கள் போலும்; அல்லது அக்காலத்தில் 11ஆம் தொகுதியை மனப் பாடம் பண்ணியது போல, தெய்வப் பெயர்த் தொகுதியையும் மனப்பாடம் செய்யும் பழக்கம் இருந்திருக்கலாம். இவ்வாறு இருந்த பதிப்புக்கள் பதினொன்று; காலம் 1868 முதல் 1888 வரை.

4. தாண்டவராய முதலியார் பதிப்புக்கிணங்க பூவிருந்த வல்லி பார்த்தசாரதி நாயகர் வாணி நிகேதன அச்சுக்கூடத்தில் பதிப்பித்தது. (1880 போலும்)

5. சிவாத்துவித சித்தாந்தி யாகிய திருமழிசை முத்துசாமி முதலியார் பதிப்பு, தஞ்சாவூர் சின்னகன்னையா செட்டியாரது சகலகலா நிலைய அச்சுக்கூடம் 1886. இது முன்னர் திவாகரப் பதிப்பு என்ற தலைப்பில் குறிப்பிட்ட 1880 பதிப்பை ஒத்ததாகும். (காதல் ஈகையில் என்றே உள்ளது)

6. தாண்டவராய முதலியார் பதிப்புக்கிணங்க, கொ. லோக நாத முதலியார் மனோன்மணி விலாச அச்சுக் கூடப்பதிப்பு 1917.

7. சைவசித்தாந்த நூற்பதிப்புப் கழகப் பதிப்பு, 1958. 28 பக்கமுடைய சொல்லகராதி இதன் இறுதியில் உள்ளது.

பல ஏடுகளையும் நன்கு ஆராய்ந்து சொற்பொருள் வர லாற்றுணர்வோடு இவ்வாதி நிகண்டு நூல் பதிப்பிக்கப்பெறு தல் வேண்டும். வையாபுரிப் பிள்ளை இதைப் பதிப்பிக்கக் கருதி யும், பதிப்பிக்காமலிருந்தது நம் தவக்குறையே.

அச்சிட்ட திவாகரப் பதிப்புக்களில், பல சொற்கள் விடப் பட்டுள்ளன. முதல் முதல் அச்சிட்ட தாண்டவராய முதலியார் பிரதி செய்தபோது, சில ஏடுகள் மறைந்திருக்க வேண்டும்; அல்லது கைத்தவறுதலாகச் சில ஏடுகள் பிரதி செய்வதில் விடுபட்டிருக்க வேண்டும். எடுத்துக் காட்டாகச் சொல்வதானால், தந்தை தாய் பாட்டன் மாமன் மருமகன் மைத்துனன், மணமகன், மைந்தன், மகள் முதலான அனேகம் பெயர்கள் காணப்படவில்லை. எத்தனையோ அற்பமான சொல்லாட்சிகளையும் விடாமல் குறிப்பிடுகின்ற திவாகரர் இப்பெயர்களை மறந்து போய்விட் டிருப்பார் என்று கருதுதல் பொருந்தாது. எனவே, இதுபோல் பல குறைவுகளை நிறைவு செய்யப் பல பழைய ஏடுகளைப் புதிதாய்ப் பரிசோதனை செய்வது மிக்க அவசியமாகிறது.

## அத்தியாயம் - 4

# இலக்கணம் – 2

## அகப்பொருளும் புறப்பொருளும்

**முன்னுரை**

தமிழ் மொழியின் ஓர் இயல்பு. அது மிகவும் பழைய காலம் தொடங்கியே இலக்கியம், இலக்கணம் என்ற இரண்டையும் ஒரு சேரப் பெற்றிருந்தது என்பதாகும். உலகத்துப் பிற மொழி களில் வேறு எந்த மொழியிலும் இந்த இயல்பு அமைந்திருந்த தாகத் தெரியவில்லை; வடமொழியில் மட்டும் இவ்வாறு அமைந் திருப்பதுண்டு; நாம் கூறியதன் பொருளாவது, இன்று நமக்குக் கிடைக்கின்ற தமிழ் நூல்களில் இலக்கணம், இலக்கியம் என்ற இரண்டுமே பண்டைக் காலம் தொடங்கியே கிடைக்கின்றன என்பதுதான். மற்றப்படி இலக்கியம், இலக்கணம் இரண்டும் ஒன்றாகவே தோன்றி விட்டன என்று சொல்வது அறிவுக்கு ஒவ் வாதது. இலக்கியம் தோன்றி நெடுநாள் கழித்துத்தான் இலக் கணம் தோன்ற முடியும்.

சங்க நூல்களுக்கு மிக முற்பட்ட காலத்தில் கடல் போன்ற ஒரு பேரிலக்கியப் பரப்பு இருந்தது. அப்படியே தொல்காப் பியத்திற்கு முன் பலவான இலக்கிய இலக்கண நூல்கள் இருந்தன; அவற்றுள் ஒன்றும், இலக்கியமோ இலக்கணமோ, இப்போது கிடைக்கவில்லை.

தமிழ் நூல்கள், தோன்றிய காலம் தொடங்கி, ஓர் இலக்கண வரம்புக்குள் அமைந்து செல்கின்றன. இதனால் தான் பரஞ்சோதி முனிவர்,

> மண்ணிடைச்சில இலக்கண வரம்பிலா மொழி போல்
> எண்ணிடைப் படக் கிடந்ததா எண்ணவும் படுமோ.

என்று பாட முடிந்தது.

மிகவும் பழமையான இலக்கணம் என்று சொல்லப்படுவது தொல்காப்பியம். இது எழுத்து, சொல், பொருள் என்ற மூன்று

அதிகாரங்களை உடையது. இதன்பின் நெடுங்காலம் வரையில் இலக்கண நூல்கள் எழவில்லை. பின்னர் பொருளதிகாரத்தின் ஒரு பகுதியான களவியல் என்பது, ஓர் அகப்பொருள் இலக்கண நூலாக இறையனார் களவியல் (இறையனார் அகப்பொருள்) என்ற பெயரில், இறையனாரால் செய்யப்பட்டது. அது தோன்று வதற்கான சூழ்நிலையை வேறிடத்தில் விளக்கியிருக்கிறோம்.* அதன்பின் ஏறக்குறைய நூற்றாண்டு தோறும், பலதுறை இலக் கண நூல்கள் தொல்காப்பியத்தைப் பின்பற்றியும், அதனுள் சொல்லிய பொருளை விரித்தும், அதனுள் சொல்லப்படாத பொருளைச் சொல்லியும், எழுதப்பட்டு வந்தன.❖ அந்த இலக்கண வரலாற்றில் ஒன்பதாம் நூற்றாண்டு முக்கிய இடம் பெறுகிறது. இக்காலத்தில் அகம் புறம் என்ற இரு பொருள்கள் பற்றியும் புதிய இரு இலக்கண நூல்கள் எழுந்திருக்கின்றன.

அகப்பொருள் பற்றிய நூல் தமிழ் நெறி விளக்கம்-பொரு ளியல் என்பது. இது மிகவும் சுருங்கிய அளவிலேதான் இன்று கிடைக்கிறது: கிடைக்கிற பகுதி 25 சூத்திரம் கொண்டது. இறை யனார் களவியல் சுருங்கிய நூல்; 60 சூத்திரமுடையது. அது தன்னுடைய உரையினால் மிக்க பெருமை பெற்றது. தமிழ் நெறி விளக்கமும் மிகவும் குறைந்த அடிகள் கொண்டதாய் ஆசிரிய ராலேயே செய்யப்பெற்ற உதாரணச் செய்யுட்களைக் கொண் டது. இவ்வளவு சிறு பாடல்களை இவ்வாசிரியர் அமைத்திருப் பது மிகவும் ஆச்சரியமாக உள்ளது.

ஆனால் மிகவும் விரிவாகச் செய்யப் பெற்ற புறப்பொருள் இலக்கணம், புறப்பொருள் வெண்பாமாலை என்பது. இது தொல்காப்பிய நெறியில் வராமல், அதனினும் வேறுபாடுடைய பன்னிரு படலத்தின் வழிச் செய்யப் பெற்றதாகும். இங்கும் ஆசிரியர் 19 சூத்திரங்கள் செய்து அவற்றுக்கு உதாரணச் செய்யுட் களும் செய்யுட்களுக்குக் கொளுவும் செய்திருப்பது ஒரு சிறப்பு. இதற்குப் பழைய உரையும் உண்டு.

அகம், புறம் என்ற இந்த இரு நூல்களையும் இந்த அத்தி யாயத்தில் ஆராய்கிறோம். இவை முறையே இந்த நூற்றாண்டின் முற்பகுதிக்கும் பிற்பகுதிக்கும் உரியவை இரண்டும் ஐயரவர் களால் அழகுறப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு, நூலில் காண்க.

❖ இது பற்றிய ஓர் அட்டவணையை எமது தமிழ் இலக்கிய வரலாறு, 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

## தமிழ்நெறி விளக்கம்

இப்பெயர் கொண்ட அகப்பொருளிலக்கணப் பகுதி யொன்று, மூலமும் உரையும் மேற்கோளுமாக ஐயரவர்களால் 1937இல் அச்சிடப் பெற்றது. அது முற்றுப் பெறாத நூல்; முழு நூலும் கிடைக்கவில்லை. பின்னே குறிப்பிடும் செய்திகள் யாவும் அந்நூலை ஆராய்ந்து கண்ட குறிப்புக்களே.

**நூல்**: தமிழ் நெறி விளக்கம் என்பது, விளக்கம் என்றே பெயர் அமைக்கப் பெற்ற நூல்களாகிய அகப்பொருள் விளக்கம் இலக்கண விளக்கம் (பிற்காலத்துத் தொன்னூல் விளக்கம்) என்பனபோல, தமிழ் நெறியைக் கூறும் ஓர் இலக்கண நூலா கும்; களவியற் காரிகை என்று புதுப் பெயர் சூட்டி வையாபுரிப் பிள்ளையவர்கள் பதிப்பித்த அகப் பொருளிலக்கண நூலுக்குப் பெயர் விளங்காமல் ‘இறையனார் களவியல் விளக்கம்’* என்றே ஏட்டில் பெயர் சூட்டப் பெற்றிருந்தமையும் கருதத்தக்கது. உண்மை விளக்கம் என்பது ஒத்த சமய நூல்களும் நீதிநெறி விளக்கம் என்ற இலக்கிய நூலும் பெயர் பெற்றிருப்பதும் அறிய லாம். தமிழ் நெறி விளக்கம் என்பது, தமிழுக்குரிய சிறப்பான ஓர் ஒழுகலாற்றைத் தெரிவிக்கும் விளக்குப் போன்ற ஒரு நூல் என்னும் பொருளுடையது. சிறப்பான தமிழ்நெறி என்பது அகப்பொருள் நெறி. தமிழ் என்ற சொல்லுக்கே அகப் பொருள் என்று களவியலுரைகாரர் பொருள் செய்கின்றார்; ‘இந்நூல் என்னுதலிற்றோ எனின், தமிழ் நுதலிற்றென்பது’. யாப்பருங் கல விருத்தி மேற்கோள் காட்டிய ஓர் அவிநயச் சூத்திரம், களவாகிய கந்தருவமணம் தமிழியல் வழக்கமெனக் கூறுகிறது.

> தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு மிகைபெருகிய
> களவெ்னப் படுவது கந்தருவ மணமே.

கிடைக்கின்ற இந்நூலானது, பொருளியல் என்ற பகுதி, இது பொருளதிகாரமாகும். இது கொண்டு இதனுள் எழுத்தும் சொல்லும் இருந்திருக்கலாம் என்று ஐயரவர்கள் குறிப்பிட்டி ருக்கிறார்கள். அப்படியிருந்ததாகத் தெரியவில்லை; இந்நூற்

---

* தமிழிலக்கணப் பரப்பில் இந்நூலுக்குரிய இடத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு நூலில் கொடுத்துள்ள ஐந்திலக்கண அட்டவணையால் அறியலாம்.

பாடல்கள் உரையாசிரியர் பலரால் எடுத்துக் காட்டப்பட்டுள்ளமை போல, அப்படி இரு அதிகாரப் பகுதிகள் எங்கும் எடுத்துக் காட்டப் பெறவுமில்லை. கிடைக்கின்ற நூல் அகப்பொருளொன்றே கூறுகிறது. பெயர் பொருளியல் என்று பொதுப் பெயராயிருத்தலினாலே புறப்பொருளும் இவர் செய்திருக்கக் கூடும் என்று சொல்லலாம். ஆனால் அப்படி வரலாறோ ஆட்சியோ இல்லை. மற்றும் யாப்பும் அணியும் இவர் செய்தாரோ என்ற ஐயமும் எழுகிறது. இதைப் பின்னர் விளக்குவோம்.

இந்நூல் ஓர் அழகான சிறு நூல். முன் வந்த இறையனார் களவியல் அறுபது சூத்திரம் உடையதாயிருக்க இவர் அதை முயன்று சுருக்கி 25 ஆக ஆக்கியிருக்கும் திறம் பாராட்டற்பாலது, இவற்றுள்ளும், பாயிரப் பகுதிக்காக இவர் 13 சூத்திரங்கள் ஒதுக்கிய பின், ஏனைய 12 சூத்திரங்களுள்ளே தான் இறையனார் கூறும் பொருள் முழுமையும் செறித்திருக்கிறார். செறித்தது மாத்திரமன்று துறைகளுக்கெல்லாம் தாமே எடுத்துக்காட்டான ஆசிரியப் பாக்களைச் செய்தும் அமைத்திருக்கிறார். இவர் செய்த பாடல்கள் யாவும் ஆசிரியம்; பெரும்பான்மை மூன்றே அடி (172 பாடலில் 94 பாடல்); உதாரணத்துக் கென்றே செய்யப் பட்டவை. இது அன்றியும் இவர் காட்டும் மற்ற மேற்கோள் பாடல்கள் யாவுமே ஆசிரியம்; வெண்பா முதலான பிற பாக்கள், ஒன்று கூட இல்லை. எடுத்துக்காட்டுக்குச் சொற்செட்டாக இருக்கத் தகுந்த சிறு பாடல் ஆசிரியம் ஒன்றுமே என்பது இவர் கருத்து என்று தெரிகிறது. அன்றியும், எல்லாத் துறைகளுக்குமே, ஒவ்வொரு பாடல் தான் இவர் எடுத்துக் காட்டாகக் கொள்கிறார். 200 பாடல்கள் வழங்குமிடத்தில், ஒரே துறைக்கு ‘இதுவுமது’ என்று வேறு பாடலையும் இவர் காட்டிய இடம் 15க்கும் குறைவு.

சங்க இலக்கியம் போன்ற பண்டைய நூல்களின் சொல்லும் தொடரும் கருத்தும் இந்நூல் உதாரணச் செய்யுட்களில் மிகுதியாகக் காணப்படுகிறது. இலக்கண அமைதியை மட்டும் காட்ட நூல் செய்தமையால் இது இயல்பேயாகும். செவிலியை இடைச் சுரத்துக் கண்டோர் தெருட்டிய பாடல்:

> மடவரன் மாதர்க்கு வருந்தா தீமோ
> கடல் வயிறு பயந்த நித்திலம்
> உடையோர்க் காதல் உலகியல் வழக்கே. 125

இது பாலைக்கலி 9ஆம் பாடலைக் கொண்டது:

சீர் கெழு வெண் முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவை தாம் என் செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.

*உதாரணப் பாடல்கள் அனைத்துமே கூற்று என்பது சொல்ல வேண்டுவதில்லை. கூற்றினுள்ளும், இவர் பாடல்கள், எதிரே நின்று பேசுவது போலவே இன்றும் நமக்குப் புலப்படுவது பாராட்டற்பாலது.*

தெய்வமாக ஐயுறும் நெஞ்சம்
பொய்யா தாயின் நின் செவ்வாய் திறந்து
கிளிபுரை கிளவி யாம் பெறுக
ஒளியிழை மடந்தை உயிர் பெயர்ப்பு அரிதே. 17

*என்ற பாடல் காணத்தக்கது.*

*பிற நூல் ஒப்புமைத் தொடர்கள் சிலவற்றை மட்டும் இங்கு காட்டுவோம். நல்லிசை நிறுத்தல் வேண்டித் துணை பிரிந்து செல்வது (146) - புறநானூறு: 18 16. எழுதரு மதியங் கடற்கண்டாங்கு - திருமுருகாற்றுப்படை அடி 2.*

சேறலர் என்பது உளதெனின் உரைமதி
மாறினர் வல்வர வுரைப்பின்
ஊறின் றிவ்வழி வாழ்வோர்க் குரையே. 154

*என்ற பாடல், திருக்குறட் கருத்தையும் சொற்களையும் கொண்டது.*

செல்லாமை யுண்டேல் எனக்குரை, மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

முன்னிலை முடிப்பதொன் றுளதுகொல், மூவகை
நுண்ணிய பனுவலின் நுழைந்து கொல்
என்னை கொல் வாடியது, அண்ணல் நின் எழிலே? 7

*என்று பாங்கன் வினாவும் பாடல், 'தீந்தமிழின் துறைவாய் நுழைந்தனையோ, அன்றி ஏழிசைச் சூழல் புக்கோ, இறைவா, தடவரைத்தோட்கு என்கொலாம் புகுந்தெய் தியதே' என்ற திருக்கோவைக் கருத்தைக் கொண்டது; கோவையில் இயல் இசை இரண்டுமே சொல்ல, இவர் மூவகைப் பனுவல் என்று முத்தமிழையும் கூறுகிறார். சுருங்கிய சொற்களால் மிகவும் சுவைபட இவர் கூறுவதைப் பலவிடத்தும் காணலாம். வரை வெதிர் கொண்டது என்ற பாடல் மிக்க சுவையுடையது. பண் பாட்டுக்கு எடுத்துக்காட்டு:*

வான் தோய் தொல் குடி மரபும், அவ்வழிச்
சான்றீர், உமது வரவும் நோக்கி
நேர்ந்தனம் அல்லது, இவ்வுலகம்
மூன்றுடன் பெறினும் முடிவதோ அன்றே. 112

தலைமகன் தோழிக்குப் பிரிவுணர்த்தும் பாடல் அழகிய கருத்தைக் கொண்டது.

அறனும் ஈகையும் அன்பும் இணையும்
புகழும் போகமும் தருதலிற் புறம் பெயர்ந்து
தருவது துணிந்தனம் பெரிதே
விரிபூங் கோதை விளங்கிழை பொருளே. 136

சில அரிய சொல்லாட்சிகளையும் இந்நூலுள் காணலாம். இயவுள் என்ற சொல்:

வம்ப வரவின ராகலின் உணரீர்,
எம்பதத் தெளியளோ மடந்தை
இம்பர் வாழ்க்கை இயவுள் மன் எமக்கே. 35

இயவுள்-இறைவன்; இச்சொல்லாட்சி நூல்களுள் மிகவும் அருகிக் காணப்படும்: 'பெரியோ ரேத்தும் பெரும் பெயர் இயவுள்' என்பது திருமுருகாற்றுப்படை, அடி 274.

பாகு-பகுப்பு (சூ. 3), ஒருக்கினம் (9) ஆடுமாடு எருமை வகை, தருப்பணம் (சூ. 10), ஆயோ எனுங் குரல் (65), மகுணன் (மருத நிலத் தலைமகன் பெயர்), குறுஞ்சி (குறிஞ்சி) என்பன பின்னும் சில.* இலக்கண நூல்களில் தொல்லாசிரியர் கருத்துக்களைத் தாம் மேற்கொண்டதைப் புலப்படுத்தும் பொருட்டு அந்நூல்களின் ஆசிரியர், என்ப, என்மனார் என்பன போன்ற சொற்களை அமைப்பது மரபு. என்மனார் என்ற சொல்லை மட்டும் சூத்திரத்தின் இறுதியில் அமைக்கும் வழக்கம் இந் நூலிலன்றிப் பிற நூல்களிற் காணப்படவில்லை. (என்மனார் - பின்னே எழுவாய் இல்லை)

செய்யுளியல் அணியியல் என்ற இரு இலக்கண நூல்கள் யாப்பருங்கல விருத்தியில் மிகுதியாக எடுத்துக் காட்டப் பெறுகின்றன; அடியார்க்கு நல்லார், நேமிநாதவுரைகாரர், நவநீதப் பாட்டியலுரைகாரர் முதலியோராலும் சில நூற்பாக்கள் இப்

* ஐயரவர்கள் முகவுரை பக்கம் ix. குறுஞ்சி என்ற வடிவம் ஏடு எழுதினோரர் பிழையாயும் இருக்கலாம்.

பெயர் சொல்லிக் காட்டப்படுகின்றன. தமிழ் நெறி விளக்கம் பொருளியல் என்றமையால், ஒருகால் இவ்வாசிரியரே செய்யு ளியலும் அணியியலும் செய்திருக்கலாம் என்ற எண்ணம் எழுவது இயல்பு. மேற்காட்டிய இரு நூல்களையும் எடுத்துத் தரும் யாப்பருங்கல விருத்தியானது, 'செய்யுளியலுடையார் காட்டிய பாட்டு' எனவும், 'அணியியலுடையார் காட்டிய பாட்டு' எனவும் வெண்பாப் பாடல்களையும் குறட்பாக்களையும் காட்டுகிறார்; இவற்றுள் நாலடி போன்ற நூல்களும் உள்ளன. தமிழ் நெறி விளக்கமுடையார் காட்டுவதாயிருந்தால், ஆசிரியப்பாக்களை மட்டுமே காட்டுவார் என்றும் நினைக்கலாம். ஆதலால், இவ்விரு நூல்களும் வேறு நூல்களாகும்.

### நூற்பொருள்

முற்றுப் பெறாத பொருளியல் என்ற இந்த நூற் பகுதி யானது களவு கற்பு என இரு பகுதிகள் உடையது; இவற்றுக்குப் பாயிரம் போல 13 நூற்பாக்கள் உள்ளன. இறையனார் களவிய லில், பாயிரமில்லாது, 'அன்பின் ஐந்திணை களவு' என்று நேரே நூல் தொடங்குகிறது; ஆனால் பாயிரப் பொருளை உரைகாரர் சேர்த்துக் கூறுகிறார். நூலுக்குப் பாயிரம் வேண்டுமென்பதை அவ்வுரையில் மிகவும் அலங்காரமாகச் சொல்கிறார் இந்த நூலில். 14ஆம் சூத்திரத்தில் தான் களவு என்ற பொருள் (கந்தருவ ஒழுக்கமென்பது), இறையனார் நூலின் வாசகத்தையொட்டிச் சொல்லப்படுகிறது. முந்திய சூத்திரங்களில், நூலின் பொருள் வகை, அகப்பொருள் என்பது முதலும் கருவும் சார்ந்த உரிப் பொருள் என்பது, ஐந்திணைக்கும் நிலம், பெரும் பொழுது சிறுபொழுது, கருப்பொருளாகிய தெய்வம், மக்கள், அவர் செயல், உணவு, இசை, மாவும் புள்ளும் மரமும், பின் உரிப்பொருள் ஐந்தும் என்ற விளக்கம் சொல்லப்படுகிறது.

அடுத்து களவு என்ற பகுதி நூற்பா 14-20 முடிய; கற்பு 21 முதல் 25 முடிய; 25ஆம் சூத்திரத்தில் நூல் அபூர்த்தியாய் நிற்கிறது. களவொழுக்கத்தை இவர் ஆறு பிரிவாகப் பிரித்துக் கூறுகிறார். இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், தோழியிற் கூட்டத்துப் பகற்குறி, இரவுக்குறி, வரைவு கடாதல், உடன் போக்குவலித்தல் என: முதற் சூத்திரத்தில் எண் வகை மணத்தினுள் கந்திருவ முறைமை களவு எனப்படும் என்று சொல்லிப் பின் ஆறு சூத் திரங்களால் இவ்வாறு பிரிவுகளுக்கும் உரிய துறைகளை நிரலே குறிப்பிட்டு, உரை கூறி, உதாரணச் செய்யுட்களையும் தருகிறார்.

அடுத்த கற்பொழுக்கத்தில் முதற் சூத்திரத்தில் இப்பகுதி நான்கு பிரிவாயிருக்கும் என்று கூறி, அடுத்த நான்கு சூத்திரங்களால், இந்நான்கு பிரிவுகளான அறத்தொடு நிலை, உடன் செலவு, சேயிடைப் பிரிவு, ஆயிடைப் பிரிவு என்ற நான்குக்கும் உரிய துறைகளையும் சொல்லுகிறார்.

சில துறைகளை, உதாரணம் காட்டும் போது பல துறைகளாக விரித்தும் கூறுகிறார். தலைப்பில் சொல்லப்பட்ட துறைகள் களவு 81, கற்பு 54; இறுதிச் சூத்திரத்தில் (25) உள்ள எட்டுத் துறைகளில், முதல் துறைக்குரிய விளக்கம் கூறுவதோடு ஏடு முடிந்து விடுகிறது. எஞ்சிய பகுதிகள் கிடைக்கவில்லை.

முதல் சூத்திரத்தில் உரையில் 'அகப் பொருளும் புறப் பொருளும் அகப் புறப்பொருளுமென மூவீற்றதாய்ப் பல்வேறு வகைப்பட்ட பரப்புடையது பொருளாம்' என்று எழுதுகிறார். இதனால் இப்பொருளியல் என்பது இங்கு கூறிய மூவகைப் பொருளும் கூறுவது எனக் கருதலாம். மற்ற இரு பகுதிகளும் இருந்தனவா, இருந்து இறந்து போயினவா என்பதொன்றும் தெரியவில்லை.

### ஆசிரியர்

ஆசிரியர் பெயர் தனியே சொல்லப்படவில்லை; அவர் யாரென்றும் தெரியவில்லை. நூலிலுள்ள குறிப்புக்களும் மிகச் சிலவே. வழுத்தூர் மதிதரர் என்பவரை மூன்று பாடல்கள் குறிப் பிடுகின்றன.

உடையை வாழி நெஞ்சே, இடைகொண்டு
புழுங்கல் ஓம்புமதி, தழங்கொலி மிகுநீர்
வழுத்தூர் காக்கும் புணையின்
விழுத்துணை சான்ற மிகுபெருங் கிளையே. 6

தூய்மை சான்ற தொல்குடித் தோன்றிய
வாய்மை நாவின் மதிதரன் போல
உயர்தவ முனிவர் சாரப்
பெயரா நிலையதிப் பிறங்கு பெரு மலையே. 32

தந்துநீ அளித்த தண்டழை காண்டலும்
வந்தனள் எதிர்ந்த மடந்தை நெஞ்சம்
மண்மிசை விளங்கிய வழுத்தூர் மதிதரன்
நுண்ணியற் பனுவல் நுழை பொருள் நுனித்த

வாய்மொழி அமிர்தம் மடுத்தவர் மனமென
ஆனிலை பெற்றன்றி யானறிந் திலனே. 52

வழுத்தூரென்னும் பெயருடைய ஊரொன்று தஞ்சை ஜில்லாவில் ஐயம்பேட்டைக்கு வடக்கே குடமுருட்டி யாற்றின் தென் கரையில் உள்ளது. இவ்வழுத்தூர் அதுவே போலும். வழுத்தூர் காக்கும் புணையின் என்றது, வெள்ளம் பெருகிய காலத்தில் அவ்வூரினர் ஓடத்திலேறிக் கரை சேர்ந்தனரென நினைக்க இடந்தருகின்றது. அன்றிப் புணையென்பது பிறருக்குப் பற்றுக் கோடாகிய ஒரு தலைவனைக் குறிப்பாற் சுட்டியதாகக் கொள்ளலும் ஆம். 'களவனுங் கடவனும் புணைவனுந் தானே' (குறுந். 318). 'வழுத்தூரில் அரண்மனைமேடு என்ற தோரிடம் இருக்கிற தென்பர். அங்கே ஓர் அரண்மனையிருந்ததென்றும் அவ்வரண்மனையில் ஓரதிகாரியோ சிற்றரசனோ வாழ்ந்திருந் தனனென்றும் கூறுவர்' என்பது ஐயரவர்கள் குறிப்பு.

வழுத்தூர் மதிதரர் 'உலகத்தில் பெரும் புகழோடு விளங் கியவர். தூய்மை சான்ற பெருங் குடியிற் பிறந்தவர். வாய்மை தவறா ஒழுக்கமுடையவர். தவ மாண்பும் உடையவர். பல நூல் களின் பொருளை நுண்மையாக நன்கறிந்த புலமையுடையவர். அவருடைய உபதேசம், அமுதமே போல்வது; உபதேசம் பெற் றவர் மனம் மகிழ்ச்சி பொங்கும்' என்று இம்மூன்று பாடல் களாலும் அறிகிறோம். இவ்வழுத்தூர் மதிதரர் தமிழ்நெறி விளக்கம் செய்தாரென்றும், பொருளியல் மேற்கோள் பாடல் களைச் செய்தவர் என்றும் ஒரு கருத்து நிலவுவதுண்டு. இது பொருந்தாது. நூலும் உரையும் உதாரணப் பாடல்களும் செய்த ஆசிரியர் ஒருவரே. இவர் களவியற் சூத்திரங்களைச் சுருக்கி 25 சூத்திரங்களால் பாயிரமும் நூலும் செய்தமை போல, மிகவும் சுருங்கிய அடிகளையுடைய ஆசிரியப்பாக்களையும் தாமே செய்து, தம் கருத்தை மட்டும் எடுத்து விளக்கியுள்ளார். குறைந்த அடிகளையுடைய குறுந்தொகை, ஐங்குறுநூறு, சிற்றட்டகம் என்ற நூல்களை மட்டும் இவர் எடுத்துக்காட்டுவது இக்கருத்துக்கு ஆதரவு அளிக்கும். பின்னும் சான்று எடுத்துக்காட்ட இயலும்.

களவியற் காரிகையுரையானது, களவொழுக்கம் கூறும் சூத்திர உரையிலும் (23) கற்பொழுக்கம் கூறும் சூத்திர உரை யிலும் (43) இந்நூலைக் குறிப்பிடுகிறது: 'களவொழுக்காம் என்பரே: என் எனின் தமிழ் நெறி விளக்கத்திற் பொருளியலுடை யாரும் களவொழுக்கம் ஆறு வகைப்படுமென்றார். அவையறி வித்தலைக் கருதிற்று.... தெய்வப்புணர்ச்சியும் பாங்கற் கூட்டமும்

தோழியாலாய கூட்டத்துப் பகற்குறிப்பும் இரவுக் குறிப்பும் வரைவு கடாதலும் உடன்போக்கு வலித்தலு மென....'* (23).

முக்கட் கூட்ட முதலா நான்குந்
தொக்கிய வொழுக்கங் கற்பெனத் தோன்றும்.

என்பது அறத்தொடு நிலையும், உடன் செலவும், சேயிடைப் பிரிவும், ஆயிடைப் பிரிவும் என வகைப்பட்ட நான்குந்தொக்க வொழுக்கம் முக்கட் கூட்டமுடைய கற்பென்று சிறப்பிக்கப் படுமென்று பொருளியலுடையாரும் அறத்தொடுநிலை கற்புக்கு முதலென்று சொன்னா ரென்க (43)'. முதல் பகுதியில் தமிழ் நெறி விளக்கத்திற் பொருளியலுடையாரும் என்றமையாலும், இரண்டாம் பகுதியில் சூத்திரத்தையும் உரையையும் ஒன்றாய்ச் சேர்த்துப் பொருளியலுடையாரும் என்றமையாலும், களவியற் காரிகையுரைகாரர் கருத்து, தமிழ் நெறி விளக்கம் உரை பொரு ளியல் மூன்றையும் ஒருவரே செய்தார் என்பதாகும். எனவே, நுண்ணிய புலமையுடைய வழுத்தூர் மதிதரர், விளக்க ஆசிரிய ருக்கு ஆசிரியரென்று நாம் கருதலாம்; அவர் நூலாசிரியரல்லர்.

இவ்வாசிரியர் சைவரென்பது ஐயரவர்கள் கருத்து. மதிதரர் (சந்திரனைத் தரித்தவர், சந்திரசேகரர், சிவபெருமான், அப்பெயர் பூண்ட ஆசிரியருடைய) மாணாக்கரான இந்நூலாசிரியரும் சைவரே. அன்றியும் இவர் மேற்கோள் காட்டும் முதற்பாடல், தருமிக்குப் பொற்கிழி பெறும் பொருட்டு இறையனார் அளித்த 'கொங்கு தேர் வாழ்க்கை' என்ற பாட்டு (குறுந்தொகை. 2). இதுவும் சைவர் என்ற கருத்தை வலியுறுத்தும்.

## மேற்கோள்

இந்நூற்பாடல்கள் பின்வந்த உரையாசிரியர் பலராலும் ஆளப்பெற்றுள்ளன. காலமுறைப்படி சொல்வதானால் இறை யனார் களவியலுரை (10ஆம் நூற்றாண்டு), யாப்பருங்கல விருத்தியுரை, சிலப்பதிகார அரும்பதவுரை, தொல்காப்பிய இளம்பூரணம் (11 நூற்.) பேராசிரியம், நம்பியகப் பொருள் விளக்கம் (13 நூ), தொல்காப்பிய நச்சினார்க்கினியம், களவியற் காரிகையுரை (14 நூ) ஆகிய உரைகளுள் இந்நூற் பாடல்களைக் காணலாம். இன்னும் பிற்காலத்தே சிதம்பரப் பாட்டியல் (16 நூ) முதலான நூலுரைகள் இதன் பாடல்களைக் காட்டுகின்றன. எல்லா உரையாசிரியர்களும் ஒருமை பன்மை மயக்கத்துக்கு

* வையாபுரிப்பிள்ளை, களவியற்காரிகைப் பதிப்பு 1931, பக்கம் 169-170 பார்க்க.

மேற்கோளாகக் காட்டும் 'ஏவல் இளையர் தாய்வயிறு கரிக்கும் இன்னா அருஞ்சுரம்' என்ற வரி இந்நூலில் உள்ளது (பாடல் 154).

ஐயரவர்கள் பதிப்பில் பொருளியலுக்குரியனவாகத் தெரியும் பாடல்கள் 172 என்று எண்ணிக்கை காட்டப்பட்டுள்ளன. இவற்றுள், உரைகளில் மேற்கோள் எத்தனை முறை வந்துள்ளது என்பதைக் குறிப்பிடலாம். இறையனார் 2 முறை; யாப்பருங்கல விருத்தி 3; சிலப்பதிகார அரும்பதவுரை 1; நம்பியகப் பொருள் 12; நச்சினார்க்கினியர் 7; களவியற் காரிகையுரை 63.

களவியற் காரிகையுரை இதிலிருந்து மிகவும் அதிகமான பாடல்களை எடுத்துத் தருகிறது. அது காட்டும் பொருளியற் பாடல்கள் 63; இவற்றுள் முன் குறிப்பிட்ட 58 போக மற்றவை, தமிழ்நெறி விளக்கத்தின் இறந்துபோன பகுதிகளில் இருந்திருக்கலாம். இவ்வுரையாசிரியர், தாம் எடுத்துக் காட்டுத் தரும் போது முறையாக, திருக்கோவை, பாண்டிக் கோவை என்ற கலித்துறைப் பாடல்கள், பின் எட்டுத் தொகை சிற்றட்டகம் பொருளியல் என்ற ஆசிரியப் பாடல்கள், பின்வெண்பா என்ற முறையில் பிறழாமல் பாடல்களைத் தருவது குறிப்பிடத்தக்கது. பொருளியற் பாடல்கள் அடி சுருங்கியிருத்தலால் இவர் இந்நூலை அதிகம் காட்டுகிறார்.

மற்றொரு மேற்கோளும் இங்கு குறிப்பிடத்தக்கது. சிலப்பதிகார அரும்பதவுரையாசிரியர் வேனிற் காதையுரையில் (39-41),

அகநிலை மருதமும் புறநிலை மருதமும்
அருகியன் மருதமும் பெருகியன் மருதமும்
நால்வகைச் சாதியும்.

என்றவிடத்து, நான்கு மருதத்துக்கும் இலக்கணம் கூறி, இதன் பாட்டு என்று ஒவ்வொன்றுக்கும் இலக்கியம் தருகிறார்; அவர் தரும் பாடல்கள் பின்வருவன:

ஊர்க திண்டேர் ஊர்தற் கின்னே
நேர்க பாக நீயா வண்ணம்*

அங்கட் பொய்கை யூரன் கேண்மை
திங்க ளோர் நா ளாகும் தோழி.

---

* இப்பாடலோடு 'ஊர்க பாக தேரே' என்ற தமிழ் நெறி விளக்க 161ஆம் பாடலை ஒப்பு நோக்குக.

வந்தா னூரன் மென் தோள் வளைய
கன்றாய் போது காணாய் தோழி

மல்லூர் ........ நோவ எம்முன்
சொல்லற் பாண சொல்லுங் காலை
எல்லி வந்த நங்கைக் கெல்லாம்
சொல்லுங் காலைச் சொல்லு நீயே.

இந்நான்கு பாடல்களில் இரண்டாம் பாடல், தமிழ்நெறி விளக்கப் பொருளியல் 168ஆம் பாடலாகவும் காணப்படுகிறது. இவ்விடத்து, முன்னும் பின்னும் சில வரிகள் ஏட்டில் இறந்து போயிருக்கின்றன. அங்கு மற்றப் பாடற்பகுதிகள் காட்டப்பட்டிருத்தலும் கூடும். எனவே, இந்நான்கு பகுதிகளுமே பொருளியற் பகுதிகள் என்று கருதக்கூடும். அரும்பதவுரைகாரர், யாப்பருங்கல உரைகாரர் போன்றோரது ஆட்சியினால் இது சிறப்புடைய நூலாகக் கருதப்பட்டது என்றும் அறியலாம்.

முன்குறிப்பிட்ட களவியற் காரிகையில், பொருளியற் பகுதிக்குரிய பாடல்கள், தமிழ்நெறி விளக்கத்துள் காணப்படாமல், ஐந்து உள்ளன. காரிகையுரை நூல் முழுமையும் இன்று கிடைக்கவில்லை. அதனுள் இன்னும் அதிகமான பாடல்கள் இருந்திருக்கக்கூடும். இவையன்றியும், பண்டைய தொல்காப்பிய அகப்பொருள் பகுதியுரை முதலியவற்றில் குறுகிய வரிகள் கொண்ட மேற்கோள் பாடல்கள் தமிழ் நெறி விளக்கத்திற்கோ அல்லது இதையொத்த குறைந்த வரிகள் கொண்ட சிற்றட்டகம் என்ற நூலுக்கோ உரியவையாய் இருக்கலாம். அந்த நூலும் இன்று கிடைக்காமையால், இது பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை.

அன்றியும், களவியற் காரிகையுரையானது இந்நூலின் சூத்திரம் ஒன்றையும் அதன் உரையையும் சேர்த்து எடுத்து அமைத்திருக்கிறது என்பது அறியத்தக்கது. இந்நூலாசிரியர் வேண்டியபோது சுருங்கிய வரிகளையுடைய சங்க நூற்பாடல்களை மட்டுமே மேற்கோளாக எடுத்துத் தருகிறார். இவர் தரும் நூல்கள் குறுந்தொகை (13) ஐங்குறுநூறு (4) என்பன மட்டும். சிற்றட்டகம் (4) மற்றொரு நூல். இவர் கருத்தின்படி இது சங்க நூல் ஒத்த பெருமையுடையது. இவர் காட்டும் பாடல்கள் யாவும் ஆசிரியப்பா, ஆறடிப் பெருமையே உடையன.

கற்பொழுக்கத்தில் இவர் அமைத்த பகுதிகளுள் நான்காவது பகுதி ஆயிடைப்பிரிவு என்பது. சேயிடைப் பிரிவின்கண்,

ஓதற்பிரிவு, நாடு காத்தற் பிரிவு, பகை தணிப்பான் பிரிவு, பொருள்வயிற் பிரிவு முதலிய பலவகைப் பிரிவுகளையும் சொல்லிய பிறகு, ஆயிடைப் பிரிவு என்ற பகுதியில் பரத்தையிற் பிரிவு கூறுகிறார். ஆயிடை என்ற சொல்லைப் பரிமேலழகரும் எடுத்து அமைத்திருத்தல் காணத்தக்கது. 'வரைந் தெய்தியபின் தலைமகன் அறம் பொருளின்பங்களின் பொருட்டுச் சேயிடையினும் ஆயிடையினும் தலைமகளைப் பிரிந்து செல்லும்' - குறள், கற்பியல் அவதாரிகை.

ஐந்திணை நிலங்களுக்கும் தெய்வம் கூறும் போது, இந் நூலாசிரியர், பாலைக்குத் தெய்வம் இரவி (7) என்கிறார். 'தொல் காப்பியர் பாலைக்கு நிலம் வேண்டிற்றிலர், வேண்டாமையின் தெய்வமும் வேண்டிற்றிலர். பிறர் பகவதியையும் ஆதித்தனையும் தெய்வமென்று வேண்டுவர்'* என்று இறையனார் களவியலுரை கூறும். தமிழ் நெறி விளக்கமொன்றே இவ்வாறு ஆதித்தன் தெய்வமென்று கூறுகின்றபடியால், இதையே களவியலுரை குறிப்பிட்டதென்று கருதுவது பிழையாகாது. இப்படியே, பின் வந்த உரைகாரர்களான சிலப்பதிகார அரும்பதவுரைகாரரும், அடியார்க்கு நல்லாரும், தக்கயாகப் பரணி உரைகாரரும், நச்சினார்க்கினியரும் ஆதித்தனைப் பிறர் கூறுவர் என்று குறிப் பிடுவது, இந்நூலைக் கருதியேயாகும் என்று கொள்ளலாம். இத்தகைய குறிப்புக்களால் இந்நூல் சிறப்புடைய ஒரு பிரமாண நூலாய்க் கொள்ளப்பட்டிருந்தமை தெளிவாகும்.

**காலம்**

இச்சிறு நூலின் காலம் குறித்து அறிவதற்கு எந்தச் சான்று களும் கிடைக்கவில்லை. எனினும், இறையனார் களவியல் நூலில் இதன் பாடல் மேற்கோளாக வருவதால் இந்நூல் அக்களவியல் உரை எழுதப்பட்ட காலத்துக்கு முற்பட்டதென்று கொள்ளலாம். எழுதப்பட்ட காலம் பத்தாம் நூற்றாண்டு ஆனதால், வேறு ஆதாரம் இல்லாதவரையில் இதை ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கொண்டு, இதை இங்கு ஆராய்ந்திருக்கிறோம்.

களவு முதற் சூத்திரவுரையில், எண் மணம் என்றவிடத்து, இவர் எட்டையும் தமிழ்ப் பெயராகக் குறிப்பிட்டு விளக்கம் எழுதுகிறார். அறநிலை, ஒப்பு, பொருள்கோள், தெய்வம், அரும்பொருள் நிலை, வலி நிலை, பேய்நிலை, கந்திருவம் என.

---

* தமிழ்நெறி விளக்கம் ஐயரவர்கள் பதிப்பு 1937, பக்கம் 3, 7ஆம் சூத்திரக் குறிப்பு.

திவாகரம், பிங்கலம் ஆகிய இரு நிகண்டுகளும் பிரமம் பிராசா பத்தியம் ஆரிடம் தெய்வம் ஆசுரம் இராக்கதம் கந்திருவம் என்று முழுமையும் வட மொழிப் பெயர்களையே கூறுகின்றன. அன்றியும், இறையனார் களவியலுரையானது பின்வரும் சூத்திரத்தைத் தந்த போதிலும், வடமொழிப் பெயர்களையே தந்து விளக்கம் எழுதுகிறது.

அறநிலை, ஒப்பே, பொருள்கோள், தெய்வம்,
யாழோர் கூட்டம், அரும் பொருள் வினையே,
இராக்கதம் பேய்நிலை என்றிக் கூறிய
மறையோர் மன்றல் எட்டிவை; அவற்றுள்
துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பதன்
பொருண்மை என்மனார் புலமை யோரே.

இறையனார் களவியலுரைக்கு (10 நூற்.) அடுத்த நூற்றாண்டில் (11 நூற்.) தொல்காப்பிய உரை எழுதிய இளம்பூரணரும், இப்பாடலைத் தந்த போதிலும் கூட, வடமொழிப் பெயர்களை வைத்தே விளக்கம் எழுதுகிறார். தமிழ்நெறி விளக்கமுடையார் இப்பாடலைச் சொல்லாவிடினும், இதன் கருத்தையும் தமிழ்ச் சொல்லையும் அமைத்தே எழுதுகிறார். இதனால் இரண்டு கருத்துக்கள் நாம் பெறலாம். ஒன்று, இந்நூலாசிரியர் களவியலுரைக்கு முன்னும், ஒன்பதாம் நூற்றாண்டிலெழுந்த திவாகர நிகண்டு எழுதப் பெறுவதற்கு முன்னும் இருந்து தம் நூலைச் செய்தார், பிரமம் பிராசாபத்தியம் என்று வழங்குகிற வட சொல்லாட்சியை இவர் காணவில்லை என்பதாகும். இதன்படி பார்த்தால், இவர் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பாதி என்றும், திவாகரமுடையார் அதே நூற்றாண்டின் பிற்பாதி என்றும் முடிவு செய்யலாம்.

இரண்டாவது கருத்து, அறநிலை ஒப்பே என்ற சூத்திரம், இறையனார் களவியலுரையாசிரியர் இடுகுறியாற் பெயர் பெற்றது என்று குறிப்பிடுவதான நிகண்டுக்குரியதாயிருக்கும் போலும். இந்நிகண்டு* இருந்து இறந்து போயிற்று.

'பதினெண் மொழியிற் பயன்' என்று ஒரு பாடலில் (142) சொல்கிறார். பதினெண்மொழி என்பது பிற்கால வழக்கம்; மணிமேகலையினுள் மூவறு பாடை மாக்கள் (28:221) என்று

* இதைக் குறித்த ஒரு விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு பத்தாம் நூற்றாண்டு நூலில் காண்க.

இத்தொகை பயில்கிறது; திவாகரம் முதலான பின்வந்த நூல் களும் குறிப்பிடுகின்றன. ஆதலால் தமிழ் நெறி விளக்கம் ஒன்ப தாம் நூற்றாண்டு முற்பகுதி என்று சொல்வது பொருத்தமே.

## ஐயன் ஆரிதனார் புறப்பொருள் வெண்பாமாலை

### முன்னுரை

தமிழிலக்கணம் ஐந்தினுள் இடைப்பட்டது பொருள் இலக்கணம். இது அகம் புறம் என்ற இரண்டு பகுதியுடையது. அகமாவது ஒத்த அன்புடைய தலைவனும் தலைவியும் தாமே அனுபவித்து அறிவதேயன்றி இவ்வாறு இருந்தது என்று பிறருக்குக் கூறப்படாதது; இன்பம் பற்றி அகத்தே நிகழும் ஒழுக்கம் ஆதலால் அகம் எனப்பட்டது. புறமாவது ஒத்த அன் புடைய தலைவனும் தலைவியும் மட்டுமன்றிப் பிறராலும் அனு பவித்து உணரப்பட்டு, இவ்வாறு இருந்தது என்று பிறருக்குக் கூறப்படுவதாய் உள்ளது; புறத்தே நிகழும் ஒழுக்கமாதலால் புறம் எனப்பட்டது. இது பெரும்பான்மை அறமும் பொருளும் பற்றி நிகழ்வது. இப்பகுதி பற்றிய செய்யுள் வழக்குகளும் தமிழ் மக்களின் உலக வழக்குகளிலிருந்து எழுந்தனவே. செய்யுள் செய்யும் காலத்து அவை ஒரு மரபுக்குள் அடங்கி யமைதற் பொருட்டு வரையறை செய்யும் இலக்கணம் எழுந்தது. முதலாவ தாக எழுந்த இலக்கணம் தொல்காப்பியமாகும்; இதன் பொரு ளதிகாரத்துப் புறத்திணையியல் என்பது புறவொழுக்கம் கூறு கின்றது. தொல்காப்பியர் இப்புறப்பொருளுக்குத் திணையும் துறையும் வகுத்துச் சொல்லியிருக்கிறார்.

தொல்காப்பியத்தின் பின் அகப்பொருள் இலக்கணம் பல தோன்றினும், புறப்பொருள் பற்றித் தோன்றிய தனி நூல், ஐயனாரிதனார் செய்த புறப்பொருள் வெண்பாமாலை* என்ற நூல் ஒன்றேயாகும். தொல்காப்பியம் நூற்பாவால் ஆனது. மாலை யானது, பெயர் புலப்படுத்துகிறபடியே வெண்பாவால் ஆனது. தொல்காப்பியம் போல, நூற்பாவில் புறப்பொருளிலக்கணத்தை வேறு நெறி பற்றிக் கூறுகின்ற பன்னிருபடலம் என்பது, அதற்குப் பின்னும் வெண்பாமாலைக்கு முன்னும் செய்யப் பெற்றிருந்தது. ஆனால் அந்த நூல் இப்போது இல்லை.

---

* புறப்பொருள் வெண்பாமாலை ஐயரவர்களால் பல முறை மிகவும் அருமையாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இங்குக் கண்ட குறிப் புக்கள் அதிலிருந்து எடுத்தும் புதிதாய் ஆராய்ந்தும் தொகுத் தவையாகும்.

*ஆசிரியர்*

*இந்நூல் செய்தார் ஐயனாரிதனார்.* இப்பெயரை ஐயன் ஆரிதனார் என்று பிரித்து, இவர் ஆரித கோத்திரத்தில் தோன்றியவர் என்று எழுதினோரும் உளர் (ஹாரீத-ஆரித கோத்திரம்). ஆனால் நூலின் சிறப்புப் பாயிரம் அவ்வாறு சொல்லவில்லை.*

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை யிருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன்முதற்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்
ஓங்கிய சிறப்பின் உலக முழு தாண்ட
வாங்குவிற் றடக்கை வானவர் மருமான்
ஐய னாரிதன், அகலிடத் தவர்க்கு
மையறு புறப்பொருள் வழாலின்று விளங்க
வெண்பா மாலை எனப்பெயர் நிறீ இப்
பண்புற மொழிந்தனன் பான்மையிற் றெரிந்தே.

*இங்கு சொல்லப்பட்டுள்ள பொருள், பொதியிலில் இருந்த அகத்தியரிடத்துப் பயின்ற மாணாக்கர் பன்னிருவரும் பன்னிரு படலம் என்று ஒவ்வொரு படலமாக ஒரு புறப்பொருள் இலக்கணம் பகர்ந்தார்கள்; அதை நன்குணர்ந்தவரான 'பூமியை முழுதுமாண்ட வளைந்த வில்லைப் பெருத்த கையிலேயுடைய சேரமான்கள் வழியிலுள்ளார், ஐயனாரிதன் என்னும் பெயரினையுடையவர்' புறப்பொருள் வெண்பாமாலை என்ற பெயரால் நூல் சொன்னார் என்பதாகும். மேலும் ஒழிபு என்ற தலைப்பிலுள்ள 18ஆம் சூத்திரத்தில்,*

பாடாண் பகுதியுள் தொல்காப் பியமுதற்
கோடா மரபிற் குணனொடு நிலை இக்
கொடுப்போர் ஏத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
விடுத்த லறியா விறல்புரி வாகையுள்
வாணிக வென்றியும் மல்ல வென்றியும்
நீணெறி உழவன் நிலனுழு வென்றியும்
இகல் புரி யேறோடு கோழியு மெதிர்வன்
தகருடன் யானை தணப்பில் வெம் பூழொடு

* *ஐயனாரிதனாரென்பது திருவிடைக்கழியைச் சார்ந்த குராஞ்சேரியிலுள்ள சாஸ்தாவின் பெயர். இப்படியே சாஸ்தாவின் பெயராக இது பலவிடத்தும் வழங்குகின்றது.*

சிவல்கிளி பூவை செழும்பரி தேர் யாழ்
இவர்தரு சூதிடை யாடல் பாடல்
பிடியென் கின்ற பெரும்பெயர் வென்றியொடு
உடையன பிறவு முளப்படத் தொகைஇ
மெய்யி னார்தமிழ் வெண்பா மாலையுள்
ஐய னாரிதன் அமர்ந்துரைத் தனவே.

என்று ஆசிரியர் நூலின் இடையிலேயே தம் நூற்பெயரையும் எடுத்துரைப்பது காணத்தக்கது. மேலும் இவருடைய நூல் வழி யானது தொல்காப்பிய உரையுள் பேராசிரியராலும் பின்வரு மாறு காட்டப்பட்டது. அகத்தியர் செய்த அகத்தியத்தினை முதல் நூல் எனவும், அவர் வானோர் உயர்த்தும் வாய்வழிப் பல் புகழ் ஆனாப்பெருமை உடையார் எனவும், அவரால் செய்யப் பட்ட முதல் நூல் பொருந்தக் கற்றுப்புரைதவ உணர்ந்தோ ருள் தலைவராயினார் தொல்காப்பியனார் எனவும், பன்னிரு படலத்துப் புனைந்துரை வகையாற் பாயிரச் சூத்திரத்துள் உரைக்கப்பட்டது. இனி, பன்னிருபடலம் முதனூலாக வழி நூல் செய்த (வெண்பா மாலை) ஐயன் ஆரிதனாரும் இது கூறினார்; என்னை? 'மன்னிய சிறப்பின் வானோர் வேண்ட...... தொல் காப்பியம் முதல் பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த' எனப் பாயிரம் செய்ததற்கு உடம்பட்டமையின் என்ப.

இவற்றால் இவ்வாசிரியர் பன்னிரு படலத்தின் வழித் தம் நூலைச் செய்தார் என்பது முன்னோர் கருத்தென்பது தெளிவு. இவரைக் குறித்த வேறு செய்திகள் எவையும் தெரியவில்லை. எழுத்து, சொல், அகப்பொருள், யாப்பு, அணி முதலான இலக் கணப் பகுதிகள் பற்றிப் பிற்காலத்தில் பல நூல்கள் எழுந் துள்ளன. ஆனால், புறப்பொருள் பற்றி, தொல்காப்பியத்தின் பின் வேறு நூல் எழவில்லை; தனி நூலாக இருந்த பன்னிரு படலம் இன்று கிடைக்கவில்லை. இந்த நிலையை ஊன்றி நோக்கும் போது, ஐயனாரிதனார் உலக வாழ்வில் நன்கு தோய்ந்து, புறத் துறையை நன்குணர்ந்தமையால், தாம் மிகவும் முயன்று இந்த நூல் செய்தார் என்று கருதத் தோன்றுகிறது. பிறர் செய்யாத துறையில் இவர் செய்திருக்கிறார்; அதுவும் மிகவும் வெற்றிகர மாகச் செய்திருக்கிறார். பிற்கால உரையாசிரியர்களில் இவர் பாடலை எடுத்து மேற்கோள் காட்டாத உரையாசிரியர் இல்லை. அகப்பொருளிலக்கணத்துக்கு உரை செய்த களவியற் காரிகை உரைகாரரும் இதன் பாடல்களைத் தருகிறார்.

திருநுதல் வேரரும்பும், தேங்கோதை வாடும்
இரு நிலம் சேவடியும் தோயும் – அரி பரந்த

போகிதழ் உண்கணும் இமைக்கும்
ஆகும் மற்றிவள் அகலிடத் தணங்கே. 277

என்ற இந்நூற் பாடலை எடுத்துத் தராத ஆசிரியர் இல்லை. இது எங்கும் மருட்பாவுக்கு உதாரணமாக வருவது. யாப்பருங்கல விருத்தியும் இதை எடுத்துக் காட்டுகிறது. தொல்காப்பியப் பொருளதிகார உரையில் நச்சினார்க்கினியர் காட்டும் வெண்பா மாலைப் பாடல்கள் 30; இளம்பூரணர் காட்டும் பாடல்களோ 85. புறத்திரட்டில் இதன் பாடல்கள் 75 உள்ளன. இந்நூல் வெண் பாமாலை என்றே இதைக் குறிப்பிடும்.

ஐயனாரிதனார் சேரமரபினர் என்று குறிப்பிட்டோம். சேர நாட்டில் இருந்தார் எனச் சொல்வதற்கில்லை. தொண்டை நாட்டுத் தலங்களை - பாசூர் கச்சி திருவேங்கடம் குறிப்பிடுகின் றமையால் தொண்டை நாட்டில் வாழ்ந்திருக்கலாம். நன்கறியாத பாசூரைக் குறிப்பிடுகின்றமையால் அவ்வூரில் வாழ்ந்தாரென் றும் கருதலாம். சோழ பாண்டியரையும் இவர் நன்கு சிறப்பித்தே சொல்வது காணத்தக்கது. குடை, வாள், மண்ணுமங்கலம் என்ற மூன்றிடத்தும் முறையே சோழன், சேரன், வேம்பன் ஆகிய மூவரை யும் சிறப்பித்துச் சொல்கிறார். (பாடல் 222-4) பொதுவியற் படலத்தின் தொடக்கத்தில் போந்தை வேம்பு காவிரி நாடனது ஆர் என்று மூன்றையும் மூன்று பாடலால் (240-2) போற்று கிறார். கைக்கிளையில் சோழனையும் பெருந்திணையில் பாண் டியனையும் கூறுகிறார்.

### சமயம்

ஆசிரியர் சிறந்த சைவர். காப்புச் செய்யுட்கள் இரண்டும் முறையே ஆனை முகத்தானையும் நீலமிடற்றானையும் போற்று கின்றன.

நடையூறு சொல் மடந்தை நல்குவது நம்மேல்
இடையூறு நீங்குவது மெல்லாம் – புடையூறும்
சேனை முகத் தாளிரியச் சீறுமுகத் தூறுமதத்
தானை முகத் தானை நினைத் தால்.

கண்ணவனைக் காண்கஇரு காதவனைக் கேட்கவாய்
பண்ணவனைப் பாட, பதஞ்சூழ்க – எண்ணிறைந்த
நெய்யொத்து நின்றானை நீலமிடற் றானையென்
கையொத்து நேர் கூப்புக.

கச்சி, பாசூர் என்னும் தொண்டை நாட்டுச் சிவதலங்களை (239, 273) குறிப்பிடுகிறார். சிவபிரான் இயங்கரணம் மூன்றும்

*எரித்தான்; பூக்கொள் இதழிப் புரிசெஞ் சடையான்; முத்தலைக் கூற்றுக் கணிச்சிக் கடிபடு கொன்றையான்; சூலமொடாடும் சுடர்ச் சடையோன், ஆடரவம் பூண்டான்;*

ஆடல் அமர்ந்தான் அடியடைந்தார் என்பெறார்
ஓடரி உண்கண் உமை யொருபால் – கூடிய
சீர்சால் அகலத்தைச் செங்கண் அழல்நாகம்
தாராய்த் தழுவப் பெறும். 232

சூடிய வான் பிறையோய் சூழ்கடலை நீற்றரங்கத்து
ஆடி அசையா அடியிரண்டும் – பாடி
உரவுநீர் ஞாலத் துயப்போக என்று
பரவுதும் பல்காற் பணிந்து. 23

*கடவுள் மாட்டுக் கடவுட் பெண்டிர் நயந்த பக்கம் என்ற துறையில், உமாதேவியின் ஊடலைச் சிவபிரான் தீர்க்க முயல்வதைச் சொல்கிறார். அருள் செய் என்று அவர் சொன்னால், நாவிலிருக்கும் நாமகள் நோவு படும், பாதத்திலே வணங்குவேன் என்றால் முடி மீதிருக்கும் கங்கை நோவுபடும்;*

நல்கெனின் நாமிசையாள் நோம் என்னும்; சேவடிமேல்
ஒல்கெனின் உச்சியாள் நோம் என்னும்; – மல்கிருள்
ஆடல் அமர்ந்தாற்கு அரிதால்: உமையாளை
ஊடல் உணர்த்துவதோர் ஆறு. 236

*முருகனையும் போற்றுகிறார்; குருகு பெயரிய குன்றெறிந்தான், கருங்கடலுள் மாத்தடிந்தான், வேந்தனைக் கொன்றான் விறல் முருகன். அப்படியே திருமாலையும் நன்கு போற்றுவது இவரது பரந்த உள்ளத்தைக் காட்டுகிறது; மணிவண்ணன் சோவுடைத்த மதம்; சுடர் ஆழி நின்றெறியச் சோ அன்றெறிந்தான், பூவைப் பூ மேனியான், பாம்புண் பறவைக் கொடி போல, மணி நிரையுள் ஆயனா எண்ணல், சுழல் அழலுள் வைகின்று சோ, மாயவன் மாயம் ஆதலால், அருள் ஈயும் அழியான் - என்ற இடங்கள் காணத்தக்கன. வேங்கடத்துச் செல்வின் என்று இத்தலத்தைச் சொல்கிறார். கடவுள் வாழ்த்து என்ற துறையில் மூவருள் ஒருவனை உயர்த்துக் கொள்வது என்று கூறி, இவர் திருமாலுக்கு அழகான ஒரு பாடல் சொல்லுகிறார்.*

வைய மகளை அடிப்படுத்தாய், வையகத்தார்
உய்ய உருவம் வெளிப்படுத்தாய் – வெய்ய
அருந்திறல் ஆழ் அரவணையாய், என்றும்
நெடுந்தகை, நின் னையே யாம். 191

மற்றுமொரு பாடல் இங்குக் கருதத்தக்கது. உலகப் பற்றை யொழித்து மெய்ம்மையான பொருளைப் பற்றுவதைக் கூறுவ தாகிய பொருளொடு புகறல் என்னும் துறை:

> **ஆமினி மூப்பும், அகன்றது இளமையும்,**
> **தாமினி நோயும் தலைவரும் – யாமினி**
> **மெய்யைந்து மீதூர வைகாது மேல் வந்த**
> **ஐயைந்தும் ஆய்வது அறிவு. 181**

ஐயைந்து - சைவம் கூறும் இருபத்தைந்து தத்துவங்கள்; 'மெய் முதலான ஞானேந்திரியங்கள் ஐந்தும், பூமி முதலான மகா பூதங்கள் ஐந்தும், சுவை முதலான தன்மாத்திரைகள் ஐந்தும், வாக்கு முதலான கன்மேந்திரியங்கள் ஐந்தும், மனம் முதலான அந்தக் கரணங்கள் நான்கும், சீவனும் (புருடன்) ஆகிய ஐயைந்தும்' என்பது உரை.

**நூல்:**

புறப்பொருள் வெண்பாமாலையானது பன்னிரு படலம் என்ற பெயரைப் போல, வெட்சி முதல் பெருந்திணை இறுதி யாகப் பன்னிரு படலங்களை யுடையது. முகப்பில் கடவுள் வணக்கமாக இரு வெண்பாக்களும், சிறப்புப் பாயிர நூற்பா வொன்றும், 19 சூத்திரங்களும் உடையது. ஒவ்வொரு சூத்திர மும் தன்னகத்து அடங்கிய துறைகளைக் கோவைப்படுத்திக் கூறுகிறது. அதன்பின் துறைகள் வெண்பாவினால் விளக்கப் படுகின்றன; யாவும் நேரிசை வெண்பாக்களே. கைக்கிளைப் பகுதியில் உள்ள எல்லாத் துறைகளும் மருட்பாவினால் விளக்கப் படுகின்றன. நூலிலுள்ள மொத்த விளக்கப் பாடல்கள் (வெண்பா 240, மருட்பா 21) 261. ஒவ்வொரு பாடலுக்கும் ஒரு கொளு உரியது. சில சமயம் இக்கொளு நீண்ட 4 சீர் கொண்ட ஈரடியாயிருக்கும்; சில சமயம் 2 சீர் கொண்ட ஈரடியாயிருக்கும். மூன்றடியிருப்பதுமுண்டு. கொளுவும் சூத்திரம் என்றே பெயர் பெறுதலுண்டு என்று இந்நூலாசிரியரும் மாறனலங்கார உரை யாசிரியரும் கூறுவர். காப்பு, சூத்திரம், கொளு, பாடல்கள் ஆகிய யாவும் ஆசிரியரே செய்தவை; யாவும் சேர்ந்து வெண்பாமாலை எனப் பெறுகின்றன. ஒவ்வொரு படலத்தின் இறுதியிலும் திணைப்பாடல் துறைப்பாடல் மொத்தம் எத்தனை என்று உரைகாரர் முடித்துக் காட்டுகிறார்.

படலம் சூத்திரம் பாடல் முதலியவற்றை ஓர் அட்டவணை யாக அடுத்துக் காட்டியிருக்கிறோம்.

**புறப்பொருள் வெண்பா மாலை - திணை துறை அட்டவணை**

| படல எண் | சூத்திர எண் | சூத்திர வரி | படலப் பெயர் | பாட்டு | | | | | பா |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | துறை | திணை | துறை | கூடுதல் | கொளு | |
| | | | கடவுள் வாழ்த்து | | | | 2 | | வெண்பா |
| | | 12 | சிறப்புப்பாயிரம் | | | | 1 | | நூற்பா |
| 1 | 1 | 9 | வெட்சிப் படலம் | 20 | 2 | 19 | 21 | 21 | வெண்பா |
| 2 | 2 | 9 | க்ரந்தை | 14 | 1 | 13 | 14 | 14 | வெண்பா |
| 3 | 3 | 13 | வஞ்சி | 21 | 1 | 24 | 25 | 25 | வெண்பா |
| 4 | 4 | 13 | காஞ்சி | 22 | 1 | 24 | 25 | 25 | வெண்பா |
| 5 | 5 | 7 | நொச்சி | 9 | 1 | 8 | 9 | 9 | வெண்பா |
| 6 | 6 | 16 | உழிஞை | 29 | 1 | 31 | 32 | 32 | வெண்பா |
| 7 | 7 | 14 | தும்பை | 24 | 1 | 27 | 28 | 28 | வெண்பா |
| 8 | 8 | 19 | வாகை | 30 | 1 | 33 | 34 | 34 | வெண்பா |
| 9 | 9 | 33 | பாடாண் | 48 | 1 | 50 | 51 | 51 | வெண்பா |
| 10 | 10 | 7 | பொதுவியல் | 12 | 1 | 13 | 45 | 45 | வெண்பா |
| | 11 | 7 | சிறப்பிற் பொது வியற் பால | 11 | 1 | 14 | 45 | 45 | வெண்பா |
| | 12 | 6 | காஞ்சிப் பொது வியற் பால | 6 | - | 6 | 45 | 45 | வெண்பா |
| | 13 | 5 | முல்லைப் பொது வியற் பால | 8 | - | 10 | 45 | 45 | வெண்பா |
| 11 | 14 | 5 | கைக்கிளை - ஆண்பால் கூற்று | 9 | - | 9 | 21 | 21 | மருட்பா |
| | 15 | 5 | கைக்கிளை பெண்பால் | 12 | - | 12 | 21 | 21 | மருட்பா |
| 12 | 16 | 12 | பெருந்திணை - பெண்பால் | 19 | - | 19 | 37 | 37 | வெண்பா |
| | 17 | 14 | இருபால் பெருந்திணை | 18 | - | 18 | 37 | 37 | வெண்பா |
| | 18 | 14 | ஒழிபு | 18 | - | 19 | 19 | - | வெண்பா |
| | 19 | 5 | புறமும் புறப் புறமும் | - | - | - | - | - | நூற்பா |

19ஆம் சூத்திரம், முதல் ஏழு திணைகளும் புறம் என்றும் அடுத்த மூன்றும் புறப்புறம் என்றும் சொல்லுகிறது. கைக்கிளை பெருந்திணை ஒழிபு என்பவற்றை இவ்வாறு பாகுபடுத்தவில்லை.

'வாய்ந்த நிரை கோடல் என்பது முதலாக கைக்கிளைகள் கூறுங்கடன் என்பதனால் வெட்சி முதற் பாடாண்டினை யீறாகப் புறம் புறப்புறம் அகப்புறம் என்னும் மூன்று கூறாய வெழுதிணையும் முறையே கூறியவாறுங் காண்க. இவ்வாறன்றி, இவற்றினிடையிடை கரந்தை நொச்சி என்பவற்றையும், இறுதி யில் பொதுவியல் கைக்கிளை பெருந்திணை என்பவற்றையும் கூட்டிப் பன்னிரு படலமாக்கி, அவற்றிற்கு இருபது, பதினாலு, இருபத்தொன்று, இருபத்திரண்டு, ஒன்பது, இருபத்தொன்பது, இருபத்து நாலு, முப்பத்து மூன்று, நாற்பத்தெட்டு, முப்பத்தேழு, பத்தொன்பது, முப்பத்தாறு எனத் திணையுந் துறையுமாக விரித்து வெண்பா மாலையாகிய வழி நூலுள் ஐயனாரிதனார் கூறியதூஉம் இவ்வெழுதிணையுள் அடங்கும் எனக்கொள்க'.

இது மாறன் அலங்காரம் எழுபத்தாறாம் சூத்திரத்தில் காணும் உரை. இதன்படி ஐயனாரிதனார் நூலுள் முதல் பத்துப் படலம் திணையும் துறையும் சரியாகவே உள்ளன. பதினொன்று, இதில் கூறியபடி பத்தொன்பது துறை; இது இருபத்தொரு துறையாக இங்கு உள்ளது. பன்னிரண்டாம் படலம் பெருந் திணை என்பது முப்பத்தேழு துறையாக உள்ளது. அடுத்து ஒழிபு என்ற பகுதியில் பதினெட்டுத் துறைகள் உள்ளன. இந்த வேறு பாடுகளை முன்காட்டிய அட்டவணையில் கண்டறிக.

இவ்வாசிரியர் தம் நூல் முழுமையிலும் முற்றுமோனை யான அடிகளை நினைத்த இடமெல்லாம் செய்திருக்கிறார். வேறு எந்த ஆசிரியருக்கும் மோனை இவ்வளவு எளிதாக வந்து ஏவல் கேட்கவில்லை, அம்மோனைகள் இயல்பாகப் பொருந்தி யுள்ளன; முயன்று செய்தனவாகத் தெரியவில்லை. அப்படியே இவர் எளிதாகப் பழமொழி போன்ற தொடர்கள் பல அமைத் திருக்கிறார்: அங்கையுள் நெல்லி; அருவரை பாய்ந்திறுது மென் பார்; உழுவான் உலகுக்கு உயிர்; கடவுள் விருந்தோம்பல் வானகத் துய்க்கும் வழி; என்றும் பிறழா பெரியார் வாய்ச்சொல்; நீறுமேற் பூத்த நெருப்பு; நண்பகலும் கூகை நகும். இன்று மேடையில் பிரசித்தமாய் வழங்குகிற 'கற்றோன்றி மண் தோன்றாக் காலத்தே முற்றோன்றி மூத்த குடி' என்பது இவர் படைத்த தொடர்.

பொய்யகல நாளும் புகழ் விளைத்த லென்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர் – கையகலக்
கற்றோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முற்றோன்றி மூத்த குடி.

இதன் பாடல்களை முன்னமே குறிப்பிட்டோம். இளம்பூரணர், நீர் பல கால் மூழ்கி (தாபதவாகை 168) என்ற பாடலை உரை நடையாகவே எழுதிக் கொண்டு போகிறார். காலிங்கர் குறளுரை யில், கற்பொறியும் (112) என்ற பாடலை அப்படியே எழுதுகிறார். முல்லைப்பாட்டின் இறுதியில் இதன் 276 ஆம் பாடல் அப்படியே எடுத்து வைக்கப்பட்டுள்ளது.

திவாகரப் பதிப்பில், ஒலி பற்றிய பெயர்த் தொகுதியில் எட்டுப் புறத்துறைகள் சொல்லப்பட்டுள்ளன. பெயரிலும் பொருளிலும் மாறுபாடு காணப்படுகிறது. பெருங்காஞ்சி-பேரியற் காஞ்சி (திவாகரம்); புலவரேத்தும் புத்தேணாடு-உயர் மொழிக் காஞ்சி என்ற பெயர்களையும், பாசறை முல்லை, இல் லாண் முல்லை என்ற துறைகளின் பொருளையும் ஒப்பு நோக்குக.

18ஆம் சூத்திரம் குறிப்பிடுவது போல, இந்நூல் தொல் காப்பிய நெறியையும் தழுவியுள்ளது. குறள் தொடரும் கருத்துக் களும் இதன் கண் பயில்கின்றன.

நூற் செய்திகளுள் பின்வருவன குறிப்பிடத்தக்கவை. யார் யாருடைய மொழி நின்று கேட்டல் முறை என்பதைக் கூறுகிறார்.

அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதாய் என்றிவர்க்குத் தார்வேந்தே – முந்தை
வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டல் முறை.

ஒற்றர் இன்றும் இருப்பது போல, தம் உயிருக்கு இறுதி வரு வதையும் எண்ணாது இரவும் பகலும் பகைப்புலத்துப் போய் ஆராய்ந்து வந்தார் (17) என்பார். தொழில் செய்வோர் பரம்பரை யாக ஒரு குலத்துக்குத் தொழில் செய்து வந்தனர் என்பதையும் குறிப்பிடுகிறார் (19). தும்பையில், மன்னன் இறந்தானாக, வீர னொருவன் தன் உயிரையே ஆகுதி செய்கிறான்.

வானம் இறைவன் படர்ந்தென வாள்துடுப்பா
மானமே நெய்யா, மரம் விறகா – தேனிமிரும்
கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளமர்
ஒள்ளழல் வேட்டான் உயிர்.

*பாடாண் படலத்தில் அரசனைத் திருமாலாகவே வாழ்த்தும் பாடல்,*

**வைய மகளை அடிப்படுத்தாய், வையகத்தார்**
**உய்ய உருவம் வெளிப்படுத்தாய் – வெய்ய**
**அடுந்திற லாழி அரவணையாய், என்றும்**
**நெடுந்தகை, நின்னையே யாம். 191**

*பின்வரும் பாடல் நன்கறிந்தது, புறநானூற்று வரலாறுகளைக் குறிப்பிடுவது:*

**முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்**
**எல்லைநீர் ஞாலத் திசை விளங்கத் – தொல்லை**
**இரவாமல் ஈந்த இறைவர் போல் நீயும்**
**கரவாமல் ஈகை கடன். 194**

*களிறெறிந்து வந்தவனுக்குத் தண்ணடை நல்கல் தகும் என்று ஒரு பாடல் (48) கூறுகிறது.*

**குளிறு முரசம் குணில்பாயக் கூடார்**
**ஒளிறுவாள் வெள்ளம் உழக்கிக் – களிறெறிந்து**
**புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்**
**தண்ணடை நல்கல் தகும்.**

*தண்ணடை நல்கல் என்பதற்கு மருதநிலங்களைக் கொடுத்தல் என்று உரை கூறுகிறது. உரையின் காலம் 15ஆம் நூற்றாண்டு.* 9-13 ஆகிய நூற்றாண்டுகளுக்கிடையில் சோழர் பேரரசு ஓங்கி யிருந்த காலத்தில் தமிழ் நாட்டுக்குள்ளும் வெளி நாடுகளிலும் சென்று போர்புரிந்து வென்று புகழோடு திரும்பிய வீரர்களுக்குச் சோழ மன்னர் தங்கள் நாட்டுக்குள் நெல்விளையும் வயல் நிலங் களையும் குடியிருப்பிடங்களையும் ஏராளமாக வழங்கியிருக் கிறார்கள். உரைகாரர் இக்காலத்துக்குப் பின் வந்தவராதலால் இதை நன்குணர்ந்து எழுதுகிறார்; மருதநிலம் என்று குறிப் பிட்டுச் சொல்லுவது கருதத்தக்கது.❖*

---

* *எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.*

❖ *புறநானூற்றுப் பாடலொன்றை இங்கு குறிப்பிடுதல் தகும். 'ஈன்று புறந்தருதல்' என்ற 312ஆம் பாடலின் நான்காம் வரி, நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே' என்று ஐயரவர்களால் பதிப் பிக்கப்பட்டுள்ளது; தண்ணடை என்ற பாடபேதமும் காட்டப் பட்டுள்ளது. பின்னால் எஸ். ராஜம் புறநானூற்று மூலப்பதிப்பில் தண்ணடை என்ற பாடம் கொள்ளப்பட்டிருக்கிறது. வெண்பா மாலை உரையை நோக்கும்போது, தண்ணடை என்ற பாடம் பொருந்தாது என்றே தெரிகிறது. நன்னடை என்றே பாடம் கொள்ள வேண்டும். தண்ணடை தண்மை பொருந்திய தடை என்று புதிய உரை சொல்லிச் சமாதானம் தேடிக் கொள்ளமுடியும்.*

இன்று பகலோன் இறவாமுன் ஒன்னாரை
வென்று களங்கொள்ளா வேலுயர்ப்பின் – என்றும்
அரணவியப் பாயும் அடையார்முன் நிற்பேன்
முரணவிய முன்முன் மொழிந்து. 69

*என்ற பாடல் பாரதத்தில் இதே போல அருச்சுனன் வஞ்சினம் கூறுவதை நினைவூட்டுகிறது. பாரத வரலாறே இத்தகைய வஞ்சினக் கூற்றுக்களுக்குத் தோற்றுவாய் என்று கருதுவதில் தடையில்லை.*

*பாடாண் படலத்தில் பாணர், கூத்தர், பொருநர், விறலியர் என்ற நால்வர் ஆற்றுப்படையைக் கூறுகிறார்; புலவராற்றுப் படை கூறவில்லை.*

*எண்ணலங்காரமாக ஓம்படையில், ஒன்று முதல் ஏழு வரையுள்ள எண்ணுப் பொருள்களை அமைத்துக் கூறுகிறார்.*

ஒன்றி விரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினால்
வென்று களங் கொண்ட வேல்வேந்தே – சென்றுலாம்
ஆழ்கடல்சூழ் வையகத்துள் ஐந்துவென் றாறகற்றி
ஏழ்கடிந் தின்புற் றிரு. 225

*ஒன்று ஆன்மா; இரண்டு புண்ணிய பாவம்; மூன்று காமம் வெகுளி மயக்கம் அல்லது உற்சாக சக்தி பிரபு சக்தி மந்திரசக்தி. நான்கு சாம, பேத, தான, தண்டம்; ஐந்து சத்தப் பரிச ரூபரச கந்தம்; ஆறு படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண்; ஏழு வேட்டம் கடுஞ்சொல் மிகுதண்டம் சூது பொருளீட்டம் கள் காமம் என்பது இதன் விளக்கம்.*

*காஞ்சி பொதுவியற்பால் என்ற பகுதியில் இவர் கூறும் பாடல்கள் மிக்க சிறப்புடையன. முதுமொழிக் காஞ்சி என்பது ஒரு துறை (269). அறம் பொருள் இன்பம் மூன்றையும் இங்கு சொல்லுகிறார். அருளே அறமாம்; ஆற்றார்க்கு வழங்கின் பொருள் பொருளாம்; புரிவளையை அகலாது ஒழுகல் அன்பு.*

ஆற்றி னுணரின் அருளறமாம்; மாற்றார்க்குப்
போற்றார் வழங்கிற் பொருள் பொருளாம்; – மாற்றிப்
புகலா தொழுகும் புரிவளையார் மென்றோள்
அகலா தளித்தொழுகல் அன்பு.

*பெருங்காஞ்சி என்ற துறையில் துற்று வரும் பொருளை இறுகப் பொதியன்மின் என்று கூறுகிறார்.*

ஆயாது அறிவயர்ந்து அல்லாந்து அகலிடத்து
மாயா நிதியம் மனைச்செறீஇ – ஈயாது
இறுகப் பொதியன்மின் இன்னொரு நாளைக்
குறுகு வருமரோ கூற்று. **270**

*புலவரேத்தும் புத்தேள் நாடு என்ற துறையில் இவர் கூறும் பாடலும் மிக்க நயமுடையது.*

பொய்யில் புலவர் புரிந்துறையும் மேலுலகம்
ஐயமொன் றின்றி யறிந்துரைப்பின் – வெய்ய
பகலின் றிரவின்று பற்றின்று துற்றின்று
இகலின் றிளிவரவும் இன்று. **272**

*அவையோரியல்பு எட்டு என்று ஈரிடங்களில் கூறுகிறார். (173, 178) இக்கருத்து வேறு இலக்கணங்களிலும் நிகண்டிலும் விரிக்கப் பட்டது. நல்லவை தீயவை, நிறையவை இறையவை என்ற பெருக்கமும் உண்டு.*

*'நண்ணார் படையுழக்கிப் பட்ட வீரனை இவர் நாப்புலவர் சொன்மாலை' என்று பெயர் கொடுத்துக் கூறுவது பெரிதும் சுவைத்து இன்புறத்தக்கது. (31)*

### பன்னிரு படலம்

*'அளவாற் பெயர் பெற்றது பன்னிரு படலம்' என்று இறை யனார் களவியலுரை கூறும். இந்நூலின் வழி ஐயனாரிதனார் வெண்பாமாலை செய்தார் என்று இம்மாலையும் தொல்காப் பிய உரைகளும் கூறுகின்றன. ஆதலால் இது பற்றிய ஒரு கருத்தை இங்கு குறிப்பிடலாம். இந்நூல் இன்று இல்லை. இது சூத்திர மும் ஒத்தும் உடையதென்று நச்சினார்க்கினியர் கூறுவர். படலப் பகுதியை அவர் ஒத்து என்று கூறினார் போலும். இதனுள் இன்று பத்துச் சூத்திரங்கள் கிடைக்கின்றன. வெட்சி முதல் பெருந்திணை ஈறாகப் பன்னிரண்டு திணைகளையும் பன்னிரு படலங்களாக நூல் செய்யப்பட்டது என்பது இதன் வரலாறு. இதன்படி முதல் படலமாகிய வெட்சிப்படலம் தொல் காப்பியரால் செய்யப்பட்டது என்பது கதை. இதன்படி இவர் முதல் படலமாகிய வெட்சிப் படலம் பாடியிருக்க முடியாது என்று இளம்பூரணர் இதை மறுக்கிறார். ஆகவே பன்னிரு படலம் தொல்காப்பியத்தோடொத்த பழமை பொருந்திய*

நூல் அன்று என்று தெரிகிறது. இது ஒருகால் புறப்பொருள் வெண்பாமாலைக்கு ஒரு நூற்றாண்டு முற்பட்ட நூலாகலாம்.*

## நூற்பொருள்

தமிழிலக்கியத்தில், பொருளதிகாரம் என்ற பகுதி மட்டும் மலர்களை வைத்தே இயல்வதாய் அமைக்கப்பட்டுள்ளது. இது அகப்பொருளுக்கும் பொருந்தும். புறப்பொருளுக்கும் பொருந் தும். அகப்பொருளில் ஐந்திணையொழுக்கத்துக்கும் அடையாள மாகக் குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்ற பூக்கள் அமைந்தன. இவ்வமைப்பு தொல்காப்பியருக்கு முன்னமே கொள்ளப்பட்டிருந்தது போலும். இதை அமைத்து இலக்கண் நெறி வகுத்த பெருமையே அவருக்குரியது.

அகம் போலவே புறத்திலும், மலர்களே இங்கு கூறும் ஒழுக்கங்களுக்கு அடையாளமாகக் கொள்ளப்பட்டுள்ளன. வெண்பாமாலையாசிரியர் பாகுபாட்டின்படி 12 திணைகளைக் கொள்ளும் போது, முதல் எட்டுக்கும் மலர்களே அடையாளமாக உள்ளன. அவை வெட்சி முதல் வாகை வரையுள்ள எட்டாகும். இங்கு கூறப்படும் திணை நிகழ்ச்சிகள் யாவும் போர் நிகழ்ச்சி களே; இவை செய்யுள் வழக்காகும். பின்வரும் நான்கு திணை களுக்கு அடையாளப் பூ சொல்வது வழக்கமில்லை. எனினும் ஒரு கருத்து குறிப்பிடத்தக்கது. தர்க்க வாதத்துக்கு அழைப்பவர், நாவலை அடையாளப் பூவாகக் கொள்வரென்று நூல்களால் அறிகிறோம். குண்டலகேசி, ஒரு நாவல் கிளையை நட்டு வைத் துத் தர்க்கத்துக்கு ஏனையோரை அழைத்தாள் என்று நீலகேசி யுரையால் அறிகிறோம். ‘நாவலிட் டுழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள் மீதே’ என்று ஆழ்வாரும் பாடுகிறார்.

இனி பன்னிரு திணைகளிலும் நம்மாசிரியர் கூறும் பொரு ளைச் சுருக்கமாகப் பார்க்கலாம்.

### 1. வெட்சித் திணை :

பகைவருடைய ஆனிரைகளைக் கவர்தல். கவரும் வீரர் செந்நிறமான வெட்சிப் பூக்களைச் சூடுவர்; வெட்சி என்பது நந்தவனங்களில் வைத்து வளர்க்கப் பெறும் ஒரு குத்துச்செடி. போருக்குத் தொடங்கும் அரசன், அந்தணர் ஆக்கள் முதலி யோரை அப்பால் போகச் சொல்லிப் பறையறைவிப்பான்.

---

* இது பற்றிய விளக்கம் எமது தமிழ் இலக்கிய வரலாறு 8ஆம் நூற்றாண்டு என்ற நூலில் வெளிவர இருக்கிறது.

ஆக்கள் தாமே போகா ஆகையால், அவை துன்புறாதபடி தான் கவர்ந்து வருவான். வீரர் விரிச்சி கேட்டு, ஒற்று அறிந்து நிரைகளை வளைத்து, எதிர்த்தவரைப் பொருது வென்று, நிரைகளை வருத்தாமற் கொண்டு வருவர். வந்தவற்றைப் பங்கிட்டுக் கொள்வர்; ஒற்றர் நிமித்திகர் போன்றாருக்கு அதிகப் பங்கு. பின் துர்க்கை வழிபாடு. மறத்தியர் வேலனோடு வள்ளிக் கூத்து ஆடுவர். பெண்களும் மதுவுண்ணுதல் சொல்லப்பட்டுள்ளது.

**2. கரந்தை :**

பசுக்களுக்கு உரியவர் கரந்தை மாலை சூடிப் பசுக்களை மீட்டு வருவர். பசு மீட்க வேண்டும் என்று அரசன் பறையறைவித்தவுடன் எல்லோரும் திரண்டு சென்று போரிடுவர். வெற்றி பெற்றோருக்கு அரசன் நிலம் அளித்தல் முதலான சிறப்புச் செய்வான்.

**3. வஞ்சி :**

அரசன் பகைவன் நாட்டின்மீது படையெடுத்துச் செல்லுதல். நல்ல நாளில் குடையையும் அதன்பின் வாளையும் முன்னே செல்ல விட்டுத் துர்க்கையை வழிபட்டுப் பின் போர் மீது செல்வான். போர்ச் செய்திகளும் மாற்றரசர் பணிதலும், வீரருக்குச் சிறப்புச் செய்தலும் அரசன் பாசறையில் தங்குதலும், வீரருக்குக் களத்திலேயே உணவளித்தலும் பகை நாட்டைத் தீயிடுதலும் இங்குச் சொல்லப்பெறும்.

**4. காஞ்சி :**

தன் நாட்டின் மீது படையெடுத்து வந்தோரை அரசன் காஞ்சி மாலை சூடிப்பொருதல். ஆயுதங்களை வழங்குவான். வஞ்சினங் கூறுவான். வீரர் மது அருந்துவர். பட்ட வீரருடைய மனைவியர் தீக்குளிப்பர்.

**5. நொச்சி :**

மதிற்புறத்தே பகையரசன் வந்து முற்றுகை செய்த காலத்தில், மதிலுக்குரியார் நொச்சி மாலையணிந்து தம் மதிலைக் காத்தல். குதிரைகள் தாவி வரும். மதிலில் உள்ள வீரர் மகளை, வந்தோர் மணம்புரியக் கேட்பர். அதற்கு இணங்காமல் இவர்கள் வீரம் பேசுவர்.

**6. உழிஞை :**

மதிலைக் கொள்ள வரும் வீரர் உழிஞை மாலை சூடி முற்றுகையிடுவர். குடையையும் வாளையும் முன்னே செல்ல விடுத்து

முரசைப் பூசித்து முழக்குவர். முருகன், சிவபிரான், திருமால் ஆகியோர் வீரச் செயல்களைச் சிறப்பித்துக் கூறுவர். யானை மதிற்கதவினைப் பிளக்கும். காலாற் காட்டைக் கடந்து, தோணியால் அகழியைக் கடப்பர். கற்பொறி முதலியன வருத்தும். வஞ்சினம் கூறிப் பொருவர். மதில் கைக்கொண்ட பின் கழுதையேர் பூட்டிக் கவடியும் குடை வேலும் விதைத்து நகரைப் பாழாக்குவர். மதிலுக்குரிய அரசர் வந்து பணிதலுமுண்டு. உழிஞையைச் சிறப்பிக்க வந்த ஆசிரியர் சிவபெருமானும் உழிஞையைச் சூடியே திரிபுரங்களை எரித்தான் என்று சொல்கிறார்.

> மயங்காத தார்ப் பெருமை மற்றறிவார் யாரே,
> இயங் கரணம் மூன்றும் எரித்தான் – தயங்கிணர்ப்
> பூக்கொள் இதழிப் புரிசெஞ் சடையானும்
> மாக்கொள் உழிஞை மலைந்து. **102**

**7. தும்பை :**

தும்பை மாலை சூடிப்போர் புரிதல், வீரர், யானைகள், தேர் ஆகிய போர் சொல்லப்பெறும். மகளிர் தங்கள் கணவன்மார் விழுப்புண் பட்டமை வந்து கண்டு ஆனந்தக் கண்ணீர் கொள்வர். சிருங்கார நிலை என்று பெயருள்ள இத்துறை பரணி நூல்களில் விரித்துப் பாடியிருக்கக் காணலாம்.

**8. வாகை :**

வென்றவர் வாகை மாலை சூடுதல், வெவ்வேறு குலத்தாருக்குரிய வாகை தனித்தனியே சொல்லப்பெறும். அரசன் களவேள்வி செய்வான். அவன் குடையையும் புகழையும் பாடுவர்; அந்தணர் வேதம் ஓதித் தூது போவர். வணிகர் உழுது பயன் கொள்ளப் பசுக் காப்பர். வேளாளர் மற்றவருக்கு ஏவல் செய்வர். வறுமை நீங்க உபசரிப்பர். சோதிடன் காலமறிந்து சொல்வான். தாபதர் தெய்வ வழிபாடு செய்வர். சான்றோர் நடுநிலை தவறாது நீதி வழங்குவர். மகளிர் வீரம் மிக்கவராக இருப்பர். உலகப்பற்றை யொழித்து மெய்ப்பொருளை நாடுதலும் வாகைத் திணைக்குரியது.

**9. பாடாண் :**

இப்பகுதிக்கு மலர் சொல்வதில்லை. அரசருடைய புகழ் வீரம் கொடை என்பவற்றைப் போற்றிப் பாடுதல். பரிசு பெறப் புலவர் வருதல், பரிசில் நல்கல், பாணர், கூத்தர், விறலியர், பொருநர் முதலியோர் பரிசில் பெறுதலும். பெறுமாறு பிறரை ஆற்றுப்படுத்தலும். அறம் போதித்தல், குடைவாள் சிறப்பித்தல், அரசனை வாழ்த்தல், தலைவன் மாலையைப் பெறத் தலைவி

விரும்புதல்; ஊடுதல். கடவுளரிடத்துக் காதல் முதலிய பகுதிகள் இங்கு கூறப்படும். இப்படலத்தின் முதல் பாட்டு, எம் அரசன் யாருக்கு எவ்வகையாயிருக்கிறான் என்பதைச் சுவைபடக் கூறும்.

மன்னர் மடங்கல், மறையவர் சொன்மாலை
அன்ன நடையினார்க்கு ஆரமுதம் – துன்னும்
பரிசிலர்க்கு வானம், பனிமலர்ப் பைந்தார்
எரிசினவேல் தானைஎங் கோ. 189

**10. பொதுவியல் :**

வேந்தர் சிறப்பு, நடுகல் என்பன சொல்லப்படும். சிறப்பிற் பொதுவியற் பால என்ற பகுதியில், ஒருவன் இறத்தலைத் தொடர்ந்த எல்லாச் செய்திகளும் வரும். காஞ்சிப் பொதுவியற் பால என்ற பகுதியில் நிலையாமை உணர்த்தப்படும். முல்லைப் பொதுவியற்பால என்ற பகுதியில் தலைவி இல்லிருத்தல் பற்றிய செய்திகள் கூறப்படும்.

**11. கைக்கிளை :**

ஒரு தலைக் காமம் ஆண்பால் கூற்று, தலைவன் தலைவியைக் கண்டு காமுறுதல் பெண்பாற் கூற்று, தலைவி தலைவன் மீது காமுறுதல்.

**12. பெருந்திணை :**

பொருந்தாக் காமம், பெண்பால், பிரிந்த தலைவனை எண்ணித் தலைவி இரங்குதல் முதலியன, இருபால் மடலூர்தல். பரத்தையர் முதலிய செய்திகள்.

ஒழிபு : இப்பகுதியில் பாடாண் பகுதியிலும் வாகையிலும் சொல்லாத சில பொருள்கள் சொல்லப்படும். கொடுத்தோர் ஏத்திக் கொடார்ப் பழித்தல், வணிகர் உழவர் முதலியோர் செயல்கள், ஏறுதழுவுதல், கோழிப்போர் முதலியன சொல்லப்பெறும்.

**புறப்பொருள் வெண்பாமாலையும் தொல்காப்பியமும்**

தொல்காப்பியர் கொண்ட திணை ஏழு மட்டுமே. வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பன. கரந்தையை வெட்சியினுள்ளும், எதிரூன்றலாகிய காஞ்சியை வஞ்சியினுள்ளும், நொச்சியை உழிஞையினுள்ளும் அடக்கி விட்டார். வெட்சியில் இவர் கூறும் துறைகள் 14; இவை முழுமையும் வெண்பாமாலையிலும் அப்படியே வந்துள்ளன. இப்பதினான்கையும், நிரை கவர்தல், நிரை மீட்டல் என்ற இரு பகுதிக்கும் பொருந்துவனவாக வைத்து நச்சினார்க்கினியர் உரை எழுது

கிறார்; இதன்படி கரந்தையும் இங்கு அடங்கியமை புலப்படும். அடுத்து வஞ்சித்திணையில் தொல்காப்பியர் கூறுவன 13 துறைகள், பின் உழிஞைத்திணை 8 துறைகள்; சென்று வளைத்த வேந்தன் செய்தி 4, இருந்து காத்த வேந்தன் செய்தி 4 (இதுவே வெண்பா மாலையில் நொச்சி எனப்படுகிறது) உழிஞைத் திணையுள் ஐயனாரிதனார் சேர்த்த சில செய்திகளை, தமிழ் கூறும் நல்லு லகத்தனவல்ல என்று நச்சினார்க்கினியர் மறுக்கிறார். அடுத்து, தும்பைத்திணையில் தொல்காப்பியம் 12 துறைகளைக் கூறும். அடுத்ததாகிய வாகைத் திணைக்குரிய பகுதிகள் மிகவும் பல. ஆயினும் அவை இங்கு ஏழாகத் தொகுத்துச் சொல்லப்பட்டன. பார்ப்பனர், அரசர், வணிகரும் வேளாளரும், அறிவர், தாபதர், பொருநர், ஏனோர் - என ஏழு. புறப்பொருள் வெண்பாமாலை விரித்துக் கூறும் கோழி வென்றி முதலாயின இங்கு ஏனோர் என்ற பகுதியில் பொருநர்கள் களநிலை வகையாம். ஆறாவது காஞ்சித் திணை; நிலையாமை கூறுவது; வெண்பாமாலை; நான்காவதாகக் கூறும் காஞ்சி என்ற திணைப்பெயர் வேறு; அது எதிரூன்றல் எனப்படும் போர்ச்செயல். இங்கு நிலையா மையும் வீடு பேறும் பொருளாக, ஆண்பாற் காஞ்சித்துறை பத்து, பெண்பாற் காஞ்சித்துறை பத்து சொல்லப்பட்டுள்ளன.

இறுதியாகப் பாடாண்; பாடப்படும் ஆண்மகன் என்று பொருளாகும். இது தேவர் பாடாண், மக்கட் பாடாண் என இரு திறப்படும்; தேவர் பாடாண் என்பது முனிவர், அந்தணர், ஆனிரை, மழை, முடியுடை வேந்தர் உலகு என்ற அறுவகை வாழ்த்து* சம்பந்தர் பாண்டிநாடு சென்று சமணரோடு வாதிட்ட போது, வைகையாற்றில் இட்ட திருப்பாசுரத்தின், முதல் பாட்டு இவ்வறு வகை வாழ்த்தாக அமைந்திருப்பது அறிந்து மகிழத் தக்கது: வாழ்க அந்தணர் - அந்தணர்; வானவர் - முனிவர்;❖ ஆனினம் - ஆனிரை; வீழ்க தண்புனல் - மழை; வேந்தனும் ஓங்குக - முடியுடை வேந்தர்; (ஆழ்க தீயதெல்லாம் - அரன் நாமமே சூழ்க) வையகமும் துயர் தீர்கவே - உலகு.

தேவர் பாடாண் என்ற பகுதியில் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் கடவுள் வாழ்த்துடன் வரும் என்று தொல்காப்பியர் கூறுகிறார். இம்மூன்றுக்கும் இளம்பூரணர்

---

* நச்சினார்க்கினியர் தொல்காப்பிய உரை.

❖ கம்பராமாயண விளக்கம் சொன்னபோதெல்லாம் டி.கே. சிதம்பர நாத முதலியார் தேவர் என்றால் முனிவர், அறிஞர் என்றே பொருள் சொல்லியது இங்கு அறியத்தக்கது.

வெண்பா மாலையைத் தழுவி உரை எழுதியுள்ளார். ஆனால் நச்சினார்க்கினியர் சொல்லும் உரை இங்கு கருதத்தக்கது. "கொடி நிலை - கீழ்த் திசைக் கண்ணே நிலை பெறத்தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம்; கந்தழி ஒரு பற்றுக் கோடின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள். வள்ளி-தண் கதிர் மண்டிலம்". இங்கு இம்மூன்றுக்கும் நச்சினார்க்கினியர் கூறும் கருத்து மிக்க சிறப்புடையதாய் இருக்கிறது. வெண்பாமாலை யுடையார் உழிஞையிலும் பாடாண் திணையிலும் கந்தழியைக் கூறுகிறார். இரண்டிடங்களிலும் நேமியான் சோவரணம் எரித்த விறலையே போற்றுகின்றார். சிலப்பதிகார காலத்திலும் கூட, சோவரணம் அழித்தது ஒரு சிறப்புடைய செய்தியாகக் கருதப் பட்டிருக்கிறது. இருப்பினும், நச்சினார்க்கினியர் கருத்தே சிறப் புடையதாய்த் தெரிகிறது.

வெள்ளணி என்பது, தொல்காப்பியரால் பெருமங்கலம் எனப்பட்டது; மங்கல வண்ணமாகிய வெள்ளணியணிந்து எவ் வுயிர்க்கண்ணும் அருளே நிகழ்த்தலின் அதனை வெள்ளணி என்பர் என்றார் நச்சினார்க்கினியர். வெண்பாமாலை இதை நாண்மங்கலம் என்று கூறும்; பிறந்த நாள் விழா (211) என்று உரைகாரர் கூறுவார். அப்படியே மண்ணு மங்கலம் என்ற வெண்பாமாலைத் துறையும் கருதத்தக்கது. உழிஞையிலும் (122) பாடாண் திணையிலும் இது வருகிறது. உழிஞையில் வருவது, பகை அரணாகிய கன்னியை மணந்த மங்கல நாள் எனப்படும். இது அக்காலத்தில் மன்னருடைய வீராபிடேகம் என்று போற்றப் பெற்று, சாசனங்களிலும் காணப்படுகிறது.

கைக்கிளை வகை என்ற துறையொன்று தொல்காப்பியப் பாடாண் திணையுள் காணப்படுகிறது. மற்றப்படி வெண்பா மாலையுடையார் குறிப்பிடுகின்ற மாதிரி, பொதுவியல், கைக் கிளை பெருந்திணை என்ற பகுப்புக்கள் அங்கு இல்லை. பிந்திய இரண்டும் பொருந்தா உறவும் ஒவ்வாக் காமமுமாதலால், இன்ப வொழுக்கமாகிய அதனைச் சிறப்பித்துக் கூறிய தொல்காப்பியர் புறத்தில் இவற்றைக் கூறவில்லை. பொதுவியல் என்ற பகுதி, வேறிடங்களிலிருந்து எடுத்ததேயாகும். இரண்டிலக்கணங்களை யும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது இந்தக் கருத்துக்கள் நினை விலிருத்தல் பயனுடையது.

மேலும், நச்சினார்க்கினியர் போன்ற தொல்காப்பிய உரை காரர்களால், துறைகளின் பெயர்ப் பொருளும் பொருத்தமும் விளங்குகிறது. அந்த விளக்கம் வெண்பாமாலையில் இல்லை.

## முன்னூல்கள்

*பன்னிரு படலத்தை இந்நூல் மூலமாகக் கொண்ட போதிலும் கூட, தொல்காப்பியத்தையும் தழுவியே ஆசிரியர் தம் நூலைச் செய்திருக்கிறார். தொட்ட இடமெல்லாம் திருக்குறள் கருத்துக்களும் தொடர்களும் நிரம்பியிருக்கின்றன. அன்றி, நாலடி முதலான நூற்கருத்துக்களும் தொடர்களும் நிரம்பக் காணலாம். இரண்டை மட்டும் இங்கே குறிப்பிடுவோம். பொய் யில் புலவர் என்ற 272ஆம் பாடல் முன்னே காட்டப்பட்டது (பக்கம் 200) அதன் கருத்தும் தொடர்களும் ஏலாதி 66ஆம் பாடலிலிருந்து எடுத்தவை. ஏலாதிப் பாடல்:*

> பொய்தீர் புலவர் பொருள் புரிந்து ஆராய்ந்த
> மைதீர் உயர் கதியின் மாண்பு உரைப்பின் – மைதீர்
> சுடர் இன்று; சொல் இன்று; மாறு இன்று; சோர்வு இன்று;
> இடர்இன்று; இனி துயிலும் இன்று.

*பாரி முல்லைக்குத் தேர் கொடுத்த செய்தி பல நூல்களில் சிறப் பாகச் சொல்லப்பட்டுள்ளது. பழமொழிப் பாடல் 361 காண்க (பக்கம் 198).*

> முல்லைக்குத் தேரும், மயிலுக்குப் போர்வையும்,
> தொல்லை அளித்தாரைக் கேட்டுஅறிதும்; – சொல்லின்,
> நெறிமடல் பூந்தாழை நீடு நீர்ச் சேர்ப்ப! –
> அறிமடமும் சான்றோர்க்கு அணி.

*நம்மாசிரியர் இதைப் பின்வருமாறு அமைக்கிறார்.*

> முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
> எல்லைநீர் ஞாலத் திசை விளங்கத் – தொல்லை
> இரவாமல் ஈந்த இறைவர் போல்நீயும்
> கரவாமல் ஈகை கடன். 194

*தலைக்காஞ்சி என்ற துறையில் எதிரியின் படையைத் தடுத்துப் பட்டவனுடைய தலையினை என்ன செய்தால் என்ன என்ற ஒரு பாட்டு உள்ளது.*

> விட்டிடினென் வேந்தன் விலையிடினென் இவ்வுலகின்
> இட்டுரையி னெய்துவ எய்திற்றால் – ஒட்டாதார்
> போர் தாங்கி மின்னும் புலவாள் உறைகழியாத்
> தார் தாங்கி வீழ்ந்தான் தலை. 71

*இதன் கருத்து, நம்பி நெடுஞ்செழியனைப் பேரெயின் முறுவலார் பாடியதாக உள்ள 'தொடியுடைய தோள் மணந்தனன் கடி*

காவில் பூச் சூடினன்' என்ற பாடலின் கருத்தைக் கொண்டு அமைந்தது. இதனுள் 'வருபடை எதிர் தாங்கினன்' என்ற ஒரு வரி இருப்பதும் காணத்தக்கது.

### நூலிற் கண்ட சிறப்புச் செய்திகள்

புறப்பொருளைக் கூறும் மிகவும் சிறப்புடைய இலக்கணம் புறப்பொருள் வெண்பாமாலை. பன்னிரு படலத்தின் வழி இது செய்யப்பட்டது என்று குறிப்பிட்டோம். பன்னிரு படலம் இன்று இல்லை; தொல்காப்பியப் புறத்திணையின் பின் வந்த ஒரு பெருநூல், தனி நூல், புறத்திணை பற்றியது இதுவே. இவ் வாசிரியருடைய நூலைப் பயிலும் போது இவர் காலத்தில் வழங்கிய பல கருத்துக்களைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக இந்நூல் இருப்பது தெரிகிறது. சங்க காலத்தில் கவிதைக்குப் பொருளாயிருந்த செய்தி இரண்டே. போரும் காதலும். போரைச் சற்று விரித்துச் சொன்னால், போரும் அமைதியும் என்று சொல்ல வியலும். போரில்லாத போது அமைதி. அமைதிக் காலத்தே தான் கொடை முதலியன நிகழ்ந்தன. இந்த நிலையை மனத்தில் எண்ணி, போர் அல்லாது இந்நூல் கூறும் பிற உலக இயல்பு களையும் மக்கள் இயல்புகளையும் இங்கு சுருக்கிக் கூறுவோம்.

அந்தணர் வேதம் வல்லவர். வேள்வி செய்தலே தொழிலாக உடையவர்; பகையரசர்களைச் சந்து செய்து பிணிப்பர்.

புறத்திணை, போரைப் பற்றிய செய்தி ஆதலால், இந்நூலில் போர் வீரரையும், அரசரையும் குறித்த செய்திகள் மிகப் பல வாகக் காணப்படுதல் இயல்பு. வீரர் வாழ்க்கையில் வாளுக்குச் சிறப்பு அதிகம். போருக்குப் புறப்படு முன் நல்ல நேரத்தில் வாளைப் புறவீடு செய்வர். வாளுக்குப் புண்ணிய நீரால் அபி டேகம் செய்து உணவூட்டி வெளிப்படுத்துவர். அது போலவே வீரமுரசுக்கும் பலியிடுதல் உண்டு. வீரர் தம் அரசருக்குச் செஞ் சோற்றுக் கடன் கழித்தலை முதற் கடமையாகக் கொள்வர். போர்க் களத்தில் வீரன் தன் மார்பிற் றைத்த வேலைப் பறித்து எறிதலும், புண்ணைக் கிழித்தலும், தன் உயிரை ஆகுதி பண்ணு தலும் உண்டு. வீரர் போரிலல்லாது உயிர் துறக்க விரும்பமாட் டார்; அவ்வாறு நேரின் மலை ஏறி வீழ்ந்து உயிரை மாய்க்க நினைப்பர். போரிட்டு வீழ்ந்த வீரனுக்கு நடுகல் வைத்தலுண்டு. நடுகல் வைத்தலும், அதில் அவன் புகழை எழுதி வைத்தலும், நடுகல்லுக்குக் கோயில் எடுத்தலும், அதைத் தெய்வமாகப் பாணர் வணங்கலும் உண்டு. நடுகல்லாக உள்ள தெய்வத்துக்கு வாள் பரிவார தெய்வம் எனப்படும்.

அரசர் ஆறில் ஒரு கடமை வாங்கி அந்தணருக்குக் கோதானம் செய்வர். அந்தணர், சான்றோர், தவத்தோர், முன்னோர் என்போர்க்கு வழி நிற்றல் அரசன் கடமை. போரில் உழைத்த வீரருக்கு அரசர் உழவுக்கேற்ற நிலங்கொடுத்தல் மரபு. பிற நாட்டை வென்றால் அங்குப் பலநாள் தங்கியிருந்து அந்நாட்டை வசப்படுத்துவர். அரசர் புதல்வனைப் பெற்றபோது படை யெடுக்க மாட்டார்; இரவலர்க்குப் பரிசில் அளிப்பார். அரச ருக்கு வீரமே மதில்; குடிகளைக் காத்தலே செல்வம். பிற நாடு கள் மேல் படையெடுக்கும் போது அங்கு நெருப்பு வைத்தலும், நீர் நிலைகளை உடைத்தலும், வீடுகளைப் பாழாக்கலும், பயிர் களை எரியிட்டுக் கொளுத்தலும் போர் மரபு. புலவருக்குப் பரிசில் அளிக்குங் காலத்தில் சில அடி பின் சென்று வழியனுப் புதல் மரபு. சகுனம் பார்த்துச் சொல்லிய நிமித்தகனுக்குக் கோதானம் செய்வதுண்டு.

இவையன்றி, பொதுச் செய்திகளாக வேறு பலவும் ஆசிரியர் சொல்லுகிறார். ஒற்றர் இருளில் ஆய்ந்து வருவர். அவர் தம் உயிரையும் வெறுத்துப் பகைப்புலத்துச் சென்று ஆராய்ந்து வருவர். ஆதலால், அவருக்கு ஒன்றுக்கு இரட்டிப்பாகப் பரிசில் கொடுத்தல் வேண்டும். போருக்கு அதிதேவதை துர்க்கை. வீரர் செல்லும் போது, அவர்கள் வெற்றி பெறும் பொருட்டு அவள் முன் செல்லுவாள். எட்கசிவும், பொரியும், பிழுக்கலும், பிண்டி யும், நிணமும், குடரும், நெய்த்தோரும் நிறைத்த பாத்திரத்தைக் கையில் ஏந்தி முன்னே செல்லுவாள். அவளுக்கு ஆளிக்கொடி யும், பைங்கிளியும், பாய்கலையும், கூளிமலி படையும் உள்ளன.

மகளிர்க்குக் கடனாவது விருந்தோம்புதலும், கணவரைப் பேணுதலும். அவர்கட்கு நாணே துணை. மகளிர்க்கு வலக்கண் துடித்தல் தீது; இடக்கண் துடித்தல் நன்று. அவர் உடன்கட்டை ஏறுதல் உண்டு; அதற்கு நேரம் மாலை.

அரசனைப் பணியும் பொருட்டு அவன் கண்கள் துயிலா வாக என்று சொல்லுவதால், துயிலும் போது பெரியோரை வணங்குதல் மரபன்று என்பது தெரிகிறது. நூல்களை யாக்கை போல் போற்ற வேண்டும். கொடையில் சீர்தூக்காத கொடை சிறப்பு. சிங்கம் அருகில் உள்ள பெரிய மலை முறிந்து விழும் போது அச்சம் காட்டி ஓடாது; அங்கேயே நின்று உயிர் துறந் தாலும் உயிர்துறக்கும். துடிக்கூத்து ஆடும் பெண் கை, கால்,

*புருவம், கண் ஆகிய உறுப்புக்களால் பாணி, நடை, தூக்கு (தாளம், செலவு, இசை) மேற்கொண்டு ஆடுவாள். கள்ளினுள் பழங்கள்ளே சிறப்பானது என்று மேனாட்டுக் கட்குடி நுணுக் கத்தையும் புலவர் கூறுகிறார் (338). கோழி வளர்ப்பைப் பற்றி அந்தக் காலத்திலேயே நிபுணர் ஆராய்ந்தமை அறிந்து வியக்கத் தக்கது. கோழி வென்றி என்ற துறையில் கோழித்துறையில் வித்தகர் என்பதற்கு உரையாசிரியர் கோழி நூல் வல்லவர் என்று எழுதியிருப்பது (348) காணத்தக்கது. இக்காலம் கோழி வளர்ப்பு ஒரு தொழில் துறைக் கலையாகி இருக்கிறது அல்லவா. மன்னர் போர் மீது செல்லுங் காலத்துப் பகைவன் நாட்டை அழித்தாலும் சீற்றம் தணியாது என்பதை அச்சச் சுவைபட ஒரு பாடலில் சொல்லுகிறார் (120).*

> எழுதெழின் மாடத் திடனெலாம் நூறிக்
> கழுதையேர் கையொளிர்வேல் கோலா – உழுதபின்
> வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற்
> கள்விரவு தாரான் கதம்.

*மோனையைப் பற்றி முன்னமே குறிப்பிட்டோம். எடுத்துக் காட்டாகப் பின்வரும் பாடல் காண்க. இங்கு 1, 2, 4 அடிகள் முற்று மோனை (68).*

> தெம்முனை தேயத்திறல் விளங்கு தேர்த்தானை
> வெம்முனை வெற்றி விறல்வெய்யோன் – தம்முனை
> நாட்டிப் பொறி செறித்து நண்ணார்மேற் செல்கென்று
> கூட்டிநாட் கொண்டான் குடை.

*தாபத வாகையைக் கூறுமிடத்து தபோதன வேடத்தர் எவ்வாறு தவ ஒழுக்கத்தில் தம்மைச் செலுத்துகிறார்கள் என்பதைச் சுவைபட ஒரு பாடலில் கூறுகின்றார். (168)*

> நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடீஇச்
> சோர்சடை தாழச் சுடரோம்பி – ஊரடையார்
> கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்
> வானகத் துய்க்கும் வழி.

*முடிவாக வாழ்க்கையில் உறுதியுடைய பொருள், முடிவாக உய்தி தருவது எது என்று ஆராய்வதே. யாக்கை நிலையாது என்பதால் தானம் செய்ய வேண்டும் என்று இவர் கூறுகின்ற பாடல் சிறப்புடையது.*

## முடிவுரை

தமிழில் அகப்பொருட் செய்திகளை உரைக்கும் நூல்கள் பல. தொல்காப்பியம் முதல் இலக்கணங்களும் பல, சங்க நூல்களான குறுந்தொகை முதலாயின, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் ஆறு, பிற்காலக் கோவை நூல்கள் என இலக்கியங்களும் பல. ஆனால் புறப்பொருட் செய்திகளைக் கூறும் நூல்கள் மிகச் சிலவே, தொல்காப்பியப் புறத்திணை, இலக்கணம் என்ற அளவில்; இலக்கியமாக உள்ளவை, போரைச் சொல்லும் நூல்கள் களவழி நாற்பதும் பரணி இலக்கியங்களும். இந்த நெறியில் பார்க்கும்போது புறப்பொருள் வெண்பாமாலைக்குத் தனியான இடம் இலக்கிய வரலாற்றில் உரியது. புறப்பொருட் செய்திகளில் போரையே மிகுத்துச் சொல்லுகின்ற ஒரு பெருநூல் இதுவே. சூத்திரமும் துறைச் செய்யுட்களும் ஆசிரியரே செய்தமைத்திருப்பது, இத்தகைய இலக்கணமும் இலக்கியமும் தமிழில் அருகியிருப்பதை இவர் மனத்தில் கருதியே செய்ததாகும். இவர் சேரர் மரபின் வழிவந்தனர் என்று சிறப்புப்பாயிரம் கூறியதைப் பார்த்தோம். இவர் காலத்தில் சேரர் தமிழை விட்டுப் பிரிந்து தனி மொழியினர் ஆகத் தொடங்கிய காலம். இவர் தொண்டை நாட்டில் தங்கியிருக்கலாம் என்று கூறப்பட்டது. ஏன் இவர் இந்த நூல் செய்ய வேண்டும்? ஒருகால் விசயாலயன் ஆதித்தன் என்ற சோழ அரசர் புதியதாய்த் தலையெடுத்துத் தங்கள் நாட்டில் ஒடுங்கியிருந்த சோழர் ஆட்சியை மீண்டும் ஓங்கச் செய்ய முயன்ற பெரும் போர் முயற்சிகளை இவர் கண்ணாற் கண்டிருக்கலாம். இல்லையானால் புலமை வெளிப்பாட்டுக்கு எத்தனையோ பொருள்கள் இருக்க, இவர் ஏன் இத்துறையை நாடவேண்டும்? தாமும் அரசமரபு ஆதலால் இப்பொருள் இவர் மனத்துக்கு உவப்பளித்திருக்க வேண்டும். இவருக்கு ஒரு நூற்றாண்டே முற்பட்டிருந்த பன்னிருபடலம் முழுமையும் இறந்துபோயிருக்க இவர் நூல் முழுமையும் கிடைத்திருப்பதும், இதற்குச் சில நூற்றாண்டுகள் சென்று (15ஆம் நூற்றாண்டில்) ஓர் அரிய உரை இயற்றப் பெற்றிருப்பதும் இதற்குரிய தனிப் பெருமை பல பாடல்களில் கவிச்சுவை சிறந்திருப்பதும் பெருமைக்குரியது. இலக்கணத்துக்காக எழுதப்பெற்ற துறைப் பாடல்கள் சுவையின்றி இருக்கக்கூடும்; ஆனால் இவருடைய பாடல்கள் மிக்க தொடை நயம் பொருந்தி, சொல் நயமும் பொருள் நயமும் சிறக்கவுள்ளன. இந்நூலின் சொற்சுவையைக் கருதி நூல் இன்னும் அதிகம் பயிலுதற்குரியது.

**உரை**

இந்நூலுக்குத் தெளிவாக மூலத்தையொட்டி 15ஆம் நூற்றாண்டில் மாகறலூர்க்கிழார் - சாமுண்டி தேவநாயகர் என்பவர் உரை எழுதியிருக்கிறார்.* ஐயரவர்கள் மூலமும் உரையுமாகவே நூலைப் பதிப்பித்திருக்கிறார்கள். நூலாசிரியர் குறிப்பிட்டுள்ள பல தொகைகளை உரையாசிரியர் விரித்திருப்பது பயில்வோர்க்கு மிக்க பயனைத் தருவதாயுள்ளது.

157-அரசவாகை, அரசர் ஐந்தொழில்; 173-அவைய முல்லை, எட்டின் வழிபடுதல் வல்லது அவை; 187-பொருளொடு புகறல்-இருபத்தைந்து தத்துவங்கள்; 205-நாடு வாழ்த்து, பயிருக்கு வரும் இடர் எட்டு, 223-ஐம்பால்; 225-ஓம்படை, ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து வென்று ஆறகற்றி ஏழ்கடிந்தின் புற்றிருத்தல்; 346-உழவன் வென்றி, எண்பதன் என்னும் எட்டுத் தானியங்கள்; 355-குதிரைவென்றி; குதிரையின் ஐந்து கதி: என்பன குறிப்பிடத் தக்கன, இப்படியே உரைகாரர் தரும் கோழி நூல் விளக்கம், பூழ் வென்றியில் சொல்லத்தக்க மந்திரம் முதலியன குறிப்பிடுதல் ஆராயத்தக்கவை, நூலுக்கும் உரைக்குமிடையில் ஆறு நூற்றாண்டுகள் கழிந்திருக்கின்றன. இக்கால இடையீட்டால் பெறக் கூடிய விளக்கத்தை உரையுட் காணலாம். உதாரணம்: தண்ணடை நல்கல் என்பதற்கு முன் காட்டிய உரை, புறப்பொருள் மாலையின் பின் புறப்பொருள் இலக்கணம் ஆட்சியற்றுப் போயிற்று என்றே கொள்ள வேண்டும். வீரசோழியத்துள் காணப்படினும் அந்நூலுக்கு ஆட்சி இல்லை. இந்த நிலையில் சாமுண்டி தேவநாயகர் இந்த நூலைத் தேர்ந்தெடுத்து அரிய விளக்கம் எழுதியிருப்பது மிகவும் போற்றத்தக்கது.

**காலம்**

சிறப்பான இவ்வெண்பாமாலையை ஆராய்ந்து இதன் காலத்தைத் திட்டமாய் யாரும் வரையறை செய்ததாகத் தெரியவில்லை. இந்நூலை விரிவாய்க் குறிப்பிடுபவர் பூரணலிங்கம் பிள்ளை.❖ அவர் காலத்தைக் குறிப்பிடவில்லை. சீனிவாசையங்கார்✞ எட்டாம் நூற்றாண்டு என்று மட்டும் எழுதினார்.

---

* இவ்வுரை பற்றிய ஆராய்ச்சிக் குறிப்பை எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

❖ தமிழ் இலக்கிய வரலாறு ஆங்கில நூல்: பக்கம் 149-152.

✞ தமிழ் ஆராய்ச்சி ஆங்கில நூல், 1914.

அதைச் சுப்பிரமணிய பிள்ளையும் எழுதினார்,* எந்தக் கூற்றுக்குமே ஆதாரம் காணப்படவில்லை. யாமும் அவ்வாறே 8, 9 நூற்றாண்டு கால எல்லை என்று பொதுவாகக் குறிப்பிட்டு விடலாம். ஆயினும் கிடைக்கிற ஒரு குறிப்பைக் கொண்டு, நூலின் காலம் 9ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி என்று சொல்லுகிறோம்.

வெண்பா மாலையை மேற்கோள் காட்டும் ஆசிரியர்களுள் காலத்தால் மிகவும் முற்பட்டவர் யாப்பருங்கல உரையாசிரியர். இவர் காலம் 1015-1040 ஆகலாம் என்று குறிப்பிட்டிருக்கிறோம்.❖ எனவே, மருட்பாவை வெண்பா மாலையிலிருந்து அவர் மேற்கோள் காட்டுவதால், வெண்பா மாலையின் காலம் இதற்கு முற்பட்டதென்பது தெளிவு. அடுத்து வெண்பா மாலையாசிரியர் திணைகளைக் கூறும்போது, வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை என்ற வரிசையில் குறிப்பிடுகிறார்; 'உழிஞைப்படலத்தின் பின் நிற்றற்குரியதாக அறியப்படும் நொச்சிப்படலம் எல்லாப் பிரதிகளிலும் அதற்கு முன்பே காணப்பட்டமையால், அவ்வாறே பதிக்கப்பட்டது'✞ என்பது ஐயரவர்கள் குறிப்பு. பின்வரும் பழைய செய்யுளினும் நொச்சி உழிஞைக்கு முன்னதாகவே உள்ளது என்று காட்டுவர்:

> வெட்சி நிரை கவர்தல் மீட்டல் கரந்தையாம்
> வட்கார்மேல் செல்வது வஞ்சியாம் – உட்காது
> எதிரூன்றல் காஞ்சி எயில் காத்தல் நொச்சி
> அது வளைத்த லாகும் உழிஞை – அதிரப்
> பொருவது தும்பையாம் போர்க்களத்து மிக்கோர்
> செருவென் றது வாகை யாம்.

இப்பாடல் திவாகரப் பாடல். பிங்கலத்திலும் அப்படியே எடுத்துப் பெய்யப்பட்டுள்ளது. திவாகரம் செய்த காலம் சுமார் கி.பி. 880 என்பது முந்திய அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளோம். புறம் பற்றிய பல செய்திகள் திவாகரத்துள் காணப்படுகின்றன என்று குறிப்பிட்டோம். அந்தக் கண்ணோடு பார்க்கும் போது, ஐயனாரிதனாரும் இதே காலப்பகுதியில் வாழ்ந்து தம் நூல் செய்தார் என்று கருதுவது பிழையாகாது. அனைவரும் ஒரே

---

* தமிழ் இலக்கிய வரலாறு (1930) பக்கம் 340.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

✞ ஐயரவர்கள் குறிப்பு, புறப்பொருள் வெண்பாமாலைப் பதிப்பு 1953, முகவுரை பக்கம் 1.

சூழலில் வாழ்ந்தார்களா என்பது சொல்லமுடியாது. எனினும், இப்படிப்பட்ட ஒரு கருத்து முந்திய நூலாகிய பன்னிரு படலத்தில் இருந்தது என்றும், அதன் வழியாகவே ஐயனாரித னாரும் திவாகரரும் நொச்சியை முதலில் சொல்லிப் பின்னர் உழிஞை சொல்லும் முறையைக் கொண்டார்களோ என்றும் கருத வேண்டியிருக்கிறது. இதன்படி வெண்பாமாலை ஒன்ப தாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் எழுதப்பட்டது என்று முடிவு செய்கிறோம்.

"இவற்றினிடை கரந்தை நொச்சி என்பவற்றையும் இறுதி யில் பொதுவியல் கைக்கிளை பெருந்திணை என்பவற்றையுங் கூட்டிப் பன்னிரு படலமாக்கி, அவற்றிற்கு இருபது, பதினாலு, இருபத்தொன்பது, இருபத்திரண்டு, ஒன்பது, இருபத்தொன்பது இருபத்துநாலு, முப்பத்து மூன்று, நாற்பத்தெட்டு, முப்பத்தேழு, பத்தொன்பது, முப்பத்தாறு எனத் திணையும் துறையுமாக விரித்து வெண்பாமாலையாகிய வழிநூலுண் ஐயனாரிதனார் கூறியதூஉம்' (மாறனலங்காரம் சூ. 76 உரை) என்பதிலும் நொச்சிக்குப் பின் உழிஞையை வைத்த முறையே குறிப்பிடப் பட்டுள்ளது".

**பதிப்பு** : புறப்பொருள் வெண்பாமாலை மூலம், 1835இல், சென்னை கல்விச் சங்கத் தமிழ்த் தலைமைப் புலமை தாண்டவ ராய முதலியாரால் பழுதற ஆராயப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டது. இலக்கணப் பஞ்சகம் வெளியிடுவதாகத் தொடங்கி, காலம் நீட்டித்தமையால், நன்னூல் மூலம், அகப்பொருள் (நம்பி) மூலம், 'புறப்பொருட் கிலக்கியத்தோடு வெண்பா மூலம்' முதலில் பதிப்பிக்கப்பட்டன. ஐயரவர்கள் வழக்கம் போல், உரையோடு விரிவான பதிப்பு முறையோடு, முதல்பதிப்பு 1895; அவர்கள் காலத்தில் நான்காம் பதிப்பு 1934. பின்னர் அவருடைய புதல்வர் கல்யாண சுந்தரமையர் எட்டாம் பதிப்பு 1953. 1835ஆண்டுப் பதிப்பில் ஒழிபு என்ற சூத்திரம் வென்றிப் பெருந்திணை என்று தலைப்பிடப்பட்டது; 19ஆம் சூத்திரம் அங்கு இல்லை.

○○○

அத்தியாயம் 5

# இலக்கணம் – 3

## பாட்டியல்

தமிழை முத்தமிழ் என்று சொல்வது மரபு. இவை இயல் இசை நாடகம் என்பன. மூன்றுக்கும் அகத்தியர் இலக்கணம் செய்தார் என்று நூல்கள் கூறும். இவ்விலக்கணம் இல்லை. இசையும் நாடகமும் பின் வளர்ந்ததாகத் தெரியவில்லை. இயல் மட்டுமே வளர்ந்து வந்திருக்கிறது. பழந்தமிழ் நூலாகிய தொல் காப்பியம் இயலை மட்டுமே பேசுகிறது. பிற்காலத்தில் இயலா னது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐந்து பிரிவுகளாய் ஐந்திலக்கணம் என்று சொல்லப்பட்டது. முதன் முதலாக 11ஆம் நூற்றாண்டில் எழுந்த வீரசோழியத்தில் ஐந் திலக்கணம் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் தொல்காப்பியத்தில் உள்ளவை எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றே. இவற்றின் விரிவுகளை எல்லாம் எமது நூல்களில் வெவ்வேறிடங்களில் விளக்கியிருக்கிறோம்.

இவ்வத்தியாயத்துள் ஒரு பொருளை மட்டும் கருதுவோம். அதாவது பாட்டியல். தொல்காப்பியத்தின் செய்யுளியல் பல பகுதிகளாக விரிந்தது. ஒன்று யாப்பியல். இதை யாப்பதிகாரம் என்று இறையனார் களவியல் குறிப்பிடும். மற்றொரு பகுதி பாட்டியல் என்பது. யாப்பியலானது செய்யுளின் பகுதிகளைக் கூறுவது. பாட்டியலானது பின்னும் இருவகையாகப் பிரிகிறது. பொருத்தங் கூறும் பகுதியாகவும் பாட்டின் பொருளாகிய நூல்களின் இலக்கணம் கூறும் பகுதியாகவும் விரிகிறது.

8ஆம் நூற்றாண்டில் எண்ணற்ற பெரும் புலவர்கள் தோன்றி இப்பாட்டியல் நெறியைப் பல புது வழிகளில் வகுத்தமைக் கிறார்கள். அக்காலத்துத் தோன்றிய ஆசிரியர்கள் அகத்தியர் தொல்காப்பியர் என்ற பழைய பெயர்களையே புனைந்து கொண்டார்கள். அக்காலத்து எழுந்த நூல்கள் அளவிறந்தன.

எனினும் அவற்றில் ஒன்றேனும் இன்று கிடைக்கவில்லை. இவற்றின் விரிவை எல்லாம் அடுத்து வெளிவரும் எமது 8ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் விரித்துக் கூறியிருக்கிறோம்.

செய்யுளானது தனிநிலைச் செய்யுள், தொடர்நிலைச் செய்யுள் என இருவகை. தனிநிலைச் செய்யுள் இலக்கணம் கூறுவது செய்யுளியல். தொடர்நிலைச் செய்யுள் இலக்கணம் கூறுவது பாட்டியல். தொல்காப்பியச் செய்யுளியல் தனிநிலைச் செய்யுளின் இலக்கணம் கூறுவது. அதே நிலையில், யாப்பருங்கலம் யாப்பருங்கலக் காரிகை ஆகிய நூல்கள் தனிநிலைச் செய்யுளிலக்கணம் கூறுவன. பன்னிரு பாட்டியல், வெண்பாப் பாட்டியல் முதலான நூல்கள் தொடர்நிலைச் செய்யுளிலக்கணம் கூறுவன. இவற்றுள் பன்னிரு பாட்டியலின் காலம் பத்தாம் நூற்றாண்டு என்று விரிவாக ஆராய்ந்து எழுதியிருக்கிறோம்.* அப்பாட்டியல் ஒரு தொகுப்பு நூலாகும். இந்நூல் தொகுத்தவர் 15 பாட்டியல் புலவர் பெயர்களைக் குறிப்பிடுகிறார். இந்நிலையை ஊன்றி ஆராயும்போது, இத்தொகுப்பு ஆசிரியருக்கு முன்னே அநேக பாட்டியல் நூல்கள் செய்யப்பெற்றிருந்தன என்றும், அவையெல்லாம் எக்காரணத்தாலோ இறந்து போயின என்றும், இத்தொகுப்பு ஆசிரியர் தமக்குத் தெரிந்த அல்லது தம் காலத்தில் வழக்கில் மட்டுமிருந்த பாட்டியல் சூத்திரங்கள் கிடைத்தவரை ஒன்று தொகுத்துப் பன்னிரு பாட்டியலாக அமைத்து வைத்தார் என்றும் கருதத் தோன்றுகிறது. இவ்வாறு கருதுவதற்கு முக்கிய காரணம், பல கருத்துக்களைக் குறித்து ஒரே பொருளோடு பல சூத்திரங்கள் அப்பாட்டியலுள் காணப்படுதாகும். அது மட்டுமின்றி, மதுரைத் தமிழ்ச் சங்கத்துப் பன்னிரு பாட்டியலின் அடிக்குறிப்பில் காணப்படுகின்ற பல சூத்திரங்கள் ஒரே கருத்தை மீண்டும் சொல்வனவாயுள்ளன. இவை யாவும் ஏடுகளில் காணப்பட்டவையே. முதல் பன்னிரு பாட்டியலின் தொகுப்பைப் பெயர்த்தெழுதினவர் அத்தொகுப்பினுள் காணப்படாவிட்டாலும், தமக்குத் தெரிய வந்திருந்த பிற சூத்திரங்களையும் ஆங்காங்குச் சேர்த்து எழுதி வைத்தார் என்று நாம் கருத வேண்டும். இதனாலும் பன்னிரு பாட்டியல் ஒரு தொகுப்பு நூல் என்ற கருத்து உறுதி பெறுகிறது. முன் குறிப்பிட்டது போல, இக்கருத்துக்களை எமது எட்டாம் நூற்றாண்டு இலக்கியத்தில் உரிய இடத்தில் தெளிவுபடுத்தியிருக்கிறோம். இங்குக் கிடைக்கின்ற 50க்கு

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

மேற்பட்ட பாட்டியல் நூல்கள் பற்றிய குறிப்புக்களை ஆய்ந்து அவற்றுள் ஒன்பதாம் நூற்றாண்டுக்கு உரியன என்று நாம் கருதுகின்ற சிலவற்றை மட்டுமே பின்னே குறிப்பிடுகிறோம். இக்குறிப்புக்களும், இவை எட்டாம் நூற்றாண்டு இவை ஒன்ப தாம் நூற்றாண்டு என்று காட்டும் குறிப்புக்களும் கிடைக்கின்ற பாடல்கள் செய்திகளுக்கு அமைதி காணும் முயற்சியேயாகும். அமைதி காண முற்படுவதற்குக் காரணம், ஒன்று வரலாற்றறி வுக்கு உதவும் என்பது; இரண்டு சிறப்புடைய செய்திகளும் மரபுகளும் மறைந்து போகலாகாது என்பது.

அடுத்து அச்சிடப் போகும் எமது எட்டாம் நூற்றாண்டு வரலாற்றில் மேற்கூறிய இலக்கண எழுச்சி பற்றிய செய்திகள் விளக்கமாய்ச் சொல்லப் பெறினும், இனிக் கூறப்போகும் செய்தி களை நன்குணரும் பொருட்டு, அவற்றின் சில பகுதிகளை மட்டும் கீழே தொகுத்துச் சொல்கிறோம். எட்டு - ஒன்பதாம் நூற்றாண்டுகளின் இலக்கண நெறி பின்வரும் நெறிகளில் சென்றிருக்கிறது.

1. பல அதிகாரங்கள் - எழுத்து சொல் யாப்பு - பாட்டியல் - அவிநயம்.
2. பொருள் - அகம்; இறையனார் களவியலும் அதன் உரையும், செம்பூட்சேயார் கூற்றியல்.
3. பொருள் - புறம்; பன்னிரு படலம்.
4. யாப்பு: பன்னிரு பாட்டியலுட்கண்ட ஆசிரியருட்பலர்; சங்க யாப்புடையார், செய்யுளியலுடையார், யாப்பியலுடையார்.
5. பாட்டியல்; அகத்தியர், தொல்காப்பியர், கல்லாடனார் மயேச்சுரர் என்னும் பேராசிரியர் முதலான பலர்.
6. அணி இலக்கணம்: அணியியல்.

இனி எட்டாம் நூற்றாண்டுக்கு முற்பட்டுச் செய்யப்பட்ட இலக்கண நூல்களும் பல துறைகளில் இருந்தன.

அ. சங்க காலத்துக்கு முற்பட்டவை - முத்தமிழ் கூறும் அகத்தியம் பரதம் ஆகிய நாடகத் தமிழ் நூல்கள், இசைத் தமிழ் நூலாகிய பெருநாரை, பெருங்குருகு, முறுவல், சயந்தம், குண நூல்.

ஆ. சங்க காலத்துக்கு முற்பட்டுத் தொல்காப்பியத்துக்கு உடன் காலம் என்று கருதத்தக்கவை - தக்காணியம், பாடலம், பனம்பாரம், செயிற்றியம்.

இவ்வாறு அமைந்த பல்வகை இலக்கண நூல்களில் 9ஆம் நூற்றாண்டுக்குரியன என்று சில பாட்டியல் நூல்களைக் கால வரையறை செய்து அவற்றை மட்டும் இவ்வத்தியாயத்துள் குறிப்பிடுகிறோம். அடியார்க்கு நல்லார் தம் சிலப்பதிகார உரை எழுதுவதற்குத் துணை நூல்களாக இசை நாடகத் தமிழ் நூல்கள் ஐந்தைக் கொண்டதாகக் கூறுகிறார்; சிகண்டி செய்த இசை நுணுக்கம், பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திர காளியம், அறிவனார் செய்த பஞ்ச மரபு, ஆதிவாயிலார் செய்த பரத சேனாபதீயம், பாண்டியன் மதிவாணனார் செய்த மதி வாணர் நாடகத் தமிழ் நூல். இவற்றுள் இந்திர காளியம் இந்த அத்தியாயத்திலும், பஞ்சமரபு அடுத்த அத்தியாயத்திலும், ஆராயப் பெறுகின்றன. ஏனைய மூன்றும் எட்டாம் நூற்றாண்டு வரலாற்றில் ஆராயப் பெறும்.

## இந்திர காளியம்

'யாமளேந்திரர் செய்த இந்திர காளியம்' என்று அடி யார்க்கு நல்லார் சிலப்பதிகார உரைப்பாயிரத்தின் தொடக் கத்தில் குறிப்பிடுகிறார். அங்கு அவர் குறிப்பினால் இந்நூல் நாடகத் தமிழ் நூலொன்று நாம் கருத முடிகிறது. இதனோடு ஒருங்கு சொல்லப்பட்ட பிற நூல்கள் இசை நுணுக்கம், அறி வனார் செய்த பஞ்மரபு, ஆதி வாயிலார் செய்த பரதசேனா பதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்பன. இவ்வைந்து நூல்களும் நாடகத் தமிழ் நூல்களாயினும் இவை சிலப்பதி காரமாகிய நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்கள் அன்று என்பது அடியார்க்கு நல்லார் கூற்று. இனி யாமளேந்திரர் என்பது ஆசிரியர் பெயர். அவர் பாரசவ முனிவர் என்பது அடியார்க்கு நல்லார் குறிப்பு. பாரசவ முனிவராவார் தேவி பூசை செய்கின்ற சிறப்புடையோர்; பின்வரும் தக்கயாகப் பரணிப் பாடலும் உரையும் காண்க:

சார்த்துவன கோசிகமோ தன் பேழைத் தமனியமே
ஆர்த்துவன அறுசுவையோ அந்தமிலா அமுதமுமே.

தேவிக்குத் திருவுடையாடையாக உபாசக பாரசவன் சார்த்து வன கௌசிகப் பட்டாடைகளையோ? அல்ல; பண்டைத் தனது பேழைப் பொன்னாடையல்லவோ? அன்றியும் தேவியைப் பூசிக்கும் பாரசவன் அமுது செய்விப்பன அறுசுவை யடிசிலேயோ?

அல்ல; முடிவில்லாத ஆயுஷ்யத்தைக் கொடுக்கும் அமிர்தமல்லவோ? இவ்வமுதம் உதவுவார் தேவர்களெனவுணர்க. இது யாமளத்திற் கண்டது.*

இங்கு தேவியாவது, பரணிப் பிரபந்தங்களில் சிறப்பிக்கப் படுகின்ற காளி அல்லது கொற்றவை. யாமளம் என்பது தேவி வழிபாட்டைக் கூறும் ஒரு சமய நெறிக்குரிய நூல். இந்த நூல்கள் யாமளாகமம்* என்றும் பெயர் பெறும். யாமள நூல், யாமளாசிரியர் பற்றிய குறிப்புக்கள் தக்கயாகப் பரணி உரையுள் காணப்படுகின்றன.

'பாரசவ முனிவரில் யாமளேந்திரர்' என்று அடியார்க்கு நல்லார் குறிப்பிட்டிருப்பதனால், இவர் ஒரு யாமளாசாரியர் என்று கருதலாம். யாமளேந்திரர் என்பது இவர் இயற்பெயரன்று; வழிபாட்டு நெறியால் வந்த சிறப்புப் பெயராகும்.

இவர் செய்த நூல் இந்திர காளியம், இது நாடகத் தமிழ் நூல் என்று குறிப்பிட்டோம். நாடகத் தமிழில் இசையும் இயலும் கலந்திருக்கும். அன்றியும் இவர் நூலில் இலக்கணம் சொல்லப்பட்டதென்று நாம் அறிகிறோம்; பொது இலக்கணம் அன்றாயினும், பாட்டியல் மரபு இவரால் சொல்லப்பட்டதென்று நாம் கருதுதல் பொருந்தும். பன்னிரண்டாம் நூற்றாண்டில் செய்யப் பெற்ற பாட்டியல் நூலாகிய வச்சணந்தி மாலையின் உரையில் எண்வகைச் சிறப்புப் பாயிரப் பொருளையும் விளக்குமிடத்து, வழியைக் கூறும்போது, 'வழியே என்பது இன்னதின் வழித் தென்றல்; இஃது எந்நூல் வழித்தோ எனில், இந்திரகாளி என்னும் பாட்டியல் மரபின் வழித்து' என்று உரைகாரர் எழுதுகிறார். இந்திரகாளி, இந்திரகாளியம் எனினும் ஒக்கும். இதனால் இந்திரகாளியம் பாட்டியல் மரபு கூறுகிறதென்பது தெளிவு.

அடியார்க்கு நல்லார் குறிப்பினால் இந்திரகாளியம் ஒரு நாடகத் தமிழ்நூல் என்று தெரிகிறது. பாட்டியல் கருத்துக்கள் நாடகத்திற்கு இன்றியமையாத இலக்கணமாய் இருந்தன. பாட்டியல் பகுதியான பொருத்தவியல் கூறும் பொருத்தங்கள் முழுதும் அமையுமாறு நூல் செய்ய வேண்டுமென்பது முந்தைய ஆசிரியர் தவறாது கைக்கொண்ட ஒரு நெறி. ஆதலால் நாடக நூலில் பாட்டியல் அமைந்திருப்பது பொருத்தமே. அன்றியும்,

---

* யாமளாகமத்தைத் திருமந்திரம் (63) குறிப்பிடுகிறது.

பன்னிரு பாட்டியலின் காலமாகிய பத்தாம் நூற்றாண்டு தொடங்கிப் பாட்டியல் நூல்கள் பெருகியிருக்கின்றன என்று அறிகிறோம். இக்காலத்துக்கு அடுத்துச் சிலப்பதிகார அரும்பத உரை போன்றன தோன்றின. இவ்வுரைகளால், அக்காலத்துக்கு முன் நாடகத்தமிழ் நூல்கள், சிறந்த ஆட்சி பெற்றிருந்தன என்றும், நாம் கருதுகின்ற காலப்பகுதிக்குச் சற்று முன்னதாக அவை வழக்கு வீழ்ந்த காலத்தே அவற்றின் ஒரு பகுதியாகிய பாட்டியல் மரபு தனியே புது வழக்குப் பெறுவதாயிற்று என்றும் கொள்வது பொருத்தமே.

இனி, ஆசிரியர் பெயரால் நூல்கள் வழங்குவது போல நூற் பெயரால் ஆசிரியரும் வழங்கப் பெற்றாரென்று நாம் யூகிக்க இடமுண்டு. தொல்காப்பியர் செய்த இலக்கண நூல் அவர் பெயரால் தொல்காப்பியம் என்று வழங்கப் பெற்றது. இதை யொத்தன பல. மற்று நூற்பெயரே ஆசிரியருக்கு வைத்து வழங்கும் வழக்கம் மிகவும் அருமை. தொல்காப்பியமுடையார், சிலப்பதிகாரமுடையார் என்று சொல்வது போல உள்ள வழக்கு மிகவும் அதிகம். ஆனால் குறள் செய்த ஆசிரியர் திருவள்ளுவரை இக்காலத்தில் திருக்குறளார் என்று வழங்குகின்ற வழக்கத் தைக் காண்கிறோம். இதுபோல இந்திர காளியம் செய்தாரை அக்காலத்தில் இந்திர காளியார் என்றும் வழங்கியிருக்கிறார்கள். இந்திர காளியார் என்ற பெயரானது, பன்னிரு பாட்டியல் தொகுப்பில் காணப்படும் பதினைந்து ஆசிரியர் பெயர்களுள் மிகவும் முக்கியமானது. அதனுள் காணப்படும் 360 சூத்திரங் களில், 63 சூத்திரங்கள் இந்திர காளியார்; அதாவது இந்திர காளியம் செய்த யாமளேந்திரர் என்றே பொருள்படும். வச்சணந்தி மாலை உரைப்பொருத்தம் கூறுமிடத்து ஐந்து சூத்திரங்களைக் கொடுத்து ‘என்பன இந்திர காளி’ என்று அதன் உரைகாரர் எழுதுகிறார். இவ்வைந்தையும் இந்திர காளியார் என்றே பன்னிரு பாட்டியல் குறிப்பிடுகிறது. ஆதலால் இவை ஒரு நூலையே குறிப்பிடுவதும், ஓர் ஆசிரியரையே குறிப்பிடுவதும் தெளிவு. பன்னிரு பாட்டியலில் காணப்படும் இந்திரகாளியச் சூத்திரங்கள் பெரும்பகுதி பொருத்தங்களே கூறுகின்றன. ஐந்து சூத்திரங்கள் மட்டும் பிள்ளைத் தமிழையும் வேந்தன் குடை மங்கலத்தையும் குறிப்பிடுகின்றன. பிள்ளைத் தமிழைக் குறிப்பிடு கின்றபடியால், இந்நூல் பிற்பட்ட காலம் என்று நாம் கருது கிறோம். அடியார்க்கு நல்லார் காலத்தில், அதாவது 12ஆம் நூற்றாண்டில் இந்நூல் கிடைத்திருந்து பின்னர் இறந்து

போயிற்று. 9ஆம் நூற்றாண்டில் பார்க்கும்போது, சிறப்பான பல யாப்பியல் - பாட்டியல் நூல்களும், உரைகளும் தோன்றி யிருக்கின்றன. ஆதலால் இக்காலமே யாமளேந்திரர் வாழ்ந்து நூல் செய்த காலம் என்று நாம் கருதுகிறோம்.

மற்றொரு கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது. பாட்டியல் என்ற பகுதி தொல்காப்பியத்துள் சொல்லப்படவில்லை. ஆனால் அகத்தியர் செய்த பாட்டியல் என்ற ஒரு நூல் பண்டைய உரை கள் அனைத்திலும் சுட்டப்பட்டுள்ளது. பன்னிரு பாட்டியலி லும் இதன் நூற்பாக்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இவ்வகத்தியர் வரலாற்றின்படி, இவர் தொல்காப்பியருக்குக் குருவாய் இருந்த அகத்தியரே என்று கருதுவதற்கு இல்லை; அதே பெயரைத் தரித்துப் பிற்காலத்தில், அதாவது 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து நூல் செய்த மற்றோர் அகத்தியரென்றே கருத வேண்டும். இதே காலத்தில் பாட்டியல் மரபுகள் மிகப் பல ஆசிரியர்களால் சொல்லப்பட்டன; அவற்றுள் மூன்று மிக்கசிறப்புப் பொருந்தி யவை. அவையாவன அகத்தியர் பாட்டியல், அவிநயனார் செய்த அவிநயம், யாமளேந்திரர் செய்த இந்திர காளியம் என்பன. இன்னும் பலர் செய்தார்கள் என்பதை யாப்பருங்கல உரை யாலும், பன்னிருபாட்டியலாலும் அறிய முடிகிறது. அவை யனைத்திலும், சிறப்புடையவை மேற்சொன்ன மூன்று.

இந்திர காளியம் நூற்பாவால் ஆன ஓர் இலக்கண நூலா கும். பன்னிரு பாட்டியல் கூறும் 63 சூத்திரங்களும், நவநீதப் பாட்டியலின் உரையில் காட்டப்பட்டுள்ள 5 சூத்திரங்களும், வச்சணந்தி மாலையுரையில் காட்டப்பட்டுள்ள 6 சூத்திரங் களும் யாவும் நூற்பாக்களே.

ஆனால் இவ்வளவும் நாம் ஊகித்துக் கூறும் கருத்துக்களே யன்றி நூலின் எந்தப் பகுதியும் முழுமையாகக் கிடைக்கவில்லை. மேலே குறிப்பிட்டபடி சில சூத்திரங்கள் மட்டும் கிடைத்தன. மற்று, இவ்வாசிரியரைக் குறித்து வேறெந்தச் செய்தியும் புலப் பட வழியில்லை. தேவி பூசை என்ற குறிப்பால் இவர் வைதிக சமயத்தினர், சைவத்தின் சார்பான சாக்த நெறிவழி (தேவி வழி பாட்டு நெறி) ஒழுகுபவர் என்று மட்டும் சொல்லலாம்.

இனி, இந்நூல் அச்சுக்குக் கொடுத்தப்பின், அன்பர் க.ப. அறவாணன் எழுதிய சைனரின் தமிழிலக்கண நன்கொடை என்ற ஓர் ஆராய்ச்சி நூலைப் பார்க்க நேர்ந்தது. அதனுள், இரண்டு கருத்துக்களைச் சொல்கிறார். ஒன்று யாமளேந்திரர்

வேறு, இந்திரகாளியார் வேறு என்பது. இரண்டு இவர் சைனர் என்பது. இக்கருத்துக்கள் பற்றியும் சில சொற்கள் இங்கு கூறுவது அவசியம்.

யாமளை என்பது காளியின் பெயர்; சியாமளம் கருநிறம், பச்சை பொதுவாக, திருமாலின் தங்கையாகிய உமை (அம்பிகை) கருநிறம் என்பது வைதிக மரபு. அம்பிகையின் கூறாகிய காளியும் கருநிறம். (சியாமளா தண்டகம் என்பது காளிதாசன் துதி நூல். ஆகவே காளியே யாமளை. யாமள - இந்திரர் என்ற கூட்டுச் சொல்லின் இரு சொற்களும் இந்திர யாமளர் என்று மாறி யாமளம் என்பதன் பரியாயப் பெயராகிய காளி என்பது சேர்ந்து, இந்திர காளி என்று ஆகியிருக்கின்றன. இதுவே இந்திர காளி யார்; இவர் செய்த நூல் இந்திர காளியம். எனவே ஆசிரியர் பெய ராலும் நூற்பெயராலும் வேற்றுமை இல்லை என்பது தெளிவு.

நூல் யாத்தலுக்குப் பொருத்தம் மிகவும் இன்றியமையாத ஓர் உறுப்பு. 8ஆம் நூற்றாண்டு தொடங்கி இது மிகவும் பெருகி யிருக்கிறது. இசைக்கும் நாடகத்துக்கும் நூல் செய்யுங்கால் பொருத்தம் அதிகம் பார்க்கப்படுகிறது. ஆதலால் பொருத்தம் கூறுகின்ற பாட்டியல் இசைத் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் வேண்டற்பாலது என்ற கருத்தில் பிழையில்லை. இதன் படியும் பாட்டியலில் குறிப்பிடப்படும் இந்திரகாளியாரும் இசைத்தமி ழுக்காகக் குறிப்பிடப்படும் யாமளேந்திரரும் ஒருவரே என்று கொள்வதில் இழுக்கில்லை.

இனிச் சமயம் பற்றிய கருத்து. இந்திர காளியமுடையார் சைனராயிருந்தால் ஒன்றும் குறைவில்லை. ஆனால் உண்மை வேறு. மேற்காட்டியபடி இவரே யாமளேந்திரர் எனக் கொள்ளும் போது, இவர் சைவராகிறார். மற்றப்படி சைனரான வச்சணந்தி மாலையுடையார் சிறப்பித்துக் கூறுவதால் மட்டும் இவரும் சைனராக வேண்டும் என்ற நியதி இல்லை. சிறந்த சைனச் சார்புடைய யாப்பருங்கல விருத்திகாரர், மயேச்சுரர் என்னும் பேராசிரியரை, 12க்கு மேற்பட்ட செய்யுளோசை பொருந்திய தொடர்களால் போற்றிக் குறிப்பிடுகிறார். திரிபுர மெரித்த விரிசடை நிருத்தர் பெயர் மகிழ்ந்த பேராசிரியர் என்பது போன்றவை. இவர் அமிதசாகரிடத்தும் பேராசிரியரிடத்தும் மாணாக்கராய் இருந்திருக்கலாம் என்ற கருத்தும் அங்கு சொல்லப்பட்டது.* இதுபோல, வச்சணந்திமாலையுடையார்

---

* எமது தமிழிலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

சைனராதலினால் அவருடைய ஆசிரியரான இந்திரகாளியமுடை யாரும் சைனராகவே இருக்க வேண்டும் என்ற நியதியில்லை. சைவரான அகத்தியரிடமே சைனநூலாசிரியரும் பயின்றார்கள் என்ற வரலாறும் சொல்லப்படும். 12ஆம் நூற்றாண்டில் சிறந்த சைவரான பெருந்தேவனார் பௌத்தரான புத்தமித்திரர் நூலுக்கு உரை எழுதியிருக்கிறார். இவ்வாறு அக்காலத்தில் கல்வியில் ஈடுபட்டோருக்குச் சமயவுணர்ச்சி மேலோங்கி நிற்கவில்லை என்பது அறியத்தக்கது.

வச்சணந்திமாலை (10ஆம் நூற்றாண்டு என்பது பொருந் தாது) அடியார்க்கு நல்லார் உரை இரண்டுக்கும் முற்பட்டது இந்திரகாளியம் என்பதில் தடையில்லை. இதன் காலம் 9ஆம் நூற்றாண்டாக இருத்தல் பொருத்தம். முன் காட்டியபடி 8-9 நூற்றாண்டுகளில் கிளர்ந்தெழுந்த புதிய இலக்கண நெறிகள் மூன்று; தொல்காப்பிய நெறி, அவிநயநெறி, இந்திரகாளிய நெறி. அவற்றுள் இதுவும் ஒன்று என்பது தெளிவு.

அகச்சான்றாக ஒன்றையும் குறிப்பிட முடியும் சிவபெரு மானை அட்ட மூர்த்த வடிவினன் என்று சொல்வது மரபு; இதை ஆகமங்களிலும் திருமந்திரத்திலும் தேவார திருவாசகங் களிலும் மிகுதியாகக் காணலாம். அட்டமூர்த்தமாவன நிலம் நீர் தீ கால் வான் ஞாயிறு திங்கள் இயமானன் என்ற எட்டு. பொருத்தப் பகுதியில் இந்திர காளியம் வெட்டையும் கூறுகிறது:

அவைதாம்,
நீரே நிலனே வானே நீள்மதி
சீரிய மானன் செந்தீத் தெறு கதிர்
காற்றெனக் கிளந்த கூற்றன என்ப.

இங்குச் சொல்லப்பட்டவை நீர், நிலன், வான், திங்கள் இயமானன், தீ, ஞாயிறு, காற்று. அடுத்து 8 நூற்பாக்களால் இவ்வெட்டையும் தனித் தனியே விளக்குகிறார். இவை யாவும் பாட்டிற்குரிய சீர்க்கணங்கள். இவ்வாறு சைவ சமய மரபைச் சொல்வதாலும் இவர் சைவர் என்ற கருத்து வலியுறுகின்றது.

இப்பாட்டியலாசிரியர்கள் பல பிரபந்தங்களைக் குறிப் பிட்டிருப்பது பற்றி ஒரு கருத்தை முன் குறிப்பிட்டிருக்கிறோம். அதாவது இவர்களெல்லாம், பின் நூல் செய்வோர் இன்ன நெறியில் செய்ய வேண்டும் என்று குறிப்பிட்டார்களேயன்றி,*

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

முன் பல்வகைப் பிரபந்தங்கள் யாவும் இருந்து அவற்றுக்கு இலக்கணம் சொன்னார்கள் என்று கருதுவதற்கில்லை. இந்த நினைவோடு பார்க்கும் போது, இந்திரகாளியம் பிள்ளைத் தமிழ் இலக்கணம் கூறியிருப்பதன் பொருளும் புலப்படும்.

> அவைதாம்,
> பிள்ளையைப் பாடலின் பிள்ளைப் பாட்டாய்
> பிறப்பே ஓகை காப்பே வளர்ச்சி
> அச்ச முறுத்த லுடன்செங் கீரை
> தால்சப் பாணி முத்தம்வா ரானை
> அம்புலி சிற்றில் குழமகன் ஊசல்
> என்றன பிறவும் தொன்னெறி மரபின்
> தத்தம் தொழிற்குத் தகுவன புகறல்
> எத்திறத் தோர்க்கும் உரியன என்ப
> கொச்சகக் கலியொடு நெடுவெண் பாட்டே.

இங்கு சொல்லப்பட்ட பருவப் பெயர்களை ஆராய்ந்தால் மேற் கூறியதன் உண்மை புலப்படும். பருவங்களாவன, பிறப்பு, ஓகை, காப்பு, வளர்ச்சி, அச்சமுறுத்தல், செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரனை, அம்புலி, சிற்றில், குழமகன், ஊசல். இங்குள்ள 14இல் பிறப்பு ஓகை வளர்ச்சி அச்சமுறுத்தல் குழமகன் என்பன பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களாய்க் கருதுவதில்லை. பருவங்கள் காப்பில் தான் தொடங்குகின்றன. ஊசல் என்பதும் பெண்பாலற்பிள்ளை தமிழுக்கே உரியது. சிற்றிலின் பின் சிறு பறை சிறுதேர் என்ற இரு பருவங்களும் பிள்ளைத் தமிழில் அங்கமாய் வருகின்றன. அடுத்த இரண்டாவது சூத்திரத்திலும் பிறப்பு ஓகை முதலியவற்றை உறுப்புகளாகக் கொள்ளுவது இல்லை என்றும் சொல்லுகிறார். பிள்ளைத்தமிழ் என்ற பெயரும் இங்கு ஆட்சிக்கு வரவில்லை. பிள்ளைப்பாட்டு என்றே கூறு கிறார். இவற்றால் இப்பாட்டியல் என்ன நெறியில் பிரபந்தம் செய்யலாம் என்று வழிகாட்ட வந்ததென்பதே பொருந்தும்.

## கல்லாடனார் நூல்

இது கல்லாடம் என்று பெயருடைதாய் இருக்கலாம். கல்லாடர் என்ற பெயர் இலக்கிய வரலாற்றில் நன்கு அறிந்த பெயர். சங்க காலத்தில் ஒரு கல்லாடர் வாழ்ந்து அகம், புறம் என்ற இரு பொருள்கள் குறித்து 14 பாடல் பாடியிருக்கிறார். இவர் சங்ககாலக் கல்லாடர். இரண்டாவது பாட்டியல் செய்த கல்லாடர் காலம் 9ஆம் நூற்றாண்டு. மூன்றாவது, திருக்கண்ணப்ப

தேவர் திருமறம் என்ற பதினொராம் திருமுறைப் பிரபந்தம் பாடிய கல்லாடர்; காலம் 10ஆம் நூற்றாண்டு. நான்காவது கல்லாடம் என்ற அகப்பொருள் பாடிய கல்லாடர், காலம் 11ஆம் நூற்றாண்டு. ஐந்தாவது தொல்காப்பியச் சொல் அதிகாரத்துக்கு உரை எழுதிய கல்லாடர், காலம் 15ஆம் நூற்றாண்டு. இந்த நூல்களைப் பார்க்கும் போது ஒவ்வொன்றும் வெவ்வேறு தன்மையாய் இருப்பது புலப்படும்*. இங்கு திருவள்ளுவ மாலையில் கல்லாடனார் என்ற பெயரில் உள்ள பாடலை நாம் கருதவில்லை. காரணம் ஒரே ஆசிரியர் அம்மாலை முழுமையும் பாடினார். தனி ஆசிரியர் பெயரைச் சூட்டினார் என்று நாம் கருதுவதாகும்.❖ கல்லாடம் என்பது ஓர் ஊர்ப் பெயராகும்.

இவ்வாறு நாம் பாகுபாடு செய்ததில் பாட்டியல் செய்த கல்லாடர், இரண்டாம் கல்லாடர், காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்று குறிப்பிட்டோம். இவர் பாடிய நூற்பாக்கள் 45ஐ பன்னிரு பாட்டியலும், ஐந்தை நவநீதப் பாட்டியல் உரையும் எடுத்துத் தருகின்றன. யாப்பருங்கல விருத்தி, கல்லாடர் 'இருடிகள் அல்லா ஏனையோராகி மனத்தது பாடவும், ஆகவும், கெடவும் பாடல் தரும் கபிலர் ......கல்லாடர்....' என்று குறிப்பிடுகின்றது. பாடல் எதையும் தரவில்லை.

கல்லாடர் நூற்பாக்களில் வந்துள்ளவை எழுத்தியல் 16, சொல் இயல் 16, இன இயல் 13 ஆகும். எழுத்தியலில் 5 சூத்திரங்கள் நூற்பா, ஏனைய 11 குறட்பா நாம் அறிந்தவரையில் பண்டைய நூல்களில் இலக்கணச் சூத்திரங்கள் யாவும் நூற்பாக்களாகவே செய்யப் பெற்றுள்ளன. குறட்பாவில் பண்டைய சூத்திரங்கள் இருப்பது மிகவும் அபூர்வம். இக்குறட்பாச் சூத்திரங்களில் அவர் சொல்லும் கருத்து அ, இ, உ, எ, ஒ என்னும் எழுத்து ஐந்துக்கும் நட்பும் பகையும் எவை என்பதாகும்.

இனி, சொல்லியலில் இவருடைய பாக்கள் மங்கலச் சொல், பெயர்ப்பொருத்தம் என்ற பகுதிகளில் காணப்படுகின்றன. பிற்காலத்தில் பாட்டியல் நூல்கள் பரிசில் வழங்காதவனை மிகவும் பழித்துப் பாடுவன. இங்கு இவரும் பரிசில் வழங்காதோர் கெடுதல் வேண்டி மங்கலம் சிதைத்துப் பாடுதலும் உரியது என்று கூறுகிறார்;

---

* கல்லாடர் பற்றிய ஒரு விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 11ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

❖ மேற்படி நூல்.

தொடு கழல் வேந்தன் துன்னா தோரும்
வடுவறு பரிசில் வழங்கா தோரும்
கெடுதல் வேண்டிச் சிதைத்தலு முரித்தே.

அடுத்து, பெயர்ப்பொருத்தம் என்ற தலைப்பில் முதல் சூத்திரத்தில் இவர் எண்வகைப் பெயர்களைக் குறிப்பிடுகின்றார். அவையாவன குலப் பெயர் - பார்ப்பார் அரசர் போல்வன; குடிப்பெயர் - சேரன், சோழன் போல்வன; கோத்திரப் பெயர் - தாதை குடிப் பெயரைக் கொள்ளுதல். குணப்பெயர் - ஏனைப் புலவர் கொடுப்பது; மனப்பெயர் - தனக்குத்தானே எய்துவது; ஆணைப் பெயர்;

ஆணைப் பெயரே வலியோ ரஞ்சப்
பேணி யுலகம் பேசும் பெயரே.

சிறப்புப்பெயர் - வேந்தன் கொடுப்பது; சிறப்புப் பெயரோடு அரசன் பட்டமும், பூவும், பூணும், ஆழியும் வழங்குவான். இயற்பெயர் - தமக்குத் தாமே கொள்ளும் பெயர். இச்சூத்திரங்களுக்கு மிகையாக உள்ளவற்றில் கோத்திரப் பெயர் பூசுரரிக்குக் காப்பியன், கவுணியன், காசிபன் போல்வன என்று உள்ளது.

இயற்பெயர் தந்தையர் பெயர் வழி பேரன் பெயர் தெய்வ பெயர் மிக்கோர் பெயர் என்று காணப்படுகிறது.

இனவியல் என்ற தலைப்பில் இவர் ஆற்றுப்படை, அந்தாதி, மடல், கோவை, காப்பியம், கலித்தொகை, குறுந்தொகை, நெடுந்தொகை, கலம்பகம், மும்மணிக்கோவை என்று பெயர் குறிப்பிடுகின்றார். இவற்றுள் ஆற்றுப்படை, முருகாறு முதலியன. மடல் - சிறிய திருமடல் , பெரிய திருமடல் அந்தாதி - நாலாயிரத்தில் பல. கலித்தொகை முதலான சங்க நூல்கள். மும்மணிக்கோவை சேரமான் பாடியது முதலான சில. கலம்பகம் முதல் கலம்பகம், மூன்றாம் நந்திவர்ம பல்லவன் மீது பாடப்பட்ட நந்திக் கலம்பகம் ஆகும். நந்திவர்மன் காலம் 825-850. இங்கு இரண்டு நிலைமைகளை மனதில் கொள்ளலாம். ஒன்று முந்திய நூல்கள் பற்றிக் குறிப்பிட்டது போல இவருக்கு முன் ஒரு கலம்பகம் இருந்து அதை இவர் குறிப்பிட்டார் என்று கொள்ள வேண்டும். முதல் கலம்பகம் நந்திக்கலம்பகம் ஆதலால் இவர் காலம் 850க்கு பின் என்றே கொள்ளவேண்டும். எனவே இவர் 9ஆம் நூற்றாண்டினர் என்பது பொருந்துவதே. மற்று, பன்னிரு பாட்டியல், இல்லாத பிரபந்தங்களையும் 'இவ்வாறு பாடுவது நெறியாகும்' என்று நெறி வகுத்துக் கொடுப்பது. அதன்படி பார்க்கும்போது இல்லாத கலம்பகத்தை இவர் குறிப்பிடு

கின்றார் என்று கருதினால் இவர் காலம் நந்தியின் காலத்துக்கு முற்பட்டது ஆகும் என்று கூடக் கூறலாம். இருப்பினும், இவர் நந்திக் கலம்பகத்துக்குப் பிற்பட்டவர் என்பதே தெளிவு.

நவநீதப்பாட்டியல் உரை பின்னும் அதிகச் செய்திகளைத் தருகிறது. இது கல்லாடர் நூலிலிருந்து கலம்பகச் செய்யுள் தொகைக்குச் சூத்திரம் ஒன்றும், ஓலை இலக்கணம், வாத நெறி என்பனவும் கூறுகின்றது. கல்லாடர் நூல் கல்லாடனார் கலா வியல் என்று பெயர் பெற்றதென்றும், இதனுள் வெண்பாப் பாடல்களும் உள்ளன என்றும் அறிகிறோம்.

எனவே இதுவரை கூறியவற்றைத் தொகுத்துக் கூறின் கல்லாடனார் என்ற புலவர் 9ஆம் நூற்றாண்டின் பிற்பாதியி லிருந்து தம் பெயரால் கலாவியல் என்ற பெயருடைய பாட்டியல் நூல் செய்தார் என்றும், முன்காட்டியவாறு அறுவகைப் பிரபந் தங்களைக் குறிப்பிட்டார் என்றும், மூன்று சங்க நூல்களைக் குறிப்பிட்டார் என்றும், மக்கட் பெயர்களை எண் வகையாகப் பாகுபடுத்தினார் என்றும், அவர் நூலில் குறள் வெண்பா என்ற பாவினமும் பயின்றது என்றும் அறிகின்றோம். யாப்பருங்கல விருத்தியிலும் பிறவிடங்களிலும் பயிலும் இலக்கணம் பற்றிய சில குறட்பாக்கள் பெயர் குறிப்பிடாவிட்டாலும், கல்லாடனார் நூலுக்குரியனவாயிருக்கலாம்.

இவர் திருவினாசிரியர் தூக்கியல் என்று ஒரு பாட்டில் குறிப்பிடுகிறார். இப்பெயர் திருப்பிரவாசிரியர் தூக்கியல் என்றும் பெயர் பெறும்; இதுபற்றிப் பின்னுள்ள தனித் தலைப்பில் விளக்கம் காணலாம்.

**குறிப்பு:** இதுவரை குறிப்பிட்ட பொருளும், இனிமேல் சொல்லும் பொருளும் உரைகளில் தந்துள்ள நூற்பாக்களை யும், பெயர்களையும் வைத்தே சொல்லப்படுகின்றன. ஏடுகளில் எங்கேனும் பிறழ்வுகள் ஏற்பட்டிருந்தால் இக்கருத்துக்களும் பிறழவே செய்யும். எனினும் பொதுவான இந்த அமைதிகள் அக்காலத்தில் நிலவின என்பது பிழையாகாது.

## செய்யுளியல்

இப்பெயருடைய நூலை, யாப்பருங்கல விருத்திகாரரும் காரிகையுரையில் குணசாகரரும் குறிப்பிடுகிறார்கள். நேர்பசை நிரைபசை என்று இவர் கூறுகிறார் என்று அறிகிறோம். சொற்சீர் என்பதற்கு இந்நூலில் பின்வரும் நூற்பா காட்டப்பட்டுள்ளது:

> கட்டுரை வகையா னெண்ணொடு புணர்ந்து
> முட்டடி யின்றிக் குறைவு சீர்த் தாகியும்
> மொழியசை யாகியும் வழியிசை புணர்ந்தும்
> சொற்சீர்த் திறுதல் சொற்சீர்க் கியல்பே.

*இனி செய்யுளியலானது பாட்டும் உரையுமாகுமோ என்று ஐயுறுவதற்கு இடமாகிறது. யாப்பருங்கல விருத்தியில் மேற்கோள் தரப்பட்டுள்ளமை இதற்குச் சான்று. சிலவற்றைக் கீழே தருகிறோம்.*

> துளியொடு மயங்கிய தூங்கிரு ணடுநாள்
> அணிகிளர் தாரோ யருஞ்சுரம் நீந்தி
> வடிவமை யெஃகம் வலவயி னேந்தித்
> தனியே வருதி நீ யெனின்
> மையிருங் கூந்தல் உய்தலோ அரிதே.

*இது இரண்டாம் எழுத்தின் மேல் ஏறிய உயிர் ஒன்றிய எதுகை என்று செய்யுளியல்காரர் காட்டியது என யாப்பருங்கல விருத்தியுரை கூறும். இங்கு இரண்டாம் எழுத்தெல்லாம் இகரமாய் வருவது காண்க. அடுத்து அவ்வுரையுள் 'தொடி நெகிழ்ந்தனவே, கண் பசந்தனவே' என்று தொடங்குகின்ற பாடலைச் செந்தொடையே என்று வழங்கினார் செய்யுளியலுடையார் என்று தரப்பட்டுள்ளது.*

*வெண்கூ வெண்பா என்பது நேரிசை வெண்பா என எழுத்து மிக்கிசைப்பது என்று கூறி, இது ஆசுகவிகள் கூறுமாற்றால் கூறப் பிறப்பது; 'வெண்கூ வெண்பா எழுத்திறந்திசைக்கும்' என்ற இலக்கணமும் சொல்லி, அதன்பின் பின்வரும் இரண்டு பாடல் களையும் இவை வெண்கூ வெண்பா என்று செய்யுளியலுடை யார் காட்டிய பாட்டு என்று அவ்விருத்தியுரை தருகின்றது:*

> தண்டடைந்த திண்டோளாய் தாங்கலாந் தன்மைத்தோ
> கண்டடையார் தம்மைக் கனற்றுமா – வண்டடைந்த
> நாணீல நாறுந்தார் நன்னன் கலைவாய
> வாணீலக் கண்ணார் வடிவு.

> அறந்தருதண் செங்கோலை யன்ன மடந்தை
> சிறந்தன சேவலோ டூடி – மறந்தொருகா
> றன்ன மகன்றாலும் தம்முயிர் வாழாவால்
> அன்ன மகன்றி லிவை.

*இப்பாடலில் நன்னன் என்று வருவது காண்க. நன்னன் என்பவன் சங்க இலக்கியம் குறிப்பிடுகின்ற தலைவர்களுள் ஒருவன்.*

*இதனால் இப்பாடல் ஒருகால் சங்க நூற்பாடலோ என்று ஐயுற இடந்தருகின்றது. முன்காட்டிய பாடல்களைக் குறித்து வேறு எச்செய்திகளும் தெரியவில்லை. சங்க நூல்களில் தனி வெண்பாப் பாடல் பயிலவில்லை. ஆதலால் இவ்வெண்பாக்கள் ஒருகால் பதினெண் கீழ்கணக்கை யொத்த பிற்கால வெண்பா நூல் ஒன்றுக்கு உரியதாய் இருக்கலாம்.*

*இனி அகவலிசையாவது இன்னிசை வெண்பா என்று கூறிய விடத்து இஃது அகவல் வெண்பா என்ற செய்யுளியலுடையார் காட்டிய பாட்டு என்று அவ்விருத்தியுரை பின்வரும் நான் மணிக்கடிகைப் பாடலைத் தருகின்றது.*

மனைக்குப்பாழ் வாணுதலை யின்மை; தான் சென்ற
திசைக்குப் பாழ் நட்டோரை யின்மை; இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை; தனக்குப் பாழ்
கற்றறி வில்லா வுடம்பு.

*யாப்பருங்கல காரிகையானது இரு குறட்பாக்களை எடுத்துக் காட்டுகின்றது.*

மஞ்சுசூழ் சோலை மலைநாட மூத்தாலும்
அஞ்சொன் மடவார்க் கருளு.

*இது பிறப்பென்னும் வாய்பாட்டான் முற்றியலுகர மீறாக இற்ற வெண்பா.*

இனமலர்க் கோதா யிலங்கு நீர்ச் சேர்ப்பன்
புனைமலர்த் தாரலகம் புல்லு.

*இது காசென்னும் வாய்பாட்டான் முற்றியலுகர மீறாக இற்ற வெண்பா.*

*இவை செய்யுளியலுடையார் காட்டிய வெண்பாவெனக் கொள்க. (யாப்பருங்கலக்காரிகை 26. குணசாகரர் உரை) இவ்விரு குறட்பாக்களும் பெயர் சொல்லாமல் யாப்பருங்கல விருத்தி யிலும் காட்டப்பட்டுள்ளன.*

*'செய்யுளியலுடையார் நாற்சீரடி தன்னையே நால் எழுத்து முதலா ஆறெழுத்தின் காறும் உயர்ந்த மூன்றடியும் குறளடி என்றும், ஏழெழுத்து முதலா ஒன்பதெழுத்தின் காறும் உயர்ந்த மூன்றடியும் சிந்தடி என்றும், பத்தெழுத்து முதலாப் பதினான் கெழுத்தின் காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடி என்றும், பதினைந்து முதலாப் பதினேழெழுத்தின் காறும் உயர்ந்த*

மூன்றடியும் நெடிலடி என்றும், பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தின் காறும் உயர்ந்த மூன்றடியும் கழிநெடிலடி என்றும் வேண்டுவர்.'

## சிறுகாக்கை பாடினியார்

சங்க காலத்தில் காக்கை பாடினி என்ற பெயருடைய ஒரு புலவர் இருந்து பாடல் பாடியிருக்கிறார். அவர் இயற்பெயர் நச்செள்ளையார். 'விருந்து வரக் கரைந்த காக்கையது பலியே' என்று காக்கையைப் பாடியமையால் காக்கை பாடினியார் என்று பெயர் பெற்றார் என்பது வரலாறு. பாடினி பாணர் வகுப்பினர் என்று கருதுதலும் ஒன்று. காக்கை பாடி என்ற ஓர் ஊர் உண்டு. அவ்வூரினர் எனக் கொள்ளுதலும் உண்டு. இவர் குறுந்தொகை 210. புறநானூறு 278 பாடியவர். பதிற்றுப்பத்தில் ஆடுகோட் பாட்டுச் சேரலாதன் மீது ஆறாம் பத்துப் பாடி ஒன்பது காப் பொன்னும் நூறாயிரம் காணமும் பரிசில் கொண்டவர்.

அகத்தியர் மாணாக்கருள் காக்கை பாடினியார் ஒருவர். அவர் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்து சிறப்பான யாப்பிலக்கண நூல் செய்தார். இந்த நூல் இன்று இல்லை. அவர் நூல், தொல் காப்பியர், பல்காயனார், காக்கை பாடினியார் என்ற முறையில் வழி நூல் என்று சொல்லப்பட்டது. அவரையன்றி, சிறுகாக்கை பாடினியார் என மற்றொருவர் இருந்தார், இவர் அவரினும் இளைஞர், அடுத்த தலைமுறைக்குரியவர் போலும். 'அவர்க்கு இளையரான சிறுகாக்கை பாடினியார்' என்று தொல்காப்பியச் செய்யுளியலுரையில் பேராசிரியர் இவரைக் குறிப்பிடுவார். இவர் நூல் சிறு காக்கைபாடினியம். இதுவும் யாப்பிலக்கண நூல் கடல்கோளின்பின், தமிழ் நாட்டெல்லையாக மூன்று திசைகளில் கடல் உள்ளது என்பதைக் குறிக்க இவர் சூத்திரத்தை உரைகாரர் எடுத்துத் தருவார்:

> வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
> தென்திசை யுள்ளிட் டெஞ்சிய மூன்றும்
> வரை மருள் புணரியொடு கரைபொருது கிடந்த
> நாட்டியல் வழக்க நான்மையின் கடைக்கண்
> யாப்பின திலக்கணம் அறைகுவன் முறையே.

அமிதசாகரர், இவர் மதம் பற்றித் தாழிசை துறை விருத்தம் என்ற முறைமையில் பாவினங்களை வைத்தார் என்று உரை காரர் கூறுவார். இவருடைய சூத்திரங்கள் 33 மட்டுமே கிடைக் கின்றன; நூல் இல்லை.

## மாமூலர்

சங்க இலக்கியத்துள் அகநானூறு குறுந்தொகை நற்றிணை ஆகியவற்றில் 30 பாடல் பாடியவர் மாமூலனார் என்ற புலவர். பிற்காலத்தில் மாமூலர் என்றொரு புலவர் வாழ்ந்து தம் பெயரால் மாமூலம் என்ற பாட்டியல் நூல் பாடியிருக்கிறார். நவநீதப் பாட்டியலுரையில் இப்பெயரால் பத்து நூற்பாக்கள் காணப் படுகின்றன. இவை எழுத்துப் பொருத்தத்தில் முதற் சீருக்குரிய குற்றம், தானப் பொருத்தம், கணப்பொருத்தம், கலம்பகச் செய்யுள் தொகை, அந்தணர் முதலியோருக்குரிய சித்திரச் செய்யுளுக்கு ஆவதோர் நெறி, இசைச் செய்யுள் திறம், கவி கமகன் வாதி வாக்கி என்ற நால்வகைக் கவிஞர் இலக்கணம் என்ற பொருள் களைக் கூறுகின்றன. இவற்றுள் கவி என்ற முதற் பகுதி காணப் படவில்லை. இவற்றுள் நாம் பார்க்கும் பொருள்கள் பொருத்த வியல், இனவியல் என்னும் பிரபந்தவியல், பொதுவியல் ஆகிய மூன்றுக்கும் உரியன என்று காண்கிறோம்; எனவே, மாமூலம் ஒரு முழுப்பாட்டியல் நூலாய் இருந்திருத்தல் கூடும். நூல் கிடைக்கவில்லை. பன்னிரு, பாட்டியலில் இதன்பெயர் காணப் படவில்லை. தானப் பொருத்தம் கணப்பொருத்தம் கூறுகின்ற இரு நூற்பாக்களை மாமூலம் என்று பெயர் குறிப்பிட்டு இலக் கண விளக்கப் பாட்டியலுரை தருகிறது. 17ஆம் நூற்றாண்டில் கூட இந்நூல் இருந்தது போலும். கணப் பொருத்தத்துக்குரிய பா எட்டு அடிகளைக் கொண்டது; ஆகவும் கெடவும் பாட வல்லோர் (ஆரிடச் செய்யுள்) வரிசையில் இவர் பெயரும் சேர்த்து, கபிலர் பரணர் கல்லாடர் மாமூலர் என்று சொல்லப்பட்டுள்ளது.

## திருப்பிரவாசிரியர் தூக்கியல்

இப்பெயர் கொண்ட ஒரு நூலை நவநீதப் பாட்டியலுரை எடுத்துத் தருகிறது. இந்நூற்பா, பரிசில், நீட்டித்தால் வரும் குற்றத்தைக் கூறுகிறது. (104)

> பாடிய செய்யுட் பலநாட் கிடப்பினும்
> கேடெனா மொழிப கேட்போர் தமக்கே.

நூலின் பெயர் தூக்கியல் ஆனமையால், இது செய்யுள் உறுப்புக் கள் 26இல் ஒன்றாகிய தூக்கு என்பதைப் பற்றி மட்டும் கூறுவது

போலும். இவ்வுறுப்புக்களைத் தொல்காப்பியம் செய்யுளியல் முதல் சூத்திரம் சொல்லுகிறது. தூக்கு என்பது பாக்களைத் துணித்து நிறுத்தல் என்பது பேராசிரியர் கருத்து. திணை நூல், செம்பூட்சேயார் கூற்றியல் என்பவை எழுந்திருந்தமை போல, தூக்கியலும் இவ்வுறுப்பைக் குறித்த தனி இலக்கணப்பகுதி போலும்.

இந்நூலாசிரியர் பெயர் விளக்கமாயில்லை; திருப்பிரவா சிரியர் என்ற பெயர் பொருள் தரவில்லை. ஒரு கால் இது திருப் பெயராசிரியர் என்றிருக்கலாம். (திரு என்ற பெயர் அமைந்த ஆசிரியர் என்பது பொருள்) மேலும், நவநீதப் பாட்டியலுள் இரண்டிடங்களில் இப்பெயர் மேற்கோட்பாடலுள் வருகிறது; ஒன்று (52):

> இளைய மகளிர தியம்பின என்பது
> திருவின வாசிரியர் தூக்கிய லாகலின்.

இது தாரகை மாலை முதலிய பிரபந்த வகைகளைக் கூறு மிடம், இந்நூற்பா செய்தவர் யார் என்பது சொல்லவில்லை. மற்றோரிடம் (83) கல்லாடம் என்ற பெயரில் வருகிறது.

> திருவினா சிரியர் தூக்கிய லுரைத்தன
> யாவையும் இயற்பெயர்க் கல்லது
> பொருத்தம் வேண்டார் புலமை யோரே,

இது கல்லாடர் கலாவியல் என்ற பாட்டியல் நூலுக்குரியது. இவ்விரு மேற்கோட் பகுதிகளாலும் அவ்வாசிரியர் பெயர் திருவின் ஆசிரியர் (இது திருப் பெயராசிரியர் ஆகும்) என்றும், இந்நூற்பெயர் தூக்கியல் என்றும் அறிகிறோம். தொல்:சொல் 41, உரையில் சேனாவரையர் திருவீரவாசிரியன் என்பதும் காண்க என்கிறார். நச்சினார்க்கினியரும் இதே நூற்பா உரையில், 'திருவீரவாசிரியன் என்றாற்போல இயற்பெயர் முற்கூறுவன பிறவும்'. இதனால் இவ்வாசிரியர் இருந்தது உறுதி. பெயர் பலவகை; திருவீர, திருப்பிர, திருவினாசிரியர் உண்மையில் பெயர் திருவீரவாசிரியர் இப்படியெல்லாம் அவருக்கு பெயர் வழங்கியது எனக் கொள்ளலாம். மேலும் இங்கு கல்லாடரும் மற்றோர் ஆசிரியரும் தூக்கியலின் கூற்றை எடுத்து மேற் கோளாய்க் குறிப்பிடுவதால், இந்நூல் ஒரு சிறந்த பிரமாண நூல் என்றும் நாம் கருதலாம். அன்றியும் இது கல்லாடர் பாட் டியலுக்குக் காலத்தால் முற்பட்டது என்றும் பெறுகிறோம். நூல் இப்போது இல்லை. வேறெங்கும் இது சொல்லப் படவில்லை.

## பாட்டியல் மரபு

இந்நூற் பெயரை யாப்பருங்கல விருத்தி கூறுகிறது. மரபு என்று இங்கு வரும் நூற்பெயர் முடிவு, இவ்வாறு வரும் பிற நூற் பெயர்களோடு ஒப்பு நோக்கத்தக்கது. நூலுக்கே மரபு என்ற பெயர் நீண்ட காலமாய் வழங்கி வருகிறது. சிலப்பதிகாரத்துக்கு உரை எழுத அடியார்க்கு நல்லார் ஆதாரமாய்க் கொண்ட ஐந்து நூல்களுள் பஞ்சமரபு என்பதும் ஒன்று, இன்று அச்சாகியிருக் கிறது. பன்னிரு பாட்டியலுடையார் தாம் எடுத்துக் கொண்ட பொருளைக் கூறும்போது 'முன்னோர் பொருள் நெறி' கூட்டி யுரைப்பல் பாட்டியல் மரபே' என்று எழுதுகிறார். 'விருந்தே தானும்', புதுவது கிளந்த யாப்பின் மேற்றே' என்ற தொல்காப் பியச் செய்யுளியற் சூத்திரவுரையில், 'அவை முத்தொள்ளாயிர மும், பின்னுள்ளார் பாட்டியன் மரபிற் கூறிய கலம்பகச் செய்யுள் முதலியவற்றைப் பாடுதலுமாயிற்று' என்று நச்சினார்க்கினியர் எழுதுவதால் பாட்டியலாகிய இலக்கணப்பகுதிக்கே பாட்டி யல் மரபு என்ற பெயர் வழங்கியமை தெளிவு.

எனினும், யாப்பருங்கலவிருத்திகாரர் பாட்டியல் மரபு, பாட்டியல் மரபுடையார் என்று ஒரு பாட்டியல் நூலையே குறிப்பிடுகிறார். ஆரிடச் செய்யுளைக் குறிப்பிட்ட இடத்து, அவ்விருத்தி, இப்பாட்டியன் மரபுச் செய்யுள் மூன்றைத் தருகிறது. எனவே இது பாட்டியல் மரபையுணர்த்தும் தனி நூல் என்பது தெளிவு. இச்செய்யுட்கள், ஆரிடம் என்பது யாது, அதைப் பாடு தற்குரியோர் யாவர் என்பதைக் கூறுகின்றன. தொல்காப்பிய மரபியலுரையில் பேராசிரியர் (109) நின்று பயனின்மை என்றும் குற்றத்துக்கு விளக்கம் சொல்லி, பாட்டியன் மரபு எனக் காட்டு வனவும் அவை என்று எழுதுகிறார். அவர் கருத்தின்படி இவ்வகை (இலக்கண) நூல்கள் சான்றோர் செய்யுட்குப் பயன்படா என்ப தாகும். யாப்பருங்கல விருத்திகாரர் தாண்டகத்தைச் சொல்லிய விடத்து, 'பாட்டியன் மரபு மாபுராணம் முதலிய தமிழ் நூலுள் ளும் புகுதியுடையார்வாய்க் கேட்டுக் கொள்க என்று எழுது கிறார். (மாபுராணம் ஒரு மிகப் பழைய இலக்கண நூல்) அவர் இங்கு குறிப்பிடுவது செய்யுளிலக்கணமேயானாலும், பன்னிரு பாட்டியல் தாண்டகம் ஒரு பிரபந்தம் என்று குறிப்பிடுவதால், பாட்டியல் மரபு பிரபந்த இலக்கணமும் கூறிய நூலாயிருக்கலாம்.

நச்சினார்க்கினியர் முத்தொள்ளாயிரமும் பின்னுள்ளார் பாட்டியன் மரபிற் கூறிய கலம்பகச் செய்யுளும் எனக் கூறி

யமையால், பாட்டியல் மரபு என்ற நூலின் காலம் முத்தொள் ளாயிரத்துக்குப் பிற்பட்டதென்று முடிவு செய்யலாம். அந்நூல் எட்டாம் நூற்றாண்டு என்று தெரிகின்றமையால், பாட்டியல் மரபு ஒன்பதாம் நூற்றாண்டுக் குரியதாயிருக்கலாம்.

இனி, ஆரிடச் செய்யுள் பற்றிய பாட்டியல் மரபுச் சூத்திரங் களை இங்குத் தருவோம். 'ஆரிடமென்பது உலகியற் செய்யுள் கட்கு ஓதிய உறுப்புக்களின் மிக்கும் குறைந்தும் கிடப்பன எனக் கொள்க. அவ்வாரிடச் செய்யுள்* பாடுதற்குரியார் ஆக்குதற்கும் கெடுத்தற்கும் ஆற்றலுடையோராகிய இம்மை மறுமை முக் காலப் பண்புமுணர்ந்த இருடிகளெனக் கொள்க. என்னை?

உலகியற் செய்யுட் கோதிய வளவையிற்
குறையவும் விதப்பவும் குறையா ஆற்றல்
இருடிகள் மொழிதலின் ஆரிடம் என்ப.

ஆரிடச் செய்யுள் பாடுதற் குரியோர்
கற்றோர் அறியா அறிவுமிக் குடையோர்
மூவகைக் காலப் பண்புமுறை யுணரும்
ஆற்றல் சான்ற அருந்தவத் தோரே.

எனச் சொன்னார் பாட்டியன் மரபுடையாராகலின்.

மனத்தது பாடும் மாண்பினோரும்
சினத்திற் கெடப்பாடும் செவ்வி யோரும்
முனிக்கணச் செய்யுள் மொழியவும் பெறுப.

என்பது பாட்டியன் மரபு' (யாப்பருங்கல விருத்தி 40ஆம் சூத்திர உரை).

## சங்க யாப்பு

இந்நூலை யாப்பருங்கல விருத்தி எடுத்துத் தருகிறது. இங்கு கிடைக்கும் சூத்திரங்கள் 24. இவை எழுத்து யாப்பு ஆகிய பொருள்களைப் பற்றியன. உயிர், மெய், குறில், நெடில், மாத்திரை, வன்மை, மென்மை, இடைமை, உயிர்மெய், புள்ளி, எழுத்து, நேர் நிரை, ஆசிரியம், அதற்கு மூவடிச் சிறுமை ஆயிர மடிப் பெருமை, மோனை, அளபெடை, எதுகை, ஓசை, தளை ஆகிய பொருள்களைப் பேசுகின்றன. இந்நூலை மேற்கோள் காட்டும்போது விருத்திகாரர் சங்க யாப்பு என்றும், சங்க யாப் புடையார் என்றும் குறிப்பிடுகின்றார். நூற்பா அமைப்பைப் பார்க்கும்போது இது ஒரு சிறந்த நூல் என்று அறிகிறோமேயன்றி, இதுபற்றி வேறு எச்செய்தியும் நாம் அறிய இயலவில்லை.

---

* ஆரிடம் - ரிஷி சம்பந்தம்.

## செய்யுள் வகைமை

செய்யுள் வகை என்பது பிரபந்தம் போலும். அதனால் இப்பெயர் பெற்றது. நவநீதப் பாட்டியலுரை இதன் பாடல்கள் 12 (நூற்பா) தருகிறது. - 81, 33, 36, 42, 66, 96, 99, 104 உரையில். பாடல் கள் பிள்ளைத்தமிழ் கலம்பகம் மும்மணிக் கோவை மும்மணி மாலை நான்மணிமாலை கைக்கிளை இசைச் செய்யுள் என்ற பிரபந்தப் பொருள்களையும், செய்யுள் செய்யத்தகாதவர், பரிசில் நல்காதவர் என்ற பொருள்களையும் கூறுகின்றன. நூல் இல்லை.

## முள்ளியார் கவித் தொகை

முள்ளியார் என்பவர் செய்த பாட்டியல் நூல், முந்தியது போலவே நவநீதப் பாட்டியலுரையில் மேற்கோளாய்த் தரப் பட்டது. கூறும் பொருள்கள் கலம்பகம், பல்சந்தமாலை, சின்னப்பூ, தசாங்கம், புகழ்ச்சி மாலை என்பன. எனவே இது பிரபந்த இலக்கணம் கூறுவதாகும். பெருவாயில் என்ற ஊரில் முள்ளியார் என்ற ஒரு புலவர் எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்து ஆசாரக்கோவை என்ற பதினெண் கீழ்க்கணக்கு நூல் செய்தார் என்பது நினைக்கத்தகும்.

# பன்னிரு பாட்டியற் குறிப்புக்கள்

பன்னிரு பாட்டியல் பற்றிய விரிவான ஆராய்ச்சி எமது பத்தாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் விரிவாகச் சொல்லப்பட்டது. அங்கு தொகுக்கப்பட்ட ஆசிரியர் பட்டியலில் பதினைந்து புலவர்களைக் காண்கிறோம்: அவர்களுள் அகத்தி யரும் செயிற்றியனாரும் சங்க காலத்துக்கு முற்பட்டவர்களாதல் கூடும்? அவி நயனார் நற்றத்தனார் பல்காயனார் பொய்கையார் என்போர் எட்டாம் நூற்றாண்டுக்குரியோர். ஏனையோருள் இந்திர காளியார் கல்லாடர் என்போரை முன் ஆராய்ந்தோம். எஞ்சிய எழுவர் பின்வருவோர்: கபிலர் கோவூர்க் கிழார் சீத்தலையார் சேந்தம்பூதனார் பரணர் பெருங்குன்றூர்க்கிழார், மாபூதனார் இவர்களுள் மாபூதனார் தவிர ஏனையோர் பெயர் கள் சங்கப் புலவர் பெயர்களாகவே உள்ளன. (சீத்தலையார் - சீத்தலைச் சாத்தனார் ஆகலாம்) பண்டைப் புலவர் பெயர்களைப் பிற்காலத்து ஆசிரியர்கள் தரித்துக் கொண்டார்கள் என்றே கருதவேண்டும். இவர்கள் பாட்டியல் நூற்பாக்கள் சில இங்கு கிடைப்பதால் இவை பற்றிச் சில சொற்கள் இங்கு கூறுகிறோம். இவர்களில் எவருடைய நூலும் இன்று இல்லை.

**கபிலர்**

*கபில பரணர் என்ற தொடர் சங்க காலத்தில் மட்டுமின்றி இக்காலத்தும் வழங்கக் காண்கிறோம். இவர்கள் ஆகவும் கெடவும் பாட வல்லவர் என்று யாப்பருங்கல விருத்திகாரர் எழுதுகிறார். கபிலர் நூற்பாக்கள் இங்கு உள்ளவை 24; எழுத் தியல் 19; சொல்லியல் 5.*

**கோவூர் கிழார்**

*சொல்லியல் 1, இன இயல் 52. தசாங்கம் முதல் புகழ்ச்சி மாலை வரையில், இன்னிசைத் தொகை, பதிகம், மெய்க்கீர்த்தி ஆகியவை இவர் பெயரில் உள்ளன.*

**சீத்தலையார்**

*மங்கலவெள்ளை, தாண்டகம் பற்றி இரண்டே நூற்பாக்கள்.*

**சேந்தம் பூதனார்**

*சொல்லியல் 4, இனவியல் 12, புகழ்ச்சி மாலை முதல் அட்டமங்கலம் வரை 16 பிரபந்தங்கள்.*

**பரணர்**

*எழுத்து 20, சொல் 1, இனவியல் 13 ஆக 34. முடி சூடிய பின் மன்னனுக்குப் பிள்ளைத் தமிழ்ப் பாடல் மரபன்று என்று இவரே சொல்லுகிறார் (178). பிள்ளைத்தமிழ் பற்றி விரிவாக இலக்கணம் கூறுகிறார். இவர் நூல் பருணர் பாட்டியல், வாரு ணப் பாட்டியல் என்றும் வழங்கியதாகத் தெரிகிறது. இவர் பாட்டியலைப் பேராசிரியர் குறிப்பிடுகிறார்.*

**பெருங்குன்றூர் கிழார்**

*இனவியல் மட்டும் 20. பெரும்பான்மையும் புறத் துறைப் பெயரே அமைந்த பிரபந்தங்கள் சொல்லுகிறார்.*

**மாபூதனார்**

*இனவியல் 5, மங்கல வெள்ளை, தாண்டகம் கூறுகிறார்.*

*இந்த அத்தியாயத்துட் கண்ட குறிப்புக்கள் யாவும் பன்னிரு பாட்டியல் யாப்பருங்கல விருத்தியுரை அடியார்க்கு நல்லாருரை நவநீதப் பாட்டியலுரை ஆகியவற்றையே முக்கியமாய் ஆய்ந்து சொல்லும் குறிப்புக்களாகும். நூல்களின் ஆராய்ச்சியாலும் ஏட்டுப் பரிசோதனையாலும் இங்கு சொல்லிய செய்திகள் மாறவும் கூடும்.*

## அத்தியாயம் - 6

# இலக்கணம் – 4 : இசை

### பஞ்ச மரபு

**நூல்**

இறந்து போன நூல்களிலொன்று என்று இதுகாறும் கருதப்பட்டு வந்த பஞ்ச மரபு என்ற நூல், வேலம்பாளையம் திரு.வே.ரா. தெய்வசிகாமணிக் கவுண்டரிடம் ஏடு கிடைத்து, குடந்தைப் பண்ணாராய்ச்சி வித்தகர் ப. சுந்தரேசனாரால் பிரதி செய்து நன்கு பரிசோதித்து, முதல் பகுதி 1973 அக்டோபரில் வெளியிடப்பட்டுள்ளது. ஐயரவர்களுக்கும் கிடைக்காமல் இருந்த இதன் ஏடு, கவுண்டரிடம் கிடைத்து, பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்கள் உதவி கொண்டு பிரதி செய்து வெளிப் படுத்தப் பெற்றுள்ளமை, இந்த இருபதாம் நூற்றாண்டின் அதிசய நிகழ்ச்சிகளில் ஒன்று.

பஞ்ச மரபு என்ற நூல் அடியார்க்கு நல்லார் தமது சிலப்பதிகார உரை எழுதுவதற்கு ஆதாரமாய்க் கொண்ட நூல் களில் ஒன்று என்று அவர் தமது உரைப்பாயிரத்துள் கூறுவ தால், இந்நூலின் சிறப்பு அறியக்கூடும்: 'சார குமாரன்' என்ற அப்பெயர் பெற்ற குமரன் இசையறிதற்குச் செய்த இசை நுணுக்கமும், பாரசவ முனிவரில் யாமளேந்திரர் செய்த இந்திர காளியமும், அறிவனார் செய்த பஞ்ச மரபும், ஆதிவாயிலார் செய்த பரத சேனாபதீயமும், கடைச் சங்கமிரீய பாண்டியருட் கவியரங்கேறிய பாண்டியன் மதிவாணனார் செய்த முதனூல் களிலுள்ள வசைக்கூத்திற்கு மறுதலையாகிய புகழ்க்கூத்தியென்ற மதிவாணர் நாடகத் தமிழ் நூலுமென இவ்வைந்தும் இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும் ஒருபுடையொப்புமை கொண்டு முடித்தலைக் கருதிற்று இவ்வுரையெனக் கொள்க.' இவ்வைந்து நூல்களையும்* அடியார்க்கு நல்லார் குறிப்பிட்ட

---

* சிலப்பதிகாரம்-ஐயரவர்கள் மூன்றாம் பதிப்பு 1927, பக்கம் 10 இவ்வைந்து நூல்களையும் எமது தமிழிலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் உள்ள அட்டவணையில் தெளிவுபடக் காணலாம்.

*போதிலும், இவை சிலப்பதிகார நாடகக் காப்பியக் கருத்து அறிந்த நூல்கள் அன்று என்றும், ஒரு புடை ஒப்புமை கொண்டு தாம் இவ்வுரையை முடிப்பதாகவும் அவர் சொல்வது காணத் தக்கது, இவ்வைந்து நூல்களும் அவர் காலத்தின் பின் இறந்து போயின போலும். வேறு எந்த ஆசிரியரோ, உரையாசிரியரோ, இவற்றை எடுத்துக்காட்டவில்லை. இந்திரகாளியம் ஒன்று மட்டும் சில பாட்டியல் நூல் உரைகளில் சில நூற்பாக்கள் அளவில் மேற்கோளாய்த் தரப்பட்டுள்ளது. பஞ்ச மரபின் பெயர் தானும் வேறு வழியில் அறிவதற்கில்லை.*

*ஆனால் இப்போது பஞ்சமரபு நூலானது உரையோடு அச்சிடப்பட்டுள்ளது; உரையாசிரியர் நூலாசிரியரின் மாணாக் கர் என்று கருதத்தக்கவர்: உரையாசிரியர் கூற்றின்படி (பாடல் 5 உரை) நூல் 240 வெண்பாவால் முற்றுப்பெறுகிறது. இப்போது வெளியாகியுள்ள பகுதி 122 வெண்பாக்களைக் கொண்டது.* இதை வைத்தே இவ்வாய்வு செய்யப் பெற்றுள்ளது. ஏனைய பகுதிகள் பின்னர் வெளியாகுமென்று கருதுகிறோம்.*

### நூற்பெயர்

*பஞ்ச மரபு எனப்படுகிறது. பஞ்ச மரபு - ஐந்து மரபு உறுப் புக்கள்; இவற்றை 4ஆம் பாடல் கூறுகிறது:*

நல்ல நரம்பு குழல் கண்டம் தோல் கூத்து
பல்ல பொருட் கூடுகின்ற பாணியுடன் – சொல்லிமலர்க்
கையால் அவிநயமுங் காட்டுதல்காண், காரிகையாய்!
பொய்யாத நூலின் பொருள். 4

*அவையாவன - நரம்பு குழல் கண்டம் தோல் கூத்து என்பன. அந்த ஐந்தும் கூறுதலால் நூல் பஞ்சமரபு எனப் பெயர் பெற்றது. இவற்றை ஐந்து தொகை என்று அடுத்த பாடல் கூறுகிறது. பின்னரும் பஞ்ச மரபு ஐந்து திறனும் விரவி வருதலால் பெற்ற பெயர் என்கிறார்.*

ஆதி அயன் படைத்த ஆழி யுலகத்துள்
ஓதிய கீத வழியெல்லாம் – நீதியினால்
ஐந்து திறனும் விரவி வருதலால்
பஞ்ச மரபென்று பார்.

---

* *18, 104 எண்களுக்கு அடுத்து அச்சிடப்பட்டுள்ள இரு வெண்பாக் களுக்கும் எண் தரப்படவில்லை. அவற்றையும் சேர்த்தால் இங்குள்ள மொத்த நூற்பாடல்கள் 124.*

பாயிரவுரையில் ஐந்து தொகை என்ற விடத்து 'இசையும் முழவும் கூத்தும் தாளமும் அபிநயமும்' என்னும் அஞ்சுறுப்பு என்கிறார்.

பஞ்சமகா சத்தம் யாவை என்று ஒரு பாடல் கூறுகிறது.

சொல்லிய நற்றோல் துளைதுய்ய மென்னரம்பு
கல்விமிகு கஞ்ச மிடறெனவே – வெல்லுமதன்
அஞ்சப் படும்விழியாய், ஆயுங்கால் இவ்வைந்தும்
பஞ்சமா சத்தமாய்ப் பார். 62

காப்புச் செய்யுளும் அதன் உரையும் (நரம்பு குழல் மிடறு ஆகிய) மூவிசையும் தோலும் (வாச்சியமும்) கூத்தும் தாளமும் இங்கு இயற்பாக்களாலே விளங்கச் செய்து இவற்றின் பண்பு களை அறிவிப்பதாகக் கூறுகின்றன.

ஆசிரியர்

ஆசிரியர் பெயர் அறிவனார். இந்நூலில் வரும் குறிப்பாலும் சிலப்பதிகாரத்தில் வரும் இரு குறிப்புக்களாலும் இதை அறிகி றோம். *முன்னமே காட்டிய அடியார்க்கு நல்லார் குறிப்பினாலும் இவர் பெயர் அறிவனார் என்பது தெரிகிறது. இதுவன்றியும், அடியார்க்கு நல்லார் கடலாடு காதை யுரையில் பஞ்சமரபில் வருகின்ற 'செப்பரிய சிந்து' என்ற பாடலை (83) முழுமையும் தந்து, 'என்றார் பஞ்ச மரபுடைய அறிவனார் என்னும் ஆசிரியர் என்க' என்று கூறுகிறார். இனி, நூலின் ஐந்தாம் பாடல் ஆசிரியர் பெயரைக் குறிப்பிடுகிறது.

மன்னுபொதி யத்திருந்த மாதவத்தோன் தாள்வாழ்த்திப்
பன்னு பனுவற் றொகையினுடன் – துன்னருஞ்சீர்ச்
சேறை அறிவனார் செய்தமைத்த ஐந்து தொகை
கூறுதல் இந்நூற் குணம்.

இந்நூலின் உரைகாரர், சேறை என்பதற்கு விளக்கம் சொல்ல வில்லை; 'ஐந்தியலும் உணர்ந்த அறிவனாரால் செய்யப்பட்டது' என்று மட்டுமே சொன்னார். சேறை என்பது சேற்றூர் என்பதன்

---

* சிலப்பதிகார அடிக்குறிப்பில் ஐயரவர்கள் காட்டிய ஒரு பழம் பாடல், சங்கப்புலவர்களைக் குறிப்பிடும்போது, அறிவுடையரனார் என்ற பெயரைக் குறிப்பிடுகிறது. இப்பெயருக்கும் இந்நூலாசிரியர் பெயரான அறிவனார் என்ற பெயருக்கும் சம்பந்தமில்லை. 'சேறை வாழ்சேதிபனார்' என்ற ஒரு பாடபேதமும் தரப்பட்டுள்ளது. அறிவனார் என்றே அடியார்க்கு நல்லாரும் கூறுவதால், சேதி பனார் என்பது கொள்ளத்தக்கதன்று.

மரூஉ என்று பலர் சொல்லிய போதுங்கூட, இது நாடகமும் இசையும் மலிந்த சோழ நாட்டிலுள்ள திருச்சேறை என்ற ஊராகவே இருக்க வேண்டும் என்பது தெளிவு. திருச்சேறை என்பது அப்பர் சம்பந்தரால் தேவாரம் பாடப் பெற்ற சிவாலயத் தையும், திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் செய்த திருமால் ஆலயத்தையும் உடையது. 121ஆம் பாடல் பூந்தார் அகத்திய னார் போந்து* என முடிகிறது. இதனால் நூலாசிரியரான அறிவனார் அகத்தியர் நூலையுணர்ந்து பாடுகிறார் என்பது தெளிவு. இவ்வகத்தியனார் 8ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து, பல மாணாக்கருக்கு ஆசானாய், இலக்கணம், பாட்டியல் நூற் பகுதிகள் பல செய்தவர். அவருடைய மாணாக்கர் பரம்பரை யில் அறிவனாரும் வருகிறார் என்று நாம் கருதவேண்டும்.

நூலெங்கும் இவர், முன்வந்தோர் கருத்தை எடுத்து மொழி வதாகவே சொல்கிறார். செப்பினர், இவை என்றார், கிளை என்றார், சொன்னார் இசைப்புலவோர், என்ப, முத்தமிழோரெல் லாம் மொழிந்தார்கள், முற்றுணர்ந்த மெய்த் தமிழோர் ஓதினார் - என்றெல்லாம் இவர் கூறுபவை காணத்தக்கன. ஆகவே இவர் முந்தையோர் கருத்தை எடுத்து நூலாக மொழிந்தார் என்று அறிகிறோம்.

ஆசிரியர் வைணவ சமயத்தினர். ‘கார் மேனிச் செங்கட் கடவுளை யான் பணிந்து, பார்மேல் ஓதுவன் இப்பண்பு’ என்று காப்புச் செய்யுளிலும், ‘கார் மேனிக் கண்ணனை முன் வைத்துக் காப்புரைக்க’ (78) என்றும், ‘திரு நெடுமாலைப் பணிந்து செப்பு வேன்’ (114), ‘தண் டமிழாற் பாடத் தருவாய் பெருவாக்கு வண் துளபத்தார் மாதவா’ (115) என்று பிற இடங்களிலும் கூறுவ தால் அறியலாம். காத்தற் கடவுளாகிய திருமாலுக்கு வணக்கங் கூறுவது இசைநூல் மரபு; விநாயகருக்குக் காப்புச் சொல்லி நாட்டியம் இயற்றுதல் நிருத்தல் மரபாதலின், இவர் நூலின் நிருத்த மரபுப் பகுதியில் ‘நிருத்தமுத லேழினையும் நேர் தமிழாற் கூறக் கருத்துடைய ஐங்கரனே காப்பு’ என்று கூறியுள்ளார். (நிருத்தமரபுப் பகுதி இன்னும் அச்சாகவில்லை). 86ஆம் வெண்பா வுரையில் தமிழ் விகற்ப நடைக்கு உதாரணமாக இருவிகற்ப எதுகையுடைய பாடலொன்றைத் தருகிறார்.

---

* நூலில் பூங்கா அகத்தியனார் போந்து என அச்சிடப்பட்டுள்ளது; இது பிழை; பூந்தார் என்றே இருக்கவேண்டும். வேறு நூல்களில் அகத்தியரைக் குறிப்பிடும் போது பூந்தார் அகத்தியனார் என்றே சொல்லப்பட்டுள்ளது.

பஞ்சவர்க்குத் தூதாகிப் பாரதப்போர் வென்றானைக்
கஞ்சனுக்கு மாமருக னென்றியாங் கருதுவதோ –
விண்ணவர்க்கு மேலாகி மெய்ப்பொருளா முட்பொருளை
மண்ணவர்க்கு மாசறுக்கும் மறையன்ன பொருளினையே.

என இரண்டடி விகற்பம்* கண்டு கொள்க என்று எழுதுகிறார். இது ஓர் அழகிய பாடல். இதே போல் சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையில், 'பஞ்சவர்க்குத் தூது நடந்தானை' என்ற தொடர் அமைந்த 'மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்' என்ற பாடல் ஒப்பு நோக்கத்தக்கது. உரையாசிரியரும் நூலாசிரியரைப் போலவே வைணவராயிருக்கக் கூடும்.

## நூற்பொருள்

பாயிரம் ஐந்து பாடல். திருமால் வணக்கமும் நூற் பொருளும் அவையடக்கம் ஆசிரியர் பெயர் என்பவற்றை இப்பாடல்கள் கூறுகின்றன. மூன்றாம் பாடல் பொதுவாக நூலுக்கு அமைய வேண்டிய பாயிரத்தின் தன்மைகளைக் கூறுகின்றதேயன்றி, இந்நூல் பற்றி ஒன்றுமே கூறவில்லை. 4ஆம் பாட்டின் பின் அச்சிட்டுள்ள உரையை வைத்துப் பார்க்கும்போது, நூற்பொருள், பகுதிகள், அவையடக்கம் கூறுகின்ற ஒரு பாடல் இருந்து விடு பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

எடுத்துக்கொண்ட பொருளாகிய இசை வாச்சியம் நிருத்தம் அபிநயம் தாளம் என்ற இசைக்கலை மரபு ஐந்தில், வெளியான பகுதி முதல் இரண்டையே உரைக்கிறது. இவற்றுள் முதலாவ தான இசை மரபானது யாழ் வாச்சியம் கண்டம் நிருத்தம் (திறம்) வகையொழிபு மரபு என்ற ஐந்து உட்பிரிவுகளை யுடையது; இதில் அமைந்த வெண்பாக்கள் 88. இரண்டாவதான வாச்சியமரபு, முழவு பிண்டம் எழுத்து என்ற மூன்று பகுதிகளையும் 31 வெண் பாக்களையும் கொண்டது.

யாழ் மரபு என்ற பகுதி நால் வகை யாழ், நரம்பு, யாழ் செய்வதற்கான மரம், யாழ் வாசித்தற் செயல்கள், பாலை யாழ் நான்கு, மண்டலம் இராசி மாத்திரை ஓசை பரப்பு, பண்களின் வகை என்ற பொருள்களைக் கூறும். வங்கிய மரபானது குழல்

---

* இதையொத்த இரண்டடி விகற்பம் உடைய பாடல்கள் சிலப்பதி காரத்திலும், சிந்தாமணி சூளாமணி நீலகேசியுள்ளும் காணப்படு கின்றன. இங்கு கருதிய மேற்கோள் பாடலில் இரண்டாம் அடியிறுதியில் சான்றோர் என ஒரு சொல் பெய்யப்பட்டுள்ளது பிழையாதல் வேண்டும்.

செய்தற்குரிய மரம், மரத்தின் தன்மை, அதன் அளவு, துளை, இசை பிறக்கும் முறை என்பன கூறும். கண்ட மரபு ஐம்பூதங்கள், அவற்றின் குணம், கூறு, தசவாயுக்கள், இத்தனையும் அமைந்த உடம்பில் இசை பிறக்குமாறு, ஆளத்தி என்பன கூறும். திறத்த மரபு கேந்திராங்கம் சுத்தம் சாளவம் சங்கீரணம் தமிழ் என்ற ஐந்து திறம், இவற்றுக்குக் கருவிகள், நரம்புகள் பண்ணின் பெயர் கிரியை முதலியன, அரங்கத்துப் பாடப் பெறாதவர், பெறு பவர், பாடப்பெறாத ஓசை, கருவி, கண்டம், மிடற்றுக்காகும் மருந்து, ஆகாத பகை என்பன கூறும். இறுதியான வகையொழிபு மரபு, பஞ்சமரபு, பஞ்ச சத்தம், பண்கள், காலம், காலத்துக்குத் தெய்வம், எட்டுச் சாமத்துக்கும் உரிய பண்கள், மங்கலப் பண், மங்கலச் சொல், நான்கு வருணத்தாருக்கும் உரிய பாட்டு, பாவகை, தாளத்துக்குரியவர் பா, வண்ண வகை என்பன கூறும்.

இரண்டாவதாகிய வாச்சிய மரபு முதலில் முழவு மரபு, முழவு வகைகள் அதிதேவதைகள் கூறும். பிண்டமரபு, அவற்றுக் கான மரம், அளவு, படலம், மத்தளம், சல்லியம் தோல் முதலியன கூறும். எழுத்து மரபு; முதலில் வாசிக்கப்பெறும் எழுத்துக்கள் ஓசை, பல மொழி தழுவுதல், பாக்கள், பகுதிகள் என்பன கூறும்.

இவற்றைப் பார்க்கும்போது, நூலாசிரியருக்கு முற்பட்ட காலத்தில் யாழ் குழல் முழவு என்பன எவ்வளவு அருங்கலை களாக விரிந்து வளர்ந்திருந்தன என்பது நன்கு விளங்கும். உரையுள் மூலத்தின் செய்திகள் எல்லாம் பின்னும் விரித்து உரைக்கப்படுகின்றன.

சிறப்பான பல இசைச் செய்திகள் இந்நூலுள் உணர்த்தப் படுகின்றன. வங்கியம் செய்வதற்குரிய மரங்கள் ஐந்து என்பது ஒன்று; மரத்தில் எந்தப் பகுதியை எப்படி பயன்படுத்துவது என்பது; துளையிடுதல், வாசிக்கும்முறை கண்ட மரபைக் கூறு மிடத்து பூதபரிணாமமே உடம்பு, பூதங்களின் குணங்கள், தசவாயுக்கள், அவற்றின் செயல்கள், உடம்பு முத்திக்கு வித்து; இசையும் முத்திக்கு வித்தாதலால் உடம்பில் இசை பிறக்கு மாறு இங்கு சொல்லப்படுகிறது என்ற செய்திகள் சிறப்பானவை. நிருத்த மரபு என்ற பிரிவில் தும்புரு நாரதரைக் குறிப்பிடுகிறார். நல்ல குரல் தருவதற்கான பொருள்கள்; திப்பிலி தேன் மிளகு சுக்கு இலாமிச்சை வேர் பசுவின் பால் காடைச்சாறு: வெந்நீர் வெண்ணெய் சாந்துப்பூச்சு; மிடற்றுக்காகாத பொருள்கள் நகை புகை எள் காடி காமம் கள் - என்பன சொல்கிறார்.

காலங்களுக்கு அதிதெய்வம் எட்டு என்று கூறுமிடத்து (65) முதல் ஐவர் பிரமன் திருமால் உருத்திரன் ஈசன் சதாசிவன் என்று கூறியிருப்பது சைவ மரபு. இவர் கூறும் கருவிகளின் பெருக்கம் வியக்கத்தக்க முறையில் உள்ளது. வன்மைக்கருவி மென்மைக்கருவி சமக்கருவி தலைக்கருவி இடைக்கருவி கடைக்கருவி வீரக்கருவி என எழு வகை. முழவு அகம் புறம் புறப்புறம் பன்மை நாள் காலை என அறுவகை. தெய்வங் களைச் சொல்லும்போது பெரும்பான்மையான இடங்களில் நான்முகன் திருமால் உருத்திரன் என மூவரையும் தவறாது தழுவிச் சொல்கிறார். மால்பாடும்பாட்டு, வார்சடையோன் கூத்து, நான்முகன் செய் பாணி (தாளம்) என்கிறார் (2); நான்முகனார் மத்தளம், சல்லி, திருமால், ஏறூர்தி ஆவஞ்சி (96); மூன்றாம் முதல் கடவுள் (98); இடைக்கடவுள் மூன்று வயிரவன், முருகன், துர்க்கை; கடைக்கடவுள் மூன்று காளி, சாத்தன், காடுகாள்; தவறாது மன்னர் மூவரென்றும் சொல்கிறார். பேரிகை படகம் கரடிகை மத்தளம் சல்லிகை, இவற்றின் தோல், கயிறு, கொம்பு என்பவற்றை விரிவாகச் சொல்லுகிறார். எழுத்து மரபின் முதற் பாடலில் சவுரத்னாவலி செப்புவதாகச் சொல்கிறார்; வாக்கியத் திற்குரித்தாகிய பாட எழுத்துக்கள். இவற்றைக் கருவிகள் எந்த எந்த இடங்களில் வாசிப்பது என்பதை இப்பகுதி சொல்லும். நூல் முழுமையும் இவர் வடநூலும் தண்டமிழும் தழுவியே பாடுவதாகச் சொல்வது போற்றத்தக்கது.

## அடியார்க்கு நல்லார் மேற்கோள்

'செப்பரிய சிந்து' என்ற பாடலை (83) எடுத்துத் தந்து, ஆசிரியர் பெயரையும் நூற்பெயரையும் அடியார்க்கு நல்லார் சொல்கிறார் என்று முன் குறிப்பிட்டோம். அதுவன்றி, இவர் இந்நூல் வெண்பாக்கள் முப்பதை எடுத்து ஆங்காங்கு மேற் கோளாகத் தந்துள்ளார். இவை பெரும்பகுதி அரங்கேற்றுக் காதையுரையுள் வந்துள்ளன; இவையும் பஞ்ச மரபில் யாழ் மரபு, கண்டமரபு என்ற பகுதிகளிலிருந்தே அனேகமாய் முழுமை யும் எடுக்கப்பட்டுள்ளன. இவையன்றிப் பஞ்ச மரபின் பாடற் கருத்துக்கள் சிலவற்றையும் அப்படி எடுத்துத் தரவும் காணலாம்.

சிலப்பதிகாரக் கானல்வரிக்கு அடியார்க்கு நல்லார் செய்த உரை கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால், பஞ்சமரபின் செய்திகள் பின்னும் பலவற்றை அங்குக் காணமுடியும் அப்பகுதிக்கு இன்று கிடைக்கும் உரைப்பகுதி அரும்பதவுரையேயாகும். அரும்பத வுரை என்ற இப்பெயரே அடியார்க்கு நல்லார் புனைந்து தந்த

தாகும். அரும்பதவுரைகாரரும் பஞ்சமரபை நன்கு பயன்படுத்தி யிருக்கிறார். இரண்டு உதாரணங்களை மட்டும் காட்டுவோம். பஞ்ச மரபின் 9, 10ஆம் பாடல்கள் பின்வருவன.

பன்னிய பண்ணல் பரிவட் டணைதன்னோ
டன்னியா ராய்தலே தைவரல் – மன்னும்
விளையாட்டுக் கையுள் செலவு குறும் போக்கு
வளையூட்டுக் கை மடவாய் வைப்பு.*

வன்மை படவார்தல் வடித்த லுடனுந்தல்
தன்னில் உறழ்தல் உருட்டலே – எண்ணித்
தெருட்டலே அள்ளல் திரள்பட் டடையும்
மருட்டாது வைத்துக் கொளஎல்.

இவ்விரு வெண்பாக்களுக்கும் மூலம், சிலப்பதிகார மூலத்திலேயே காணப்படுகிறது. கானல் வரியின் தொடக்கத்தில் கட்டுரை என்று தலைப்பிட்டுள்ள பகுதியில் வரிகள் 5-8, 12-15 காண்க:

பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல்
கண்ணிய செலவு விளையாட்டுக் கையூழ்
நண்ணிய குறும்போக் கென்று நாட்டிய
வெண் வகையால் இசை நிறீஇ;

வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல்
சீருடன் உருட்டல் தெருட்டல் அள்ளல்
ஏருடை பட்டடை யென இசையோர் வகுத்த
எட்டு வகையின் இசைக் கரணத்து.

இவற்றுக்கு அரும்பதவுரைகாரர் இசைத் தமிழ் பதினாறு படலம் என்ற நூலுள் கரணவோத்து என்ற பகுதியிலிருந்து உதாரணங்காட்டி விளக்குகிறார். அவர் காட்டும் மேற்கோள் நூற்பாக்களும், பஞ்ச மரபின் உரைகாரர் காட்டும் மேற்கோள் நூற்பாக்களும் வெவ்வேறானவை; பொருளும் சற்றே வேறுபட்டுள்ளதென்று தெரிகிறது. இப்பகுதிக்கு அடியார்க்கு நல்லார் உரை கிடைத்திருந்தால் பின்னும் பயனுடையதாகிருக்கும்.

இப்போது இவையன்றியும், பஞ்ச மரபில் அச்சாகாது இனி வெளிவரவிருக்கும் பகுதியில் பின்னும் பல மேற்கோட்பாக்களை அடியார்க்கு நல்லார் எடுத்துத் தந்திருக்கவும் கூடும். இசை வல்லார் இரு நூல்களையும் நன்கு ஒப்பு நோக்கும்போது

* இவ் வெண்பாவில் கையுள் என்றிருப்பது கையூழ் என்றிருக்கத்தக்கது.

பின்னும் பல ஒற்றுமைகளும் காணவியலும். இங்கு கூறப்பட்டவையன்றி, 'தாரத்துள் தோன்றும் உழை' (18க்கு அடுத்த வெண்பா) என்ற பாடலையும் அரும்பதவுரைகாரர் தருகிறார்.

**நச்சினார்க்கினியர் மேற்கோள்**

சிந்தாமணியுரையில் நச்சினார்க்கினியர் காட்டும் இசை மேற்கோள் பாடல்களில் நான்கு பஞ்ச மரபு வெண்பாக்கள் (7, 8, 23, 56), இவற்றுள் இரண்டு மட்டும் (7, 23 அடியார்க்கு நல்லாராலும் காட்டப் பெற்றவை. இதனால் நாமறிவது ஒரு கால், நல்லாருக்கு இருநூறு ஆண்டுக் காலம் பிற்பட்டவரான நச்சினார்க்கினியருக்கும் பஞ்ச மரபு கிடைத்திருந்தது, பிற்காலத்தில்தான் இது எப்படியோ வழக்கில் இல்லாமல் போய்விட்டது என்பதாகும். மேலும் பஞ்ச மரபு மேற்கோள் பாடல்கள் யாவுமே பழம் பாடல்கள். 'கோடே பத்தர்' என்ற நூற்பாவும் சிந்தாமணியுரையுள் வருகிறது. மேற்கோட்பாக்களுக்கு மூலம் உரையுள் குறிக்கப் பெறாமையால் நமக்கு விளங்கவில்லை.

56ஆம் வெண்பா 'கிச்சிலி பூனை குட முழக்கம்' என்று தொடங்குவது. இது இசை மரபு என்று ஐயரவர்கள் குறிப்பிட்டிருப்பதற்கு ஆதாரம் விளங்கவில்லை.* இப்பாடலின் கருத்தை அப்படியே திருவாலவாயுடையார் திருவிளையாடல் (54.9) எடுத்து வைத்திருப்பது காணலாகும்.

> இன்றுபூசைகுடமுழக்கம் பருந்து மூங்கில் இலைவீழ்ச்சி
> ஒன்றும் உயர்சிச் சிலிபறவை உச்சி மலைநீர் விழுக்காடு
> நின்ற ஓசை இசையனைத்தும் நெறியிற் பாடுகேன்.

**காலம்**

பாண்டி மன்னனைத் 'தார் பொலிந்த மன்ன திருமாற வண்கூடற் கோமானே (வெண்பா 6) என்று விளித்தலால், ஆசிரியர் அறிவனார் திருமாறன் காலம்; இவன் முடத்திருமாறன், இடைச்சங்க இறுதியில் கபாடபுரம் அழியவே அதை விட்டுக் கூடலையடைந்து மதுரையில் கடைச்சங்கம் நிறுவியவன்; கடல் கோளின்போது கால் முடமானது பற்றியே முடத்திருமாறன் என்று பெயர்; வண் கூடற் கோமானே என்றும் சொன்னமையால், கடைச்சங்ககாலம், அக்காலத்தே நூல் செய்யப் பெற்றிருக்கலாம்; அறிவுடையரனார் என்ற புலவரே அறிவனாராக இருத்தல் பொருந்தும் என்பன பதிப்பின் குறிப்புக்கள்.❖

---

* ஒருகால் அச்சாகாத பகுதியில் இருக்கலாம்.

❖ பஞ்சமரபு, முன்னுரை பக்கம் vii.

ஒரு கருத்து நினைவில் இருக்கவேண்டும். பஞ்ச மரபு இசைத்தமிழ் - நாடகத் தமிழ் பற்றியது. அடியார்க்கு நல்லார் மேற்கோள் நூல்களுள் ஒன்று என்று கொள்ளத் தடையில்லை. இசை - நாடகத் தமிழ் நூல்கள் தமிழில் கிடைப்பன மிக மிகச் சிலவே: பிற்காலத்திய பரத சேனாபதீயம், தாளசமுத்திரம், சச்ச புட வெண்பா, சுத்தானந்தப் பிரகாசம், பரத சாஸ்திரம், பரத சங்கிரகம் போன்ற சிலவே.* இந்த நிலையில் அடியார்க்கு நல்லார் போற்றும் நூலொன்று இப்போது கிடைத்ததென்றால் அது பெரிய பேறாகும். அது எந்தக் காலத்து நூலாயினும் அதை நாம் போற்றுவோம். இடைச்சங்க நூலாக அல்லது கடைச் சங்க நூலாக இருந்தால்தான் அதற்கு பெருமை என்று நாம் கருத வில்லை. இந்த எண்ணத்தோடு நூலை ஆராய முற்படவேண்டும்.

இந்நூல் கூறும் இசைக்கருத்தமைதிகள் வேறு நூல் வைத்து ஒப்பு நோக்கி ஆராய இடமில்லை. ஆதலால் இந்த இயல்பு காலவரையறைக்குத் துணை செய்ய இயலாது. துணை செய் கின்ற பிற அம்சங்களைச் சீர் தூக்கி ஆய்ந்து ஒரு முடிவுக்குவர முயல்கிறோம்.

1. அடியார்க்கு நல்லார் குறிப்புக்கள். நூற்பெயர் பஞ்ச மரபு என்றும் ஆசிரியர் பெயர் அறிவனார் என்றும் இவர் கூறி, பெயரோடு ஒரு வெண்பாவையும் (83) தந்துள்ளார் என்று குறிப்பிட்டோம். இவர் காலம் 12ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.❖ ஆதலால் பஞ்சமரபு இந்தக் காலத்துக்கு முற்பட்ட நூல் என்பது மிகவும் தெளிவு.

2. காலத்தைத் திட்டமாக வரையறை செய்வதற்கான சில குறிப்புக்கள் நூலிலிருந்தும் உரையிலிருந்தும் கிடைக்கின்றன. உரையாசிரியரைக் குறித்து விளக்கமாக பின்னே கூறுகிறோம். அவர் குறிப்பிட்டுள்ள இரண்டு இராகப் பெயர்கள் இங்கு கருதத் தக்கன. ஒன்று நிருபதுங்கராகம் என்பது. பாலை குறிஞ்சி மருதம் செவ்வழி என்ற நான்கு யாழ் நெறிக்கு, ஒவ்வொன்றுக்கும் அகம் புறம், அருகு பெருகு என்று பண்களை (இராகங்களை) உரை யாசிரியர் கூறிவரும்போது பாலைக்கு அருகுசீர் கோடிகம், இதுவே கோடிகம், நிருபதுங்கராகம் எனப்படும் என்று காட்டு

---

* அரனரங்கத் தொகை என்ற ஓர் இசைநூலைப் பதிப்பாசிரியர் அடிக்குறிப்பில் தருகின்றார். இந்நூல் அவரிடம் ஏட்டு வடிவில் உள்ளது போலும்.

❖ எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

கிறார். நிருபதுங்கராகம் ஒரு புதுப்பெயர். இப்பஞ்ச மரபு நூலில் புதிய பல பெயர்களை முதல்முதல் நாம் பார்த்த போதிலுங் கூட, இச்சொல், வரலாற்றுப் பொருளும் கொண்டது. நிருப துங்க வர்மன் காஞ்சியில் ஆட்சி புரிந்த பல்லவ சக்கரவர்த்திக் காலம் கி.பி. 850-890 ஆகும். இரண்டாம் முறையாக ஆதித்தன் வரகுண பாண்டியனோடு திருப்புறம்பியத்தில் செய்த போரில் இப்பல்லவன் தன் மகன் அபராசிதவர்மன் தலைமையில் ஒரு பெரும் படையை ஆதித்தனுக்குத் துணையாக அனுப்பி வரகுணன் தோற்றோடச் செய்தனன். இவன் நந்திக் கலம்பகம் கொண்ட மூன்றாம் நந்தி வர்மனது புதல்வன். சிறந்த கலா வினோதனாக இருந்திருக்கிறான். இவன்பெயர் ஓர் இராகத்துக்கு வைக்கப் பட்டிருந்தது; அதுவே நிருபதுங்கராகம். ராகங்களுள் ஒன்றாக இதையும் திவாகர நிகண்டு* உடன் காலத்தில் சொல்வதால், அக்காலத்தில் இது பிரசித்தமாக ஆட்சிக்கு வந்து விட்டதென்று அறிகிறோம். இந்த நூலும் உரையும் இதே காலத்தில் செய்யப் பெற்றன என்பதற்கு இதுவே சிறந்த சான்று. இக்காலத்துக்கு முந்திய காலத்தில் நூலும் உரையும் செய்யப்பெற்றிருக்குமானால், இப் பெயர் வந்திருக்க முடியாது. ஆகவே காலம் இதுவே, 9ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி என்பது தெளிவு. மேற்குறித்த இடத்தில் நான்கு யாழ், நான்கு பிரிவுகள் ஆக 16, இறுதி தாரப் பணம் ஒன்று ஆக 17 என்று பஞ்சமரபு 22ஆம் வெண்பா சொல்லு கிறது. இவ்வரிசையில் மூன்றாவதான நிருபதுங்கராகம் இல்லாது 17 என்ற எண் பூர்த்தியாகாது. ஆகவே, இந்த ராகப் பெயர் அமைக்கப் பெற்ற காலத்திலேயே அதை அமைத்து இந்த நூலும் செய்யப்பெற்றது என்பது உறுதி. காலம் 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி. முன் காட்டியபடி அடியார்க்கு நல்லார் இதை மேற்கோள் காட்டியதில் இழுக்கு எதுவும் இல்லை.

3. இங்குள்ள பல பண்கள் பற்றிய குறிப்புக்கள் தெரியாத போதிலும், சாளரபாணி என்ற ஒரு பண் பற்றிச் சில சொற்கள் சொல்லலாம். இது முதற் சாமத்துப் பண்ணில் ஏழாவதாகவும் படுமலைப்பாலையிற் பிறக்கும் பண்களில் 14ஆவதாகவும், பண்ணியற்றிறம் எழுபதில் 70ஆவதாகவும் இந்நூலுள் (பாடல் 67) காட்டப்பெற்றிருக்கிறது. சாளரபாணி என்ற பண் தேவாரத்துள் காணப்பெறவில்லை. உமாபதி சிவம் திருமுறை கண்ட புராணத் துள் பண்களை யெல்லாம் சொல்லுமிடத்து இப்பண்ணைச் சொல்லவில்லை. ஆதலால் சாளரபாணிப் பண் சம்பந்தராதியோர்

---

* இந்நூல் பக்கம் 111 பார்க்க.

காலத்தில் வழக்கில் இல்லை என்பது தெளிவு. எனவே, அப்பண் களைச் சொல்லுகின்ற பஞ்ச மரபு, தேவார காலமாகிய 7-8ஆம் நூற்றாண்டுகளில் தோன்றவில்லை என்பதும் தெளிவு. பிற்பட்டே இது தோன்றிற்று என்று முடிவு செய்தல் பொருத்தமே. இன்னும் பிற்காலத்தில், 11ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பூந்துருத்தி நம்பிகாட நம்பி என்பவர் கோயில் ஆகிய தில்லைத்தலத்துக்கு இச்சாளர பாணிப் பண்ணில் ஒரு திருவிசைப்பா பாடியிருக் கிறார். இது ஒன்பதாவது சைவத்திரு முறையில் உள்ளது. இதன் பொருளாவது, சம்பந்தர் காலத்தில் 7-8ஆம்நூற்றண்டில் இல்லாது, பின்னால் வழங்கத் தலைப்பட்ட இப்பண், இந்நம்பியின் கால மாகிய 11ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் திருவிசைப்பாத் திருமுறையில் அமைத்துக்கொள்ளப்பட்டது என்பதாகும். ஆதலால், இப்பண்ணுக்கு இலக்கணம் கூறும் நூல் 8-11ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட ஒரு காலமாகிய 9ஆம் நூற் றாண்டுக்குரியது என்று பிற வகையால் கொள்வது பொருத்த முடையதே. இவ் விலக்கணத்தின் காலத்திலேயே இச்சாளர பாணிப்பண்ணும் வழங்கத் தொடங்கியிருக்கும்.

4. பொதுவாக உரையாசிரியர் பண்டைய நூல்களுக்கு உரை எழுதும் காலத்து, மூல நூலுக்கு முன்னிருந்த இலக்கணங் களையே ஆதாரமாக எடுத்துக்காட்டுதல் மரபு. அடியார்க்கு நல்லார் ஒன்பதாம் நூற்றாண்டிலெழுந்த நூலை மேற்கோளாய்க் காட்டினார் என்று குறிப்பிட்டோம். இது சிலப்பதிகாரத்துக்கு ஆறு நூற்றாண்டுகள் பின்வந்த நூல். இதை நல்லார் மேற் கொள்வதற்கு ஒரே காரணம், இதற்கும் முற்பட்ட நூல்கள் யாவுமே இறந்துபோயின என்பதாகும். பிற்கால நூல் என்பதை அவரே உணர்ந்து, தம் உரைப்பாயிரத்துள் 'இவ்வைந்தும் இந்நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களன்றேனும்' என்று சொல்கிறார். சிலப்பதிகாரத்துக் காலத்தினும் முற்பட்டும் நாடகக் காப்பிய இலக்கண நூல்கள் வழக்கிலிருந்தன, அவற்றை வைத்து ஆய்ந்தால், சிலப்பதிகாரத்தின் நாடக இலக்கணம் நன்கு விளங் கும். அவை இல்லாமலும், அவற்றின் மரபு அறியாமலும், பின்னால் எழுதப்பெற்ற பஞ்சமரபொத்த நூல்களை வைத்து ஆராய்ந்தால் சிலப்பதிகார இலக்கணம் நன்கு புலப்படாது என்பதே அவர் கருத்து. ஆயினும், வேறு பண்டைய ஆதார நூல் கிடைக்காதபோது, கிடைத்த இந்த நூல் பிற்காலத்ததாயினும் இதை வைத்து ஆராய்ந்தாலும் இழுக்கில்லை என்றே இவ்விதம் சொல்கிறார். இதன்படி இப்பஞ்ச மரபு பிற்கால நூலென்றே

அவர் கருதி எழுதுகிறார் என்பது வெளிப்படை; கடைச் சங்க நூலென்று அவர் கருதி எழுதவில்லை. பஞ்ச மரபுக்குச் சொல்லிய 'காலக் கருத்தே அடியார்க்கு நல்லார் காட்டும் பிற நூல்களாகிய இசை நுணுக்கம், இந்திர காளியம், பரதசேனாபதீயம், மதி வாணத் நாடகத்தமிழ் நூல் என்ற நான்குக்கும் பொருந்தும்.

5. பஞ்ச மரபு வெண்பாவினால் இயன்றது. பண்டை நூல்கள், இலக்கிய இலக்கணங்கள் யாவும் ஆசிரியப் பாவிலேயே செய்யப்பெற்றுள்ளன. கலித் தொகையிலும் பரிபாடலிலும் சில வெண்பா யாப்பமைதிகளைக் காண்கிறோமேயன்றி, வெண்பா நூல்கள் முன்னமே எழவில்லை; யாவும் ஆதிப்பாவாகிய ஆசிரியப் பாவிலேயே செய்யப்பெற்றிருந்தன. இதில் மாற்றம் செய்த முதல் நூல் திருக்குறள் ஆகும். அது குறள் வெண்பா என்ற வெண்பா விகற்பம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் வெண்பா யாப்பில் செய்யப் பெற்றுள்ளன. திருக்குறள் நீங்க, இவை யனைத்தின் காலம் கி.பி. 4-8ஆம் நூற்றாண்டுகள். இத்தன்மைகளை எல்லாம் நன்கு சிந்திக்கும்போது, பஞ்ச மரபு இவற்றுக்கு முற்பட்ட காலத்தில் செய்யப் பெற்றிருத்தல் இயலாது. இது கடைச் சங்க நூல் இன்னும் இடைச் சங்க நூல் என்றும் கருதலாம் என்று சொல்வது உண்மையொடு பொருந்தாத கூற்று.

6. மற்றொரு குறிப்பு. பஞ்ச மரபின் இப்பகுதியுள் உள்ள 124 பாடல்களுள் பாண்டியனை விளிப்பன 6 பாடல்கள். மகடூஉ விளியாக உள்ளவை 35 பாடல்கள். பெண்ணை விளித்துப் பாடல் செய்ய வேண்டிய அவசியமில்லை. இவ்வாறு செய்வது ஆசிரியருடைய கவிதை இயற்றுந் திறனுக்கு இழுக்கு. இந்நூல் கவிதை நூலல்ல; இலக்கண நூல்; ஆகவே ஆசிரியர் இவ்வாறு செய்தார் என்று கருதலாம். காரணம் எப்படி இருப்பினும் இது இழுக்கு என்பதில் தடையில்லை. விளிக்கும்போது, காரிகை மாது என்று பொதுவாகவும், மடவாய், மெல்லியலாய்மானே, கொடியாய் என்று இயல்பைச் சுட்டியும், முறுவல், குழல், கூந்தல், நுதல், விழி, முலை என்று உறுப்புக்களைச் சுட்டியும், தொடி இழை என்று அணிகளைச் சுட்டியும் பாடுகிறார். ஒரு பாடலில் 'நட்டார் புகழ் நளினி' (74) என்கிறார். உடல் உறுப்புக்களைத் தெரியும்படி உடையணிவதே நாகரிகம் என்று வளர்ந்துள்ள இக்காலத்திலும்கூட அவ்வுறுப்புக்களைச் சுட்டிக்காட்டிப் பாடுவதும் எழுதுவதும் வழக்கத்திற்கு வரவில்லை. அன்றியும், கடாஅக் களிற்றின் மேற் கட்படாம் என்று பாடிய குறளின் காலம் முதல், சமூகத்தில் இவற்றைச் சுட்டாது பழகுவதே

நாகரிகம் என்று இதுவரை ஒரு மரபு நிலவி இருக்கிறது. இந்த நிலையில் பெண்ணை இவ்வாறெல்லாம் விளித்து இலக்கணம் சொல்வானேன்? பாட்டை நிரப்பத் தெரியாமல் ஆசிரியர் இவ்வாறு விளிகளைப் பெய்து கொண்டார் என்றே கருத வேண்டும். இசை நாடகத் தமிழ்களில் சில இலக்கண அமைதி களை ஆசிரியர் இங்கு எழுத வந்தவர். இவர் சிறந்த இயற்றமிழ்க் கவிஞராய்த்தான் இருக்கவேண்டும் என்ற நியதி இல்லை. இந்த நிலையைப் பின் வந்த நூல்களில்தான் அதிகம் பார்க்கிறோம். உதாரணம் யாப்பருங்கலக் காரிகை* பொருளை விட்டு மரபை நோக்கும்போது, இம்மரபு மிகவும் பிற்காலம். பழங்கால நூல் களில் இவ்விதமான மகடூஉ முன்னிலை இவ்வளவு அதிகமாக வருதல் இல்லை. ஏழாம் நூற்றாண்டில் பல சைன முனிவர் செய்த நாலடியார் என்ற தொகுப்பாகிய நீதிநூல், பாண்டிய மன்னனை நோக்கிச் சொன்ன நீதிப்பாடல்களைத் தன்னகத்துக் கொண்டது. அதுவும் ஒரு வெண்பா நூல். அங்கு பாண்டி யனை விளித்த பாடல்கள் 43; நெஞ்சை விளிப்பன 4; மகடூஉ முன்னிலை 9. இவற்றை ஒரு தொகுப்பாக நோக்கும்போது, பஞ்சமரபு, சங்க நூலாக இருக்கவியலாது, காலத்தால் மிகவும் பிற்பட்டது என்பது தெளிவு.

7. தமிழ் இலக்கண மரபில், பாட்டியல் என்பது மிகவும் பிற்காலத்தே வந்த ஒரு விரிவு. 10ஆம் நூற்றாண்டில் தொகுக்கப் பட்ட பன்னிரு பாட்டியலானது, 8-9ஆம் நூற்றாண்டுகளில் எழுந்த பாட்டியற் பரப்பு முழுமையும் சிதைந்துபோக, அச்சிதை விலிருந்து கிடைத்த தனி நூற்பாக்களைச் செவி வழியாகவும் நினைவு கொண்டும் ஓராசிரியரால் தொகுக்கப்பெற்ற ஒரு நூல் என்று வேறிடங்களிலும் குறிப்பிட்டிருக்கிறோம்.❖ அந்நூலுள் அந்தணர் அரசர் வணிகர் வேளாளர் என்ற நான்கு சாதிக்கும் உரிய பாக்கள், நாள், ஓரை, விரை, பூ, நிறம், நிலம் முதலான பொருத்தங்கள் குறிப்பிட்டிருப்பதை அதன் இனவியல் தொடக் கத்தில் காணலாம் (நூற்பா 156-171). இத்தகையதோர் இலக்கண வழக்கு பழங்காலத்தில் இல்லை. தொல்காப்பியத்திலோ சங்க நூல்களிலோ இச்சாதி பற்றிய பாகுபாடும் அதற்கு இலக்கணம் கூறும் நிலையும் காணமுடியாது. எட்டாம் நூற்றாண்டில்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 11 நூற்றாண்டு நூலில் காண்க.

❖ இந்த நூலில் பாட்டியல் என்ற பகுதி; எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு ஐந்தாம் அத்தியாயம்; இனி வெளிவர இருக்கும் 8ஆம் நூற்றாண்டு வரலாறு.

தொடங்கி வளர்ந்த புதுப்பாட்டியல் நெறிதான் இந்தச் சாதிப் பொருத்த அமைப்புக்குத் தோற்றுவாய் இதைப் பின்பற்றி, பின் வந்த எல்லாப் பாட்டியல் நூல்களும் பொருத்த இயல் என ஒரு பகுதி அமைத்துக்கொண்டு ஒவ்வொரு சாதிக்கும் உரிய மங்கலம், பொருத்தங்களை மிக்க விரிவாய்க் கூறுகின்றன.

பஞ்ச மரபு ஆசிரியரும் இந்தப் பாட்டியல் நெறியைப் பின்பற்றிச் சாதிகளைக் கூறுகிறார். தேவர், அந்தணர், அரசர், வணிகர், வேளாளர், பிற சாதிகள் என்று பாகுபாடு செய்து கொண்டு, தேவர்களுக்குக் குற்றெழுத்தைந்தினாலும் பாக்களுக்கு முன் வைத்துப் புணர்க்கப்படும் என்றும், பிற ஐவருக்கும் குறில் எழுத்துக்கள் ஐந்துநிரல் நிறையே புணர்க்கப்படும் என்றும் கூறுகிறார்.

செப்புங் குறிலைந்துந் தேவர்க்காம், செப்பியபின்
அப்படியே அந்தணரோ டைவர்க்காம்.*

'செப்பும் குறிலைந்தும்..... புணர்க்க என்றவாறு' என்ற அதன் உரையையும் காண்க. அடுத்த பாடலின் உரையில் 'யாவ னொருத்தன் பேர் முதலெழுத்துப் பாலன்; இரண்டாமெழுத்துக் குமாரன்; மூன்றாமெழுத்து அரசன்; நாலாமெழுத்து விருத்தன்: அஞ்சாமெழுத்து மரணம். இவனது பெயர் முதலெழுத்தறிந்து மொழிக்கு முதல் கொண்டு இசை புணர்கவென்றவாறு' என்று குறிப்பிடுகிறார். குன்றாக் குழலன் என்ற இதற்கடுத்த பாட லுரையில் 'இசை பாணுக்கு உரித்தாகலான் பாணனென்று பெயராயிற்று. பாணனாய இவனை அடிவணங்கிப் பொன் கொடுப்பர் என்றவாறு. இம்மூன்று திறத்துப் பாணரிலும், சுத்தத் திற்குரியவன் குழலன், தமிழ்க்குரியவன் மதங்கன், சாளவத்திற் குரியவன் கவுண்டியன்; இம்மூவரிடத்தும், முன் சொன்ன நான்கு வருணத்தாரும் ஏனையோரும் சென்று பொன் கொடுத்து, தம்மைப்பாடச் செய்தல் மரபென்றாவறு, என்று எழுதி யிருப்பது காணத்தக்கது. இங்கும் நான்கு வருணம் குறிப்பிடப் பட்டுள்ளது. அடுத்த பாடல் சாதி யோசைகள் என்று மூன்றை யும் அவற்றுக்குரிய சாதிகளையும் கூறுகிறது:

சுத்தம் மறையோர்க்காம்; சாளவம் சோர்வில்லா
மத்தக் களிற்றானை மன்னர்க்காம்; – வித்தகனார்
செய்ய தமிழ் வணிகர் வேளாளர்க் கென்றுரைத்தார்:
பொய்யிலுரை நூலோர் பொதிந்து:

* இதன் பின்னுள்ள பகுதி சிதைந்து போயிற்று.

என்னுதலிற்றோவெனின், சுத்தம் சாளவம் தமிழெனும் சாதி யோசை மூன்றிலும் பரப்பிரம சாமவேதம் பாடும் இடத்துச் சுத்தம் மறையோர்க்குப் பாடுவர்.

அரசர்க்குத் தாமமென்கிற நிறத்திற் சாளவம் பாடுவர். வணிகர்க்கும், வேளாளர்க்கும் தமிழ்நிறம் பாடப்படுமெனக் கொள்க. தமிழோசை (பலவோசைத்தமிழ்) தாமதம், சுத்தம் சாத்துவிதவோசை, சாளவம் இராசத வோசை' என்பதும் காண்க. இங்குச் சொல்லியுள்ள ஓசைகளை அடியார்க்கு நல்லார் 'இன்னும் சுத்தம் சாளவம் தமிழென்னும் சாதி யோசைகள் மூன்று' என்று கூறி அவற்றினுடன் பொருந்தும் இசைப்பாக்கள் ஒன்பது வகையென்று, அடுத்ததாகிய 'செப்பரிய சிந்து திரிபதை' என்ற பஞ்ச மரபுப் பாடலை நூற்பெயர் சொல்லி எடுத்துக் காட்டுகிறார்.

இவற்றால் நாம் இங்குக் காட்ட எண்ணியது, பஞ்ச மரபு காட்டும் சாதி பற்றிய பாட்டியற் கருத்தும் நூல் மரபும், எட்டாம் நூற்றாண்டில் இருந்தே உருக்கொண்டவை; ஆதலால் இராகப் பெயரிலிருந்து இவ் ஆசிரியர் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்று கொண்ட முடிவு இதனாலும் பெரிதும் வலியுறுகின்றது.

மேலுமொரு குறிப்பு: பண்டை நூலாசிரியர், சங்க காலத்தில் வாழ்ந்தவர்கள் ஒரு தற்பெருமை யுணர்வோடேயே பேசுவார்கள். 'காவினெம் கலனே, சுருக்கினெம் கலப்பை' என்பது அவ்வை யார் கூற்று. இளங்கோவடிகள்கூட 'நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள்' என்றே சொல்கிறார்; நான் இதைச் சொல்கிறேன், நீ இதை நம்பு என்று பாடும் வழக்கமில்லை. ஆனால் பஞ்சமரபு ஆசிரியர் இவ்வாசிரிய மரபைவிட்டே பாடு கிறார்: பாவிசைய ஓதுவன் இப்பண்பு (1); என் புன் கவியும் சான்றோர் பாற்பொற் புடைத்தாம் என்றுரைத்தேன் மேதையான் மிக்கு (2) தும்புரு நாரதர் பாடிய மூவோசையென நம்பு நீ (54) பாருள் அறிவிப்பேன் பார்த்து (93); திருமாலைப் பணிந்து செப்பு வேன் (114); தண்டமிழாற் பாடத் தருவாய் பெருவாக்கு (115) - இவை போன்றவை மிகவும் பிற்காலத்தில் தோன்றிய சோதிட வைத்திய நூல்கள்போல் அமைந்துள்ளன. இவற்றைப் பார்க்கும் போது, ஆசிரியர் அறிவனார், இயற்றமிழ்ப் பயிற்சி அதிகம் இல்லாதவராய் இசை நாடகநூல் செய்தாரென்று கருதவேண் டும். இவர் காலம் முன்குறிப்பிட்டதுபோல, சங்க காலமன்று.

இதுவரையும் கூறியவற்றைத் தொகுத்து, நிருபதுங்கராகம் என்ற ராகப் பெயராலும், சாளரபாணி என்ற பண்ணின் பெய ராலும், அடியார்க்கு நல்லார் ஒருபுடையே ஒப்புமை கொண் டது என்று கருதுதலாலும், வெண்பா அமைப்பாலும், மகடூஉ முன்னிலைப் பாடல் மிகுதியாலும், சாதிப் பொருத்தங்களை விரித்தலாலும், இது பிற்காலத்தது 9ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி என்று முடிவு செய்கிறோம்.

## உரையாசிரியர்

இந்நூலுரையாசிரியர் பெயரோ வரலாறோ தெரியவில்லை. இவர் காட்டும் மேற்கோள் பாடல்களும் அவை பற்றிய விளக் கமும் அடுத்துக் காணலாம். பதிற்றுப்பத்துள் இறந்துபோன பகுதி யிலிருந்து வரிகளைக் காட்டுவதாலும், வண்ணங்கள் நூறு என்று அந்த நூலை ஒட்டிச் சொல்வதாலும், இது மிகவும் பழமை யான உரை என்பதில் ஐயமில்லை. மிகவும் பக்தியோடு ஆசிரியர் கருத்தை விளக்கிச் சொல்கிறார். ‘இந்நூலாற் பயன்யாதோ எனின், இசையும் முழவமும் கூத்தும் தாளமும் அவிநயமும் என்னும் அஞ்சுறுப் பறிதல் பயன். இவையறியவே. அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கு மெய்தும். எவ்வாறு எய்துமோ வெனின், தேவர்களுவப்பன கீத வாச்சிய நிருத்த தாளங்களாதலால், மிக்கோர் இவ்வைந்தினையும் மறிதல் கருமமெனக் கொள்க. இவ் வைந்தினையும் மன்னர்க்கியற்றப் பொருள் சேரும்; அப்பொருளால் நினைத்தவின்பங் கைகூடும். நினைத்தது முடியவே வீடு பெறுமெனக் கொள்க, இசை அறம்; அது பொருள் தரும்; பொருளால் இன்பம் கைகூடும்; இதனால் வீடு பெறும் என்று நயமாய்க் கூறுகிறார். இவ்வாறு பயன் கூறும் நிலை பிற்காலத்தில் மறைந்துவிட்டது. மன்னர்க்கியற்றுதல் என்ற நிலையும் போய்விட்டது. இத்தன்மையையும் பிறவற்றை யும் நோக்கும்போது உரைகாரர் ஆசிரியர் மாணக்கராயிருந்து ஆசிரியரிடம் கேட்டு உரை செய்தார் என்றே சொல்ல வேண்டும். 100 மேற்கோள் தருகிறார்; குறட்பா, நூற்பா, வெண்பா, தாழிசை, கலிப்பா முதலான பல பாக்களும் பாவினங்களும். இவற்றுள் ஆறுபாடல்கள் இடம் விளங்குபவை. ஏனைய விளங்காதன. இவற்றுள் 21 பாடல்கள் மட்டுமே 83ஆம் நூற்பாவுரையில் வரும் இலக்கிய மேற்கோள். பிற யாவும், இசை நாடகத்தமிழ் பற்றிய மேற்கோள். சிலவற்றை இவர் தமக்கு முன்னிருந்த பல முத்தமிழ் இலக்கண நூல்களிலிருந்து எடுத்துத் தருகிறார். இசை நாடக நூல்கள் பிற்காலத்தில் வழக்கொழிந்தன. உரையாசிரியர்

அவற்றை நன்கு அறிந்து சொல்கிறார். ஆதலால் அவை வழங்கிய காலத்தில் இவர் இருந்திருக்கிறார். மேலும் 8-9ஆம் நூற்றாண்டு களில், பாட்டியல் அணியியல் போன்ற புது நூல்கள் அனேகம் இருந்து பின் எக்காரணத்தாலோ இறந்துபோயின என்று யாப்பருங்கல விருத்தியுரையாலும், பன்னிருபாட்டியலாலும் அறிகிறோம். இவ்வுரையாசிரியர் அந்நூல் வழக்கில் இருந்த காலத்தில் வாழ்ந்து தம் உரை செய்தார் என்பது வெளிப்படை. நூல்கள் நிலவிய கால எல்லை 9ஆம் நூற்றாண்டின் இறுதி போலும். இவ் வெல்லையில்தான் பஞ்ச மரபு மூலம் தோன்றிற்று என்று முன்னமே காட்டினோம். உரையும் இதே காலமாயிருக்க வேண்டும் - கி.பி. 900ஐ ஒட்டி.

மற்றொரு கருத்தும் சொல்லத் தோன்றுகிறது. ஒருகால் நூலாசிரியரே உரையும் செய்திருக்கலாம். பிற்காலத்தில் இலக் கண நூலாசிரியர் சிலர் இவ்வாறு செய்ததுண்டு. இவ்வாறு இவ்வுரை பற்றிக் கருதுவதற்குக் காரணங்கள் உள்ளன. ஓரிடத் தும் இவ்வுரை நூலாசிரியர் என்று குறிப்பிடவில்லை. 8ஆம் பாடல் உரையில், "துன்னருஞ் சீர்ச் சேறை அறிவனார்" என்ற தொடருக்கு உரை எழுதும்போது, 'ஐந்தியலும் உணர்ந்த அறிவனார்' என்று மட்டும் சொல்கிறார். சேறை என்பதைச் சொல்லவோ விளக்கவோ இல்லை. 4ஆம் பாடல் உரை வெறும் குறிப்பாகவே உள்ளது; உரையாக இல்லை; அதன்பின் 'இந்நூல் யாது காரணமாக யாக்கப்பட்டதோ எனின், நூற் பொருளை யும் அதன் பகுதியையும் ஓது மாக்கள் உணர்த்தல் வேண்டியும் மிகு பொருளுணர்ந்த மெய்த்தவத்தோரை நகுதல் காரண மாகவும் செய்யப்பட்டது' என்கிறார். இப் பகுதிக்குரிய மூலம் ஒரு வெண்பா இருந்திருக்க வேண்டும், காணப்படவில்லை என்பது முன்னமே சொல்லப்பட்டது. 'நகுதல் காரணமாக' என்ற உரையாசிரியர் சொல்வது இயல்பல்ல. இவ்வுரை மூலத் துக்குத் துணையாக அதில் சொல்லாத பொருளை மட்டும் எடுத்துக்காட்டிச் சொல்வதாக உள்ளது. இத்தன்மையில் உரை எழுதுபவர், இங்கு நகுதல் காரணம் என்று அவையடக்கமாக எழுதுவாரானால், உரைகாரர் தம் தகுதியைக் கடந்து, நூலா சிரியரைப் பழிப்பதுபோல் உள்ளது. ஆசிரியர் அடக்கமாகத் தாமே இவ்விதம் சொல்வது இயல்பு. ஆகவே இது ஆசிரியர் கூற்று, உரையாசிரியர் என வேறு ஒருவர் இல்லை என்றே கருதுகிறோம்.

## உரை மேற்கோள் பாடல்கள்

நூலாசிரியரே சிலப்பதிகார வரிகளை எடுத்துப் பாடலில் அமைத்துப் பாடியிருக்கிறார் என்று இரு உதாரணங்களைக் காட்டினோம். பொய்கையாழ்வார் பாடலாகிய 'ஏற்றான் புள்ளூர்ந்தான் எயிலெரித்தான்' என்ற முதல் திருவந்தாதிப் பாடல் (74) இசைமரபுத் தொடக்கத்தில் தனிப்பாடலாக எழுதப் பட்டுள்ளது; இது மேற்கோளல்ல; கடவுள் வணக்கமாகப் பெய்யப்பெற்றுள்ளது என்று அறிகிறோம். இதற்கும் நூலுக்கும் சம்பந்தமில்லை. பிற மேற்கோள் பாடல்களில், (பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம், யாப்பருங்கல விருத்தி மேற்கோட் பாடல்கள், கொன்றைவேந்தன், காப்புச் செய்யுள் என்பன) குறிப்பிடத்தக்கன.

பெரு வண்ணத்திற்குச் செய்யுள் வருமாறு

**எஃகுமே விலங்கு கொய்சுவற் புரவி**
**............ .......... ...........ணான் குடனாற்றே**

எனப் பதிற்றுப் பத்தினுள் பத்துச் சேரர்களைச்* 'சான்றோர் பாடின வண்ணங்கள் நூறுள் கண்டு கொள்க.'

இது முன்னம் காட்டிய 'செப்பரிய சிந்து' என்ற வெண்பா வின் உரையில் பெருவண்ணம் பற்றிய குறிப்பாகும். பதிற்றுப் பத்தினுள் பாடல் தோறும் வண்ணம் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்கு காட்டிய வரிகள் சிதிலமாயுள்ளன போலும். இவை அச்சான பதிற்றுப்பத்துப் பகுதியில் இல்லை. அதன் இறந்து போன பத்துக்களின் முதல் பத்து, பத்தாம் பத்தினுள் இருந் திருக்கலாம். பதிற்றுப் பத்து வண்ணத்தை எடுத்துக் காட்டும் இவ்வுரை மிகவும் பழமையான உரை என்பதில் ஐயமில்லை.

சிலப்பதிகார ஆய்ச்சியர் குரவையிலுள்ள கன்று குணிலா, பாம்புகயிறாய், கொல்லையஞ்சாரல் என்ற மூன்று தாழிசை களும் 2, 1, 3 என்ற வரிசையில் திரிபாதத்துக்குச் செய்யுளாய் இங்குத் தரப்பெற்றுள்ளன. அன்றியும், தேவபாணிக்குச் செய்யு ளாக மலர் மிசைத் திருவினை, வண்ண மலர்ச் சரங்கோத்து என்ற இரு பாடல்கள் இங்குத் தரப்பட்டுள்ளன. இவ்விரண் டையும் சிலப்பதிகாரம் கடலாடு காதையுரையில் 'மாயோன் பாணியும்' என்ற தொடருக்கு உரை எழுதுமிடத்து, எண்சீரான் வந்த கொச்சக ஒருபோகு என்று முதற் பாட்டையும், யாப்பைச்

---

* அச்சுப் புத்தகத்தினுள் 'பத்துச் சொற்களை' என்றிருப்பது 'பத்துச் சேரர்களை' என்று திருத்திக் கொள்ளற்குரியது.

*சொல்லாது இரண்டாம் பாட்டையும் அடியார்க்கு நல்லார் தருகிறார். முதற்பாட்டைப் பஞ்ச மரபு உரை ஆசிரிய விருத்தம் என்கிறது; இதன் பண்கவுசிகம். தாளம் இரண்டொத்துடைத் தடாரம் என்று இரு உரைகளும் குறிப்பிடுகின்றன. பாடல்கள் பின்வருவன;*

மலர்மிசைத் திருவினை வலத்தினில் வைத்தனை
  மறிதிரைக் கடலினை மதித்திட வடைத்தனை
இலகொளித் தட வரை கரத்தினி லெடுத்தனை
  இனநிரைத் தொகைகளை யிசைத்தலி லழைத்தனை
முலையுணத் தருமவள் நலத்தினை முடித்தனை
  முடிகள்பத் துடையவ னுரத்தினை யுறுத்தனை
உலகனைத் தையுமொரு பதத்தினி லொடுக்கினை
  ஒளிமலர்க் கழறரு வதற்கினி யழைத்துமே.

வண்ணமலர்ச் சரங் கோத்து மதனவேள் மிக வெய்யக்
கண்ணளவோர் புலனாகக் கனல் விழியா லெரித்தனையால்
எண்ணிறந்த தேவர்களு மிருடிகளு மெழுந்தோட
ஒண்ணுதலாள் பாகங்கொண் டொருதனியே யிருந்தனையே.

*இது நாற்சீரடியாய் வந்த கலி விருத்தச் சிறுதேவ பாணி கண்டு கொள்க. இதற்குப் பண் அத்தராட்டம்.*

*93ஆம் வெண்பாவுரையில், உரைகாரர் 'பேரிகை படகம்' என்ற நூற்பாவை எடுத்துத் தந்து, முழவின் பெயர்கள் முப்பது என்று காட்டுகிறார்; நூற்பா பின் வருவது. இதை அடியார்க்கு நல்லாரும் தருகிறார்.*

பேரிகை படகம் இடக்கை யுடுக்கை
சீர்கிகு மத்தளம் சல்லிகை கரடிகை
திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை
தமருகம் தண்ணுமை தாவில் தடாரி
அந்தரி முழவொடு சந்திர வளையம்
மொந்தை முரசே கண்விடு தூம்பு
நிசாளம் துடுமை சிறுபறை யடக்கம்
ஆசில் தகுணிச்சம் விரலேறு பாகம்
தொக்க உபாங்கி துடிபெரும் பறையென
மிக்க நூலோர் விரித்துரைத்தனரே.

*அடியார்க்கு நல்லார் இங்கு சில சொற்களின் பொருளையும் உரைக்கிறார். முழவு ஏழு வகை என்று சொல்லி அவற்றுக்கு*

விளக்கமும் தருகிறார். இவையெல்லாம் பஞ்ச மரபு உரையில் இல்லை. மேலும் உரைகாரர் காட்டுகின்ற பின்னும் இரண்டொரு நூற்பாக்களும் அடியார்க்கு நல்லாரிடத்துக் காணப்படுகின்றன.

94ஆம் பாடல், முதற் கருவியாமாறு உணர்த்துகிறது. இதன் கருத்தையும் பின் இரு வரிகளையும் சுத்தானந்தப் பிரகாசம் என்ற பிற்கால நூல் அப்படியே எடுத்து வைத்திருப்பது, ஐயரவர் கள் பதிப்பின் அடிக்குறிப்பால் (பக்கம் 106) அறியலாம். எனவே அடியார்க்கு நல்லாருக்கு மட்டுமன்றி, இன்னும் பிற்காலத்த வருக்கும் பஞ்ச மரபு ஓர் ஆதாரநூலாக இருந்திருத்தல் தெளிவு.

வெண்டுறைச் செய்யுள் ஒன்று இங்கே காட்டப்பெறுவது யாப்பருங்கல விருத்தியிலும் காணப்படுகிறது.

> தாளாள ரல்லாதரர் தாம்பல ராயக்கா லென்னா மென்னாம்
> யாளியைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்
> பீலிபோற் சாய்த்துவிடும் பிலிற்றி யாங்கே.

வண்ணத்திற்குச் செய்யுளாக இங்கு காட்டிய 'செல்வப் போர்க் கதக் கண்ணன்' என்ற பாடல் பண்டைய உரைகள் அனைத் திலும் மேற்கோளாய்ப் பயின்று வரும் பாடல். செந்துறைக்குச் செய்யுள் வருமாறு என்று சொல்லிப் பின்வரும் . மூன்று தாழிசைகளும் தரப்பட்டுள்ளன.

> கொன்றை வேய்ந்த செல்வ னடியிணை
> என்று மேத்தித் தொழுவோம் யாமே.
>
> நீரின் கடவுட் சேவடி யிணையைப்
> பேரின் பஞ்சேர்ந்த தெய்துத விடமே.
>
> ஆதி பகவ னம்மலர்ச் சேவடி
> நீதியா லேத்தி நினைவோம் யாமே.

இவைமூன்றும் முறையே சிவபிரானையும் திருமாலையும் அருகனையும் துதிப்பன. மூன்றும் ஒரு தொடர்பாய் வருகின் றமையால் இவை மேற்கோளுக்கென்றே படைக்கப்பட்ட பழம் பாடல் என்றே கருதலாம். 'கொன்றைவேந்தன் என்ற தாழிசை மட்டும் பிற்காலத்தில் அவ்வை செய்த நூலுக்குக் காப்புச் செய் யுளாக எடுத்தமைக்கப் பெற்றுள்ளது. இது பழம்பாடல்-என்ற எம்முடைய கருத்துக்கு,* மூன்றடுக்கி இங்கு வந்துள்ளமை சான்றாகும்.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 12 ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

*சம பாதத்துக்குச் செய்யுள் என்று பின்வரும் செய்யுளைக் காட்டுகிறார்.*

காரார் தோகைக் கண்ணார் சாயற்
றேரா ரல்குல் தேனார் தீஞ்சொல்
போரார் வேற்கட் பொன்னே, இன்னே
வாரா ரல்லர், போனார் தாமே.

*அரும்பதவுரைகாரர் நால் வகைச் சாதி மருதத்துக்கு இலக்கணம் மேற்கோள் காட்டிப் பின் இலக்கியமாகக் காட்டும் நான்கு பாடல்களும் இதனோடு ஒப்பு நோக்கத்தக்கன. ஒன்று மட்டும் இவ்விடத்துத் தருகிறோம் (பெருகியன் மருதம்):*

மல்லூர்......... நோவ எம்முன்
சொல்லற் பாண சொல்லுங் காலை
யெல்லி வந்த நங்கைக் கெல்லாஞ்
சொல்லுங் காலைச் சொல்லு நீயே.

*பிள்ளையார் பாணிக்குச் செய்யுள் காட்டுகிறார். இது சிறு தேவ பாணியில் ஒரு வகை போலும். பிள்ளையார் என்பது மூத்த பிள்ளையார். இப்பாடல் சந்தத்தில் அமைந்துள்ளது.*

படைக்கும் புவிப் பந்த மலற்கும் புலத்துங்க
னுடைச் சங்கை விட்டின்பத் தொழுக்கம் பெருத்தொன்றுங்
கடத்தின் கடக்கம்ப மதத்திற் செம் புதற் கொம்பும்
படற்கும் மனுக்கன் புற்றிருக்குங் குருத்துண்டே.

*பாணர்ப் புணர்த்த வண்ணத்துக்குக் காட்டிய உதாரணம்:*

தாரபட் டங்கட்டி மன்மத னைத்தண் குடைநிழற்கீழ்
ஈரபட் டங்கட்டி னன்கா ணிராசரா சன் (னவையில்)
வீரபட் டங்கட்டி விட்டனன் மெய்யடி யாரையன்று
சேரபட் டங்கட்டி னான்கெட் டனன் (தன்) சேனையோடே.

*(இப்பாடலின் இரண்டாம் அடியில் சீர் குறைகிறது. இது கட்டளைக் கலித்துறை.) இராசராசன் என்ற சொல் இங்கு வருவது கொண்டு, பதிப்பாசிரியர் இது இராசராச சோழனைக் குறிப்பதென்றும், இதனால் உரை இராசராசன் காலத்துக்குப் பிற்பட்டதென்றும் கருதுகிறார். இது அத்துணை பொருந்துவதாகத் தோன்றவில்லை. இராசராசன் என்பது இங்கு சிறப்புப் பெயரன்று. பொதுப் பெயர்; பெருந்தேவனார் பாரத வெண்பாவில் (காலம் நிருபதுங்க வர்மன் தந்தையான மூன்றாம் நந்தி*

வர்மன் காலம், 9ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதி) இராச ராசன் என்ற சொல் மன்னரைக் குறிக்க மிகவும் சாதாரணமாய் வருகின்ற சொல்; இதுகொண்டு காலத்தை வரையறை செய்ய முற்படுவது பொருந்தாது.

## குறிப்பு

பஞ்ச மரபு ஆராய்ச்சித் தொடக்கத்தில் (பக்கம். 237) அடியார்க்கு நல்லார் தாம் சிலப்பதிகார உரை எழுதுவதற்கு, பண்டைய ஆதார நூல்கள் இறந்து போனமையால், இசை நுணுக்கம், இந்திர காளியம், பஞ்ச மரபு, பரத சேனாபதீயம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல் என்ற ஐந்தையும் கொண்ட தாகவும் இவை சிலப்பதிகார நாடகக் காப்பியக் கருத்தறிந்த நூல்களல்ல என்றும் கூறியுள்ளதைக் குறிப்பிட்டோம். இவ் வைந்தும் அடியார்க்கு நல்லார் காலத்தில் இருந்தன. பஞ்ச மரபு தவிர மற்றவை இன்று இல்லை. இவற்றுள் பஞ்ச மரபை இங்கு ஆராய்தோம். இந்திரகாளியம் குறித்து அறிந்தவற்றை முன் அத்தியாயத்தில் (பக்கம் 218-224) தொகுத்துக் கூறினோம். இவ்விரு நூல்களும் 9ஆம் நூற்றாண்டு என்ற கருத்தால் இங்கு சொல்ல நேர்ந்தது. ஏனைய மூன்றையும் எட்டாம் நூற்றாண்டு வரலாற்றில் குறிப்பிடுவோம். இவை யாவும் சிலப்பதிகாரத்துக்கு முற்பட்ட நூல்களல்ல; உடன் காலத்து நூல்களுமல்ல; பிற்கால நூல்களே என்று அடியார்க்கு நல்லார் கருதுவது தெளிவு.

OOO

## அத்தியாயம் 7

# இலக்கண உரை

முதல் இலக்கண உரை, எட்டாம் நூற்றாண்டில் இறையனார் களவியலுக்கு, நக்கீரர் என்ற புலவர் எழுதியதாக வழங்கும் உரை. இது இரு நூற்றாண்டுக் காலம் வாய்மொழியாகவே வழங்கிவந்து, பத்தாம் நூற்றாண்டில் நீலகண்டனார் என்பவரால் ஏட்டில் எழுதி வைக்கப் பெற்றதென்று அறிகிறோம்.* பின்னர் அடுத்த நூற்றாண்டில் (11) தொல்காப்பியத்துக்கு இளம்பூரணர் எழுதிய உரை முதன்முதலாக எழுந்தது. பின்னர், தொல்காப்பிய உரைகள் வேறு பலவும், பிற இலக்கண உரைகளும் தோன்றி வளர்ந்தன.

இறையனார் களவியலையடுத்து எட்டு ஒன்பதாம் நூற்றாண்டுகளில் பாட்டியல் செய்யுளியல் நூல்கள் பல செய்யப் பெற்றன என்று முன்னே குறிப்பிட்டோம். அந்நூல்களே கிடைக்காதபோது அவற்றின் உரையைக் குறித்து யாதும் சொல்ல இயலாது. ஒன்பதாம் நூற்றாண்டில் பொருளிலக்கணங்கள் இரண்டு செய்யப்பட்டன என்று முன்னே கூறினோம் - அகப்பொருள் கூறும் தமிழ் நெறி விளக்கமும், புறப் பொருள் கூறும் புறப்பொருள் வெண்பா மாலையும் பிந்திய நூலுக்குச் சாமுண்டி தேவ நாயகர் என்பவர் 15ஆம் நூற்றாண்டில் சிறப்பான உரை செய்தார். தமிழ்நெறி விளக்கம் செய்த ஆசிரியரே சூத்திரமும் மேற்கோளும் உரையும் செய்தார். அவ்வுரை பற்றிச் சில சொற்கள் இங்கு கூறுவோம்.

### தமிழ் நெறி விளக்கவுரை

நூல் செய்த ஆசிரியரே உரையும் செய்தல் ஓர் இலக்கிய மரபாக இருந்தது. பிற்காலத்தில் (13ஆம் நூற்றாண்டு) நம்பி

* எமது பத்தாம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு நூலில் காண்க.

அகப்பொருள் முதலியவற்றுள் இம் மரபைக் காணலாம். உதாரணப் பாடல்களையும் ஆசிரியரே அமைத்திருப்பதைத் தண்டியலங்காரத்தில் காணலாம்; அதைப் பிரயோக விவேக முடையார் எடுத்து கூறுகிறார். மாறன் அலங்காரம் செய்தாரும் நூல் செய்ததோடு உதாரணச் செய்யுட்களையும் தாமே செய் திருக்கிறார். இவை பின் வந்த நூல்கள். தமிழ் நெறி விளக்கமுடை யாரே இவர்களுக்கு வழிகாட்டி என்று கருதத் தோன்றுகிறது.

பண்டை உரையாசிரியர்களுடைய மரபுக்கு ஏற்ப, இவர் சூத்திரத்தில் குறிப்பிட்ட பொருள்களோடு குறிப்பிடாததையும் சேர்த்துச் சொல்கிறார். கருப்பொருளை விளக்கிய இடங்களில் இதை நன்கு காணலாம். களவைக் கூறிய இடத்து எண் வகை மணங்களையும் விரிவாய்த் தருகிறார்; ஆசிரியப் பாக்களை மட்டுமே இவர் உதாரணமாய்த் தருகிறார்; அவற்றுள்ளும் குறைந்த அடிகளை உடைய பாக்களையே தருகிறார் என்பது முன்னே சொல்லப்பட்டது இவர் உரையுள் சிற்றட்டகப் பாடல் சில மேற்கோளாய் வருவது குறிப்பிடத் தக்கது. மிகவும் சுருங்கிய சொற்களாலேயே உதாரணப் பாடல்களை இவர் அறிமுகப் படுத்துகிறார். தாமே சூத்திரமும் உதாரணச் செய்யுட்களும் செய்துள்ளமையால், ஓர் இடத்திலும் இவருக்கு விளக்கம் சொல்ல வேண்டிய நிலை எழவில்லை. நூலின் தொடக்கத்தில் அகம், புறம், அகப்புறம் என்ற மூன்றுக்கும் இவர் கூறும் விளக்கம் குறிப்பிடத்தக்கது:

‘புறச் செய்கை உளதெனினும் மிகுதி வகையால் அகம் பற்றி நிகழ்தலின் இருதலையும் தீரா அன்பிற்றாகிய காமம் அகப் பொருளென்பது. அகநிகழ்ச்சி உளதெனினும் மிகுதி வகையாற் புறச்செய்கையால் நிகழ்தலிற் குற்றப் பாடில்லா மறம் புறப் பொருளென்பது. அகமில்லா இன்பமும் புறமல்லாப் பொருள் செயல் வகையும் அறமும் அதன் பயனாகிய வீடும் இருவகை நிகழ்ச்சியும் நோக்கிக் கோடலின் அகப்புறப் பொருளெனப் பட்டன வென்பது.’

தமிழ்நெறி விளக்கமும் உரையும் சிறு பகுதிகள், நீண்ட உரைப் பகுதியில்லை. எடுத்துக் காட்டாக இதற்கு மேல் கருதத் தக்க பகுதியில்லை. நடையைக் கருதுவதற்கு இதுவே போதும். அகம், புறம், அகப்புறம் என்ற மூன்றைக் கூறும் மூன்று

வாக்கியங்கள் இங்கு உள்ளன. மூன்றும் ‘என்பது’ என்ற சொற் கொண்டு முடிகின்றன; என்பது முற்றுப் புள்ளிக்கு நேராகும். ஒன்பதாம் நூற்றாண்டில் எழுதினோர் இவ்வாறு எழுதுவது ஒரு மரபாயிருந்தது என்று கருதலாம்.

**பஞ்ச மரபு உரை**

பஞ்ச மரபு என்ற நூலாராய்ச்சியில், அந்நூல் வரலாறும், அதன் உரையும் பற்றிச் சில சொற்கள் சொல்லப்பட்டன. உரையானது, இசை நாடகம் பற்றிய செய்திகளை விளக்கும் நோக்கமே கொண்டது. மொழி, சொல், தொடர் பற்றிய பேச்சுக்கு அங்கு இடமே இல்லை. நூலாசிரியரே உரை செய்து மிருக்கலாம் என்ற கருத்தும் அங்கு சொல்லப்பட்டது.

○○○

*அத்தியாயம் 8*

# சைன இலக்கியம்

## *முன்னுரை*

மூன்றாம் நூற்றாண்டில் பாண்டி நாட்டினுள் புகுந்த களப்பிரரால் தமிழ் நாட்டினுள் சைன சமயம் புகுந்து கால் கொண்டு பரவிற்று. களப்பிரர் மதுரை ஆட்சியைக் கைப்பற்றிப் பாண்டியரை மதுரையினின்றும் வெருட்டிவிட்டு முந்நூறு ஆண்டுக் காலம் அந்நாட்டில் ஆட்சி புரிந்தார்கள். அக்காலத்தில் மதுரையில் சிவாலய வழிபாடு நின்றது தமிழுக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் கேடு விளைந்தது. சமயத்துக்கும் கலைக்கும் பெருங்கேடு விளைந்தது. இசைத் தமிழும் நாடகத் தமிழும் ஒடுக்கப்பட்டன. தமிழ் நூற் பயிற்சி மிகவும் குன்றியது. அகப் பொருள் இலக்கணம் பயிற்சியற்றுப் போயிற்று - என்பன வரலாற்றுச் செய்திகள். இவ்வாறு விளைந்த நாட்டின் சீர் குலைவின் இடையே மக்களுள் ஒரு பகுதியினர் சைன சமயத் தைத் தழுவினர். மதுரையில் பாண்டி மன்னனே சைன சமயம் புகுந்திருந்தான் என்று சம்பந்தர் வரலாறு கூறுகிறதென்றால், அதில் மிகை இல்லை. அந்த நிலையில் சைனப்புலவர் சிலர் தமிழ்நூல் பல செய்தார்கள். இவர்களில் பலர் களப்பிரர் மரபில் வந்த அன்னியர்; சில தலைமுறைகளாகத் தமிழ் நாட்டில் வாழ்ந்து விட்டபடியால், இவர்களுக்குத் தமிழே தாய்மொழி போல் ஆகிவிட்டது. பின்னும் பலர் சைவராயிருந்து அரசியல் நிலைமை காரணமாகச் சைனம் தழுவியவர்கள். இவ்விருசாரார் முயற்சியினாலும், நாம் இங்கு கருதுகின்ற ஒன்பதாம் நூற் றாண்டு வரை பல நூல்கள் செய்திருக்கிறார்கள். இன்று கிடைக் காத வளையாபதி ஒரு சிறந்த சைன காப்பியம்; முன்னமே சொல்லப்பட்டது (பக்கம் 45) பதினெண்கீழ்க் கணக்கு நூல் களில் ஐந்து நூல்கள் இவர்கள் செய்தன என்று அறிகிறோம்.

இவர்கள் செய்த நூல் துறைகளுள் இலக்கணமும் ஒன்று. 8-9ம் நூற்றாண்டுகளுக்குப் பிறகே இவர்களுடைய இலக்கண நூல்கள் எழுகின்றன. நீதி நூல்களும் இலக்கணங்களும், வாழ்க்கையை விட்டு விலகி நின்று, வாழ்க்கை நெறிகளிலும் இலக்கிய நெறி களிலும் போந்த பொது நியதிகளை எடுத்துக் காட்டுவன. இந்த நிலை அந்த வாழ்க்கையிலேயே தோய்ந்தவர்களைவிட, புறத்தே நின்று ஆராய்பவர்களுக்கு எளிதில் வெற்றிகரமாகக் கைகூடுவதொன்று.

## கலியாணன் கதை

இப்படியொரு நூல் இருந்ததென்பதை யாப்பருங்கல விருத்தி யுரையினால்தான் நாம் அறிகிறோம். இரண்டிடங் களில் அவ்வுரைகாரர் இதைக் காட்டுகிறார். இறுதியெழுத்தும் சொல்லும் இடையிட்டுத் தொடுத்த செய்யுளந்தாதி விகற்பம் உதயணன் கதையும் கலியாண கதையும் பன்மணி மாலையும் மும்மணிக் கோவையும் என்னும் வழி நூலுட் கண்டு கொள்க என்று எழுதுகிறார் (சூ. 53). மீண்டும் 'உதயணன் கதையும் கலியாணன் கதையும் என் என்னும் அசைச் சொல்லாயிற்ற நிலை மண்டிலம்' என்கிறார் (சூ. 74). இதனால் நாம் அறிவது கலியாணன் கதை என்ற நூல், என் என்னும் அசைச் சொல்லை, ஈற்றில் உடைய நிலைமண்டில ஆசிரியப் பாக்களாலான நூல், உதயணன் கதை போல்வது; கதை என்றமையால் ஒரு காப்பிய மாயிருக்கலாம் என்பதாகும். உதயணன் கதையாகிய பெருங் கதையும் மணிமேகலையும் இவ்வாறு முடியும் பாக்களைக் கொண்டவை. சிலப்பதிகாரமும், மாலை, குரவை என்று அமைந்த பாடல்கள் போக, ஏனைய ஆசிரியப் பாக்கள் யாவும் என் என்றே முடிகின்ற பாக்களாகும். இவ்வியல்பு அக்காலத்துக் காப்பியஞ் செய்தார் மேற்கொண்ட ஒரு யாப்பிலக்கண நெறியாகும்.

இந்நூல் ஆசிரியப்பாவான் இயன்றது என்று சொல்லா விட்டால், ஒருகால் பல கலியாணங்கள் செய்து கொண்ட சீவகன் கதையான சிந்தாமணியாக இருக்கலாமோ என்றும் எண்ணுதல் கூடும்; கலியாணன் என்ற பெயர் இந்த எண்ணத்தைத் தோற்றுவிக்கிறது. துறவையே அதிகமாக வற்புறுத்துகிற சைன காப்பியங்கள் கலியாணத்தையே பெரிதும் விரித்துப் பேசுகின் றன என்பது ஒரு விசித்திர நிலை. உதயணன் கதை, சிந்தாமணி,

சூளாமணி ஆகிய காப்பியங்கள் தக்க உதாரணங்களாம். இந்நூல் இன்று இல்லை. இக்கலியாணன் வரலாற்றை அறிவ தற்குச் சைன நூல்களில் வேறு எக்குறிப்பும் கிடைக்கவில்லை. கலியாணன் கதை என்ற பெயர்ச் சார்பினால் இது சைன நூலாக இருக்கும் என்று கருதுகிறோம். உதயணன் கதை சைனமாதலி னால், இதுவும் அதுபோன்ற சைன ஆசிரியரால் செய்யப்பட்ட ஓர் அரசன் கதையாகலாம்.

## பாவைப்பாட்டு

யாப்பருங்கலம், காரிகை உரைகளால் சைன சமயம் பற்றி ஒரு பாவை நூல் இருந்தது என்று நாம் கருத இடமுண்டு. யாப்பருங்கலமானது 93ஆம் சூத்திர உரையில் பின்வரும் பாட லைத் தருகிறது.

> **கோழியும் கூவின, குக்கில் அழைத்தன,**
> **தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினோ,**
> **ஆழி சூழ் வையத்து அறிவன் அடியேத்தி**
> **கூழை நனையக் குடைதும் குளிர்புனல்**
> **ஊழியுண் மன்னுவோ மென்றேலோ ரெம்பாவாய்,**

'நாற்சீர் நாலடியால் வருவது கலிவிருத்தம் என்று வரை யறுத்துச் சொன்னார். இஃது ஐந்தடியால் வந்ததாயினும் ஒரு புடை யொப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படும். இதனைத் தரவு கொச்சகமெனினும் இழுக்காது. 'இஃது அவிநயனார் காட்டிய பாட்டு, என்று பாடலின் பின்னே ஒரு குறிப்பு உள்ளது. இப்படியே பாடலும் குறிப்பும் காரிகை உரையிலும்* காணப்படுகின்றன. இவற்றால் நாம் அறிவது, இவ் வாறு ஐந்தடி கொண்ட கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கத்

---

* யாப்பருங்கலக் காரிகையைத் தாண்டவராய சுவாமி, விசாகப் பெருமாள் ஐயர், வீராசாமிச் செட்டியார் ஆகியோர் முன்னிலையில் ஆராய்ந்து 1853இல் சந்திரசேகர கவிராஜ பண்டிதர் பதிப்பித்த காரிகைப் பதிப்பிலும் கோவிந்தராச முதலியார் 1934இல் பதிப்பித்த பதிப்பிலும் அவிநயனார் என்ற குறிப்புக் காணப்படவில்லை. 1968இல் வேணுகோபாலபிள்ளை அச்சிட்ட பதிப்பில் மட்டும் காணப்படுகிறது. அவிநயனார் காட்டினார் என்று கருதாவிட்டால் ஒருகால் இது விருத்தியுரைகாரர் செய்த பாட்டு, 11ஆம் நூற் றாண்டுக்குரியது என்றும் எண்ணிவிடக்கூடும்.

தக்க ஒரு பாவைப் பாட்டுநூல் அக்காலத்தில் இருந்திருக்கக் கூடும் என்பது. முதல் பாவைப்பாட்டு ஆண்டாள் பாடியது. அதன் காலம் 8ஆம் நூற்றாண்டு. மாணிக்க வாசகர் பாடிய பாவைப்பாட்டு 9ஆம் நூற்றாண்டு. இந்த இரண்டு பாவைப் பாட்டுக்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஒரு சைனப்புலவர் வாழ்ந்து 'அறிவன் அடி ஏத்தி' ஒரு நூல் செய்தார் போலும்; இப்பாட்டு அந்த நூலிலிருந்து எடுக்கப்பட்டது என்று கருத லாம். வழக்கமாய் உள்ள பொழுது புலர்ந்ததற்கான அடை யாளம், பெண்களை அழைத்தல், இறைவனடி யேத்துதல், புனலில் குடைதல், ஏலோரெம்பாவாய் என்று முடித்தல் ஆகிய அமைப்புக்கள் இப்பாடலில் காணப்படுகின்றன. ஆனால் வழக்கமாய் எட்டடி கொண்ட நீண்ட கொச்சகக் கலிப்பா வானது இங்கு குறுகிக் கலிவிருத்தமாகியிருக்கிறது. ஆண்டாள் பாடிய பாட்டினைக் கேட்ட ஒரு சைனர் நாலடியின் மிக்கு ஓர் அடிபெய்து, கொச்சகமாக இதைப் பாடினார் போலும்.

அவிநயனார் காட்டிய பாட்டு என்றமை நம்மைச் சிந்திக்கச் செய்கிறது. இப்பாடலின் காலம். கி.பி. 800க்கு முன் இருக்க லாம். இதைக் காட்டுகின்ற அவிநயனார் தாமே இதைச் செய் திருக்கக் கூடும். 8ஆம் நூற்றாண்டு வரலாற்றில் அவிநயனார் பற்றிய விரிவான ஆராய்ச்சி காணப்படும்.

இப்பாடலால் இரண்டு பயன்: ஒன்று, சைனமரபில் ஒரு பாவைப்பாட்டு தோன்றியிருந்தது என்று தெரிவது, இரண்டு அவிநயத்தின் காலம் இன்னது என்று வரையறை செய்ய இயல் வது, இப்பாடல் ஆண்டாளுக்கு முற்பட்டதாக இருக்கலாம் என்று சிலர் நினைக்கக் கூடும். அது பொருந்தாது. ஆண்டாள் பாடலில் காணப்படுகின்ற சொற்சுவையும், பொருட்சுவையும், பக்திச் சுவையும், வாழ்க்கை அனுபவமும், அடிமைத் திறமும் ஆண்டாளுக்கே சொந்தமானவை. பிறிதொன்றைத் தழுவி அவை வருவன அல்ல. நாச்சியார் திருமொழியில் ஆண்டாள் பாடிய காமதேவன் வணக்கம் முதலிய பகுதிகளை நுணுகி நோக்கும் போது, அவருடைய பாடற்பொருள் முழுமையும் அவருக்கே உரியன என்பது நன்கு புலப்படும். சைன மரபில் இதற்கான அடிமைத்திறமும், வாழ்க்கை அனுபவமும் காண்பதற்கு இயலா. வாழ்க்கை நிலையாமையே அவர்களுடைய பாடல்களில் மேலோங்கி நிற்கும் தத்துவமல்லவா?

## அத்தியாயம் 9

# பிரபந்த இலக்கியம்

### முன்னுரை

ஆழ்வார்களும் நாயன்மார்களும் அருட்பாசுரம் பாடத் தொடங்கிய காலம் முதலே பிரபந்தங்கள் தோன்றிவிட்டன. பிரபந்தம் என்ற பெயரும் பிரபந்தங்கள் எத்தனை என்ற எண் வரையறையும் அக்காலத்தில் அமையாவிட்டாலும் அனேகப் பாசுரங்கள் பிரபந்தங்களாகவும், பிற்காலத்தில் தோன்றிய பிரபந்த இலக்கணத்துக்குப் பொருந்துவனவாகவும் உள்ளன; இது இயல்பு தான். அப்பாசுரங்களின் தன்மையைப் பார்த்துத் தானே இலக்கணம் பின்னால் எழுந்தது? அந்தாதி, மடல், பல்லாண்டு, பள்ளியெழுச்சி, பாவை, எழுகூற்றிருக்கை என்பன ஆழ்வார் பாடல்களில் இந் நூற்றாண்டுக்கு முன் எழுந்த முழுப் பிரபந்தங்கள். தேவாரத்தில் எழுகூற்றிருக்கை, அங்கமாலை, தாண்டகம் என்பன; அம்மை பாடலில் இரட்டை மணிமாலை அந்தாதி என்பன; பிற திருமுறைகளில் ஆற்றுப்படை. மும் மணிக்கோவை, உலா என்பன. மாணிக்கவாசகர் பாடிய ஊசல், சதகம், தசாங்கம் (இவை இந்த நூற்றாண்டு) போன்றன. பதிகம் அனைவரும் பாடியிருக்கிறார்கள். இவ்வாறு பார்த்தால் 20 பிரபந்தங்களே பழைய பிரபந்தங்களாய்த் தெரிகின்றன.

ஆயினும், தனிப் பிரபந்தமாகக் கிடைக்கும் நூல் மிகவும் அருமை. ஏழாம் நூற்றாண்டில் எழுந்ததெனக் கருதப்படும் பாண்டிக் கோவையொன்றே சிறப்புடைய தனிப்பிரபந்தம், பிரபந்தங்கள் யாவும் அருட்பாசுரத் தொகுப்பில் அடங்கிவிட்டன. நாற்பது (எழுபது) முதுமொழிக் காஞ்சி என்ற பிரபந்த வகைகள் பதினெண் கீழ்க்கணக்கினுள் உள்ளன. பன்மணிமாலை, மடலூர்ச்சி போன்ற சில, யாப்பருங்கல விருத்தியில் குறிப்பிடப் பட்டுள்ளன; இவை 9ஆம் நூற்றாண்டுக்குரியனவாயிருக்க லாம்; நூல்கள் இல்லை. (மடலூர்ச்சி திருமங்கையாழ்வாரின்

மடலாகவே இருக்கலாம்.) பிற்காலத்துச் சிறந்த இலக்கியப் பிரிவுகளாய் வளர்ந்த கலம்பகம், பரணி பிள்ளைத் தமிழ், தூது என்பன இந்த நூற்றாண்டு வரையில் காணப்படவில்லை. இவை முறையே 9, 11, 12, 14 ஆகிய நூற்றாண்டுகளில் தான் தோன்று கின்றன. 9ஆம் நூற்றாண்டில் முதல் கலம்பக நூலாகிய நந்திக் கலம்பகம் தோன்றியது. பல சமயம், ஒரு துறையில் தோன்றுகின்ற முதல் நூலானது அத்துறையில் மிகச் சிறந்த நூலாக அமைவ துண்டு. கலிங்கத்துப் பரணியும் நந்திக்கலம்பகமும் அவ்வாறு அமைந்த சிறப்பு மிக்க நூல்கள். இக்கலம்பகம் இவ்வத்தியாயத் தில் ஆராயப் பெறுகின்றது. இதையன்றி, வேறெந்தப் பிரபந்த மும் இக்காலத்து எழவில்லை. (திருக்கோவையாரும் இக் காலத்துக்குரிய ஒரு சிறப்பான பிரபந்தமே. மாணிக்கவாசகர் வரலாற்றில் அது தனியே ஆராயப் பெறுகின்றது. அந்நூல், சைவத் திருமுறை எட்டின் பகுதியாகச் சேர்க்கப்பட்டுள்ளது.)

## நந்திக் கலம்பகம்

### முன்னுரை

வரலாற்றுச் சிறப்புடைய தலைவர்கள் பற்றித் தனி நூல்கள் பழங்காலந் தொடங்கியே எழுந்துள்ளன. மன்னர் பற்றி எழுந்த நூல்கள் நன்கு தெரிந்தவை. பதிற்றுப்பத்து சேர மன்னரைப் போற்றி எழுந்தது. இது ஒரு வகையில் பிற்காலத்தில் இறைவன் மீது பதிகம் அல்லது பதிற்றுப் பத்தந்தாதி என்று பாடுகின்ற துதி நூலையொத்தது. இங்கு பத்துப் பத்துக்களிலும் பத்து அரசர் போற்றப் பெற்றுள்ளனர்; இது சங்க நூல்; பா ஆசிரியப்பா. களவழிநாற்பது, கோச்செங்கணான் வெற்றியைக் குறித்த ஒரு பதினெண்கீழ்க்கணக்கு நூல். அடுத்து, ஏழாம் நூற்றாண்டில் பாண்டியன் நெல்வேலி வென்றசீர் நெடுமாறனைப் புகழ்ந்து பாண்டிக் கோவை எழுந்தது. சோழர் ஆதிக்க காலத்தில், 12ஆம் நூற்றாண்டில் முதற்குலோத்துங்கன் கலிங்க வெற்றியை மட்டும் குறித்தெழுந்த நூல் கலிங்கத்துப் பரணி. இதை அடுத்துச் சோழமன்னர் புகழை உலாக்களாலும் பிள்ளைத் தமிழாலும் ஒட்டக்கூத்தர் பாடினார். அடுத்த நூற்றாண்டில் தோன்றியது மூன்றாம் குலோத்துங்கனைப் புகழ்ந்த குலோத்துங்கன் கோவை. குறிப்பிட்ட இத்தனை நூல்களும் கவிதை நூல்கள் மட்டும் அன்றிச் சிறந்த வரலாற்று நூல்களாகவும் கொள்ளப்படுகின்றன. இவற்றுக்கு இடைப்பட்ட காலத்தில், 9ஆம் நூற்றாண்டில்,

பல்லவ மன்னனைப் புகழ்ந்து எழுந்த ஒரு தனி நூல் நந்திக் கலம்பகம் என்பது; இதுவும் மற்றவை போல வரலாற்றறிவுக் குத் துணை செய்யும் சிறந்த சிறு நூலாகும்.

இந்தப் பிரபந்தம், காஞ்சியில் அரசாண்ட மூன்றாம் நந்திவர்மன் (825-50) என்ற பல்லவ மன்னன் மீதுப் பாடப் பெற்றதாகும். இந்நூல் பல வகையிலும் சிறப்புடையது. முதற் சிறப்பு இது தமிழ்மொழியில் முதன்முதலாகத் தோன்றிய கலம்பகம் என்பது. பாட்டியல் கூறும் இலக்கணமே இதைக் கொண்டு எழுந்ததுதான். இரண்டாவது சிறப்பு, இக்கலம்பகத் துக்குத் தோற்றுவாயாக நெடுங்காலமாய் இலக்கிய உலகில் வழங்கும் கதையாகும். மூன்றாவது, இந்நூலின் பாட்டுடைத் தலைவனான நந்திவர்மனின் சிறப்பாகும். நான்காவது சிறப்பு, இச்சிறுநூலின் இணையற்ற கவிச் சுவையாகும். இச் சிறப்புக் களை இனி முறையாக ஆராய்வோம்.

### நூல் – முதற் கலம்பகம்

பிரபந்த இலக்கணம் கூறும் நூல்கள் பாட்டியல் எனப் படும். 8-9 ஆகிய நூற்றாண்டுகளில் எண்ணற்ற பாட்டியல் நூல்கள் எழுந்தன. அவற்றுள் ஒன்றுகூட இன்று இல்லை. கிடைக்கின்ற பாட்டியல் நூல்களுள் காலத்தால் பழமை யானது பன்னிரு பாட்டியல் என்ற பெயர் படைத்த பிற்காலத் தொகுப்பாகும். (10ஆம் நூற்றாண்டு). 360 நூற்பாக்களையுடைய இந்நூலின் மூன்றாம் பிரிவு இனவியல் என்பது; இதன் இரண் டாம் பகுதி, பாவினம் என்பது (சூத்திரம் 172-360) பாவினம் என்பது பிரபந்தங்கள்; 81 இங்கு சொல்லப்பட்டுள்ளன. இவற்றுள் ஐந்தாவது கலம்பகம். இதன் இலக்கணம் இரண்டு நூற்பாக் களில் சொல்லப்பட்டுள்ளது.

> சொல்லிய கலம்பகம் சொல்லில், ஒருபோகு
> முதற்கண் வெண்பாக் கலித்துறை புயமே
> அம்மனை ஊசல் யமகம் களி மறம்
> சித்துக் காலம் மதங்கு வண்டே
> கொண்டல் மருள்சம் பிரதம் வெண்துறை
> தவசு வஞ்சித் துறையே இன்னிசை
> குறமே அகவல் விருத்தம் எனவரும்
> செய்யுட் கலந்துடன் எய்திய அந்தம்
> ஆதி யாக வருமென மொழிப*     213

* இச்சூத்திரம் வேறுவேறு வடிவத்திலும் காணப்படுகிறது.

தேவர்க்கும் முனிவர்க்கும் காவல்அர சர்க்கும்
நூறு தொண்ணூற் றைந்துதொண் ணூறே;
ஒப்பில் எழுபது அமைச்சிய லோர்க்கு;
செம்பிய வணிகர்க் கைம்பது; முப்பது
வேளா ளர்க்குஎன விளம்பினர் செய்யுள். 214

முதற் செய்யுள் கலம்பக உறுப்புக்களையும், இரண்டாவது பாடல் தொகையையும் வரையறுக்கின்றன. உறுப்புக்கள் என்ற விடத்து, பொருளும் யாப்புவிசேடமும் சேர்த்துச் சொல்லப் பட்டுள்ளன. புயம், அம்மனை, ஊசல், களி, மறம், சித்து, காலம், மதங்கு, வண்டு விடுதூது, மேகவிடு தூது, சம்பிரதம், தவம், குறம் என்னும் பதின்மூன்றும் பொருளால் வந்த உறுப்புக்கள். ஒருபோகு, வெண்பா, கலித்துறை, யமகம், வெண்துறை, வஞ்சித் துறை, இன்னிசை வெண்பா, அகவல், விருத்தம் என்பன யாப் பமைதிகள். (ஒரு பாடபேதத்தில் மடக்கும் சொல்லப்பட்டுள் ளது.) பொதுவாக, கலம்பகங்கள் யாவும் ஒருபோகு கொச்சகக் கலிப்பாவில் தொடங்கி அந்தாதியாக மண்டலித்து வருவதே இயல்பாகக் கொண்டவை. யாப்பமைதி, கலம்பகம் என்ற பெயருக்கேற்ப, பல்வகைப் பாக்களும் பாவினங்களும் தொகுத் தமைக்கப் பெறுவதாகும்; ஆகவே அவற்றை உறுப்பெனக் கருதுதல் பொருந்தாது. கலம்பக உறுப்புக்கள் 18 என்று பின் வந்த இலக்கணங்கள் கூறும்:

வைக்கும் தவம்புயம் வண்டம்மனை பாண்மதங்கு
கைக்கிளை சித்தூசல் களிமடக்கூர் – மிக்கமறம்
காலம் தழை இரங்கல் சம்பிரதம் கார் தூது*
கோலும் கலம்பகத்தின் கூறு.

என்ற வெண்பாப் பாட்டியல் 18 உறுப்புக்களையும் கூறுகிறது. இதன்படியுள்ள பாண் கைக்கிளை மடக்கு ஊர் தழை இரங்கல் என்பன பன்னிரு பாட்டியலுள் சொல்லப் பெறவில்லை; இங்கும், மடக்கு என்பது ஒரு செய்யுட் சொல்லணியேயன்றிப் பொருளால் வரும் உறுப்பன்று. மடக்கை நீக்கியே 18 உறுப்புக்கள் உள்ளன. பன்னிரு பாட்டியல் கூறும் குறம் என்பது பிற்காலத் தில் குறவஞ்சி என்ற பிரபந்தமாகப் பெரிதும் வளர்ந்து விட்டது; வெண்பாப்பாட்டியல் இதைச் சொல்லவில்லை. இன்னும் பிற்காலத்தில் புலவர் தங்கள் மனம் போல் அதிகமான உறுப்புக் களைச் சேர்த்துப் பாடியிருக்கிறார்கள்.

---

* கார்தூது மேகவிடுதூது என ஒரே உறுப்பாய் கொள்ளப்படும்.

இரண்டாவது சூத்திரம் கலம்பகம் எத்தனைப் பாடல் களுடையது என்பது கூறுகிறது. தெய்வம் 100; முனிவர் 95; அரசர் 90; அமைச்சர் 70; வணிகர் 50; வேளாளர் 30; ஆனால் இவ்வெல்லை என்றும் ஆட்சியில் இருந்ததில்லை.

## கலம்பகம் என்ற சொல்

கலம்பகம் என்ற சொல், இன்று பல நிறமும் மணமும் கொண்ட மலர்களையும் இலையையும் கலந்து தொடுத்த கதம்பம் என்று சொல்வது போல, பலவகையான மலர்களைக் கொண்டு தொடுத்த ஒரு மாலை; பலவகையான பாக்களால் தொடுத்த ஒரு பாமாலையாகும். 'களிவண்டு மிழற்றிய கலம் பகம் புனைந்த அலங்கலந் தொடையல்' என்பர் தொண்டரடிப் பொடியாழ்வார்; இது நந்திக் கலம்பகத்துக்குக் காலத்தால் முற் பட்ட சொல்லாட்சி. வடமொழியில் கதம்பம் கதம்பகம் என்ற வடிவங்கள் கடம்ப விருட்சத்தையும் ஒரு தொகுப்பையும் குறிக்கும் சொற்கள்.

> கலாவல் கலம்பகம் அளாவல் சங்கீரணம்;
> நிலாவும் அதற்கே நிகழ்த்துவ மேலோர்.

என்பது கலத்தல் என்ற பெயருக்குரிய இரண்டு சூத்திரங்களில் ஒன்று. இப்பொருளைப் பிங்கலந்தை சொல்லவில்லை. பிற்கால நூல்களிலும், இப்பொருளில் கலம்பகம் என்று சொல்லைக் காணலாம். ஈடு (13ஆம் நூற்றாண்டு) கலம்பக மாலை என்று கூறும். பெரும்பாணாற்றுப் படையுரையில் 'பல்பூமிடைந்த படலைக்கண்ணி' என்ற வரிக்கு நச்சினார்க்கினியர் (14ஆம் நூற்றாண்டு) 'பல பூக்கள் கலந்து நெருங்கிய கலம்பகமாகிய மாலை' என்று எழுதுகிறார். கலம்பகம் என்று ஒரு கணித நூல் இருந்தது என்று கணக்கதிகாரம் (15ஆம் நூற்றாண்டு) குறிப்பிடுகிறது. யாப்பருங்கல விருத்தியுரைகாரர், 'மந்தரமும் தானோரும்' என்ற இரு வெண்பாக்களைத் தந்து, இவை எல்லா அடியும் எழுத்தொவ்வாது வந்தமையாற் கலம்பக வெண்பா என்று எழுதுகிறார்; பொருளாவது பல வகைச் சீர்களும் கலந்து வரும் வெண்பா என்பதே. யாவும் பல்வகைப்பட்ட பொருளின் தொகுப்பு என்பதையே உணர்த்துவன.

இவ்வாறு கலம்பகம் என்ற நூல் பலவகை உறுப்புக்களைக் கொண்டது மட்டுமல்ல; அகப்பொருள் புறப்பொருள் என்ற இருவகைப் பொருளையும் அதிகமாய்க் கொண்டு இயல்கின்றது. இவற்றுள் நவரசம் என்று சொல்லப்படும் ஒன்பது சுவைகளும்

பொருந்தி நிற்கும். இவற்றுக்கு மேலாக, அதிகமான யாப்பு வகைகளையும் கொண்டு இயல்கின்றது. இவ்வியல்பைப் பார்க்கும்போது ஒரு கருத்து எழுகின்றது. 11ஆம் நூற்றாண்டில் எழுந்த யாப்பருங்கலம், புதிதாகப் பல வகை யாப்புக்களுக்கு இலக்கணம் வகுக்கின்றது. அதன் விருத்தியுரையானது அவ்விலக் கணத்தை விரித்துரைக்கும் முகமாக, எண்ணற்ற செய்யுளியற் சூத்திரங்களையும் பாட்டியற் சூத்திரங்களையும் மேற்கோளாக எடுத்துத் தருவதோடு, பின்னும் பல இலக்கண நூல்களையும் மரபுகளையும் விளக்கிச் சொல்கிறது. இந்நூல்கள் யாவும் 11ஆம் நூற்றாண்டுக்குக் காலத்தால் முற்பட்டவை என்பது தெளிவு. அவிநயனார், நற்றத்தனார், வாய்ப்பியனார், காக்கை பாடினி யார் போன்ற சிலர் அகத்தியனாரின் மாணாக்கர், தொல்காப்பிய ரோடு உடன்ட:யின்றவர் என்றெல்லாம் கதைகள் எழுந்துள்ள போதிலும், இவற்றுக்கு எவ்வகையான ஆதாரநூலும் இல்லை. அகத்தியனார் பெயராலேயே ஒரு பாட்டியலும் சொல்லப்படு கிறது. இவ்வகத்தியர் தொல்காப்பியருக்கு முற்பட்ட அகத்தி யருமல்லர். இவற்றை நன்கு ஊன்றிப் பார்க்கும்போது, கடைச் சங்க காலத்தின்பின் பலவகையான செய்யுளிலக்கணங்களும் தோன்றத் தொடங்கின என்று காண்கிறோம். இவ்வகத்தியர் இவருடைய மாணாக்கர் முதலானோர் காலம் எட்டாம் நூற்றாண்டாகலாம்.

ஒன்பதாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இப்பாட்டியல் களுள் சிலவேனும் வழக்கத்தில் இருந்தன. தமிழ் கற்றவர்கள் தமக்கு முற்பட்ட நூல்களையெல்லாம் நன்கு கற்பது இயல்பு. நந்திக் கலம்பக ஆசிரியர் இப்பாட்டியல் இலக்கணங்களை நன்குணர்ந்தவர். பெரும்புலமை படைத்தவராதலினாலே, தாம் கற்ற இலக்கணத்தை மனத்தில் வைத்து, ஒரு புதிய நூல் நெறியை வகுத்துக் கொண்டார் என்று தெளிவாய்த் தெரிகிறது. இவர் காலத்துக்கு முன் சிலப்பதிகாரம் பெருங்கதையை யொத்த பேரிலக்கியங்களான பெருங் காப்பியங்களும், பாண்டிக் கோவையை யொத்த சிற்றிலக்கியங்கள் சிலவும் இருந்தன. இரட்டை மணிமாலை (காரைக்காலம்மையார்) இருந்தது; மும்மணிக் கோவை (சேரமான் இளம்பெருமானடிகள், அதிரா வடிகள்) இருந்தது; கோவை (பாண்டிக்கோவை) கட்டளை கலித்துறையொன்றையுமே பயன்படுத்திற்று; மற்ற இரண்டும், முறையே இரண்டு மூன்று செய்யுள் விகற்பங்களைப் பயன் படுத்தின. செய்யுளியல் இலக்கணங்களால் தெரியவந்த அதிக

மான செய்யுள் விகற்பங்களைப் பயன்படுத்தி யாரும் முழு நூல் செய்யவில்லை. நம் கலம்பகவாசிரியர் தாமே இவ்வாறு முதன் முதலாகச் செய்ய முன் வந்தாரென்று நாம் துணிந்து சொல்ல லாம். எல்லாம் கலந்தது என்று பொருள்படுகின்ற கலம்பகம் என்ற சொல்லையும் படைத்து, அதற்குப் பொருந்த முன் காட்டியபடி பல செய்யுள் விகற்பங்கள் பொருள் வகைகள் எல்லாம் அமைத்துக் கொண்டார்.

கலம்பக உறுப்புக்கள் இந்நூலில் பதின்மூன்று உள்ளன; இந்த நூல் இலக்கணம் ஏற்படுமுன் தோன்றியதாகும். இலக் கணம், இங்கு கண்டவற்றை இன்னும் பெருக்கிக் கூறுகிற தென்று நாம் கொள்ள வேண்டும். இவருக்கு முன் இப்படிப் பட்ட இலக்கியம் எதுவும் எழவில்லை. யாப்பு இலக்கணம் இவருக்குத் தெரிந்தது மட்டுமல்ல; எத்தனை செய்யுள் விகற் பங்கள் உண்டோ அத்தனையும் வைத்துப் பாடுவது, பாடுங் கவிஞருக்கும் ஓர் உவப்பு அளிக்குமல்லவா!

### பாடல் தொகை

நந்திக் கலம்பகத்தின் பாடல் வரையறை குறித்துச் சில சொல்லத்தக்கன. பின் வந்த இக்கணத்தை வைத்து (தேவர்க்கும் என்ற பாடல்) பதிப்பாளரான கோபாலையர் (1927), ‘இதில் பாடல்கள் 90 இருக்க வேண்டும்; 89, 90 இரண்டும் இல்லை; பழைய பதிப்பிலும் கையெழுத்துப் பிரதிகளிலும் மிகைப் பாடல்கள் பல உள்ளன’ என்று எழுதியிருக்கிறார். 90 என்ற பாடல் வரையறையை எஸ். ராஜம் பதிப்பும் ஒப்புக்கொண்டு பேசுகிறது. 1872 பதிப்பில் எந்த வரையறையும் கணக்கிடவில்லை; ஏட்டில் கண்டபடி தொடர்ந்து 110 பாடல்கள் அச்சிடப்பட் டுள்ளன. பழம் பதிப்பில் உள்ள ‘வாழும் நாளிலே’ என்ற ஒரு பாடல், கலம்பகத்துக்குரியதன்று; இதை விலக்கி, இறுதியில் ‘வாரூரும் மென்முலை’ என்ற ஒரு பாடலை ஐயர் சேர்த்திருக் கிறார். வேறுபாடு இவ்வளவே. மிகையென்று சொல்லும் பாடல் கள் சிலவற்றில் அந்தாதித் தொடையும் காணப்படுகிறது. நந்திக் கலம்பகம் பாடியவருக்கு, 90 என்ற வரையறை பொருந்தாது. மிகை என்று சொல்லப்படும் பாடல்களின் சிறந்த கவிச்சுவை யைப் பார்க்கும்போது, இவையும் நூலுக்குரியன என்றே கருத வேண்டும். 110 பாடல்களும் ஆசிரியரே பாடியிருக்கலாம். ஒரு கால் சில இடங்களில் இவரே அந்தாதி முறையை மேற்கொள்ள வில்லை போலும்.

நூலை 88 பாடல்களில் முடித்து, முற்கூறியபடி ஏனைய மிகைப்பாடல் என்றே பதிப்புக்களில் காட்டப்பட்டன. பாயிரம் மூன்று பாடல், பழம் பதிப்புக்களில் காணப்படுவது, மும்மைப் புவனம், பொருப்பரையன் மடப்பாவை திருவாணியைக் குருவை - என்பன. இவற்றுள் இரண்டாம் பாடலில்தான் நந்தியின் பெயர் சொல்லப் பெறுகிறது; மற்றவற்றில் இல்லை. இது ஒன்றே கலம் பகத்துக்குரியது. மற்ற இரண்டும், இக்கலம்பகத்துக்கு உரிய பாடல்கள் அல்லவென்றே தோன்றுகின்றன. அவற்றைப் பின்னே காண்க. (முதற் பாடல் பிற்காலப் பாடல்).

மும்மைப் புவன முழுதீன்ற முதல்வி யோடும் விடைப்பாகன்
அம்மை தருக முத்தமென அழைப்ப ஆங்கே சிறிதகன்று
தம்மின் முத்தங் கொளநோக்கிச் சற்றேநகைக்கும் வேழமுகன்
செம்மை முளரி மலர்த்தாளெம் சென்னி மிசையிற் புனைவாமே.*

கரியின் முனம் வரும்
அரியின் மலர்ப்பதம்
உருகி நினைபவர்
பெருமை பெறுவரே

இரண்டாம் பாடல், பண்டைய ஏடுகளில் காணப்படும் கணபதி துதியாகவும் கலைமகள் துதியாகவும் வரும் பல பாடல்களில் ஒன்று; இக்கலம்பகத்துக்குரியதன்று. 1872 பதிப்பை அச்சிட்டோர் (பெயர் காணவில்லை) முதல் பாடலாகிய ஒரு போகு கொச்சகக் கலிப்பாவை இரண்டாகப் பிரித்து சுரிதகத்தை ஒன்று என எண்ணிட்டு நூலோடு சேர்த்து, முன்னுள்ள தனிச் சொல் வரையில் பாயிரத்தோடு சேர்த்திருக்கிறார்; இது பிழை என்பது வெளிப்படை. மிகைப் பாடல்களில் 16ஆம் பாடல், நடையாலும் பொருளாலும், இக்கலம்பகப் பாடல் அல்ல என்பது தெளிவு.

சதிராக நந்தி பரன்றனைக் கூடிய தையலரை
எதிராக்கி என்னை இளந்தலை யாக்கியென் னங்கமெல்லாம்
அதிராக்கித் தூசும் அழுக்காக்கி அங்கமங் காடிக்கிட்ட
பதராக்கி என்னையும் பற்றாம லாக்கிய பாலகனே. மிகை 16

17-18 நூற்றாண்டுகளில், பண்டைய நூல்களின் அமைப்பை யொட்டியே தனிப் பாடல்களாகப் பல பாடப்பட்டுள்ளன. அவற்றுள் இதுவும் ஒன்று; இது நூலின் 53ஆம் பாடலைத்

* இப்பாடல் எஸ். ராஜம் பதிப்பில் தனிப் பாடல் 24 ஆகக் காட்டப்பட்டுள்ளது. பாடல்களின் எண், ராஜம் பதிப்பு.

*தழுவியது. ராஜம் பதிப்பில் இறுதியில் மூன்று மிகைப் பாடல்களைச் சேர்த்திருக்கிறார்கள். அவற்றுள் முதல் பாட்டு, குறம் என்ற உறுப்பு; ஆனால் இப்பாடல் பிற்கால நூல்களைத் தழுவிச் சேர்த்த இடைச்செருகல். மற்ற இரண்டும் இக்கலம்பகத்துக் குரியவை அல்ல; தனிப்பாடல்களே. உள்ள பாடல்களிலும் 76ஆம் பாடலின் பின்னிரு வரிகள் கிடைக்கவில்லை.*

*இந்நூற் பாடலொன்று களவியற் காரிகையுரையில் மேற்கோளாய் வந்துள்ளது.*

*மிகைப் பாடலொன்றைச் சுட்டி, நந்தியின் மீது ஒரு கோவை பாடப் பெற்றிருந்தது என்று சொல்லவும் கேட்கிறோம்.*

- இந்தப் புவியில் இரவலர் உண்டென்பதெல்லாம்
அந்தக் குமுதமே அல்லவோ – நந்தி
தடங்கைப் பூ பாலன்மேல் தண்கோவை பாடி
அடங்கப் பூ பாலரானார்.

*அக்கோவைக் குரியதென்று பின்வரும் மிகைப்பாடலும் எடுத்துக் காட்டப்படுவதுண்டு.*

திருத்தேர் புகழ்நந்தி தேசபண் டாரிதெள் ளாறைவெற்பில்
மருத்தேர் குழலிக்குக் கார்முந்து மாகில், மகுடரத்னப்
பரித்தேரும் பாகுமங் கென்பட்ட வோ என்று பங்கயக்கை
நெரித்தே வயிற்றில் வைத் தேநிற்ப ளேவஞ்சி நெஞ்சுலர்ந்தே.

*இக்கூற்றுக்கள் பொதுவாய்க் கொள்ளத்தக்கன அல்ல. 'தண் கோவை பாடி' என்பது, பாடல் கோவை செய்து, பிரபந்தம் பாடி என்று பொருள் செய்யத்தக்கதே அன்றிக் கோவைப் பிரபந்தம் பாடி என்று பொருளாகாது. திருத்தேர் என்ற பாடலும், தனிப் பாடலேயன்றி, கோவைப் பாடலாகாது. ராஜம் பதிப்பில் 21-22 இரண்டும் இரு தனிப் பாடல்கள் அல்ல; வானுறு மதியை என்ற ஒரே பாடலின் வெவ்வேறு பாடபேதங்களே.*

*பிற்காலப் பிரபந்தங்களில் 100க்கு அதிகமான செய்யுள் உடையனவும் உள்ளன. உதீசித்தேவர் செய்த திருக்கலம்பகம் (110 பாடல் உடையது 15ஆம் நூற்றாண்டு) ஆமாத்தூர் (14 நூ.) புள்ளிருக்கு வேளூர் (17 நூ.) மதுரை (17 நூ.) முதலியனவும் 100க்கு அதிகமான பாடல்கள் உடையன; முனிவர்க்கு 95 என்று சொல்லி யிருக்க, சிவஞான பாலைய தேசிகர் கலம்பகம் 93 பாடலே பெற்றிருக்கிறது.*

### பாட்டுடைத் தலைவர்

நந்திக் கலம்பகம் வரலாற்று நாயகனான ஓர் அரசனை நேரே உடன் காலத்தில் புகழ்ந்து பாடப்பட்ட ஒரு கலம்பகம். பிற்காலத்தில் தெய்வத்தைப் புகழ்ந்து பாடப்பெற்ற கலம் பகங்களே அதிகம். சமயத் தலைவர்களையும் ஆசாரியரையும் தெய்வமாகக் கருதிப் பாடப்பெற்ற பிரபந்தங்களும் உள்ளன. இவையும் 100 பாடல்களே கொண்டவை. எடுத்துக்காட்டு ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம் (11 நூ.) தத்துவராயர் பாடிய ஞானவினோதன் கலம்பகம் (15 நூ.) மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய அம்பலவாண தேசிகர் கலம்பகம் முதலாயின. ஆளுடைய பிள்ளையார் கலம்பகம் அபூர்த்தியான நூல். 49 பாடலே உடையது. திருக்கலம்பகம் திருப்பாதிரிப் புலியூர்க் கலம்பகம் முதலியன தெய்வத்தின்மீது பாடப் பெற்றவை. பாடப் பெற்ற தெய்வங்கள் - சிவபிரான் திருமால் முருகன் அருகன். 17-18ஆம் நூற்றாண்டுகளில் அரசியல் தலைவர் மீது பாடப் பெற்ற கலம்பகங்களும் பல.

### கலம்பக உறுப்புக்கள்

இவை யாவை என்பது முன்னமே சொல்லப்பட்டது. இப்போது ஆராய்கிற கலம்பகமே முதற் கலம்பகமாதல் பற்றி, உறுப்புக்களைக் குறித்த சிறு விளக்கமும் இங்குத் தருகிறோம். பின்வரும் உறுப்புக்கள், நந்திக் கலம்பகத்துள் காணும் உறுப்புக்கள்.

ஒருபோகு: முற்கூறியவாறு இது உறுப்பன்று, யாப்பு விகற்பமே.*

தூது: பிரிவு நிலையில் தலைவி தன் நிலையைத் தலைவ னுக்கு உணர்த்துமாறு உயர்திணை பொருள்களையும் அஃறி ணைப் பொருள்களையும் விடுத்தல். பிற்காலத்தில் இப்பெயரால் தனிப்பிரபந்தங்கள் எழுந்துள்ளன. தூதுவிடற்குரிய பொருள்கள் பத்து என்பது பிற்கால இலக்கணம். அவற்றுக்கும் அதிகமான பொருள்களும் பிரபந்தங்களுள் காணப்படும். இங்கு குருகுவிடு தூது, மேகவிடு தூது இரண்டும் காணப்படுகின்றன. (3, மிகை. 17).

புயவகுப்பு: தலைவனுடைய புயங்களின் ஆற்றலை வருணித்தல். இவை இன்னின்ன வெற்றிகளைக் கொண்டன என்று சுருக்கியுரைத்தல் (7).

---

* பக்கம் 270 காண்க.

இரங்கல்: தலைவனைப் பிரிந்து தனித்துறையும் தலைவி பிரிவாற்றாது கடல் கழி புட்கள் முதலியவற்றை நோக்கி இரங்கிக் கூறுவது. காமமிக்க கழிபடர் கிளவி என்பது. இங்கு வாடை கண்டு இரங்கல் (8, 9, 59, 72-73, 88).

மடல்: தலைவி மீது காதல் கொண்ட தலைவன் மடல் கொண்டு தான் அந்நோயை வெற்றி கொள்ள முடியுமென்று முடிவு செய்தல் (18). இதற்குமுன் மடற் பிரபந்தங்கள் தனியே இருந்தன. இருப்பினும், பின்னே இதை ஒரு கலம்பக உறுப் பாகக் கருதியதில்லை.

ஆற்றுப்படை: பாடல் 23 இவ்வாறு கருதத்தக்கது. ஊசல்: ஆடாமோ ஊசல் என்று மகளிர் பாடுவது (29). இந்நூற்றாண் டிலேயே மாணிக்கவாசகர் திருவாசகத்தில் திருப் பொன்னூசல் என ஒரு பதிகமே பாடியிருக்கிறார்.

காலம்: பருவ நிகழ்ச்சிகளைக் கண்டு அவற்றின் தன்மை நோக்கி, பிரிந்திருக்கிற தலைவி காலம் என்றே அடிதோறும் பாடி இரங்குகின்ற பாடல். இளவேனிற் காலம் (56), கார் காலம் (மி.11), முதுவேனில் (மி.12).

சம்பிரதம்: இந்திரசாலவித்தை வல்லவனொருவன் தன் பெருமையைத் தானே பாடுதல் (64).

மதங்கு: இசைக்கும் கூத்துக்கும் உரியது மதங்கர் குலம்; இருகையிலும் வாளேந்தி இக்குல மகளிர் சுழன்று ஆடுவர். இவள் கூத்தைக் கண்டு காமுற்ற ஒரு காதலன் பாடுவது (70).

மறம்: ஒரு மறவர் குலப்பெண்ணை மணம்புரிய விரும்பி அரசனொருவர் தூதனுப்ப, அம்மறவர் குடியினர், மணம் மறுத்து, அரசனை இகழ்ந்து பேசித் தூதனை அனுப்பிவிடுவது (77, மி. 25).

பாண்: தல்லவன் தூதாக வந்த பாணனைத் தலைவி பழித் தல் (மி. 13).

இவ்வாறு ஆராயும் போது, இக்கலம்பகத்தில் காணும் உறுப்புக்கள் 11. பிற பாடல்கள் அகத்துறையிலும் புறத்திணை யில் நந்தியின் வெற்றி கொடை புகழ்களைக் கூறும் முறையிலும் அமைந்துள்ளன. பிற்காலத்தில் எண்ணற்ற புது உறுப்புக்களைப் புலவர்கள் படைத்துள்ளனர். எவ்வுளூர் ராமசாமிச் செட்டியார் தாம் செய்த திருவிடை மருதூர்க் கலம்பகம் திருக்காளத்திக் கலம்பகம் முதலியவற்றில் அதிகமான உறுப்புக்களை அமைக்

கின்றார். யாவும் ஒரு பெண்மீது காதல் கொண்ட தலைவன் கூற்றாகவே இருக்கும். பிற்கால உறுப்புக்களிற் சில: இடைச்சியார், கீரையார், கொற்றியார், பிச்சியார், யோகினியார், வலைச்சியார் முதலாயின. சிலேடைகளும் பல காணப்படும். கலம்பகத்திற் கிரட்டையர்கள் எனப் பெயர் பெற்ற இரட்டைப் புலவர் தமது தில்லைக் கலம்பகம் திருவாமாத்தூர்க் கலம்பகம் என்ற இரண்டிலும் கீரையார் தவிர ஏனைய உறுப்புக்களைப் பாடியிருக்கிறார்கள்.

### நூலின் வரலாறு

தொண்டை மண்டல சதகத்தை உரை எழுதிப் பதிப்பித்த சி. கு. நாராயணசாமி முதலியார் இரண்டு சதகப் பாடல்களை விளக்குமிடத்து நந்திக் கலம்பகத்தின் தோற்றுவாய் பற்றிய இரு வரலாறுகளைக் குறிப்பிடுகிறார். இரண்டிலும் தமிழ்ச் சுவை தேருகின்ற சிறந்த கலைப் பண்புடைய நந்திவர்மன் தமிழுக்காகவே தெரிந்து தன் உயிரைக் கொடுக்கிறான் என்பதே பொருள்.

இவன் சக்கரவர்த்தியாய் இருந்த காலத்தில், அரசைப் பறிக்க வேண்டும் என்ற துராசை கொண்ட தம்பி ஒருவன் இருந்தான். போரிட்டு அரசைப் பெற முடியாதபோது சூழ்ச்சியினால் தமையனை மாய்க்கக் கருதினான். 'அறம் பாடுதல்'* என்று சொல்லுகின்ற முறையில், வசைக்குறிப்புக்களைத் தன்னகத்தே கொண்ட பல பாடல்களைக் கொண்டு ஒரு கலம்பகம் பாடுவித்தான். அதை இசையோடு பாடவல்ல ஒரு புலவனுக்குக் கற்பித்து நந்தியின் அந்தப்புரத்துச் சுவர் ஒன்றில் தொளை செய்து வெளியே இருந்து புலவன் இனிமையாகப் பாட, நந்தி கேட்குமாறு செய்தான். கேட்ட நந்தி, இந்தப் பாடலைத் தன்னகத்துக் கொண்ட நூல் முழுவதையும் கேட்கும் எண்ணம் உடையவன் ஆனான். மறுநாள் இரவு வீதியில் இவன் சென்றபோது இதே பாட்டை அத்தம்பி தன் தாசியைக் கொண்டு பாடிக் கொண்டிருக்கச் செய்தான். கேட்டுக் கொண்டே சென்ற நந்தி, மறுநாள் அவளைத் தன் அவைக்கு அழைத்து விசாரித்த போது, அவள் இது கலம்பகப் பாட்டில் ஒரு பாட்டு என்றும், கலம்பகம்

* பாட்டுடைத்தலைவன் அழிதலைக் கருதி, தீச் சொற்களைப் புணர்த்தும், தீய பொருத்தங்களை அமைத்தும் பாடல் பாடுதல். இதன் விளக்கத்தைப் பிங்கல நிகண்டிலும், பாட்டியல்களில் பொருத்தவியல் என்ற பகுதியிலும் காணலாம். அறம்பாடுதல் என்ற தொடர் மிகவும் பிற்காலத் தொடர்.

நூறு பாடல் கொண்டது என்றும், கேட்பதானால் மயானத் தளவும் நூறு பந்தர் அமைத்து மயானத்தில் சிதையடுக்கிச் சிதையின்மேல் நந்தி இருந்து கொண்டு கேட்க வேண்டும் என்றும், தனக்கு நந்தியின் தம்பி சொல்லிக் கொடுத்திருந்தபடி, சொன் னாள். அப்படியே அரசன் அதற்கு ஆவன செய்து, அமைச்சர் ஆகியோர் தடுத்தும் கூடக் கேட்காமல், சிதை மேலிருந்து கேட் டான். அவள் ஒவ்வொரு பாடலாகப் பாடிவர, ஒவ்வொரு பந்த ராக எரிந்து சாம்பலாயிற்று. நூறாவது பாடல், நந்திவர்மன் உலகத்துப் பொருள்கள் அனைத்தையும் கடை போகப் பெற்று விட்டான். தனக்கு இனி யாதுகதி என்று தம்பி கேட்பது போல அமைந்திருப்பது:

வானுறு மதியை அடைந்ததுன் வதனம்,
வையக மடைந்ததுன் கீர்த்தி,
கானுறு புலியை அடைந்ததுன் வீரம்,
கற்பகம் அடைந்தவுன் கரங்கள்,
தேனுறு மலராள் அரியிடம் சேர்ந்தாள்,
செந்தழல் புகுந்ததுன் மேனி;
யானுமென் கலியும் எவ்விடம் புகுவேம்?
எந்தையே, நந்தி நாயகனே! மிகை 21

கேட்ட நந்தி இவ்வளவு சிறந்த கவி இன்பம் அனுபவித்த பின் வாழ்க்கை நிறை வெய்தியதாகக் கருதிச் சிதைக்குத் தீயிடுமாறு கட்டளையிட்டான். சிதை தீப்பற்றி எரியவே, மன்னன் இறந்து போனான்.* இந்த வரலாற்றைச் சதகம் (31) குறிப்பிடுகிறது.

பொள்ளா நுழைவழி போய்த்தலை நீட்டும் புலவன் முன்னாள்
கள்ளாறு செஞ்சொற் கலம்பக மேகொண்டு காயம் விட்ட

---

* வடமொழி இயக்கத்தில் இதுபோன்ற வரலாறு ஒன்று சொல்லப் படும். 11ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த காசுமீரக் கவிஞனான பில்ஹணன், சௌரபஞ்சாசிகை என்ற பெயரில் ஒரு திருடனைப் பற்றி 50 பாடல் பாடியிருக்கிறான். இவன் ஓர் அரச குமாரியிடம் கள வுக் காதல் பூண்டிருந்தான். இவர்கள் செய்தி அம்பலமாகி அரசன் இவனுக்குச் சிரசாக்கினை விதித்திருந்தான். கொலைக் களத்துக் கொண்டு போகும்போது இவன் இந்த 50 பாடல்களைப் புனைந் தான். பாடல் ஒவ்வொன்றும் 'இன்றும் என் நினைவி லெழுகிறது' என்ற தொடக்கமுடையது. தன் காதலின்பத்தை அழகிய பாடல் களில் மிகவும் உருக்கமாகப் பாடினான். கேட்ட அரசன் இதன் கவிச் சுவையில் உருகி, புலவன் கொண்ட காதலை மன்னித்துத் தண்ட னையை நீக்கித் தன் மகளை அவனுக்கே மணம் செய்து கொடுத்தான் - ஆர்தர் மாக்டனல், சமஸ்கிருத இலக்கிய வரலாறு 1965, பக்கம் 185-6.

தெள்ளாறை நந்தி யெனுந்தொண்டை மான்கலி தீர்ப்பதற்கு
வள்ளார் முரசம் அதிர்த்தாண் டதுந்தொண்டை மண்டலமே.

*சிவஞான சுவாமிகள் இக்கதையைத் தமது சோமேசர் முது மொழி வெண்பாவில் 'வில்லேர் உழவர் பகை கொள்ளலாகாது' என்பதற்கு உதாரணமாக எடுத்துக் காட்டுகிறார்.*

நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்,
சுந்தரம்சேர் தென்குளத்தூர்ச் சோமேசா! – சந்ததமும்
வில்லே ருழவர் பகைகொளினும் கொள்ளற்க,
சொல்லே ருழவர் பகை.

*மற்றொரு வரலாறு பின் வருவது: நந்திவர்மன், தந்தை யாகிய தந்திவர்மனுடைய முறை மகன் அல்ல; பரத்தையால் பிறந்த மகன் என்பர். இவனிடமிருந்த அபிமானத்தால் அரசன் இவனைத் தனக்குப் பின் அரசனாக்கினான். இது கண்டு கோப முற்ற மக்களும் இவனைக் கொல்ல முயன்றனர். தந்திவர்மனது முறைப் புதல்வன் குலமகன் என வழங்கப்பெற்றான். அவன் நந்தியைக் கொல்லும் பொருட்டு மறைமுகமான வசை நிறைந்த இந் நூலைப் பாடினான். இந்நூலின் தன்மையறிந்து அதை யாரும் பாடலாகாது என்று அமைச்சர் தடுத்து வைத்தனர். ஒரு நாள் இரவில் குலமகன் இதை பாடிக் கொண்டிருந்த போது நந்தி கேட்டான். கேட்ட பாடல் 'செந்தழலின் சாற்றை' (மிகை 15) என்பது. முதல் பாதியை இவன் கேட்டு அதன் சுவை யில் ஈடுபட்டுக் குலமகனைக் கூவி, முழுமையும் பாடி முடிக்கும் படி சொன்னான். அவனும் முறையாகப் பாடி முடித்து, இது 'நூறு பாடல் கொண்ட நூல் என்றும் சொன்னான். அரசன் அதைச் சொல்லும்படி கேட்க, சிதையின் மேல் இருந்து கேட்க வேண்டும் என்று அவன் சொல்ல, நந்தியும் அப்படியே இருந்து கேட்டு, முடியும்போது சிதையில் தீ மூட்டச் செய்து உயிர் விட்டான்.* உயிர்போகும் தருணம், குலமகனை அழைத்துத் தன் முத்திரை மோதிரத்தைக் கழற்றி அணிந்து கொள்ளும்படி*

---

* *இவன் உயிர் துறப்பானா மாட்டானா என்பது ஆராய்ச்சிக்குரிய பொருள் அன்று. கலையில் உள்ளம் பறிகொடுத்தான். உயிரை கொடுக்கிறான். கவிதை கலைகளுள் சிறந்தது. தெய்வத்திடம் உள்ளத்தைப் பறிக்கொடுத்தவர் உயிரையும் பறிகொடுக்கிறார் என்பது தமிழ்ப் பக்தி இலக்கிய மரபு. சுரங்களைக் கண்டவர்கள் மற்றொன்றினைக் காணாவே என்று பாடி, திருப்பாணாழ்வார் சுரங்களோடு ஐக்கியமாகி விட்டார் என்பது வைணவ பரம்பரை வரலாறு. இதுவும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.*

*பணித்து விட்டு உயிர்விட்டான். பின் அந்நாட்டில் இருந்த கொல்லாபுரிச் சந்திரன் என்பவன் முடியை எடுத்துக் கவிக்கக் குலமகன் முடிசூடி அரசனானான்.*

வெல்லாமல் வென்றுநற் சந்தனக் காட்டத்தின் மேலிருந்து
நல்லாறை நந்தி கலம்பகங் கேட்டபி னற்றுணைக்குக்
கொல்லா புரிச்சந்திரன் மாமுடி சூட்டக் குடைகவித்து
மல்லார் புரித்தொண்டை மானான துந்தொண்டை மண்டலமே.

*இரண்டு பாடல்களிலும் வரும் கதையின்படி, கலம்பகத்தைக் கேட்டு நந்தி உயிர் விட்டான் என்பதே பொருள். இவன் தம்பிக்கு இடம் கொடாது தான் அரசாண்டவன் என்பதைக் கதை சொல்பவர்:*

கொம்புயர் பைம்பொன் நாகமெதிர் வந்த நந்தி
குலவீர ராக மழியத்
தம்பியர் எண்ண மெல்லாம் பழுதாக வென்ற
தலைமான வீர துவசன்,
செம்பியர் தென்னர் சேரர் எதிர் வந்து மாயச்
செருவென்ற பாரி, முடிமேல்
வம்புயர் தொண்டை காணும் மடமாதர் தம்கை
வளைகொண்ட தென்ன வலமே. **81**

*என்ற கலம்பகப் பாடல் மூலம் எடுத்துக் காட்டுவர். 'தம்பியர் எண்ணமெல்லாம் பழுதாக வென்ற வீரன்' என்பது, நந்திவர் மனுக்குத் தம்பி இருந்து அரசைக் கவர முயன்றான் என்ற வரலாற்றுக்கு ஆதரவு தருவது என்பர்.*

*வரலாற்றுணர்வு சிறிதும் இல்லாதவர்கள் இதுபற்றி வேறொரு கதையும் கட்டிவிட்டிருக்கிறார்கள். தென்பாண்டி நாட்டில் ஒரு சிற்றரசனுக்கு நான்கு பிள்ளைகள். அவன் தன் ஊரில் இருந்த இழிகுல மாது ஒருத்தியின் அழகில் ஈடுபட்டு அவளிடம் இன்பம் துய்த்தான். அவளுக்கு ஒரு பிள்ளை; நந்தி என்பது பெயர்; அவன் அறிவில் மேம்பட்டவன். நந்தி சிறு பிள்ளையாய் இருந்தபோது, தெருவில் ஒரு நாள் செட்டி ஒருவன் விற்ற மிகவும் மதிப்பு உயர்ந்த பட்டாடையை, மூன்றாண்டுக்குப் பின் வட்டியும் முதலுமாகத் தந்து விடுகிறேன் என்று முறி எழுதிக் கொடுத்துவிட்டு வாங்கித் தன் தாய்க்கு அளித்தான். மூன்றாண் டில் கொடுக்க முடியும் என்று இவன் எண்ணியதைக் கண்ணுற்ற அரசன் மிகவும் வியப்படைந்தான். சிலநாளில் அரசன் இறக்க, நந்தி அரசன் புதல்வர் நால்வரையும் துரத்திவிட்டுத் தான் ஆட்சி*

புரிந்து வந்தான். பொற்காசுகளை நீக்கி, தோற்காசு வழங்கினான். செட்டி வந்து கேட்ட போது, தோற்காசே தந்தான். செட்டியும் அக்காசுகளைப் பண்டங்களுக்குப் பரிமாறிக் கொண்டு சென்று விட்டான். அவன் சென்ற பிறகு நந்தி மீண்டும் பொற்காசு வழங்கச் செய்தான். தோற்று ஓடிய நால்வரில் மூவர் மந்திரத் திலும், வாள் போரிலும், தந்திரத்திலும் வல்லவராகி முயன்றும் அரசைக் கைப்பற்ற இயலவில்லை. நான்காமவன் தமிழ் கற்றுப் புலவனாகி நந்தியின் உயிரைப் போக்கத்தக்க அறம் வைத்து நந்திக் கலம்பகம் பாடினான். நால்வருமாகச் சென்று கலம்பகம் கேட்கும்படி அவனை வேண்ட, அமைச்சர் முதலியோர் தடுத்தும் அவன் பொருட்படுத்தாது, கேட்டான். புலவன் கருத்தின்படி சுடுகாட்டில் சிதையடுக்கி அதன் மீதிருந்து கேட்டு வரலும் அவன் ஆவி சிறிது சிறிதாக ஒடுங்கி வந்து 'வானுறு மதியை' என்ற பாடலைப் புலவன் பாடியவுடன் நந்தியின் உயிர் பிரிந்தது. நால்வரும் அவனை வெல்ல எண்ணிய போதிலும்கூட, அவன் இறந்தமைக்கு வருந்தினர்.

இது மூன்றாவது வரலாறு, இவ்வரலாற்றைப் புனைந்தவர், நந்தி பல்லவ மன்னன் என்று கலம்பகத்தில் தெளிவாகச் சொல்லியிருப்பதையும் உணர முடியாதவர் போலும்.

வானுறு மதியை என்ற பாடலுக்கு இரண்டு வகையான பொருள். உன் வதனத்தின் பொலிவு சந்திரனுக்குத் தான் உண்டு என்பது ஒன்று. இனி அப்பொலிவு சந்திரனிடமே போய் விட்டது, உன்னிடம் இல்லை என்பது மற்றொன்று. உன் வீரம் புலியை ஒத்தது, உன்னை விட்டு நீங்கிக் காட்டுப் புலியிடமே சென்று விட்டது; உன் கைகள் கற்பகம் போல் வழங்குபவை, வழங்கும் தன்மை கற்பகத்திடமே சென்று விட்டது. இனி உன்னிடம் இல்லை; உனது அரசாளும் திரு, திருமாலுக்குரிய இலக்குமியை யொத்தது; இனி அவள் திருமாலிடமே சென்று விட்டாள். உன் மேனியின் பொலிவு நெருப்புப் போன்ற பிரகாசமுடையது, அது இப்போது நெருப்பிடமே சென்று விட்டது, உன்னிடம் இல்லை - என இதற்கு இரு வகையாகப் பொருள் சொல்லுதல் உண்டு.

எனினும், நூலே மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலும் கூட இது நந்தியிடம் எல்லாச் சிறப்பும் பெற்ற ஒரு புலவன் தனது உள்ளத்து உவகை மிகுதியினாலும் நன்றியறிவினாலும் நந்தியை அளவு படாது புகழ்ந்து பாடிய நூல் என்பது நன்கு

*புலப்படும். முதற் கலம்பகமாகிய இதையொத்த கவிதைச் சிறப்பமைந்த நூல் வேறெதுவுமேயில்லை என்பது எல்லோரும் அறிந்தது. இந்த நூல், அரசைக் கவரவேண்டும் என்ற வஞ்ச எண்ணத்தை நெஞ்சில் ஒளித்து ஒருவன் கரவாகப் பாடினான் என்பது சிறிதும் நடைபெறாதது. கதைகள் பொய்க் கதைகளே. கோபாலையர் பதிப்பில் வசைக் குறிப்புக்கள் என்று 12 இடம் காட்டியிருக்கிறார் (ப. 33). தேடிப் பார்த்தால், எந்த நூலிலும் இப்படி வலிந்து குற்றம் காணமுடியும்; ஆகவே இவை பொருத்த முடையனவாகா.*

**நூல் நயம்**

*கவிதைச் சுவையில் மிகச் சிறந்த நூல்களோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க சிறு நூல் நந்திக் கலம்பகம். அறிஞர் சிலர் கூறியுள்ளது போல, இதன் பாடல் ஒவ்வொன்றுமே கடைந்தெடுத்த முழுமணி போல்வது. எடுத்துக் காட்டாகச் சில பாடல்களை மட்டும் இங்கே காட்டுகிறோம். இந்நூலில் அகப்பொருள் பாடல்களும் புறப்பொருள் பாடல்களும் இரண்டுமே சிறப்புடையவை. மிகைப் பாடல்களும் சேர்ந்து உள்ள 115 பாடல்களில் அகப்பொருட்சுவை கொண்டவை 82 பாடல்கள், புறத்திணைக்குரியவை - யானைமறம், ஆற்றுப் படை, பூவைநிலை போன்றன 10, தலைவி நந்தியைக் கண்டு காமுற்றபோது, அவளது வளையும் கலையும் கழல்கின்றன. அவள் கூற்றாக, அந்த நிலையில் வரும் பாட்டு;*

> **எனதே கலை, வளையும் என்னதே; மன்னர்**
> **சினவேறு செந்தனிக்கோன் நந்தி – இனவேழம்**
> **கோமறுகிற் சீறிக் குருக்கோட்டை வென்றாடும்**
> **பூமறுகிற் போகாப் பொழுது.** 2

*'நந்தி வீதியிற் செல்லாமலும், அவனை நான் பார்க்காமலும் இருந்தால், கலையும் வளையும் என்னதே; பார்த்தால் தானே தாபம் மேவிடுகிறது?' என்று சொல்லுகிறாள். அவளுடைய காதல் விரகத்தைக் கண்ட தோழியர், உபசாரம் எல்லாம் செய் கிறார்கள்; வெப்பம் தணிக்கச் சந்தனத்தைப் பூசுகிறார்கள். அது அவளுக்குத் தழலாயிருக்கிறது.*

> **செந்தழலின் சாற்றைப் பிழிந்து, செழுஞ்சீதச்**
> **சந்தன மென்றாரோ தடவினார்: – பைந்தமிழை**
> **ஆய்கின்ற கோன் நந்தி ஆகந் தழுவாமல்**
> **வேகின்ற பாவியேன் மீது.** மிகை 15

'நந்திக்குரிய காவிரி நீர் ஆட்டினாலல்லவா எனது தாபம் தீரும்?' என்கிறாள்.

மாட்டாதே இத்தனை நாள் மால் நந்தி வான்வரைத்தோள்
பூட்டாதே, மல்லையர்கோன் பரியானைப் பருச்சுவடு
காட்டாதே, கைதைப் பொழிலுலவும் காவிரிநீர்
ஆட்டாதே, வைத்தென்னை ஆயிரமும் செய்தீரே!

ஆயிரமும் செய்தீரே என்பதில் அவளுடைய பெரு ஏக்கம் வெளிப்படுகிறது. நிலாவைப் பழிக்கிறாள்.

மண்ணெலாம் உய்ய மழைபோல் வழங்குங்கைத்
தண்ணுலா மாலைத் தமிழ்நந்தி நன்னாட்டில்,
பெண்ணிலா வூரிற் பிறந்தாரைப் போலவரும்
வெண்ணிலாவே! இந்த வேகம் உனக் காகாதே. மி. 18

பெண்ணிலாவூரிற் பிறந்த வெண்ணிலா என்ற கருத்து, பிற் காலத்தில் அனேகம் புலவர்களால் எடுத்து விரிக்கப்பட்டிருக் கிறது; 'பெண்ணுடன் பிறந்ததுண்டோ வெண்ணிலாவே' என்று ஒரு புலவர் கேட்பது அனைவரும் நன்கறிந்தது. பெண் இனமே இல்லாத ஊரில் (அப்படியொன்று இருக்குமானால்) பிறந்து அல்ல, பிறந்தவர்களைப் போல என்பது மிக்க பொருட் சிறப் புடையது. இதே தலைவியின் நிலை, இவள் நந்தியின் காதலைப் பெற்றபின், முழுதும் வேறாயிருக்கிறது. ஊடல் காலத்தே நந்தி இவள் காலில் வந்து விழுகிறானாம்; அவன் முடியிலுள்ள தொண் டையின் மணம், அவன் இவள் காலில் விழுந்தமையால், காலுக்கு ஏறிக் கால் பிடித்த சேடியர் கையில் இன்னமும் வீசுகிறதாம்.

என்னையா னேபுகழ்ந்தேன் என்னாதே, எவ்வுயிர்க்கும்
மன்னர்கோன் நந்தி, வரதுங்கன் – பொன்முடியின்
மேல் வருடும் தொண்டை விரைநாறும், இன்னமும் என்
கால்வருடும் சேடியர்தம் கை. மிகை 1

பிரிந்து சென்ற தலைவன் தலைவியிடம் விரைந்து வருகின் றான். மீள்கின்ற தேர் ஓடுவதாகவே அவனுக்குத் தெரியவில்லை. மனம் அவ்வளவு விரைகிறது. உயிர் தலைவியிடம் முன்னமே சென்றுவிட்டது. தேரில் வருவது உயிரற்ற வெறும் கூடுதான் என்பதை மேகங்கள் மூலமாகச் சொல்லியனுப்புகிறான்.

ஓடுகிற மேகங்காள்! ஓடாத தேரில்வெறுங்
கூடு வருகுதென்று கூறுங்கோள், – நாடியே

நந்திச் சீராமனுடை நன்னகரில் நன்னுதலைச்
சந்திச்சீ ராமாகில் தான். மிகை 17

*ஒரு தலைவன் தலைவியின் கண் வீச்சில் சிக்கி மீள அறியாது, அவள் அன்பையும் பெறவியலாது, மடலேறத் துணிகிறான்.*

ஆட்குலாம் கடற்படை அவனி நாரணன்
தோட்குலாம் மதுமலர்த் தொண்டை வாய்ச்சியர்
வாட்குலாம் கண்ணினால் வளைத்த மம்மர்நோய்,
மீட்கலாம்: மடல் கையில் விரவு மாகிலே! 18

*மிகச் சிறந்த நகைச் சுவையும் இளிவரலும் நிறைந்து ததும்பும் பாட்டு, தலைவி கூற்றாக உள்ள ஒரு வெண்பா. நகைச் சுவையைப் பற்றிய பேச்சில் இதைச் சொல்லாதார் இரார்:*

ஈட்டு புகழ் நந்தி பாண, நீ எங்கையர் தம்
வீட்டிருந்து பாட விடிவளவும் – காட்டிலெழும்
பேயென்றாள் அன்னை, பிறர் நரியென்றார், தோழி
நாயென்றாள், நீயென்றேன் நான். மிகை 13

*தெள்ளா றெறிந்தவன் என்று புகழ் பெற்ற நந்தி பற்றிய அகப் பாடல்கள் சிறப்பாக அமைந்திருத்தல் வியப்பன்று. புறப் பொருளாயுள்ள பாடல்களும் இவற்றையொத்த கவிச் சுவை கொண்டவை. நந்தியின் போர்யானையின் மருப்புக்குப் பூணணிந்த நிகழ்ச்சி எந்த நகரம் அழியப் போகிறதோ என்ற அச்சத்தைத் தோற்றுவிக்கிறது.*

அதிர் குரல மணிநெடுந்தேர் அவனிநாரணன் களிற்றின்
கதிரொளிய வெண்மருப்புக் கனவயிரம் செறிந்ததால்;
மதுரைகொலோ அடுபுலிக்கோன் நகரிகொலோ, மாளிகைசாய்ந்து
எதிரெதிரே கெடநின்றது எவ்வூர்கொல்? அறியேமால். 14

*இரண்டாம் உலக யுத்தத்தின் தொடக்க காலமாகிய 1938-39ஆம் ஆண்டுகளில் வாழ்ந்து அன்றைய யுத்த மேகங்களின் குமுறல்களைக் கேட்டவர்களுக்கு ஒரு நிகழ்ச்சி நினைவு வந்து இப்பாடலின் பாவம் மிகவும் நன்றாகப் புரியும். ஹிட்லர் அப்போது ஐரோப்பிய சிறு நாடுகள் ஒவ்வொன்றாகத் தன் படைப் பலத்தால் விழுங்கிக் கொண்டு வந்தான். ஒரு நாட்டின் மீது படையெடுப்பதற்குப் பல குற்றச்சாட்டுகளைச் சொல்லி, பாதகங்களெல்லாம் நிகழ்த்தி, பின்னர் திடீரென்று தன் விமானப் படையையும் தரைப்படையையும் ஏவி அந்நாட்டை ஒரே நாளில் விழுங்கி விடுவான். படையெடுப்புக்கு முதல் நாள் அவன்*

*தன் தலைநகரில் தனக்குப் பிடித்தமான ஒரு பீர் செல்லர் என்ற சாராயக் கிடங்கில் தன் படையினரையும் தலைவரையும் கூட்டி ஒரு சொற்பொழிவு செய்வான். இவ்வாறு பல முறை நடந்த காரணத்தால் அவன் பீர் செல்லரில் பேசுகிறான் என்றால், நாளை எந்த நாடு அழியப் போகிறது என்று உலகமே நடுங்கிற்று. இது பத்திரிகைகள் மூலம் அக்காலத்தில் நன்கு தெரிந்த செய்தி. களிற்றின் மருப்பு வயிரம் செறிந்தது என்பதும் அதையொத்த ஒரு நிகழ்ச்சி. பிற்காலத்தில் ஏகம்பவாணன் சம்பந்தமாக இப்படிப் பட்ட ஒரு பாட்டு எழுந்தது. அனைவரும் நன்கு அறிந்தது;*

அலங்கலணிமார்பன் ஆறையர்கோன் வாணன்
விலங்கு கொடுவருக என்றான் – இலங்கிழையீர்,
சேரற்கோ சோழற்கோ தென்பாண்டி நாடாளும்
வீரற்கோ யார்க்கோ விலங்கு.

*'அதிர்குரல' என்ற பாடல் விளைக்கின்ற அச்சத்தை மற்றொரு பாடலும் விளைக்கிறது:*

திருவின் செம்மையும் நிலமகள் உரிமையும்
பொதுவின்றி யாண்ட பொலம்பூட் பல்லவ!
தோள்துணை யாக மாவெள் ளாற்று
மேவலர்க் கடந்த அண்ணால், நந்தி! நின்
திருவருள் நெடுங்கண் சிவக்கு மாகில்,
செருநர் சேரும் பதிசிவக் கும்மே;
நிறங்கிளர் புருவம் துடிக்கில், நின்கழல்
இறைஞ்சா மன்னர்க் கிடந்துடிக் கும்மே;
மையில் வாளுறை கழிக்கு மாகில்,
மடங்கார் பெண்டிர்
மாண்முலை முத்தப் பூண்கழிக் கும்மே. 61

*ஆற்றுப் படையாக உள்ள ஒரு பாடலும் குறிப்பிடத்தக்கது.*

உரைவரம் பிகந்த உயர்புகழ்ப் பல்லவன்
அரசர் கோமான் அடுபோர் நந்தி
மாவெள் ளாற்று மேவலர்க் கடந்த
செருவேல் உயர்வு பாடினன் கொல்லோ?
நெருநல், துணியரைச் சுற்றிப்
பரடு திறப்பத் தன்கால்,* பல்கடைத்
திரிந்த பாணண், நறுந்தார் பெற்றுக்

---

* *அச்சில் தன்னால் என்றிருப்பது பொருளில்லை; தன்கால் என்றிருக்க வேண்டும்.*

காஅர் தளிர்த்த கானக் கொன்றையின்
புதுப்பூப் பொலன்கலன் அணிந்து,
விளங்கொளி ஆனனன், இப்போது
இளங்களி யானை எருத்த மிசை யன்னே. 23

*முற்றும் இவன் மொழியாக அமைந்துள்ள ஒரு சிலேடைப் பாடல் மிக்க நயம் பொருந்தியது. நந்தி சீறுமுன்னும் சீறிய பின்னும் பகைவர் நாடு எப்படியிருந்தது என்பதை அதே சொற்களை வைத்துப் படம்பிடித்தது போலக் காட்டுகிறார்:*

ஊரும் அரவமும் தாமரைக் காடும் உயர்வனமும்
தேரும் உடைத்தென்பர், சீறாதநாள்; நந்தி சீறியபின்பு,
ஊரும் அரவமும் தாமரைக் காடும் உயர்வனமும்
தேரும் உடைத்தென்பரே, தெவ்வர்வாழும்செழும்பதியே. மிகை 6

*உலகத்திலுள்ள பல வேந்தர்களின் முடிமீது மறைவாணர் தூவி ஆசீர்வதித்த தாளிப்புல்லை நந்தியின் அடிக்கீழ்க் காணலாம், அவ்வேந்தர் இவன் திருவடியில் வீழ்ந்து பணிவதால்:*

ஓம மறைவாணர் ஒண்பொற் கழல்வேந்தர்
தாம முடிக்கணிந்த தாளிப்புல் – கோமறுகில்
பாவடிக்கீழ்ப் பல்யானைப் பல்லவர்கோன் நந்திதன்
சேவடிக்கீழ்க் காண லாம் சென் று. 15

*ஆசிரியர் இந்நூலுள் ஒவ்வொரு பாட்டிலும் தவறாது நந்தியின் போர்ச் செய்திகளைக் குறிப்பிட்டே பாடுகிறார். செய்தி இன்றி வருணனையாக வரும் இடங்கள் மிகவும் குறைவு. பின்வருவது ஓர்அரிய வருணனைப் பகுதி:*

உண்திரையின் செங்கழுநீர் இலஞ்சி மாடே
ஒண்பொழிலின் சண்பகத்தார் தடவி ஓடி
தண்டலையில் பூங்கமுகம் பாளை தாவி
தமிழ்த்தென்றல் புகுந்துலவும் தண்சோணாடா!
விண்தொடுதிண கிரி அளவும் வீரம் செல்லும்
விடேல் விடுகு! நீ கடவும் வீதிதோறும்
திண்தெறு கண் மாத்தொழுத பாவை மார்க்குச்
செங்கோலன் அல்லையோ நீ செப் பட்டே. 74

*ஒரு தன்மையும் இங்குக் காணத்தக்கது. இந்நூல் பல்லவ மன்னன் மீது பாடப்பெறுகிறது. பல்லவர் பொதுவாக வடமொழிக்கு அதிக ஆதரவு அளிப்பவர். அவ்வியல்புக்குத் தக, இந்நூலிலும் வடமொழி ஆட்சி அதிகம் காணப்படும்.*

**ஆசிரியர்**

பெயர் தெரியவில்லை. குலமகன் என்றும் கொல்லாபுரிச் சந்திரன் என்றும் பலவாறாகச் சொல்வர்; இவற்றுக்கான கதைகள் முன் சொல்லப்பட்டன; இவை பொருந்தா. இவர் புலமை மிக்கவர்; கவிதையுள்ளம் கொண்டவர்; இலக்கிய மரபில் நன்கு தோய்ந்தவர். அகப் பொருளும் புறப்பொருளும் நன்கறிந்தவர். தமிழை நன்கு சுவைத்து இன்புறுபவர். சிவபக்தி மிக்கவர். ஓரளவு நந்தியோடு நெருங்கிப் பழகித் தோழமை பூண்டவரென்றும் கருதலாம். வேறு செய்திகள் விளங்கவில்லை.

பாடல்களை நன்கு பயிலும்போது, இவ்வாசிரியர் அறம் வைத்துப் பாடவில்லை. அரசன் மீது பகையுணர்ச்சியோடு பாட்டுக்கள் எழவில்லை என்பது நன்கு விளங்கும். நூலைப் பொறுத்தவரையில் கதைகள் பொய்க் கதைகளே. எப்படியோ இக்கதைகளுக்கு வழக்கு உண்டாகி, சிவஞான சுவாமி குறிப்பிடும் அளவுக்கு, காலத்தில் வளர்ந்துவிட்டன.

இவ்வாசிரியர் அப்பர் தேவாரத்தில் மிக்க தோய்வுள்ளவர் என்பதை அவர் பாடலொன்றைத் தழுவி இவர் பாடல் செய்திருப்பதால் அறியலாம். அகத்துறையில் ஊசலையும் கழலாடுதலையும் அப்பர் சுவாமிகள் பாடுவது மிகவும் அருமை.

ஊசலாள் அல்லள் ஒண்கழ லாள் அல்லள்
தேச மாம்திருப் பாண்டிக் கொடுமுடி
ஈச னேஎனும் இத்தனை யல்லது,
பேசு மாறறி யாள், ஒரு பேதையே. 5–81–3

இதன்கண் உள்ள ஊசலையும் ஒண்கழலையும் கலம்பக ஆசிரியர் அப்படியே எடுத்துப் பாடுகிறார்:

ஊசல் மறந்தாலும், ஒண்கழல் அம்மானை
வீசல் மறந்தாலும், மெல்லியல் என்பேதை
பூசல் இலங்கிலைவேல் பொற்கழல் நந்திநின்
பாசிலை அந் தொண்டை அல்லது பாடாளே.* 30

* இப்பாடலின் பின்னிரு வரிகளைக் கருத்துத் தொடர்புக்குப் பொருந்துமாறு 'பூசலின் ஐங்கணைவேள் பொர நந்திநின் - பாசிலையந் தொடை பாட மறந்திலளே' என்று டி.கே.சி. யவர்கள் மாற்றிச் சொல்வதுண்டு; இது கவிதைப் பண்பை உயர்த்திக் காட்டும். பாட்டு அமைந்துள்ளபடி சொல் முடியும் பொருள் முடியும் சரியாயில்லை.

## நந்திவர்மன்

முன் குறித்த கதைகளின் உண்மை எப்படியிருந்த போதிலும், நந்திக் கலம்பகத்தின் பாட்டுடைத் தலைவனான நந்திவர்மன், வரலாறு கண்ட ஒரு பேரரசனாவான். பட்டங்களோடு, தெள்ளாறெறிந்த பல்லவமல்லன் நந்திபோத்தரையன் என்பது இவன் முழுப் பெயராகும். இவன் பல்லவ மரபில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு தொண்டை நாட்டை ஆட்சி புரிந்த தந்தி வர்மன் (775-825) என்ற அரசன் புதல்வனான மூன்றாம் நந்திவர்மன் (825-850). இவனைக் குறித்த வரலாற்றுச் செய்திகள் பின்வருவன.

இவன் தாய் கதம்பர் குலமன்னன் மகளான அக்கள நிம்மடி என்பவள். இவனது சாசனங்கள் பல தமிழ் நாட்டுக் கோயில்களில் கிடைக்கின்றன. அவற்றால் இவனது ஆட்சிக் காலம் நன்கு தெரிகிறது. பின்வருவன குறிப்பிடத்தக்கன:

| ஆட்சி ஆண்டு | இடம் | பொருள் | வரலாறு |
|---|---|---|---|
| 6 | பொன்னேரிக் கூற்றம், திருக்காட்டுப் பள்ளி | சிவாலயத்துக்கு தேவதானம் | பல்லவ அரசர் பட்டியல் |
| 10 | தஞ்சை - திருநெய்த்தானம் | - | தொள்ளாற்றுவெற்றி |
| 12 | தஞ்சை - செந்தலை - சுந்தரேசர் கோயில் | நிலதானம் | - |
| 17 | வடஆர்க்காடு - திருவல்லம் | மூன்று சிற்றூர்கள் இவ்வாலயத்துக்கு என்ற பெயர் | விடேல் விடுகு விக்கிரமாதித்துச் சதுர்வேதி மங்கலம் சொல்லப்பட்டது. |
| 18 | காஞ்சி - உலகளந்த பெருமாள் கோயில் | - | |
| | தஞ்சை - கோவிலடிஅருகுள்ள திருச்சன்னம் பூண்டி | சடையார் கோயில் | |
| 22 | திருச்சி - திருப்பராய்த் துறை | ஆதிமூலேச்சுரர் கோயில் | விளக்கு எரிக்கப் பொன் |
| 23 | குடிமல்லம் பரசுராமேசர் கோயில் | - | பரசுராமேசருக்கு நந்தா விளக்கு |

இதன் பிறகு இவனது கல்வெட்டு எதுவும் காணப்படாமையால் இவன் ஆட்சி இக்காலப் பகுதியோடு முடிகிறதென்று கருதுவர்; அதாவது சுமார் 25ஆண்டுகள் கி.பி. 825 முதல் 850 வரை.

6ஆம் ஆண்டில் குறிப்பிட்டது வேலூர்ப் பாளையப் பட்டயம் எனப்படும். இது நந்தியின் பெரும் வெற்றிச் செயலாகிய தெள்ளாற்றுப் போரைக் கூறவில்லை; 10ஆம் ஆண்டுக் கல்வெட்டே கூறுகிறது. ஆகவே தெள்ளாற்றுப் போர் 831-835க் கிடையில் நிகழ்ந்திருக்க வேண்டுமென்று வரலாற்றாசிரியர் கருதுவர்.

இராட்டிர கூட மன்னனான மூன்றாம் கோவிந்தன் பல்லவனை வென்று காஞ்சியை இருமுறை கைப்பற்றித் தந்திவர்மன் தனக்குத் திறையளக்குமாறு செய்தவன் இவன். ஆகவே நந்தி, தொள்ளாற்றிலும் பிற இடங்களிலும் போர் நிகழ்த்தித் தமிழ் நாட்டு வேந்தரை வென்றது போல, குருக்கோட்டைப் போர் நிகழ்த்தி, இராட்டிரகூட மன்னனை வென்று தன் தந்தையின் காலத்தில் பல்லவநாடு அம்மன்னனுக்கு அடங்கி இருந்த நிலைமையை மாற்றினான். இக் குருக்கோட்டைப்போர் கலம்பகத்திலும் பலமுறை குறிப்பிடப்படுகிறது. முன் காட்டிய 'எனதே கலை, வளையும்; என்ற பாடல் குருக்கோட்டைப் போரைப் பாடுகிறது' 'கேளாதார் குஞ்சரங்கள் சாயக்குருக் கோட்டை அத்தனையும் அஞ்சரங்கள் ஆர்த்தான் அருள்' (84), 'நந்தி நாட்டம் குறி குருக்கோட்டையின் மேல் சென்று அஞ்சப் பட்டது' (16) 'குருக்கோட்டை குறுகாமன்னர் போர்க்கின்ற புகர் முகத்துக் குளித்தவாளி பூதலத்தின் வடிம்பலம்பப் பூண்ட வில்லோன் (35) என்ற பகுதிகள் காண்க. அக்குருக் கோட்டைப் போர், தெள்ளாற்றுப் போருக்கு முன் நிகழ்ந்தது. அவ்வூர், பெல்லாரி ஜில்லாவில் துங்கபத்திரை யாற்றங்கரையில் இன்று உள்ள குருக்கோடு என்பர்; இங்கு சாளுக்கியர் காலக் கோட்டையும் கோவில்களும் இடிந்த நிலையில் உள்ளன.

நந்திக்கு மனைவியர் இருவர். இருவரும் இலக்குமி போன்றவர்கள், குடிகளைப் பாதுகாப்பவர்கள், பக்தி மிக்கவர்கள் என்று சாசனத்தால் அறிகிறோம்.

நந்தி சிறந்த வள்ளல் என்பதைக் கலம்பகம் எடுத்துக் கூறும். சிவாலயத்துக்கு இவனாலும் இவன் காலத்திலும் நிகழ்ந்த திருப்பணிகள் நிபந்தங்கள் அனேகம். திருக்காட்டுப்பள்ளி, களத்தூர், திருவல்லம், திருநாகேச்சுரம், திருவிடைமருதூர், திண்டீச்சுரம், நியமம், குன்றாண்டார் கோயில், திருநெய்த்தானம், செந்தலை, திருவெள்ளறை, திருப்பராய்த்துறை முதலான கோயில்கள் பலனடைந்தன. திருவல்லம் கோயிலில் திருப்பதிகம்

ஓதுவாருக்கும் பிறருக்கும் நெல்லும் பொன்னும் தரப்பட்டமை குறிப்பிடத்தக்கது. இவற்றின் சிகரமாக இவன் அளித்த வேலூர்ப் பட்டயத்தில், சிவபெருமானை வேண்டுவதாக ஒரு வடமொழிச் சுலோகம்:

ஸக்ருதம் இதம் அஜஸ்ரம் ரக்ஷதஇதி க்ஷிதிஸாஹ
ஸகல ந்ருபதி கேது: ஸோயம் ஆகாமினோவ:
ஹரசரண ஸரோஜ உத்தம்ஸ சின்னேன மூர்த்னா
முகுளித கரபத்ம: வந்ததே நந்தி வர்மா.

'வரப்போகும் அரசர்களே, இந்தப் புண்ணிய காரியத்தை எப்போதும் காப்பாற்றுங்கள்' என்று எல்லா அரசர்களுக்கும் வெற்றிக் கொடியாக விளங்குபவனும் ஹரனுடைய திருவடித் தாமரைகளையே தன் தலையில் சூடாமணியாகத் தரித்துக் கொண்டிருப்பவனுமான நந்திவர்மன் தாமரை மலர் போன்ற கைகளைக் கூப்பி உங்களை நமஸ்கரித்து வேண்டிக் கொள் கின்றான். (பல்லவர் செப்பேடுகள் முப்பது பக்கம் 257).*

இந் நந்திவர்மனுக்குப்பின் நிருபதுங்கவர்மன் பட்டமெய்தி, சோழ மன்னனான ஆதித்தனுக்கு உதவி செய்து வரகுண பாண் டியனை முறியடித்தான். அடுத்து, பாண்டியராதிக்கம் வலியற் றுப் போயிற்று. சோழப்பேரரசு ஓங்கலாயிற்று. அடுத்த பல்லவ னான அபராசிதன் காலத்தில், சோழர் எழுச்சியின் விளை வாய்ப் பல்லவ அரசு முழுமையும் ஒடுங்கி விட்டது.

சாசனங்களில் இவனுக்கு நந்திபோத்தரையன், அவனி நாராயணன், கோநந்தி, விக்கிரமவர்மன், குமாரமார்த் தாண்டன், விடேல் விடுகு என்ற பெயர்கள் வழங்குகின்றன. இப்பெயர்கள் கலம்பகத்துள்ளும் பயில்கின்றன. நந்திக்குரியனவாகக் கலம்பகம் கூறும் நகர்கள் கச்சி, மல்லை, மயிலை என்னும் மூன்று; இவை பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூன்று ஆழ்வார்களும் தோன்றிய ஊர்களாகும்.

விடேல் விடுகு என்னும் தொடர் சில பாடல்களில் (11, 13) நந்திக்குரிய பட்டப் பெயராக வருகிறது. பிடுகு என்பது இடி; பகைவர்க்கு இடி போன்றவன் என்ற பொருளுடையது, (கன்னடம் தெலுங்கு மொழிகளில் பிடுகு என்பது இடி). பெரும்

---

* இது பிற்காலத்தில் பராக்கிரம பாண்டியன் தென்காசிக் கோயிலில் பொறித்த செய்யுட்களை நினைவூட்டுகிறது.

பிடுகு, மாற்பிடுகு என்ற பட்டங்களும் இலக்கியத்திலும் சாசனங்களிலும் காணப்படும். விடேல் விடுகு என்ற பட்டம் இந்நந்திக்கும் இவன் தந்தை தந்திவர்மனுக்கும் உரியதாகக் காணப்படுகிறது. முன் காட்டப்பட்டுள்ள நந்தியின் திருவல்லச் சாசனத்திலும் இத்தொடர் பயின்றுவரக் காணலாம். (பக். 325).

நந்திவர்மனின் முன்னோன் இராசசிம்மவர்மன் (685-705) காஞ்சிக் கயிலாசநாதர் கோயில் கட்டியவர், அசரீரி கேட்டவன். அவன் சாசனங்கள் பலவற்றின் பிரசஸ்திப் பகுதியில் அவனைக் குறித்த அழகான பல வடமொழித் தொடர்கள் உள்ளன. பின்னால் நந்திக்கலம்பகம் பாடிய புவலர், அத்தொடர்களில் ஈடுபட்டு, அவற்றின் கருத்தை அழகாகத் தமிழில் சொல்லி யுள்ளது போலப் பாடல்கள் அமைந்துள்ளன. சில தொடர் களைக் கீழே தருகிறோம்.

தொல்லை நூல் வரம்பு முழுது கண்டான் (3) -காவ்யாப்ர போதன். ஏழைமார் துணை (21) - தரித்ரானுகம்பி. உக்ரம கோபன் (20) - தீவ்ரகோபன். மனக்கினியான் (52) - அபிராமன். மன்னர்க்கெல்லாம் தங்கள் கோன் (39) -ராஜ ராஜன். ஒரு கோமகன் (44) - ஏகராஜன். செங்கை முகில் அனைய கொடைச் செம்பொன் ஏகத் தியாகி (மிகை 11) தானவர்ஷன். பின்னும் பல.

நந்தி, நந்திக்கலம்பகம் பற்றிய கதை பொய்க்கதையானாலும் கூட, நந்தி வரலாறு உண்மையானது. தெள்ளாற்றுப் போர் உண்மையிலேயே மிக்க வரலாற்றுச் சிறப்புக் கொண்டது. அவனுடைய தந்தை தந்திவர்மன் காலத்தில் பல்லவ நாடு சிறப்புக் குன்றியிருந்தது. அவனோடு போரிட்டவன் ஸ்ரீமாறன் ஸ்ரீவல்லபன் என்ற பாண்டியன். சோழரையும் சேரரையும் தனக்குத் துணை அழைத்துக் கொண்டு அவனுடைய போர்ப்படை மிக விரைந்து வந்தவாசி தாலுக்காவிலுள்ள தெள்ளாறு வரையிலும் வந்து விட்டது. நந்திவர்மன் மிக்க வலிமையோடு பாண்டியன் படையை எதிர்த்துப் போரிட்டு அவனைப் புறமுதுகிட்டு ஓடச் செய்தான். துரத்திச்சென்று கடம்பூர், வெள்ளாறு, பழையாறு முதலான இடங்களிலும் போரிட்டு வென்றான். பாண்டியனுடைய தொண்டியையும் கைப்பற்றினான். நந்தி மதுரைக்கு மட்டும் தான் போகவில்லை. பாண்டியனுடைய யானைகள் குதிரைகள் கொற்றக்குடை முதலியவற்றையெல்லாம் கைப்பற்றினான். உரை யூரும், சோழ நாடும் நந்திக்குப் பணிந்தன. தெள்ளாறு எறிந்த

நந்தியினுடைய கல்வெட்டுக்கள் புதுக்கோட்டை வரை காணப் படுகின்றன. இவனுக்குக் கடற்படையும் இருந்தது. சயாம் நாட்டின் மேல்கரையில் உள்ள ஒரு விண்ணகரத்திற்குத் தமிழ் நாட்டிலிருந்து சென்ற ஒரு வணிகர் குழாத்தினர் ஒரு திருக்குளம் அமைத்துக் கொடுத்து அதற்கு அவனிநாரணம் என்று நந்தி யின் பெயரை வைத்து, அக்குளத்தை நாங்கூரிலிருந்து சென்ற ஒரு சேனாமுகன் பராமரிப்பில் விட்டிருந்தார்கள் என்று கல் வெட்டுச் சொல்லுகிறது.

**நூற் கருத்துக்கள்**

நந்திவர்மன் ஆட்சிக்கு வந்த காலத்தில் (825) சிறப்பான சோழர் யாரும் தலைதூக்கி நிற்கவில்லை. சோழ நாட்டில் பெரும் பகுதி இவனுக்கு உட்பட்டிருந்தது. விசயாலயச் சோழன் தஞ்சையை வென்று தனி நாடு அமைத்தது 845இல். அதுவரை யில் சோழர் ஆங்காங்கு சிறுநிலப்பகுதிக்கு மட்டும் தலைவராய் இருந்தனர் போலும். ஆதலால், எங்கும் நந்தியே காவிரி நாடன் புனனாடன், சோணாடன் என்று போற்றப் பெறுகிறான். இவனது கல்வெட்டுக்கள் திருநெய்த்தானம் திருக்கடைமுடி (சன்னம் பூண்டி), செந்தலை முதலான சோழ நாட்டுப் பகுதி களில் காணப்படுவது அறியத்தக்கது. தெள்ளாற்றுப் போரைக் கலம்பகம் மிகவும் சிறப்பித்து அதிகமான இடங்களில் குறிப் பிடுகிறது; பின்னும் வெள்ளாறு, கடம்பூர், வெறியலூர், பழை யாறு என்ற இடத்தில் பகைவரை முறியடித்தான் என்றும் நூல் சொல்லுகிறது. இவன் அவனிநாரணன் என்று பாராட்டிச் சொல்லப் பெறுகிறான்; கடற்படையும் இவனிடமிருந்தது; 'ஆட்குலாம் கடற்படை அவனிநாரணன்' (18). இதற்கேற்ப, இவன் சயாம் தேசத்தில் ஒரு குளம் வெட்டி அவனிநாரணன் குளம் என்று அத்தற்குப் பெயரிட்டான் என்றும் கண்டோம். குருக்கோட்டைப் போர் பலமுறை சொல்லப்பட்டுள்ளது. இது இராட்டிர கூடரோடு செய்த போர். இவன் சந்திர குலப் பிரகாசன். அங்கநாடும் இவனுக்கு உட்பட்டிருந்தது. விடேல் விடுகு என்பது இவனுக்குரிய ஒரு சிறப்புப் பெயர். நந்தி மானோதயன், தேசபண்டாரி, குவலய மார்த்தாண்டன், உக்ரம கோபன் என்ற பெயர்களும் இவனுக்கு உரியனவாக நூல் குறிப் பிடுகிறது; தொண்டிக்குரியவன், கொங்கன் என்றும் கூறும். 'வட வேங்கட நாடுடைய பிரான்' (55).

இவனுக்குத் தமிழினிடத்துள்ள ஈடுபாட்டைப் புலவர் நூலெங்கும் போற்றுகிறார்; தொல்லை நூல் வரம்பு முழுது கண்டான், பைந்தமிழை ஆய்கின்ற கோன், தமிழ் நந்தி, பெரும் புலவர் தம் கலியைத் தீர்க்கும் தமிழகரன் நந்தி என்ற தொடர்கள் காண்க; தியாகி ஏகத்தியாகி என்றும் கூறுகிறார். பல்லவர் அதிக வடமொழி மோகம் கொண்டவர்கள். அதற்கு மாறாக, இவன் தமிழை ஆதரித்த வள்ளலாக இருந்தமையால், புலவர் இந்த இயல்பைப் பெரிதும் போற்றிப் பாடுகிறார். இவனே பெருந்தேவனாருக்கு ஆதரவளித்துப் பாரத வெண்பாப் பாடு வித்தான் என்றும் அறிகிறோம். 'தெள்ளாற்றில் வென்றானோடு யார் வேந்தர் ஏற்பார் எதிர்' என்று அவர் பாடுகிறார்; (இந்நூல் பக்கம் 7 பார்க்க). மேலும் இவன் 'அல்லி பீடத்தரிவைக்குத் தன் அழகமர் தோளே ஆலய மாக்கிய - பல்லவர் கோமான் பண்டிதராலயன்' என்கிறார். எவ்வளவு பொருளுடைய தொடர்! நூற்கடற்புலவன் (26) என்று கலம்பகம் கூறுவதும் காண்க.

'ஓம மறைவாணர்' என்ற பாட்டில் பிற அரசர் முடியில் அணிந்த பூ நந்தியின் கழலடியில் காணப்படும் என்று கூறும். இதே கருத்தை முத்தொள்ளாயிரம் சிவபெருமானுக்கும், திரு வாய் மொழி திருமாலுக்கும் ஏற்றிச் சொல்வது கருதத்தக்கது. (செங்கணெடியான் மேல் -முத்தொள்ளாயிரம் 35; தீர்த்தன் உலகளந்த சேவடி -திருவாய் மொழி 2.8.6) ஒருபாடல் மலைபடு கடாம் என்ற சங்கப் பாடற் பெயர் தொனிப்பது போல் அமைந்துள்ளது:

> தொடர்ந்து பலர்இரந்த தொண்டையந்தார் நாங்கள்
> நடந்த வழிகள்தொறும் நாறும் – படர்ந்த
> மலைகடாம் பட்டனைய மால்யானை நந்தி
> முலைகடாம் பட்டசையா முன். **மிகை 9**

மடல் என்ற உறுப்பு இங்கு காணப்படுகிறது (18). கடுவாய் என்ற ஒரு பறை பல முறை சொல்லப்படுகிறது; கடுவாய்ப் பறை என்றும் இது சொல்லப் பெறும். கடுவாய்ப் பறை பல்லவருக்கு மட்டும் உரிய பறை என்று கருதுமாறு உள்ளது. திருமங்கை யாழ்வார் பெரிய திருமொழியில், 'கறையுடை வாள்மன்னர் கெடக் கடல்போல் முழங்கும் குரல் கடுவாய்ப் பறையுடைப் பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரம்' என்று கூறுமிடத்தும் (2.9.9) இப்பறையுடையவன் பல்லவன் என்றே சொல்லப்படுகிறது; காலம் 8ஆம் நூற்றாண்டு. இது நந்திக்

கலம்பகத்தால் விளக்கம் பெறுகிறது என்று கருதவேண்டும். கடுவாய் என்பது சோழ நாட்டில் காவிரியின் கிளை நதியான ஓர் ஆற்றின் பெயர். மிக விரைந்து ஓடும் ஆறு ஆனமையால் கடுவாய்; இக்காலத்துக் குடமுருட்டி என்று வழங்குகிறது. கடுவாய்க் கரைப் புத்தூர். குடவாயில் முதலான தலங்கள் இவ் வாற்றின் கரையில் உள்ளன. இப்பெயர் தேவாரத்துள் பயில்வது. கடுவாய்ப் பறை சமுத்திர கோஷம் என்றும் சொல்லப் பட்டது. கச்சி ஏகம்பரை ஒரு பாடல் (50) குறிப்பிடுகிறது. 'செப்பட்டே' என்ற வினை முற்றும் (71) காணப்படுகிறது; இது பிற்கால மலையாள வழக்கு.

இந்நூல் ஒரு வரலாற்று நாயகன் மீது பாடப்பெற்றமை யால், உண்மைச் செய்திகள், போர்ச் செய்திகள் அதிகமாக இங்கு காணப்பெறும். பிற நூல்களில் காணப்பெறாத அளவு இங்கு புறத்துறைகளும் காணப்பெறும்.

**சமயம்**

பல்லவ மரபினர் மாறி மாறிச் சைவராயும் வைணவராயும் இருந்திருக்கின்றனர். அவர்களுள் இந்த அரசன் சைவனாவான், புலவரும் சைவர். இவ்விருவருடைய சிவ பக்திச் சிறப்பு நூல் முழுதும் காணப்படும். நூலின் முதற்பாடலாகிய ஒரு போகு கொச்சகக் கலிப்பா பிற்காலக் கலம்பக மரபுக்கு வழிகாட்டி யாகத் தேவர்ப் பரவுதலாகவே உள்ளது. இது தேவபாணி எனப் படும். இப்பாடல் மிகவும் சிறப்பான சிவபிரான் துதியாக அமைந் துள்ளது. முதல் தரவு அர்த்த நாரீசுவர வடிவை உளமாரப் போற்றுகின்றது:

மண்டலமாய் அம்பரமாய் மாருதமாய் வார்புனலாய்
ஒண்சுடராய் ஒளியென்னும் ஒருருவம் மூன்றுருவம்
மைவடிவோ வளைவடிவோ மரகதத்தின் திகழ்வடிவோ
செவ்வடிவோ பொன்வடிவோ சிவனேநின் திருமேனி.

மூன்றாம் தரவு, நந்தியின் சிவபக்திச் சிறப்பை அருமையாக உரைக்கிறது:

இலகொளிய மூவிலைவேல் இறைவா, நின் னியற்கயிலைக்
குலகிரியும் அருமறையும் குளிர்விசும்பும் வறிதாக
அலைகதிர்வேற் படைநந்தி அவனிநா ராயணன் இவ்
வுலகுடையான் திருமுடியும் உள்ளமுமே உவந்தனையே.

*'சிவனைமறவாத சிந்தையான்' என்று ஓரிடத்தில் கூறுகிறார் (மிகை 8). மும்மைப் புவனம் என்ற காப்புச் செய்யுள் இந்நூலுக் குரியதன்று என்று முன்னே சொல்லப்பட்டது. இது விநாயக வணக்கம். அடுத்துள்ள பாடலே நூலுக்குரிய உண்மை காப்புச் செய்யுள்.*

பொருப்பரையன் மடப்பாவை புணர்முலையின் முகடுதைப்ப
நெருப்புருவம் வெளியாக நீறணிந்த வரை மார்பா!*

*என்று இவர் கூறியிருப்பதில் தேவாரப் பாசுரங்களிற் கண்ட சைவ சித்தாந்த நுண்பொருள் அடங்கியிருப்பதை உணரலாம்; சத்திவந்து பொருந்திய பிறகே பாச பசு ஞானங்களெல்லாம் நீங்கிச் சிவம் பிரகாசிக்கும் என்பதை இப்பாடல் அழகிய உருவக மாகக் காட்டுகிறது. 'பனி மலர் செறிந்த செந்திற்கோவை ஏய் நந்திகாக்கும் குளிர் பொழிற் கச்சி' (78) என்று இவர் கூறுமிடத்து முருகனையும் செந்திலையும் குறிப்பிடுகிறார். இவற்றால் இந் நூலாசிரியரும் நந்தியும் சிறந்த சைவரென்று அறியலாம்.*

### தனிப்பாடல்கள்

*இந்நந்திவர்மனைக் குறித்து, உடன் காலத்திலோ, அல்லது பிற்காலத்திலோ தனிப்பாடல்கள் பல எழுந்துள்ளன. பெரும் பான்மையானவை அகப்பொருளமைதி பொருந்தியவை. சில பாடல்களைக் கீழே தருகிறோம்.*

நறையிட்ட புள்ளின் தழும்பறத் தாட்கொண்டநாட் கதிரேயிம்
முறையிட்ட கோயில் திறந்தவரார், மன்னர் மூவரையும்
திறையிட்ட கோன்நந்தி தேச பண்டாரி தெள்ளாறையுளே
விறையிட்ட வேலன்ன கண்ணிஎங் கேபுக் கொளித்தனளே.

மன்னுபுகழ்ப் பொன்னம்பலத் தொண்டை வேந்தன்
மல்லையர்கோ மான் பவனி வருவான்; வந்தால்
இன்னுமவன் பவனியிற்செல்லாதே, சென்றால்
இருகைவளை யுங்கலையும் இழப்பாய் என்றே
அன்னைபிடித் திழுக்க, அயல் இழுக்கத் தங்கை
அங்கையினைப் பிடித்திழுக்க, அதுதான் அன்றிப்
பின்னையுமோர் தமக்கைபிடித் திழுக்க, ஆசைப்
பேய்இழுக்க, ஒருத்திமனம் பேதித்தாளே.

---

* *இப்பாடலை நூலுக்குரியதன்று என்று மிகைப்பாடலாக ராஜம் பதிப்பில் அமைத்திருப்பது விசித்திரம்.*

பருதியாயிரங் கைதொழ மால்விழிப்
பந்து நூறெழுப் பாணமொன் றேவிய
சுருதி யாளன் சூரியன் தொண்டைமான்
தொல்லை மாக்கடல் மல்லைப் பொருப்பனீர்
கருதி யாவிலையும் பட நாகமும்
கதலியுங் கண்டு கண்களி யாமலே
இரதி யாதரன் வையம்வந் திங்ஙனே
என்னைமால் செய்த தென்னகண் மாயமே.

## காலம்

*நந்திவர்மன் வரலாறு பற்றிய இடத்தில் இது தெளிவாக்கப் பட்டது. மூன்றாம் நந்திவர்மன் காலம் 825-850. ஆகவே, இந் நூலும் அதே காலமாகும்.*

## பதிப்பு

1. *1872 விவேக விளக்க அச்சுக் கூடப்பதிப்பு; இஃது மேற்படி அரசனது கனிஷ்டராற் செய்யப்பட்டது என்பது இங்குள்ள குறிப்பு.*
2. *மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு. பண்டித அ. கோபாலையர் 1927; குறிப்புரை, முன்னுரை வசைக் குறிப்புக்கள் முதலி யன கொண்டது.*
3. *எஸ். ராஜம் பதிப்பு, 1959 மூலம் மட்டும் வழக்கமாய் மிகவும் திருத்தமாக அச்சிடும் இவர்களுடைய இந்தப் புத்தகத்தில் சில விசித்திரங்கள் காணப்படுகின்றன. 'வானுறு மதியை' என்ற பாடலையும் தந்து இதன் பாடபேதத்தையே தனி யான மற்றொரு பாடலாகவும் அமைத்திருக்கிறார்கள். நூலின் உண்மையான காப்புச் செய்யுளான 'பொருப்பரையன் மடப்பாவை' என்ற பாடலை மிகைச் செய்யுளாகப் பதிப் பித்திருக்கிறார்கள். 'கண் என்பதும்' 'பருவமுகில்' 'இரும் புமுத' என்று மூன்று மிகைப் பாடல்கள் பின்னும் அதிக மாக இங்கு காணப்படுகின்றன.*

○○○

அத்தியாயம் 10

# பௌத்த நூல்களும் பிறவும்

## முன்னுரை

பௌத்த இலக்கியம் என்ற தலைப்பு எந்த நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றிலும் அமையவில்லை. காரணம். அவ்வாறு சொல்லத்தக்க இலக்கியம் எவையும் இல்லை. ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றான மணிமேகலை ஒரு பௌத்த சமயக் காவியம். 12ஆம் நூற்றாண்டில் தோன்றிய வீரசோழியம், பௌத்த சமயத்தார் செய்த ஓர் ஐந்திலக்கண நூல். இவ்விரண்டுமே அச் சமயத்தின் பிரதிநிதிகளாகத் தமிழ் இலக்கியத்தில் உள்ள முழு நூல்கள். இருப்பினும் ஆங்காங்கு உரைகளுள் பலநூற் பெயர் களும், தனிப்பாடல்களும், பௌத்த சமயத்துக்கு உரியன வாகச் சொல்லப் பெறுகின்றன. இவை ஒரு தொகுப்பாக நம் கவனத்துக்கு எங்கும் கொண்டுவரப் பெறவில்லை. இவற்றை நன்கு உணரும் நோக்கத்துடன் ஒருசேரத் தொகுத்து இங்கே ஆராய்கிறோம். குண்டலகேசி ஒரு பௌத்தப் பெருங்காப் பியம் என்று நீலகேசியுரையால் அறிகிறோம். அதைப் பத்தாம் நூற்றாண்டு வரலாற்றில் விரிவாக ஆராய்ந்திருக்கிறோம். இக் காப்பியம் போக, ஏனைய பெயர் தெரிந்த நூல்கள் விம்பிசார கதை, சித்தாந்தத் தொகை, திருப்பதிகம், புத்த நூல், மானா வூர்ப் பதிகம் என்ற ஐந்து, இவ்வைந்தையும் இங்குக் குறிப்பிட்டுச் சில சொற்கள் சொல்கிறோம்.

இவையன்றி, புத்தமத கண்டனமாக, ஒரு வெண்பா நூலி லிருந்து 19 பாடல்கள் நீலகேசி உரையில் எடுத்துக்காட்டக் காண்கிறோம்; இவை எந்த நூல் என்று திட்டமாய்த் தெரிய வில்லை; ஆனால் சைனர் கூறும் கண்டனமே. புத்தமத கண்டனம் என்ற தலைப்பில் இவற்றை ஆராய்ந்திருக்கிறோம்.

இப்பௌத்த நூல்கள் அல்லாமல் இப்பகுதியில் ஆராயப் பெறும் நூல் முப்பேட்டுச் செய்யுள் என்பது.

## பௌத்த நூல்கள்

பௌத்த சமயத்தார் செய்த நூல்களாக நமக்கு இன்று முழுமையும் கிடைப்பன, மணிமேகலை என்ற பெருங் காப்பியமும் வீரசோழியம் என்ற இலக்கண நூலும். மணிமேகலையின் காலம் இன்னும் திட்டமாக வரையறை செய்யப்பெறவில்லை. (6ஆம் நூற்றாண்டு) வீரசோழியம் 11ஆம் நூற்றாண்டில் செய்யப் பெற்றது. இவையேயன்றிப் பின்னும் சில நூல்கள் இருந்தனவென்று மேற்கோள் பாடல்களாலும் உரைகளில் வரும் குறிப்புக்களாலும் அறிகிறோம். குண்டலகேசி என்ற பெருங்காப்பியம் ஒரு பௌத்த சமய நூல்; இறந்து போயிற்று (10ஆம் நூற்றாண்டு).

பௌத்தர்கள் வடமொழி பாலி பிராகிருதம் முதலிய மொழிகளில் மிகவும் அதிகமாகத் தங்கள் நூலைச் செய்திருக்கிறார்கள். என்ன காரணமோ, சைன சமய நூல்கள் தமிழில் மிகவும் அதிகமாய்த் தோன்றியிருக்க, பௌத்த சமய நூல்களே தமிழில் இல்லை என்று சொல்லும்படியிருக்கிறது. பௌத்தர் அரசியல் ஆதிக்கம் பெறாமையே அதற்குக் காரணம் போலும்.

பௌத்த சமயக் கொள்கைகளைத் தனியே எடுத்துக் கூறி அவற்றை விளக்கமாக மறுக்கின்ற ஒரு பெருநூல் சிவஞான சித்தியார் பரபக்கம் (13ஆம் நூற்றாண்டு). அந்நூல் செய்த அருணந்தி சிவாசாரியார் காலத்தில் பௌத்த சமயவாதம் செய்பவர் இருந்தனர் என்பது பொருளன்று. நூலில் கருத்து நிறைவு பெறுவதற்காகவே அவ்வாசிரியர் சம்பிரதாயமாக அம் மதப் பிரிவுகளை எடுத்து ஆராய்கிறார். அவ்வாறு அவர் ஆராய்கின்ற பிரிவுகள் சௌத்திராந்திகம், யோகாசாரம், மாத்தியமிகம், வைபாடிகம் என்னும் நான்கு; இவற்றுள் சௌத்திராந்திகம் என்பதே மிகவும் விளக்கமாயுள்ளது. பௌத்தம் கூறும் பாடல்கள் இங்கு 79; இவற்றுள் 71 சௌத்திராந்திகம்; 8 மற்ற மூன்று பிரிவுகளும்.

யாப்பருங்கலவிருத்தி, வீரசோழியவுரை முதலியவற்றுள் மேற்கோளாய் வரும் பௌத்த சமயப் பாடல்கள், பெருந்தொகையினுள்* புத்த பகவான் என்று ஒரு தலைப்பினுள் தரப்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற்றாண்டு நூலில் காண்க. மு. இராகவையங்கார், பெருந்தொகை 1936, பாடல் 184-215.

பட்டுள்ளன. இவை 32. பல வகையான பாக்களும் நீண்ட கலிப்பாக்களும் இங்கு உள்ளன. இவை இறந்துபோன பல நூல் களில் இருந்தன போலும். இவற்றுள் புத்த பெருமானுடைய அருளுள்ளத்தையும் தமிழ்மொழியின் விளக்கத்தையும் நன்கு காண முடிகிறது. எடுத்துக்காட்டாக ஒரு பாடலை மட்டும் இங்கு தருவோம்.

> வாடாப் போதி மரகதப் பாசடை
> மரநிழல் அமர்ந்தோன் நெஞ்சம், யார்க்கும்
> அருளின் தீந்தேன் நிறைந்து நனி நெகிழ்ந்து,
> மலரினும் மெல்லி தென்ப அதனைக்
> காமர் செவ்வி மாரன் மகளிர்
> நெடுமா மழைக்கண் விலங்கி நிமிர்ந்தெடுத்த
> வாளும் போழ்ந்தில வாயின:
> யாதோ மற்றது மெல்லிய வாறே.

களப்பிரர் ஆட்சியின் விளைவாகச் சமணர் ஆதிக்கம் தமிழ் நாட்டில் பெருத்தது. தமிழரின் மொழி நாகரிகம் சமயம் கலை கள் யாவற்றுக்கும் அது பெருங்கேடு விளைவித்தது. எனினும், தமிழ்நாட்டுக்கே உரியதாகிய சைவத்தை அது அசைக்க முடிய வில்லை. ஆனால் தன்னைப் போல் இந்தத் தமிழ் மண்ணுக்கு அன்னியமாக வந்து புகுந்த பௌத்தத்தை அடியோடு ஒழித்து விட்டது. சம்பந்தர், சைனரோடு, சேர்த்துப் புத்தர் சாக்கியர் என்று பழித்தபோதிலும் கூட சைவரோடு போர் நிகழ்த்துவதற் கான வலிமையோ எதிர்ப்போ புத்தர்களிடம் இல்லை. சைவ ருடைய பழிப்பை மட்டும் அவர்கள் பெற்றார்கள் என்று அவர் சரிதத்தில் வரும் புத்த நந்தி வரலாற்றினால் அறிகிறோம். அவருக்கு அடுத்த காலத்தில் நாகையிலிருந்த புத்த விகாரத் தைத் திருமங்கையாழ்வார் பறிக்கும் அளவுக்குப் புத்தர் நிலை தாழ்ந்து போய்விட்டது. தாழச் செய்தவர்கள் களப்பிரர் என்றே கருத வேண்டும். பத்தாம் நூற்றாண்டில் புத்த சமயக் கொள்கை களை மறுப்பதற்கென்றே நீலகேசி தோன்றியிருப்பதும் இந்த நிலையை நன்குணர்த்தும். மாணிக்கவாசகர் வரலாற்றில் பௌத்தர் ஈழத்திலிருந்து வருகிறார்களே யன்றித் தமிழ்நாட் டில் இல்லை. இங்கு ஆட்சி பீடத்தில் பௌத்தம் அமரவில்லை யாதலால், களப்பிரர் கொடுமைக்கு முன் நிற்க வலியற்று அடியோடு மறைந்துவிட்டது. எக்காரணத்தாலோ பௌத்த நூல்கள் மறைந்தமை தமிழுக்குப் பெருநஷ்டம்.

பிற நூல்கள் சிலவற்றைக் குறித்து உரைகளினால் தெரிய வரும் செய்திகளைக் கீழே தொகுத்துக் கூறுவோம். இந்நூல் களின் காலம் இன்னதுதான் என்று திட்டமாய்த் தெரியாத போதிலும்கூட, பௌத்தத்தின் பல பகுதிகளையும் மறுப்பதற் கென்று பல சருக்கங்கள் பாடியுள்ள நீலகேசியின் காலமாகிய பத்தாம் நூற்றாண்டிற்குக் காலத்தால் அவை முந்தியவையாத லால், அவற்றை இங்கு ஒரு சேரக் குறிப்பிடுகிறோம்.

## விம்பிசார கதை

கி.மு. ஆறாம் நூற்றாண்டில் மகத தேசத்தில் விம்பிசார மன்னன் ஆண்டு வந்தான். மனைவியையும் மகவையும் அரச செல்வத்தையும் துறந்து மெய்ஞ்ஞானம் தேடி வெளிப்பட்டுத் திரிந்த புத்தர், இம்மன்னனது யாகத்துக்குச் சென்ற ஆடுகளைக் கண்டு; தாமும் உடன் சென்று, அரசனைக் கண்டு, அவனுக்கு நல்லறிவு புகட்டி, உயிர்க் கொலையை நிறுத்தி, அவனைத் தன் தொண்டனாக ஒழுகச் செய்தார் என்பது சரித்திரப் புகழ் பெற்ற ஒரு வரலாறு. இதை இந்திய நாட்டின் பல மொழிகளிலும் புலவர்கள் கதையாகவும் கவிதையாகவும் எழுதிய நூல்கள் மிகப் பல. தமிழில் இப்படி ஏற்பட்ட ஒரு கவிதை நூல் விம்பிசார கதை என்பது. இதிலிருந்து நான்கு வரிகளை மட்டும் நீலகேசியுரை காரர் (14ஆம் நூற்றாண்டு) எடுத்துத் தருகிறார் (190).

'புத்தன் பிறக்கின்ற காலத்து மாதாவினது வல மருங்கு லால் பிறந்தான். அவளும் ஆறு நாள் குற்றுயிரோடு கிடந்து ஏழாம் நாள் இறந்தாள். இது, புத்த மாதாக்கள் யாவர்க்கு மொக்கும். என்னை?

> உலும்பினி வனத்துள் ஒண்குழைத் தேவி
> வலம்படு மருங்குல் வடுநோ யுறாமல்
> ஆன்றோன் அவ்வழித் தோன்றின னாதலின்
> ஈன்றோள் ஏழ்நாள் இன்னுயிர் வைத்தாள்.

என்பது விம்பிசார கதையென்னும் காவியம்; பௌத்தருடையது. அதன்கட் கண்டு கொள்க.'

இக்கூற்றினால், விம்பிசார கதை ஒரு பௌத்த காவியம், ஆசிரியப் பாவினாலானது (மணிமேகலை போல), அதனுள் புத்தர் வரலாறும் கூறப்படும் என்று அறிகிறோம். நூல் இல்லை.

இப்பகுதியை, சித்தி பரபக்கவுரையில் (99) சௌத்திராந்திகன் மதத்தை மறுக்குமிடத்து, திருவொற்றியூர்த் தத்துவப் பிரகாசர் முழுமையும் எடுத்து வைத்திருக்கிறார். இவர் காலத்தில் விம்பிசார கதை இல்லை போலும். நீலகேசியை நன்கு பார்த்து இப்பகுதியை அதிலிருந்து எடுத்திருக்கிறார் என்று சொல்லலாம்.

வீரசோழியவுரையில் பெருந்தேவனார் புத்த சமயப் பாடல்கள் பல தருகிறார். அவற்றுள் ஒன்று பின்வருவது;

பாசடைப் போதிப் பேரருள் வாமன்
வரையா ஈகை போல, யாவிரும்
கொடைப்படு வீரக் கொடைவலம் படுமின்,
முன்னர் ஒரு முறைத் தன்னுழை யிரந்த
அன்பில் அரக்கர் வேண் டளவும் பருக
என்பு தொறுங் கழிப்பித் தன் மெய்திறந்து வாக்கிக்
குருதிக் கொழும்பதங் கொடுத்தது மன்றிக்
கடுந்துயர்ப் பட்ட கள்ளப் புறவின்
மாய யாக்கை சொல்லிய தான்றன்
உடம்பு நிறுத்துக் கொடுத்தது மன்றி. (பெருந்: 191)

இது ஆசிரிய யாப்பின் அமைந்து, தொடர்ந்த வரலாற்றைக் கூறும் பாடற் பகுதியாகக் காணப்படுகிறது. ஒரு கால் இதுவும் விம்பிசார கதைக்குரிய பாடற் பகுதியாயிருக்கலாம்.

பிம்பிசாரன் மகத நாட்டில் இராச கிருக நகரத்தில் கி.மு. 540-490இல் ஆட்சி புரிந்த மன்னன். புத்தர் உபதேசத்தால் இவன் உயிர்க்கொலை துறந்து புத்த மதத்தைத் தழுவி அவருக்கு உதவி செய்து வந்தான். புத்தர் மீது பொறாமை கொண்ட தேவதத்தன், பிம்பிசாரன் மகனாகிய அஜாத சத்துருவைத் தன்வசப்படுத்திக் கொண்டு, அவன் மூலம் பிம்பிசாரனைச் சிறையிடச் செய்து புத்தருக்கும் பல கொடுமைகளை இழைத்தான் என்பர். சிறையில் மன்னனைத் தேவி தவிர யாரும் பார்க்காதபடி செய்து பட்டினி போட்டான். அவள் அவனுக்கு எப்படியோ உணவளித்ததறிந்து, அவளையும் தடைசெய்து பின் அரசனையும் அஜாத சத்துரு கொன்றான். காலக் கிரமத்தில் இவனுக்கு ஒரு பிள்ளை பிறக்கவும், அப்பிள்ளை மீது அன்பு வளர்ந்தபோது, தன் தந்தைக்குத் தான் செய்த கொடுமையை எண்ணி வருந்தினான் என்பது இவன் கதை. விம்பிசார கதை என்பது இந்நிகழ்ச்சிகளைக் கூறும் காப்பியமாயிருக்கலாம்.

## சித்தாந்தத் தொகை

இறந்துபோன மற்றொரு பௌத்த நூல். சிவஞான சித்தி பரபக்கவுரையில், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் முதலில் ஒரு பாடலின் இரண்டு வரிகளையும் பின்னர் முழுப்பாடலையும் தந்து (65, 94), இஃதவர்தம் சித்தாந்தத்தொகை என்கிறார்.

அருணெறி யாற் பாரமிதை ஆறைந்தும் உடனடக்கிப்
பொருள் முழுதும் போதி நிழல் நன்குணர்ந்த முனிவரன்றன்
அருண் மொழியா னல்வாய்மை அறிந்தவரே பிறப்பறுப்பார்
மருணெறியாம் பிற நூலும் மயக்கறுக்கு மாறுளதோ.

இதுவன்றி, நீலகேசியுரைகாரரும் 826ஆம் பாடல் உரையில், மருள்தரு மனம் வாய் மெய்யிற் கொலை முதல் வினை பத்தாமே என்பது சித்தாந்தத் தொகை' என்று காட்டுகிறார். (இப்பத்துப் பாரமிதைகள் மணிமேகலை 24ஆம் காதையிலும் காட்டப் பட்டுள்ளன.) சித்தாந்தத் தொகை என்பது, பௌத்த சித்தாந்தம் முழுமையும் தொகுத்துச் சொல்லும் நூல் போலும்.

## திருப்பதிகம்

சித்தியார் சௌத்திராந்திகன் மதம் கூறுமிடத்து (பரபக்கம் பாடல் 65) ஞானப்பிரகாசர் உரையில் முதலில் இஃதவர்கள் வசனம் என்று கூறி, ‘மிக்க தனங்களை மாரி.... மானாவூரே' என்ற பாடலையும் அதன்பின் ‘எண்ணிறந்த காலங்கள்' என்ற பாடலையும் தந்து, இது திருப்பதிகமெனக் கொள்க என எழுதியுள்ளார். முதல் பாடல் மானாவூர்ப் பதிகம் என அடுத்து ஆராய்கிறோம். இரண்டாம் பாடல் பின்வருவது;

எண்ணிகந்த காலங்கள் எம் பொருட்டால் மிகவுழன்று
எண்ணிகந்த காலங்கள் இருள்தீர ஒருங்குணர்ந்தும்
எண்ணிகந்த தானமும் சீலமும் இவையாக்கி
எண்ணிகந்த குணத்தினான் எம்பெருமான் அல்லனோ.

இப்பாடலைப் பார்க்கும்போது இது பதிகத்துக்குரிய பாட லாகப் புலப்படவில்லை. குண்டலகேசியிலிருந்து பல பாடல் களும் வரிகளும் இதையொத்தனவாய், புத்தருடைய முற்பிறவிக் கதைகளைக் குறிப்பிடுவனவாய், ‘எம் பெருமான் இத்தகையன் அல்லனோ' என்று முடிகின்றன. இதை ஊன்றி நோக்கும்போது,

எண்ணிகந்த என்ற பாடல் குண்டலகேசிப் பாடலென்றும், முதல் பாடலான 'மிக்க தனங்களை' என்பது, திருப்பதிகம் என்ற பெயருக்குப் பொருத்தமென்றும் தெரிகிறது.

மேலும் நீலகேசிக் கடவுள் வாழ்த்துரையில்'எண்ணிகந்த காலங்கள்' என்ற பாட்டும் அதற்கு முன்னதாக,

> என்றுதா னுலகுயக் கோ ளெண்ணினா னதுமுதலாச்
> சென்றிரந்தார்க் கீந்தனன் பொருளுடம் புறுப்புக்கள்
> துன்றினன் பிறக்குநன் உளனாயின் மாமேருக்
> குன்றியின் துணையாகக் கொடுத்திட்டானல்லனோ.

என்ற பாட்டும் தரப்பட்டுள்ளது. பாடல்களில் சொல்லப் பட்டுள்ள பொருள், அவை குண்டலகேசிப் பாடல்கள் என்பதை உணர்த்துகின்றன. ஆகவே, ஞானப்பிரகாசர் கூறும் இரண்டாம் பாடல் குண்டலகேசி யென்றும் முதல் பாடலே திருப்பதிகம் என்றும் கருதுவது பொருத்தமாகும். இத்திருப்பதிகம், மானா வூர்ப் பதிகமென்று அடுத்து ஆராயப்பட்டுள்ளது. பௌத்த சமயத்தில் புத்த பதவிக்குரிய பெருங்குணங்களாகத் தச பார மிதை என்று பத்துக் குணங்களைச் சிறப்பித்துச் சொல்வது மரபு. அவையாவன: தானம், சீலம், கிருபை, வீரியம், தியானம், பிரஞ்ஞை, உபாயம், தயை, பலம், ஞானம். ஒருகால் திருப் பதிகம் என்பது இப்பத்தையும் தனியே விளக்குகின்ற பாடல் தொகையாகவும் இருக்கலாம்.

## புத்த நூல்

புத்தன் - சுகதன்; துக்கத்தின் நிவாரண மார்க்கத்தை உணர்த்திச் சுகத்தைப் பெறும் மார்க்கத்தைக் காட்டுவதால் இப்பெயர். 'சுகதநூற் றுணிவு' என்று சொல்லி, சித்தியார் பர பக்கவுரையில் ஞானப்பிரகாசர் இரண்டு பாடல்கள் காட்டு கிறார். ஒன்று விருத்தப்பா, மற்றது வெண்பா. விருத்தத்தைத் திருவொற்றியூர்த் தத்துவப் பிரகாசரும் காட்டுகிறார். இப்பாடல் களால் புத்த சமயத் தத்துவத்தைக் கூறுகின்ற நூல்களும் இருந் தனவென்று நன்கு அறியலாம். இவற்றின் பெயர்களை அறி வதற்கில்லை. இவ்வாறு தெரிய வந்த இரு பாடல்களும் பின் வருவன

> எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞானம்
> ஒட்டிய குறிப்போ ராறு செய்கையும் இருபதாகக்

கட்டிய பஞ்ச கந்தம் கணத்தினில் பங்க மாகும்
தொட்டநாற் பத்து மூன்றும் சுகதநூல் துணிவு தானே.

சகசமு மான்மாவும் காரணனு மில்லை
சகலமு மாம் அனித்தம் சார்பால் பிறவி
வகைவினை யுண்டு பதிபொன்ற மாய்தல்
சுகதநூல் முத்தித் துணிவு.

பௌத்த நூல்கள் பெரும்பகுதி தோன்றிய காலம் என்று யாம் கருதும் 9ஆம் நூற்றாண்டிலேயே இவை தோன்றின என்று கொள்ளுகிறோம். பௌத்த மத கண்டனமாக நீலகேசியிலுள்ள வெண்பாப் பாடல்களைப் பார்க்கும்போது, இக்கூற்று பொருந்தும் என்று விளங்கும்.

## மானாவூர்ப் பதிகம்

புத்த சமயத்தினர் தங்கள் சமயச் சார்பாகப் பல பெரு நூல்களும் சிறு நூல்களும் இயற்றினர் போலும். மணிமேகலை என்ற பெருநூல் தவிர, ஏனைய யாவும் இறந்து போயின. அவ்வாறு போனவற்றுள் மானாவூர்ப் பதிகம் என்பதும் ஒன்று. நீலகேசியுரையில் சமயதிவாகர வாமன முனிவர் இதன் பாடல்கள் இரண்டை எடுத்துக் காட்டுவதால் இந்த நூலொன்று இருந்தமை அறிகிறோம். பாடல்கள் பின்வருவன.

வானாடும் பரியாயும் அரிண மாயும்
வன்கேழற் களிறாயும் எண்காற் புள்மான்
தானாயும் பணையெருமை ஒருத்த லாயும்
தடக்கையிளங் களிறாயும் சடங்க மாயும்
மீனாயும் முயலாயும் அன்ன மாயும்
மயிலாயும் புறவாயும் வெல்லும் சிங்க
மானாயும் கொலைகளவு கட்பொய் காமம்
வரைந்தவர்தாம் உறைந்தபதி மானா வூரே.

மிக்கதனங் களைமாரி மூன்றும் பெய்யும்
வெங்களிற்றை மிகுசிந்தா மணியை மேனி
ஒக்க அரிந் தொரு கூற்றை இரண்டு கண்ணை
ஒளி திகழும் திருமுடியை உடம்பில் ஊனை
எக்கி விழுங் குருதிதனை அரசு தன்னை
இன்னுயிர்போல் தேவியை ஈன் றெடுத்த செல்வ

மக்களை வந் திரந்தவர்க்கு மகிழ்ந்தே ஈயும்
வானவர்தாம் உறைந்தபதி மானா வூரே.

இவ்விரண்டினுள் முதல் பாடல் புத்தருடைய கொடையையும் இரண்டாம் பாடல் பிறப்பையும் குறிப்பிடுகின்றன. புத்தர் பல பிறப்புக்கள் பிறந்து, ஒவ்வொரு பிறப்பிலும் பிறர் உபகாரத்திற் கென்றே வாழ்ந்தார்; அவருடைய பழைய பிறப்புக்கள் புத்த சாதகக் கதைகளில் சொல்லப்பட்டுள்ளன. மு. ராகவையங்கார் இப்பாடல்கள் பற்றி எழுதியுள்ள குறிப்பு பின்வருவது: ‘மானா வூர் காஞ்சிபுரத்துக்குத் தெற்கே ஒன்றரைக் காத தூரத்தில் உள்ளதும் பௌத்த சின்னங்கள் உடையதுமான மானாம்பதி போலும். புத்தர் எடுத்த பல பிறவிகளும் இச்செய்யுளுட் கூறப் பட்டுள்ளன. வானாடு; பரியாயும் என்றது 196ஆம் சாதகக் கதையை; இலங்கைத் தீவில் அரக்கியர் கூட்டத்தவராற் கவரப் பட்ட வணிகர் குழுவைப் புத்தர் ஆகாச காமியான குதிரை வடிவுடன் சென்று தன்பாலிடங் கொடுத்து வெளியேற்றி உய்வித்தனர் என்பது வரலாறாதலின் ‘வானாடும் பரி’ என்றார். அரிணம்மான் மானுருவான கதை 483ஆம் சாதகத்தாலும், களிறாயது 455ஆம் சாதகத்தாலும், சிங்கமாயது 475ஆம் சாதகத்தாலும், மயிலாயது 491ஆம் சாதகத்தாலும் பிற பிறப்புக்கள் பல சாதகங்களாலும் அறியப்படுகின்றன.’

இவ்விரு பாடல்களும் தனிப் பாடல்களும் அல்ல, வேறு ஒரு நூலின் பாடல்களாயும் தோன்றவில்லை. மற்று, புத்த சமயத்தில் திருப்பதிகம் என்றே ஒரு சிறு நூல் இருந்ததென்று, சித்தியார் பரபக்கத்துக்கு ஞானப்பிரகாசர் எழுதிய உரையால் அறிகிறோம். அதுபோலவே இதுவும் அச்சமயத்துக்குரிய மற்றொரு நூல் என்று கருதித் தனியே இங்கு குறிப்பிட்டோம். நீலகேசி யுரைகாரர் கூறும் முறையில் இது குண்டலகேசிக்கு முந்திய காலமாயிருக்குமென்று தோன்றுகிறது. எனவே, ஒன்ப தாம் நூற்றாண்டென்று குறிப்பிட்டோம். பதிகம் இப்போது இல்லை. மிக்க தனங்களை என்ற பாடலை ஞானப்பிரகாசர் சித்தி பரபக்க உரையில் (65) எடுத்துத் தருகிறார்.

இதுபோலவே, துடிதபுரம் பற்றிய பாடலொன்று வீர சோழியவுரையில் காணப்படுவது, அவ்வூர்ப் பதிகத்திலிருந்து எடுத்ததாகலாம்:

தொழுமடியர் இதயமலர் ஒரு பொழுது பிரிவரிய
துணைவர் எனலாம்,
எழுமிரவி கிரணநிகர் இலகுதுகில் புனைசெய்தருள்
இறைவர் இடமாம்:
குழவுமறை யவருமுனி வரருமரி பிரமருர
கவனு மெவரும்
தொழுதகைய இமையவரும் அறமருவு துதிசெய்தெழு
துடித புரமே.

*இத்துடித புரமென்பது 'துடித லோகம் போலும்; இது கௌதம புத்தராக அவதரித்த பிரபாபலர் என்னும் போதி சத்துவர், அங்ஙனம் அவதரிப்பதற்கு முன் இருந்த ஒரு தெய்வலோகம்; அன்றிப் பூமியிலுள்ளதொரு புத்த ஸ்தலமுமாம்.**

### பிற நூல்கள்

*தெரிய வந்த நூற் பெயர்களை இதுவரை கூறினோம். பௌத்தர் செய்த நூலாகிய வீரசோழியவுரையில் பெருந்தேவனார் அனேக புத்த சமயப் பாடல்களைத் தருகிறார். யாப்பருங் கல விருத்தியுரையிலும் இத்தகைய பாடல்கள் பின்னும் பல காணப்படுகின்றன. இவற்றைப் பெருந்தொகையில் 185-188, 192-3, 197, 199-212 ஆகிய பாட்டெண்களில் காணலாம்.❖ இவற்றுள் சந்தப்பாடல்கள் சித்திரக்கவிகள் முதலியனவும் காணப்படு கின்றன. இவற்றை ஆராயும்போது, எல்லா வகையிலும் சிறப் புடைய பௌத்த சமய இலக்கியங்கள் பல இருந்தன என்பது திட்டமாகத் தெரிகிறது. இவை யாவும் அழிந்து போயின. மணி மேகலையில், சாத்தனார் சமயக் கணக்கரை மறுக்குமிடத்து, சமண சமயத்தாரையே அதிகம் தாக்கிப் பேசுகிறார். இது பௌத்தரை அரசியல் ஆதிக்கம் பெற்ற சமணரே ஒடுக்கி விட்டார் கள் என்று முன் சொன்ன கருத்துக்கு அரண் செய்கிறது. அவ்வாறு ஒடுக்கிய காலத்தில் பௌத்த சமய நூல்களும் அழிந்தன.*

---

* *மு. ராகவையங்கார், பெருந்தொகை 213ஆம் பாடல் உரைக்குறிப்பு.*

❖ *இவற்றுள் 197 கண் கொடுத்தான் என்ற பாடல், சித்தாந்தத் தொகைக்கும், 208 விளைவாய என்ற பாடல் திருப்பதிகத்துக்கும் உரியனவாயிருக்கலாம். 187 பூ மகனே என்பது 11ஆம் நூற்றாண் டுக்கும், 188 மண்வாழும் என்பது இராசராசன் தந்தை சுந்தரச் சோழனைப் புகழ்வதாய் 10ஆம் நூற்றாண்டுக்கும் உரியனவாகும்.*

## புத்தமத கண்டன நூல்

புத்த மதத்தைப் பற்றி நாம் அதிகமாய் அறிய உதவுவது நீலகேசியுரை. குண்டலகேசியையும் புத்த சமயக் கருத்துக் களையும் மறுத்தற்கென்றே எழுந்த நூல் நீலகேசி. அதன் உரையால்தான் குண்டலகேசியின் வரலாற்றையும் ஆசிரியர் பெயரையும் நாம் அறிகிறோம். குண்டலகேசியின் வரலாற்றை இவ் உரைகாரர் கூறியிருப்பதாலும், கருத்தை எடுத்துச் சொல்லி மறுப்பதாலும், பல பாடல்கள் குண்டலகேசிக்குரியவை என்று அறிகிறோம்; குண்டலகேசி என்ற காப்பியம் இன்று இல்லை என்பது அனைவரும் அறிந்த செய்தி.

இந்நூல் போல, புத்தமத கண்டனமாக அவர் எடுத்துத் தரும் வெண்பாக்கள் 19 கிடைக்கின்றன. இவை யாவும் ஒரு நூலிலிருந்து எடுக்கப்பட்டன வென்று நாம் யூகிக்கிறோம். அந்நூற் பாடல்களை எடுத்துத் தரும் முறையால், உரை யாசிரியர் (15ஆம் நூற்றாண்டு) குறிப்பிட்ட போதிலும் கூட, அப்பாடல்கள் மூல நூலாசிரியர் காலத்துக்கு முற்பட்டவை என்று கொள்ள வேண்டும். நீலகேசி பத்தாம் நூற்றாண்டு எனவே, இக் கண்டன நூல் ஒன்பதுக்குரியது என்று கருதுவது இழுக் காகாது. பார்க்கப் போனால் அக்காலத்தில் ஒரு சைன-பௌத்த சமயப் போராட்டம் தமிழ் நாட்டில் நடைபெற்றதென்று கருதத் தோன்றுகிறது. சைவரால் ஒடுக்கப்பட்ட சைனர் முன்னமே ஒடுங்கியிருந்த பௌத்த சமயத்தாரைத் தங்கள் தாக்குதலுக்கு இலக்காக்கிக் கொண்டனர் போலும். இவ்வாறு நீலகேசியிற் காணப்படும் வெண்பாப் பாடல்களை, அவை கிடைத்தற் கருமை நோக்கி, இங்கு ஒரு தொகுப்பாகத் தருகிறோம். அவற் றுள் புத்தனைக் குறிப்பவை 5; புலால் மறுத்தல் கூறுபவை 6; வினையைக் கூறுபவை 5; மற்றவை 3. புத்த சமயத்தினர் புலால் உண்பவர் என்றே எவ்விடத்தும் நீலகேசி அம்மதத்தினரைக் கண்டிக்கின்றது.

> விதியால் வருவதல்லான் மேதக்கோர் தங்கண்
> மதியினால் வாழ்வதொன் றுண்டோ – பதிதொறுஞ்
> சங்கரனு மையமேற் றுண்டான் தடங்கடல்சூழ்
> மங்கையுடன் காடுறைந்தான் மால். பக்கம் 9,1

புத்தன்தாய் ஞெண்டிப்பி வாழை புனமூங்கில்
கத்தும் விரியன் கடுஞ்சிலந்தி – இத்தனையும்
வேலாலும் வாளாலு மன்றியே தாங்கொண்ட
சூலாலே தம்முயிர்க்குச் சோர்வு. ப. 72, 2

தனக்கும் பிறர்க்கும் பயனின்றிப் புத்தன்
எனைத்துத் துயரு முழத்தல் – கனப்பிணியின்
நீங்கித்தன் கூத்தி குளத்தா ளெனவாதன்
தூங்கத் தலையரிந் தற்று. ப. 83, 3

மருந்து மனச்சென் றிடமா தொருவன்
இருந்த விடத்திருளிற் செல்லுந் – திருந்து
துறக்கத் துயிரையத் தொல்லுயிர்கொண் டுய்த்துப்
பிறப்பிப்ப தற்கென்னே பேசு. ப. 114, 4

மருந்துண்டாற் சில்பொழுது முன்போற் பலியா
திருந்து பயன்கொடுப்ப தேபோற் – பொருந்துவினை
செய்தாற் சிலநாற் கழிந்து வினைப்பயனை
யெய்து மெனவுரைப்பார்க் கென். ப. 117, 5

உண்டியால் வந்த துயரமது மேலை
யுண்டி யொழிய வொழிந்தாள் போற் – பண்டைத்
தொழிலால் முடிந்தவினை மேற்றொழிலை நீங்க
வொழியா நினைவா லுகும். ப. 118, 6

எல்லாப் படியும் விலக்கப் படாதெரியா
வில்ல மழியி லதனகத்தில் – நல்ல
பொருள்கொண்டு போவான்போற் சாம்போது பற்றற்
றருள்கொண்டு போத லறம். ப. 112, 7

உகுநெற் பலகூட்டி யுண்டி முடிப்பான்
மிகநெல் லுதிர்வதனை வேண்டுந் – தகவுடையோ
ருண்ணாப் படுமுடையை யுண்பா னுயிர்மரண
மெண்ணாத வாறுண்டோ விங்கு. ப. 129, 8

செந்தாள வாகிச் சிவந்து புடையொதுங்கி
வந்தாற் கொலையென்று வைத்திடுவர் – தந்தாள்
வளைபோல்வ முல்லை முகைபோல்வ கொள்வர்
விளையாடி வீழ்ந்தனவென் றோர்ந்து. ப. 130, 9

எடுப்பான் கொடுக்கும் பொருள்வேட் டிடிக்கில்
எடுத்தானும் பாபத்தை யெய்தும் – கடித்தெலும்பு

தின்பாய் கொடுக்கும் பொருணசையாற் கொல்வார்க்கு
நின்போல் வினையுளதென் னில். ப. 131, 10

தலைகொணர்ந்தார்க் கீயுந் தனமென் றிருந்தான்
கொலையுவந்தா னாகு மதுபோற் – கொலையுவந்தா
னூன்றருவார்க் கீதும் பொருளென் றிருந்தானுஞ்
சான்றுலக மல்லவோ தான். ப. 133, 11

களவால் வருவ தறிந்துகொண் டானக்
களவாள னாவதூஉங் காண்டு – மளவின்றிக்
கொன்று வருத லறிந்துந் தசைகொண்டான்
கொன்றவ னல்லனோ கூறு. ப. 134, 12

கொலையால்வரு மூனைக்கொண் டுண்ணும் புத்தன்
கொலையுடன்பா டின்றென்று கூறல் – கலையல்குல்
கட்டிக் கிடந்தேனே யாயினுங் காமநோ
யெட்டுணையு மின்றெனக் கென்றற்று. ப. 141, 13

கல்வியா னல்லனே காமதி யாற்றீயான்
செல்வத் துயர்ந்தான் குலத்தினிற் றாழ்ந்தனனாம்
வல்லுவா னொன்றொன்று வல்லா னிதுவன்றோ
நில்லாமை நிற்ற னிலை. ப. 157, 14

இருவர்க்கு மொத்த பொருளை யொருவ
னொருவர்க்குத் தீங்கா வுரைத்தல் – திருவனையாய்
கட்டிக் கடைகிடந்தான் தானழற்குச் சென்றானை
எட்டிச் சிரிப்ப தெனல். ப. 160, 15

காரணத்தாற் பாவத்தைக் கைகொள்ளாச் சாக்கியன்தான்
காரணத்தாற் புண்ணியமுங் கைக்கொள்ளா னானாற்
பொருள்கொடுத்தான் பூசைக்கப் புண்ணியத்தை யெய்தா
னருள்படைத்தார்க் கில்லை யறம். ப. 199, 16

புத்தன் சிறப்பால் வரும்பூசை வேண்டாதான்
புத்தன் சிறப்பினையும் போற்றானா – மித்திறத்துக்
கொன்று கொணர்ந்தவூன் கொள்ளாக் குணமுடையா
னன்றோ கொலைநேரா தான். ப. 199, 17

காரணத்தாற் பாவங் கடிந்த சுகதன்றான்
சீரிலாத் திட்டி விடமாகி – நார்கோத்
திழுக்கின்ற வன்சாவ னென்றருள்செய் தென்னோ
விழிக்கின் றிலன்செத்தான் வேறு. ப. 200, 18

பண்டே யிறந்தாளோர் பைந்தொடியின்றொரு
மிண்டனைப் பெற்றா ளெனலொக்கும் – பண்டுசெய்
நல்வினையுந் தீவினையுங் கெட்டன வின்றுதம்
பல்பயன் செய்யு மெனல். ப. 250, 19

*இவற்றுள் 8, 11, 12 பாடல்களை ஞானப் பிரகாசரும் எடுத்துத் தருகிறார்.*

## *முப்பேட்டுச் செய்யுள்*

*யாப்பருங்கல விருத்தியுரைகாரர், 40ஆம் சூத்திர உரையில், 'நீல நிறத்தனவாய்' என்ற தொடக்கமுடைய இரு வளையாபதிச் செய்யுட்களுக்குப் பின், அவை போன்ற ஆறடிச் செய்யுட்கள் மூன்றைத் தந்து, 'இத் தொடக்கத்தன முப்பேட்டுச் செய்யுளும்* ஆறடியின் மிக்கன வேனும், ஒரு புடையொப்புமை நோக்கிக் கலி விருத்தத்தின் பாற்படுத்தி வழங்கப்படும். கொச்சகத்தின் பாற்படுத்தலும் ஆம். இவை மிக்கன' என்று எழுதுகிறார். மூன்று பாடல்களும் பின்வருவன:*

கல்லினைக் கதிர்மணிக் கவண் பெய்து கானவர்
கொல்லையிற் களிறெறி வெற்பே யாதே
கொல்லையுட் களிறெறி வெற்பனிவ் வியனாட்டார்
பல்புகழ் வானவன் தானே யாதே.
பல்புகழ் வானவன் தாளேசேரா மன்னர்க்கு
நல்ல படாஅ பறையே யாதே.

ஈரித ழிணர் நீலம் இடைதெரியா தரிந்திடூஉம்
ஆய் கதிர் அழற் செந்நெ லரியே யாதே.
ஆய் கதிர் அழற் செந்நெல் அகன் செறுவில் அரிந்திடூஉம்
காவிரி வளநாடன் கழலே யாதே.
காவிரி வளநாடன் கழல் சேர்ந்த மன்னர்க்கு
ஆரரண் நிற்றல் அரிதே யாதே.

நித்திலங் கழலாக நரைதொடி மடநல்லார்
எக்கர்வான் இடுமணல் இணரே யாதே.

---

* *முப்பெட்டு என்பது விளங்கவில்லை. மு. ராகவையங்கார் முப்பேட்டுச் செய்யுள் என்று எழுதியிருக்கிறார். இதுவும் விளக்கமாயில்லை. மூப்பேட்டுச் செய்யுளாயிருக்கலாமோ என்பது எமது கருத்து. மூப்பு - முதுமை.*

> எக்கர்வான் இடுமணல் இணர் புணர்ந் திசைந்தாடும்
> கொற்கையார் கோமானே கொடியே யாதே.
> கொற்கையார் கோமான் கொடித்திண்டேர் மாறற்குச்
> செற்றரண் நிற்றல் அரிதே யாதே.

இம்மூன்று பாடல்களும் முறையே சேரன், சோழன், பாண்டியன் ஆகிய மூவரையும் குறித்து எழுந்தனவாகும். ஒரு காலத்தில் மூவேந்தரையும் ஒருபடியாகச் சிறப்பிக்கும் நிலையோ மரபோ இருந்தது என்று இதனால் தெரிகிறது. இந்த ஒன்பதாம் நூற் றாண்டுக்கு முந்திய நூற்றாண்டில் மூவேந்தர் மீதும் தனித்தனிப் பாடப்பெற்ற தொள்ளாயிரம் (மூன்று) கொண்ட முத்தொள் ளாயிரம் என்ற ஒரு நூல் இருந்தது என்று எட்டாம் நூற்றாண்டு வரலாற்றில் ஆராய்ந்திருக்கிறோம். முப்பேட்டுச் செய்யுள் என்ற இந்த நூலும் அதுபோலவே இந்த நூற்றாண்டில் வேந்தர் மூவர் மீதும் பாடப்பெற்ற பல பாடல்களைக் கொண்ட ஒரு சிறப்பு மிக்க நூலாயிருந்தது போலும்.

இவ்வாறு மூவேந்தரையும் வாழ்த்துகின்ற ஒரு மரபு சிலப்பதிகாரத்துள் காணப்படுகிறது. வாழ்த்துக் காதையில் வாழ்த்து என்ற தலைப்பில் பாண்டியன் சேரன் சோழன் வாழ்த் துக்கள்; பின் அம்மனைவரி நான்கு பாடலும் சோழனைப் புகழ்ந்தது. அடுத்துக் கந்துக வரி மூன்று பாடலும் பாண்டியனைப் புகழ்ந்தது. அடுத்து ஊசல்வரி மூன்று பாட்டும் சேரனைப் புகழ்ந்தது. இறுதியில் மூன்று பாடலும் முறையே சோழனையும் பாண்டியனையும் சேரனையும் புகழ்ந்தது. இவ்வாறு சிலப்பதி காரம் ஓர் அழகிய பாடல் மரபைத் தோற்றுவித்திருக்கிறது. அந் நூலின் பகுதிகளே புகார் மதுரை வஞ்சி என்று மூன்று நகரங் களையும் சிறப்பிக்கும் மூன்று காண்டங்களல்லவா? அது போலவே, முத்தொள்ளாயிரமும் முப்பேட்டுச் செய்யுளும் மூவர் மன்னரையும் புகழ்ந்த நூல்கள் என்று தெரிகிறது.

இனி இந்நூலில் கிடைத்துள்ள மூன்று பாடல்களிலும், இரண்டாமடி மூன்றாமடியாகவும் நான்காமடி ஐந்தாமடியாக வும் மடங்கி வந்திருப்பதைப் பார்க்கலாம். இந்த இயல்பு இதே ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றியதென்று யாம் கருதுகின்ற வளையாபதியிலும் காணப்படுகின்றது (இந்நூல் பக்கம் 53-4). அந்தப் பெருநூல் இன்று இல்லை. எனினும், யாப்பருங்கல விருத்திகாரர் முப்பேட்டுச் செய்யுளைக் காட்டிய அதே

இடத்தில் காட்டிய இரு வளையாபதிச் செய்யுட்களையும் பார்க்கும்போது, அவற்றை முன்மாதிரியாக வைத்தே இந்நூற் செய்யுட்கள் எழுந்தனவென்று தெரிகிறது.

## பருப்பதம்

தொல்காப்பியம் செய்யுளியல் உரையில் பேராசிரியர் நூற்பெயரைக் குறிப்பிடுகிறார். சூத்திரம் பாட்டெனப்படாது பாட்டு வேறு, உரை வேறு, நூல் வேறு என்று சொல்லியவிடத்து உரையாவது பாட்டிடை வைத்த குறிப்பு என்று சொல்லி ஒழிந்த பாட்டிற்கும் இவ்வாறே பொருளெழுதின் அஃது ஒக்கும், அவை பாரதம், பருப்பதம் முதலியன (சூத்திரம் 173 உரை) என்று எழுதுகிறார். இதனால் பருப்பதம் என்ற ஒரு நூல் இருந்தது, அது பாரதத்தோடு ஒத்துச் சொல்லத்தக்கது. ஒரு கால் அது பழைய உரையுடையது என்று நாம் அறிகிறோம். அந்த நூல் இன்று இல்லை.

## புராண சாகரம்

யாப்பருங்கல விருத்தி உரைகாரர் இந்த நூலைக் குறிப்பிடு கிறார். 'இன்னும் பலவடியால் வந்த பஃறொடை வெண்பா இராமாயணமும் புராண சாகரமும் முதலாக உடைய செய்யுட் களைக் கண்டு கொள்க' (சூத்திரம் 62) என்று அவர் எழுது கிறார். இப்பெயர் வடமொழியில் கதாசரித் சாகரம் என்ற நூற் பெயரோடு ஒப்பிட்டு நோக்கத்தக்கது. இராமாயணத்தைப் போன்ற ஒரு பெரு நூலாக இது இருந்திருக்கக் கூடும். புராணம் என்பது பழங்கதை; சாகரம் என்பது கடல்; இது ஒரு பெரும் கதைக் கடலாகும். இது வெண்பாவினால் செய்யப்பட்ட நூல் என்றும் பஃறொடை வெண்பா இதனுள் இருந்தன என்றும் அறிகிறோம். நூல் இப்போது இல்லை.

மேற்குறித்த இரு நூல்களும் பல வகையான இலக்கிய இலக்கணச் சோதனைகளும் நூற் பெருக்கமும் ஏற்பட்ட கால மாகிய 8-9ஆம் நூற்றாண்டுகளில், 9ஆம் நூற்றாண்டுக்கு உரியன ஆகலாம்.

வையாபுரிப்பிள்ளை எழுதிய பின்வரும் குறிப்பைக் காண்க: 'சுமார் 75 ஆண்டுகளுக்கு முன்னர் ஸ்ரீ கிருஷ்ணமாச்சாரியரால்

ஸி.எல்.எஸ். பதிப்பகத்திலிருந்து வெளியிடப்பட்ட ஒரு பாடப் புத்தகத்தில் புராண சாகரம் என்றொரு நூலிலிருந்து சில செய் யுட்கள் தரப்பட்டுள்ளன என்று ஞாபகம் வருகின்றது இப்புராண சாகரம் முன் குறித்த நூல் தானோ அன்றோ என்பது துணியக் கூடவில்லை. 'கதாசரித் சாகரம்' என்ற வடநூற் பெயரின் சாயையில் இந்நூற் பெயர் அமைந்திருத்தலால், அதற்குப் பின் கி.பி. 12ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இது இயற்றப் பெற்றதாகலாம். கதாசரித் சாகரம் இயற்றிய சோம தேவபட்டர் (கி.பி. 1063 - 1081) 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். எனவே இப்புராண சாகரம் 12ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யில் இயற்றப் பெற்றதாகலாம்.' இங்கு கூறப்பட்ட காலம் பொருந்தாது. யாப்பருங்கல விருத்தியின் காலம் 11ஆம் நூற் றாண்டு. அதனால் புராண சாகரம் அதற்கு முற்பட்டது. சாகரம் என்ற பெயரினாலேயே, புராண சாகரம் பட்டர் நூலுக்குப் பிற்பட்டதென்று சொல்வது சரியன்று. அக்காலத்துத் தமிழ் வல்லார் பெரும்பான்மையோர் வடமொழி வல்லுநராயும் இருந்திருக்கிறார்கள்.

## பெருமானடிகள் - அபராசிதவர்மன்

காஞ்சியில் நிருபதுங்கவர்மனுக்குப் பின் அபராசிதவர்மன் ஆட்சி புரிந்தான். இவன் தந்தை ஏவலின்படி பெரும் படை யோடு ஆதித்த சோழனுக்குத் துணை வந்து திருப்புறம்பயத்தில் இரண்டாம் வரகுண பாண்டியனை முறியடித்தான். இவ்வெற்றி யினால், பின்னால் ஆதித்த சோழன் சோழராட்சியை ஒரு பேரரசாக வளர்ப்பதற்கு வாய்ப்புக் கிடைத்தது என்பது வர லாற்றுச் செய்தி.

இந்த அபராசிதவர்மன் தமிழ்ப்புலமையும் பெற்றிருந்தான் என்று தெரிகிறது. இவனுடைய காலத்தில் நம்பியப்பி என்பவர் திருத்தணிகை வீரட்டானேசுவரர் கோயிலில் கருங்கல் திருப்பணிகள் பல செய்தார். அப்பி என்பது பிராமணர்க்கு வழங்கிய ஓர் இயற்பெயர். இவர் திருப்பணி புரிந்த செய்தி அபராசிதன் காலத்தில் கோயிலில் எழுந்த ஓர் சாசனத்தால் தெரிய வருகிறது. பின்வருவது சாசனம்: 'ஸ்வஸ்தி ஶ்ரீ:

திருந்து திருத்தணியற் செஞ்சடையீ சற்குக்
கருங்கல்லாற் கற்றளியா நிற்க – விரும்பியே

**நற்கலைகளெல்லாம் நவின்றசீர் நம்பியப்பி**
**பொற்பமையச் செய்தான் புரிந்து.**

இது பெருமானடிகள் தாம் பாடி அருளித்து.

இது நம்பியப்பியைப் பெருமானடிகள் புகழ்ந்து பாடிய வெண்பா. பெருமானடிகள் என்பது பொதுவாக, சிவபெருமான் திருமால் முதலான இறைவரைக் குறிப்பிடுவது. ஆனால் பிற் காலத்தில் வீரசோழப் பெருமான் அடிகள் (சோழன்), பெரு மானடிகள் உள்ளன்பு மிக்கு உள்ள இரண கீர்த்தி (பாண்டியன்), இங்கே பெருமானடிகள் இராஜதேஜஸ் வாராது நிற்க (பல்லவன்), பெருமானடிகள் மேல் பல்லவரையர் படை வந்து (கங்க வரசன்) என்று சாசன ஆட்சிகள் இருப்பதால், இங்கும் பெரு மானடிகள் என்பது அரசனைக் குறிக்கும். இந்நம்பியப்பி அபராசிதன் காலம் என்று அங்குள்ள வேறு சாசனங்கள் தெரி விப்பதால், பெருமானடிகள் என்ற தொடர் அபராசிதனையே குறிப்பதாகும். இவன் கலம்பகம் கொண்ட நந்திவர்மனுடைய பேரன் என்பதற்கேற்ப, புலமை உடையவன் என்றும் இப்போது அறிகிறோம். நற்கலைகளெல்லாம் நவின்ற சீர் நம்பியப்பி யின் தொண்டைப் பாராட்டி இம்மன்னன் இவ்வாறு பாடிப் பொறிக்கச் செய்தான் போலும்.

பெருமானடிகள் என்று இம்மன்னன் வழங்கப்பெற்றமை குறிப்பிடத்தக்கது. (இளம் பெருமானடிகள் என்ற பெயருடைய அடியவர் ஒருவர் இருந்து சிவபெருமான் திருமும்மணிக் கோவை பாடினார். அது பதினொராந் திருமுறையுள் தொகுக்கப் பெற் றுள்ளது. ஒருகால் அவர் ஓர் அரச குமாரராக இருந்திருக்கலாம்.)

இத்திருத்தணிகை வீரட்டக்கோயில், கஜப்பிருஷ்ட விமான முடையது; இதுவே பல்லவர் கட்டிய கடைசிக் கோயிலாகும். அபராசிதவர்மனுக்குப்பின் பல்லவ வமிசம் அழிந்துவிட்டது. (சாசனத் தமிழ்க்கவி சரிதம், மு. இராகவையங்கார் 1937, பக்கம் 25 - 26 பார்க்க).

## பாண்டிமாராயப் பெருங்கொல்லன் சீவல்லபன்

ஒன்பதாம் நூற்றாண்டில் சாசனவாயிலாய் அறிய வருகின்ற ஒரு சிறப்பான புலவன் இப்பெயர் கொண்டவன். இரண்டாம் வரகுண பாண்டியன் 862இல் முடிசூடி இருபதாண்டுக் காலம் ஆட்சி புரிந்தான். ஆட்சியிறுதியில் கும்பகோணத்தருகே உள்ள

*திருப்புறம்பயத்தில் இவனுக்கும் சோழர் பல்லவர் படைக்கும் கி.பி. 880இல் ஒரு பெரும் போர் நிகழ்ந்தது. இந்தப் போரில் இவன் தோற்றான். சில நாளில் வரகுணன் இறக்கவும், இவனுடைய மூத்த மகன் முடி முனையவும், உடனே இளைய மகன் சடைய வர்மன் பராந்தக பாண்டியன் அவனை அரச பதவியிலிருந்து நீக்கிவிட்டுத் தானே முடி புனைந்து கொண்டான். பராந்தகன் 20 ஆண்டுகள் ஆட்சி புரிந்தான். அக்காலத்தில் அவன் ஒரு புலவனுக்குப் பெரும் சிறப்புக்கள் செய்து அவைப் புலவன் ஆக்கினான் போலும். இப்புலவன் பராந்தகனுடைய சாசனங் களுக்கு மெய்க்கீர்த்தியும் பாடலும் எழுதிக் கொடுத்திருக்கின் றான். இவன் குண்டூர் என்ற ஊரில் பிறந்தவன். சிவபெரு மானுக்குப் பரசு செய்து கொடுத்த முனிவன் வழி வந்தவன், பண்டிதராசன், பாண்டித் தமிழாபரணன் என்று தன்னைக் குறிப்பிட்டுக் கொள்கிறான். பெருங்கொல்லன் மரபு பாண்டி யனிடத்து மாராயப் பட்டம் பெற்றவன்; சீவல்லபன் என்றும் பட்டம் புனைந்து கொள்கின்றான். இச் செய்திகளை இவன் எழுதிய ஒரு செய்யுட் சாசனத்தின் இறுதிவரிகளால் அறியலாம்.*

கொந்தலர்தார் கோச்சடையன் கூடற்கோன் குருசரிதன்
செந்தமிழ்க்கோன் ஸ்ரீநிகேதனன் ஸ்ரீபராந்தக மகராஜன்
தேர்மிகுமாக் கடற்றானைத் தென்னவர்கோன் திருவருளாற்
சீர்மிகுசெப் பேட்டுக்குச் செந்தமிழ்ப் பாத்தொடை செய்தோன்
கிருதஉகமெனும் ஊழிக்கண் அவிர்சடைமுடி அரன்வேண்ட
நற்பரசு நிருமித்தவன் நளிர்சடைமேல் அலங்கல் பெற்ற
மாமுனிவன் வழிவந்தோன் பாமருபண்டிதராசன்
பொன்வரன்றி மணிவரன்றி அகில்வரன்றிக் கரைபொருபுனல்
தென்வைகை வளநாடன் செழுங்குண்டூர் நகர்த்தோன்றல்
பாண்டித்தமி ழாபரணன் என்னும் பல சிறப்புப் பெயரெய்திய
பாண்டிமாராயப் பெருங் கொல்லனாகிய சிரீவல்லவன்
தென்னவர்தந் திறலாணைச் சிலையொடு புலிகயலிணைமன்
பொன்னிமையச் சிமையத்து விறற்கருவி இற்றைக்குந்
தொழில்செய்து வந்தவர்பின்னோன் செயல்பல பயின்றோர் முன்னோன்
திருமலி சாசன மிதற்குச் செழுந்தமிழ் பாடினோன்.

*இந்த சாசனப் பாடல் 240 அடிகொண்ட மிகவும் நீண்ட பாடல். முன்னோர் செயல்கள் பல சொல்லப்பட்டுள்ளன. தென் மதுரா புரம் செய்து அருந்தமிழ் நற்சங்கம் இரீஇத் தமிழ் வளர்த்து ஆலங்கானத் தமர் வென்று களப்பாழர் குலம் களைந்து காட*

வனைக் கருவூரில் கால்கலங்கக் களிறு கைத்த கூடலர்கோன் வரகுணன். அவன் சேய் சீவல்லபன். அவனுடைய மகன் ஈழங் கொண்டு வில்லவற்கு விழிஞத்து விடைகொடுத்து காடவர் உக்கு அடல் ஆனூர் பீடிழியக் குடகுட்டுவர் குணசோழர் அடலழிந்து களஞ்சேரச் செய்தவன். உம்பர்வான் உலகணைந்தபின் மற்ற வர்க்கு மகனாகிய கொற்றவன் நன்கோ வரகுணன் உலகங் காக் கின்ற நாளில் பொத்தப்பிக் குலச்சோழன் மதிமகள் அக்கள நிம்மடி திருவயிறு கருவுதித்த ஸ்ரீ பராந்தக மகாராஜன்* முன் பிறந்த வேல் வேந்தனைச் செந்தாமரை மலர்ப்பழனச் செழு நிலத்துச் செருவென்றும் மேம்பட்ட மதுராபுர பரமேசுவரன் செங்கோல் யாண்டு ஆறாவது: அப்போது காடக சோமயாசி என்பவன் பாண்டியரிடத்து முன்னமே யாகபோகமாக சோமாசிக் குறிச்சி என்ற ஊரைப் பெற்றிருந்தான். அதற்கு ஆதாரமான செப்பேடு தொலைந்து போயிற்று. அதன்மேல் மீண்டும் புதிய செப்பேடு வேண்டும் என்று அவன் பராந்தகனை வேண்ட, இவனும் அவ்வாறே அவ்வூருக்கு மதுரதர நாணு என்ற புதுப் பெயரிட்டு எல்லையும் குறிப்பிட்டுச் செப்பேடு எழுதிக் கொடுத் தான் என்ற செய்தி இங்கு சொல்லப்பட்டுள்ளது. இதுவே இந்தச் செப்பேட்டின் பொருள். இந்தக் கவிஞன் தன்னைக் குறித்துச் செப்பேட்டின் இறுதியில் விளக்கமாகச் சொல்பவற் றால் அவன் வரலாறு சிறிதளவு தெரிகின்றது. பாடுவது, அரச னுடைய வீரச் செயல்களைச் சொல்ல வேண்டிய சாசனப் பாட்டாயினும், ஆங்காங்கு சுவையமைந்த தொடர்களைப் பெய்து பாடுகிறான். நில மோங்கும் புகழாலும், நிதி வழங்கு கொடையாலும், வென்றிப் போர்த் திருவாலும் வேல்வேந்தரில் மேம்பட்டவன்; ஒன்று மொழிந்து இரண்டு ஓம்பி ஒருமுத்தீ உள்பட்டு, நன்று நான் மறை பேணி ஐவேள்வி நலம்படுத்து, அறுதொழில்கள் மேம்பட்டு மறையோர். பன்னிருவர்க்குப் பகல் செய்யும் பருதி ஞாயிறும் இரவுச் செய்யும் பனிமதியும் அகல் ஞாலமும் உளவளவும் செப்பேடு செய்து கொடுத்தருளினன்.

சாசன வாசகம் எழுதிக் கொடுத்த புலவன் பெயர் தெரிவது இலக்கிய வரலாற்றிலும் சாசன வரலாற்றிலும் மிகவும் அபூர்வம்.

---

* சதாசிவ பண்டாரத்தார் பராந்தகன் சாசனத்தை வெளியிட்டு, வரகுணனைப் பராந்தகன் நீக்கிவிட்டு முடி புனைந்தான் என்று எழுதியுள்ளார்; அது பொருந்துவதாகத் தோன்றவில்லை.

பதினைந்து சோழ மன்னருக்கு முப்பதுக்குக் குறையாத மெய்க் கீர்த்திகள் எழுதப் பெற்றிருந்தன; எழுதிய புலவன் பெயர் தெரிந்ததில்லை. இங்கு, சாசனம் எழுதிய புலவன் ஒரு பெருங் கொல்லன் என்பதும் ஒரு சிறப்பு. இவன் ஊர் குண்டூர் என அறியப்படுகிறது.

**சேந்தன் பாடிய அம்பிகை யந்தாதி**

சேந்தன் திவாகரத்தில் 9ஆவது தொகுதி இறுதியில் காணப் படும் தொடர் சேந்தன் அம்பிகை மீது ஓர் அந்தாதி பாடினான் என்பதைத் தெரிவிக்கிறது:

> அண்ணல் செம்பாதிக் காணி யாட்டியை
> பெண்ணணங்கை மூவுலகும் பெற்ற அம்மையை
> செந்தமிழ் மாலை அந்தாதி புனைந்த
> நாவலன் அம்பர் காவலன் சேந்தன்.

இவ்வரிகள் அந்தாதி வரலாற்றைக் குறிப்பிடுகின்றன. அடுத்த தொகுதியின் இறுதித் தொடர்கள் அம்பர்ச் சேந்தன் அரக்கரைப் பொருத முரட்போர் வில்லும், பாரதம் பொருத பேரிசைச் சிலையும், தாருகற்றடிந்த வீரத்தயிலும் பாடிய புலவன் என்று கூறுகிறது. 11ஆம் தொகுதியின் இறுதித் தொடர் சேந்தன் கல்விச் செல்விக்கு அமிழ்து சுவையீந்த அரும்பெறல் இன்பத்து ஒரு பெருஞ் செல்வன் என்று கூறுகிறது. இவற்றால் சேந்தன் அந்தாதி பாடியது உண்மை என்பது தெரிகிறது. உமாதேவி அம்சமே தாருகனைத் தடிந்த துர்க்காதேவி ஆதலினால், அவ்வந்தாதி துர்க்கையைப் போற்றுவதாகவும் இருக்கலாம். அந்நூல் கவிச் சுவையினால் கல்விச் செல்விக்கு அமிழ்து சுவை யீந்ததாகவும் கொள்ளலாம். நூல் இன்று கிடைக்கவில்லை. அம்பர்ச் சேந்தன் வரலாற்றைத் திவாகரத்தைக் குறித்த அத்தியாயத்தில் (பக்கம் 119-131) விளங்கக் காணலாம்.

ooo

# அத்தியாயம் 11

# உரைநடை

## முன்னுரை

நாம் கருதுகின்ற காலப் பகுதியில் தமிழ் மொழியில் யாரும் உரைநடையை எண்ணிப் பார்த்திருப்பார்கள் என்று தோன்ற வில்லை. நூல்களெல்லாம் மனப்பாடமாகவே வழங்கி வந்தன. மனப்பாடம் செய்வதற்குச் செய்யுளே ஏற்றது. ஓசையாலும், அடிசீர்தளை வரையறையாலும், எதுகை மோனையமைப் பாலும், கற்போர் மனத்தில் செய்யுள் எளிதாக நிற்கும். இது பற்றி, சிறந்த இலக்கியங்கள் மட்டுமல்லாமல், இலக்கணங் களும், நிகண்டு போன்ற நூல்களும், பிற்காலத்தில் வைத்தியம் சோதிடம் போன்ற பிறதுறை நூல்களும் செய்யுளாகவே ஆக்கப் பெற்றிருந்தன.* நூல்களைப் பனையோலை ஏட்டில் தான் எழுதி வைக்க வேண்டியிருந்தது. பனையோலை தயாரித்து அதில் எழுத்தாணி கொண்டு எழுதி வைப்பதும், வைத்து வேண்டும் போது நூலைப் பிரித்துப் பார்ப்பதும், பின் கட்டி வைப்பதும் எளிதான காரியங்கள் அல்ல. ஆகவேதான், நூல் செய்தோர் பாட்டாகச் செய்ததோடு மட்டுமல்லாமல், பாட்டுக்களை மனப்பாடம் செய்தும் வைத்திருந்தார்கள்.

இறையனார் களவியல் உரை பற்றிய வரலாற்றையும் இங்கு நினைவு கூறலாம். மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் செய்த இந்த உரையானது அவர் தம் மகனார் கீரங் கொற்றனார்க்குச் சொல்ல அவர் தம் மகனார்க்குச் சொல்ல இவ்வாறு பல தலைமுறைகள் கடந்து 10ஆம் தலைமுறையில் வந்த முசிறியாசிரியர் நீலகண்டனார் என்பவர் அவ்வுரையை ஏட்டில் எழுதி வைத்தார். களவியல் 60 சூத்திரம் அளவால் மிகவும் குறைவு: ஆனால் அதன் உரை அளவால் மிகவும் நீண்டது.

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு உரைநடை பற்றிய முன்னுரையில் காண்க.

இத்தனையும் பத்துத் தலைமுறைகள் மனப்பாடமாகவே வந்தது என்று அறியும்போது, மனப்பாடம் செய்வது எவ்வளவு முக்கியமாய்க் கருதப்பட்டது என்று காண்கிறோம்.

உரைநடையை மனப்பாடம் செய்வது கடினமாதலால், உரைநடையில் பண்டை நூல்கள் எழவேயில்லை. ஒன்பதாம் நூற்றாண்டைப் பொறுத்தவரையில், இரண்டே இடங்களில் உரைநடையைப் பார்க்கிறோம். ஒன்று தமிழ்நெறி விளக்கத் தின் உரை, மற்றது பெருந்தேவனார் பாரத வெண்பாவின் உரை நடைப் பகுதி; பிற உரைநடைப் பகுதிகள் சாசனங்களாகும்.

### தமிழ் நெறி விளக்க உரை

நூலாசிரியரே உரையும் மேற்கோள் பாடல்களும் செய் தார் என்பது முன் சொல்லப்பட்டது. உரைப் பகுதி மிகவும் குறைவு. எடுத்துக்காட்டாக ஒரு பகுதி 260ஆம் பக்கத்தில் உள்ளது. உரையுள் சிறப்பாக ஆசிரியர் எதுவும் எழுதவில்லை. சொல்ல வேண்டுவதெல்லாம் மூலத்திலும் மேற்கோளிலும் எளிமையாகக் காட்டி விட்டார்.

### பெருந்தேவனார் பாரத வெண்பா

அடுத்துச் சொல்லத்தக்கது, பெருந்தேவனார் பாரத வெண்பா. இந்நூலை, இந்நூற்றாண்டு வரலாற்றின் முதல் அத்தியாயத்துள் ஆராய்ந்திருக்கிறோம். இந்நூல் செய்யுளும் உரைநடையுமாக இயன்றது. வெண்பா என்று பெயர் பெற் றிருந்த போதிலும், இதனுள் சில விருத்தப் பாக்களும் ஆசிரியப் பாக்களும் உள்ளன. தமிழில் உரை நடையும் செய்யுளுமாக உள்ள நூல்கள் மிகவும் அருமை. வடமொழியில் இவ்வகை நூல் கள் சம்பு காவியம் எனப்படும். பண்டை இலக்கணங்களுள் இது, உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்று சொல்லப் படுகிறது. சிலப்பதிகாரமே உரையிடையிட்ட பாட்டுடைச் செய் யுள் என்று சொல்லப்பட்டுள்ளது; ஆனால் அதனுள் உரைப் பகுதி மிகமிகக் குறைவு, அதுவும் எதுகை மோனையோடு செய் யுளோசை பெற்ற துண்டுப் பகுதியேயாகும். தகடூர் யாத்திரை என்ற பண்டை நூலும் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்று இலக்கண உரைகள் கூறும்; ஆனால் நூல் இல்லை.

உரையும் பாட்டுமாகத் தமிழில் உள்ள சிறப்பு நூல்கள் இரண்டே. ஒன்று ஒன்பதாம் நூற்றாண்டில் எழுந்த பாரத வெண்பா. மற்றொன்று 14ஆம் நூற்றாண்டில் எழுந்த சைன

சமயதத்துவ நூலாகிய சிவசம்போதனை* என்பது. இங்கு பாரத வெண்பாவை மட்டும் பார்க்கலாம். இந்நூலுள், செய்யுட் பகுதியைவிட உரைநடைப் பகுதியே அளவால் பெரிது.

பாக்களெல்லாம் செந்தமிழ் நடையுடைய பாக்களாயிருக்க, உரைநடை மட்டும் செந்தமிழ் நடையாயில்லை. உரைநடை என்ற மாத்திரத்திலே ஆசிரியர் இப்பகுதியை இலக்கிய நடையாகிய செந்தமிழ் நடையில் அமைக்காமல், பேச்சு நடையில் அமைத்திருக்கிறார் என்று நன்கு புலப்படுகிறது. பேச்சு என்று சொல்லும் போது, பாமர மக்களுடைய பேச்சல்ல, கல்விகற்ற மக்களுடைய பேச்சு; தமிழும் வடமொழியும் நன்கறிந்து ஓரளவு பக்தியோடும் வாழ்ந்த மக்களுடைய பேச்சு. பக்திச் சுவையை இவர் உபயோகிக்கும் அடை மொழிகளால் நன்கறியலாம்: இவை பிற இடங்களில் காட்டப்பட்டுள்ளன. ஆசிரியர் முயன்று செய்யாமல், வழங்கிய மொழியை அப்படியே பெய்திருக்கிறார். இந்த நடை அக்காலம் கற்றோரிடை வழங்கிய மொழிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் நாம் கொள்ளலாம். ஆசிரியர் தேடி எடுத்து அல்லது வலிந்து வடசொற்களை அதிகம் பெய்தார் என்று நாம் கருத வேண்டியதில்லை. இது சமய நூலல்ல; சமய நுட்பங்களை விளக்குவதற்கு வடசொற்கள் தேவைப்படுகின் றனவே என்று இங்கு சொல்ல இடமில்லை. ஆசிரியர் இங்கு கதை சொல்லுகிறார். கற்பனை நயங்களையும் அழகுணர்வையும் வெளிப்படுத்த, பாக்கள் போதிய இடமளிக்கின்றன. உரைநடைப் பகுதி, பாரதக்கதையை அதற்குரிய அலங்காரத்தோடு மட்டும் சொல்லிக் கொண்டு போவதற்காக ஏற்பட்டது. ஓரளவு இது இன்றைய கதாகாலட்சேப முறை என்று சொன்னாலும் பொருந்தும்.

'ஸ்ரீ வாசுதேவன் சாரதியாகத் துணிந்து அருச்சுனனை இரட்சிக்கும் பொருட்டாக வெழுந்தருளினமையாலே, துரியோதனனும் அவன் மகாசேனையும் விண்ணுலக மாள வீமார்ச்சுனர் பிரதிக்கினையும் முற்றுவித்துக் குருநாடு முழுதுங் குற்றமில் லாமற் காட்சிக் குடைநிழல் கவிப்பச் செற்றந்தீர்ந்து செங்கோலோச்சுதற்கும் மற்றினி யெமக்கு வருத்தமிலெனக் கொற்ற வேந்தன் குருகுல ராசன் தருமபுத்திரன் மனமகிழ்ந்துரைத்து, தேவதேவன் ஸ்ரீ வாசுதேவன் எழுந்தருளக் கண்டு களிகூர்ந்து

* இதன் விளக்கத்தை எமது 14ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாற்றில் காண்க.

சருவ க்ஷத்திரியருஞ் சேவை பண்ணத் தவளச் சத்திரம் மேல் நிழற்றக் கருடத்துவசம் விசும்பணவ எம்மருங்கும் எழின் மணிக் கவரி யருகிரட்டச் சங்கு பேரி முதலாகிய இசைக்கலன்கள் பஞ்ச மகா சத்தம் முழங்கப் போந்து உபலாவிய நகரம் புகுந்து தருமபுத்திரன் கோயிற் சென்றெய்தி ஆங்கு ஒரு தனி மண்டபத் துத் தரும புத்திராதிகளும் பாஞ்சாலராசனும் விராடராசனுங் குந்தி போசராசனும் மற்றுமுள்ளிட்டாரும் புடைசூழ வீரசிங் காதனத்துமிசை வீற்றிருந்தான் ஸ்ரீவாசுதேவனென்றவாறு.'

இப்பகுதி முழுமையும் ஒரே வாக்கியம்; இவ்வாறே பொது வாக நூல் முழுமையும் அமைந்திருக்கக் காணலாம். உரைநடை யானது, கதைகூறும்போது, தொடர்ந்த செய்திகளைச் சங்கிலித் தொடர் போலக் கோத்தே சொல்கிறது, எனினும் ஆசிரியர் இரு இடங்களில், சிறுசிறு வாக்கியங்களாகவும் அமைக்கிறார். ஒன்று ஒருவர் உரையை அப்படியே சொல்லும்போது; இங்கு வாக்கியங்கள் தனித்தனியாய்ச் சிறிய அளவினவாய்ச் செய்யப் பட்டுள்ளன. கருத்தை எவ்விதச் சிரமமுமில்லாமல் நேர்முக மாய் உணர்த்துகின்றன. பின்வரும் பகுதியில் முற்பாதி சிறு வாக்கியங்களால் அமைந்தது; பிற்பாதி தொடர்ந்து நீண்ட ஒரே வாக்கியம்; இப்பகுதி தன் உற்றாரோடு போர் செய்ய வேண்டிய நிலைமையை எதிரில் கண்ட அருச்சுனன் போர் செய்ய மறுத்த போது, தேர்த்தட்டில் சாரதியாயிருந்த கண்ணன், போர் செய்வது அவனுடைய கடமை என்று உணர்த்துவதாகும்.

'எம்பெருமான் என்று அறியாமையினாற் செய்தனவும் சொல்லியனவும் உளவாயிற் பொறுத்தருள வேண்டும் என்று சரணாரவிந்தத்து மேற்பணிந்து கிடந்தானைத் தடவரைத் தோள் பற்றியெடுத்து நிறுத்திச் சொல்லுவான். கிருதயுகத்தின் கண் அசுரர்வதை நிமித்தமாக நான் நாராயணனாய்த் தோன்ற நீ நரனாய்த் தோன்றினாய்; அதன்பின் திரேதா யுகத்தின் கண் இராக்கதர் வதை நிமித்தமாக நான் இராமனாய்த் தோன்ற நீ லக்ஷ்மணனாய்த் தோன்றினாய்; அதன்பின் துவாரபர யுகத்தின் கண் மனுஷர் வதை நிமித்தமாக நான் வாசுதேவனாய்த் தோன்ற நீ அருச்சுனனாய்த் தோன்றினாய்; அதுவும் பிராண நாசம் பண்ணிப் பூபாரந் தீர்ப்பதன் பொருட்டாகத் தோன்றின விக்கிரகங் கண்டாய்; ஆதலால் உனக்கிங்குப் பூமி பாரந் தீர்ப்பது சந்தேகமில்லை; மற்றிவர்களாற் பிரயோசனமில்லை; இங்கு நிற்கின்ற க்ஷத்திரிய சமூகமும் ஸர்வப் பிராணிகளும் நொடி வரையிலென் கையின் மாண்டொழியும். பூமியின் கண் தன்ம

கன்மமென் கின்றவை யிரண்டும் நிலை பெறற்காகவும் யாவர் பாலுஞ் சத்தியமென்கின்ற வசனத்துக்குப் பிரசித்தம் வேண்டு மென்றும், தரும புத்திரனுடன் முன்ன முரைத்த மொழி மறுத்த துரியோதனன் சேனையை உங்கள் பிரதிக்கினை பங்கமாகாமல் நின்னைக்கொண்டு பங்கந் தீர்த்துத்தர வேண்டியும் இது நின்னாலே துணியப் பட்டது கண்டாய்; நீ கொல்லாமல் ஒழிந்தாயாயினும் யானிந்தப் பதாதி சங்கத்தைச் சங்கரித்து விடுகை தவிரேனாதலின், உங்கள் பிரதிக்கினை பங்கமாகாமல் யானிற்க வீண்ட நீ யிந்த க்ஷத்திரிய சமூகத்தைக் கொல்வதற்கு நிமித்தமாய்த் துணிந்து நிற்பாயாக என்றும், யானும் நீயும் நர நாராயணரன்றோ வென்றும், இவ்வகை தெருட்டி யருளிச் செய்யக் கேட்டு மனந்தெளிந்து தக்க ஞானத்தால் யாது விண் ணப்பஞ் செய்தானருச்சுனன்.'

மற்றோர் உதாரணமும் காட்டுவோம்: கண்ணன், 'யான் துயில் கொண்டவிடத்து ஒரு லக்ஷணங் கண்டபடி கேண்மின் என்றருளிச் செய்வான்: 'அருச்சுனன் காலிற்றாமரைப் பூவுங் கொடியுங் கண்டேன்; கையிலொரு சங்கபற்பமும் கயலும் கண்டேன்; மற்றும் பல ராச லக்ஷண முண்டாயிருந்தது. இதனால் அருச்சுனனுக்கு வீர பரவசியம் உண்டாம்; துரியோதனன் இராசசபைக்குப் பங்கமாயவன் மகா சேனைக்கும் நிச்சயமே நாசஞ் சித்திக்கும்' என்று இவ்வகை கண்டதொரு லக்ஷணங் குறித்திடுங்கள்" என்கிறான்.

போரின் வருணனையாகவுள்ள பின்வரும் பகுதியையும் காண்க:

இவ்வகை யெட்டுத் திசையுந் தலைபனிப்ப விரண்டு திறத்து யுத்தவீரருந் தஞ்சிறுநாணெறிந்து யுத்தகோஷஞ் செய்தார். அவ்விடத் திரண்டுசேனைக்கடலுந் தம்மொடு தாக்கியேன்று ஒருவர்மே லொருவருடன் றெழுந்தார். அப்பொழுது ஸ்ரீ வாசு தேவன் வடிக்கயிறு முட்கோலும் பிடித்துச் சுவேதாசுவங்களைத் தூண்டிக் கடுவிசையாற் றேரோட்டா நின்றான். அவ்வளவில் அதிகோபமெய்திக் கூற்றிரண்டு குறித்தெழுந்தாற் போல அருச்சுனனும் ஸ்ரீ வீஷ்மனுந் தலைப்பெய்தார். வீமசேனனும் துரியோதனனுந் தலைப்பெய்தார். தருமபுத்திரனுஞ் சல்லியனுந் தலைப்பெய்தார். திட்டத் துய்மனுந் துரோணா சிரியனுந் தலைப் பெய்தார். சகாதேவனுஞ் சகுனியுந் தலைப்பெய்தார் ...* இவ்வகை

* இவ்விடத்து, பின்னும் 18 தொகுதியினர் இல்லாது தலைப்பெய்தார் என்று சொல்லப்பட்டது;

மற்றொழிந்த வரசர்களோடரசர்களும் காலிங்கரோடு காலிங் கரும்........* ஒன்றொருவரோ டொன்றொருவர் சென்று தாக்கி நெருக்கலுற்றனர். அப்பொழுது தேருந்தேரும் எதிர்திளைத்தன. மாவுமாவும் மயக்குற்றன. களிறுங் களிறுங் கையுறுத்தன. வாளும் வாளும் வயவுற்றன. வேலும் வேலும் வேய்ப்புற்றன. சிலையுஞ் சிலையுஞ் சிதைவுற்றன. மழை பொழிந்தன சர படலங்கள். மற்றுமுள்ள அஸ்திர சஸ்திரங்களாலிரு விசும்பும் பொறியெழுந்தன. இவ்வகை யிரண்டு திறத்து யுத்தவீரரும் எய்து மெறிந்து மார்த்திடுதலினா லாகாசமுஞ் சரபடலத்தான் மறைப்புண்டது. திரண்டெழுந்தது தூளிபடலம். சிறு நாணொலி திசாமுகங்கள் செவிடுபடச் சிலம்பின. அப்பொழுது, சத்திகளும் விட்டேறுகளுந் தண்டு பிண்டி பாலங்களும் பெரு வச்சிராயுத மும் தோமரங்களும், வேலும் வாளும் வில்லும் குந்தமும் பாரா வளையமும், முசுண்டியுஞ் சூலமுங் கணிச்சியுந் தொல்படை யாவு மெதிரெதிர் திளைத்தன. விசும் பெரி பரந்தன. சேனை முழுதும் போர் மலைந்தன. பொறி பறந்தது. அமர கணங்களு மாச்சரியப்பட்டன. ஆதித்திய மண்டலமுந் தூளிபடலத்தான் மறைப்புண்டது. ஆர்ப்பரவ மெழுந்திட்டது. சூரிய பணிலமுஞ் சுமுல படகமும் ... கரதாளமு மணிமுரசும் பேரிகைகளும் மத்தளமுஞ் சல்லிகையுங் குட முழாவுங் குலுங்க வார்த்து எம் மருங்கும் பஞ்ச மகாசத்த முழங்க மகாயுத்தம் விளைந்திட்டது. உற்பாதம் பல தோன்றியிட்ட துருமுக் குரலொலி போன்றது. இவ்வகை மகாகோஷமான திமிலயுத்தம் விளைந்திட்டது.

இவையன்றி, இந்நூலுள் பாரத வெண்பா ஆராய்ந்த முதல் அத்தியாயமும் பார்க்க பக்கம் 14 - 16, 19, 22-25.

### சாசனங்களின் உரைநடை

உரைநடை ஆராய்ச்சிக்கு உண்மைக் கருவியாகக் கிடைப் பன உடன்காலக் கல்வெட்டுக்கள். எடுத்துக்காட்டாகச் சில இங்கே தருகிறோம்.

### சீமாறன் சீவல்லபன் (830–862)

ஸ்வஸ்தி ஸ்ரீ மாறஞ்சடையற்கு யாண்டு முப்பத்தஞ்சு; நாள் நானூற்றுப் பத்து ஒன்பது. இந் நாளால் களக்குடி நாட்டு ப்ரம்மதேய மானநிலை நல்லூர் மஹாஸபையோம் பெருங்குறி

---

* இவ்விடத்துப் பின்னும் 29 தொகுதியினர் இவ்வாறு சென்று தாக்கினர் என்று சொல்லப்பட்டது; இடமின்மை கருதி அத்தனை யும் இங்குப் பெயர்த்தெழுதவில்லை.

சாற்றி, ஸ்ரீ கோவர்த்தனத்துக் கூடியிருந்து இவ்வூர் மஹாஸபை யோம் கூடி மன்றாடுவதனுக்குச் செய்த வ்யவஸ்தையாவது: இவ்வூர் பங்குடையார் மக்கள் ஸபையில் மன்றாடுகிறது. ஒரு தர்மம் உட்பட மந்திர ப்ராம்மணம் வல்லார் ஸுவ்ருத்தராய் இருப்பாரை ஒரு பங்கினுக்கு ஒருத்தரே ஸபையில் மன்றாடுவ தாகவும், விலையும் ப்ரதிக்ரஹமும், ஸ்திரீதனமுமுடையார் ஒரு தன்மமுட்பட மந்திர ப்ராம்மணம் வல்லாராய் ஸுவ்ருத்தராய் இருப்பாரே மன்றாடுவதாகவும், இதன் மேற்பட்டது விலை யாலும் ப்ரதிக்ரஹத்தாலும் ஸ்திரீதனத்தாலும் ச்ராவணை புகுவார் முழுச் சிராவணை அன்றி கால் சிராவணையும் அரைச் சிரா வணையும் முக்கால் சிராவணையும் புகவும் பணிக்கவும் பெறு வதாகவும். பங்கு விலைக்குக் கொள்வார் ஒரு வேதம் எல்லா இடமும் ஸபரிசிஷ்டம் பரிக்ஷை தந்தார்க்கே ச்ராவணை பணிப்பதாகவும், இப்பரிசு அன்றி ச்ராவணை புக்காரையும், பின்னையும் இக் கச்சத்தில் பட்ட பரிசே மன்றாடுவதாகவும், இப் பரிசினால் முழுச் சிராவணை இல்லாதாரை எவ்வகைப் பட்ட வாரியமும் ஏற்றப் பெறாதாராகவும். இப் பரிசு செய்கின் றாரும் அன்றென்று குத்துக்கால் செய்யப் பெறாதாராகவும். குத்துக் கால் செய்வாரையும், குத்துக்கால் செய்வார்க்கு உறவாயுட னிற்பாரையும் வெவ்வெற்று வகை ஐயஞ்சு காசு தண்டங் கொண்டு, பின்னையும் இக் கச்சத்தில் பட்ட பரிசே செய்வதாகவும்.

இது பாண்டியர் சாசனம். மெய்க்கீர்த்தி இல்லை. பிற் காலத்தில் (10-11 நூற்றாண்டுகள்) பெருஞ் சக்கரவர்த்தியான இராசராச சோழன் காலம் முதலே விரிவான மெய்க்கீர்த்தி களைப் பாடிக் கல்லில் பொறிக்கும் வழக்கம் பரவியிருக்கிறது. ஒன்பதாம் நூற்றாண்டில் சோழர் கல்வெட்டு மிக மிகக் குறைவு. இப் பாண்டியன் கல்வெட்டில் வட சொற்கள் அதிகம் பெய்யப் பெற்றிருப்பது காணத்தக்கது. இது திருநெல்வேலி தாலுக்கா மானூர் அம்பலவாணர் கோயிலில் உள்ளது.

### தந்திவர்மன் (பல்லவ மன்னன் 775–825)

இவன் கலம்பகம் கொண்ட மூன்றாம் நந்திவர்மனின் தந்தை (இக்கல்வெட்டின் காலம் 787, ஆகவே 8ஆம் நூற்றாண்டு எனல் பொருந்தும். எனினும் இதன் கருத்துச் சிறப்பு நோக்கி இங்கே தருகிறோம்.) புகழ்த்துணை நாயனார் பெயரை ஒருவன் தரித்துக் கொண்டிருக்கிறான். கோயில் அமுது தருதற் குரிய நிலத்தை ஒருவன் ஒற்றி வைக்கவே, அதைப் புகழ்த்துணை விசை யரையன் பணம் கொடுத்து மீட்டு, மீண்டும் கோயில் அமுதுக்குப்

பயன்படும் படி செய்ததோடு, அது குறைந்தால் வேறு நிலத்தி லிருந்தும் ஈடுசெய்கிறான். கோயில் சொத்துக்களை எல்லோரும் கூடி விழுங்கிவிடும் இக்காலத்துக்கு எத்தகையதோர் அரிய படிப்பினை!

ஸ்வஸ்தி ஸ்ரீ. பல்லவகுல திலக பாரத்வாஜ கோத்ராலங் காரபதியாகிய ஸ்ரீ தந்தி வர்ம மஹாராஜர்க்கு வருஷவர்த்தநம் யாண்டு பன்னிரண்டாவது. திருவல்லிக்கேணி குலங்கிழார்கள் கருமாரச் சேரிப்புலம் ஒற்றிவிட்டு. நாற்பத்தைங்காடி நெல் பொலி ஊட்ட திருவடிகட்கு திருவமிர்து மூட்டப் புகழ்த்துணை விசையரையன் முப்பதின்காடி நெல்லும் ஐங்கழஞ்சு பொன்னுங் கொடுத்து, மீட்டுத்தன தாக்கி அஞ்ஞாழிநெல்லால் இருநாழி தூக்குத்தலரிசியால் இராப்போனகம் சங்க சர்மனும் சட்டி சர்மனும் இளையசட்டி சர்மனுங் காட்டுவாரானார்கள். முட்டில் லவிப் புலத்துந் தத்தன் புலத்துங் காரை கிழான் புலத்தும் சுவாமி போகத்துட் டிருவமிர்து காட்டுவோமானோம். இத்தர்மத் துள்ளார் யாவரேனும் கோச் சேவது* செய்து செலுத்த வொட்டிக் கொடுத்தோம். ஈழ விளக்கும் வட்டிலோஹப் பானையும் ரஷிப்பது. புகழ்த்துணை விசையரையன் தர்மம் இது. இதனை ரஷித்தாரடி இரண்டும் என் முடி மேலன.

## நந்திவர்மன் III (825 – 850)

இவனே கலம்பகம் கொண்ட நந்திவர்மன், முன் கூறிய தந்திவர்மனது புதல்வன். வேலூர்ப்பாளையம் செப்பேடு கி.பி. 831.

பழங்கோட்டத்து நாயறு நாட்டுத் திருக்காட்டுப் பள்ளிப் பஞ்சாலம் ஆயிரக்காடி இது கோவிசைய நந்திவர்மற்கு யாண்டு ஆறாவது. சோழமஹாராஜா விண்ணப்பத்தால் இரையூர் உடை யான் நம்பனாணத் தியாகத் திருக்காட்டுப்பள்ளி சன்னக்குறி யக்ஞபட்ட ரெடுப்பித்த யக்ஞே சரத்து மஹாதேவர்க்கு நாட்டு நீங்கலாய் உட்புரவாய் தேவதானமாகப் பெற்றதற்குப் பெற்ற பரிகாரம் நாடாட்சியும் ஊராட்சியும் புரவுபொன்னும் திருமுக்காணமும் வட்டி நாழியும் புதாநாழியும் தட்டுகாயமும் ஈழம் பூட்சியும் இடைப் பூட்சியும் மன்று பாடும் தரகும் தறிக் கூறையும் கூலமும் நல்லாவும் நல்லெருதும் நல்லாடும் நாடு காவலும் ஊடு போக்கும் கல்லாணக் காணமும் குசக்காணமும் பாறைக்காணமும் பட்டினச்சேரியும் மற்று மிவ்வூரெல்லை

---

* கோச்சேவது - கோ செய்வது.

உரிகப்பட்டது. கோத்தொட்டுண்ணப்பால தெல்லாம் எவ்வகைப் பட்டதும் கோக்கொள்ளப்பெறாதே யக்ஞேசரத்து மஹாதேவரே கொள்ளப் பெற்றதற்குப் பெற்ற வியவஸ்தை கட்டொட்டால மாட மாளிகை எடுக்கப் பெறுவதாகவும் தமனகமும் இருவேலி யும் செங்கழுநீரும் உள்ளியும் நடப் பெறுவதாகவும் காவு தெங்கிடப் பெறுவதாகவும் துரவு கிணறிழித்தப் பெறுவதாகவும் பெருஞ்செக்கிடப் பெறுவதாகவும் இவ்வூரெல்லை உள்ளிட்ட தெங்கும் பனையும் இவர்கள் மனமின்றி ஈழவரேறப் பெறா தாராகவும். இவ்வகைப் பட்ட வியவஸ்தை யினூடு யக்ஞேசரத்து மஹாதேவர்க்குத் தேவதானமாய்....

மற்றொருசாசனம்: கல்வெட்டு: இவன் காலத்தில் முதன் முதலாக, திருப்பதிகம் பாடுவாருக்கு நிபந்தம் அளித்த செய்தி திருவல்லம் கல்வெட்டின் மூலம் வெளியாகிறது. ஆகவே, பின்வரும் கல்வெட்டு உரைநடை என்ற அளவில் மட்டுமன்றி, திருப்பதிக வரலாற்றுக்காகவும் சிறப்பாய்க் கருதத்தக்கது. இராசராசன் திருப்பதியம் விண்ணப்பிப்பதற்காக நிபந்தங்கள் அளித்த வரலாறுகள் காலத்தால் நூற்றைம்பது ஆண்டுகள் பிற்பட்டன. இக்கல்வெட்டின் காலம் கி.பி. 845. தீக்காலி வல்லம் என்பது தொண்டை நாட்டிலுள்ள தலம்; சம்பந்தர் பாடல் பெற்றது.

திருவல்லம் விஸ்வநாதேசுவரர் கோயில் மகாமண்டபம் வடக்குச் சுவர் (தென் இந்தியக் கல்வெட்டறிக்கை தொகுதி III, பகுதி I எண் 43, பக்கம் 92)

ஸ்வஸ்தி ஸ்ரீ. திருமண்ட பமிழிச்சி யெடுப்பதற்கு முன்புள்ள சிலாலேகைப்படி கோ விஜயநந்தி விக்கிரம பந்மர்க்கு யாண்டு 17ஆவது படுவூர்க் கோட்டத்து மீயாறு நாட்டுத் தீக்காலி வல்லமுடைய பரமேசுவரர்க்கு இன்னாட்டு ஐம்பூரணியும் விளத்தூரும் இத்தேவர் தேவதானம் அமரூன்றி மங்கலமும் விடெல் விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதி மங்கலமென்னும் பேரால் ஏகக்கிராமமாக மாவலி வாணராயனான விக்கிர மாதித்த வாணராயன் விண்ணப்பத்தாலும் காடுபட்டித் தமிழப் பேரரையன் ஆணத்தியாலும் ஏகக் கிராமமாக்கி இவ்வமரூன்றி மங்கல முன்னித் தீக்காலி வல்லமுடைய பரமேச்வரர்க்கு இறுத்து வருகின்ற நெல் இரண்டாயிரக்காடியும் பொன்னிருபதின் கழஞ்சுமிவ்விடெல் விடுகு விக்கிரமாதித்தச் சதுர்வேதி மங்கலத்துச் சபையார் இறுப்பாராகவும். இன்னெல்லில் திருவமிர்துக்கு நெல்லு

அறுநூற்றுக் காடியும் திரு வுண்ணாழிகையுள்ளாரா தித்துப் பாசரிக்கும் சிவப்ராஹ்ற மணர்க்கு நெல்லு ஐஞ்னூற்றுக் காடியும் ஸ்ரீபலி கொட்டுவார்க்கு நெல்லு ஐஞ் னூற்றுக்காடியும் திருப்பள்ளித் தாமம் பறிப்பார்க்கும் திருப்பதியம் பாடுவாருள் ளிட்ட பலபணி செய்வார்க்கு நெல்லு நானூற்றுக் காடியும் திருநந்தா விளக்குக்கும் திருமெய்ப் பூச்சுக்கும் சிதாரிக்கு மற்றும் கண்டஸ் புடிதநவ கந்மாதிகளுக்குமாகப் பொன் இருபதின் கழஞ்சும் ஆக இன்னெல்லும் இப்பொன்னும் இத்தேவர்க்கு சந்த்ராதித்த வல்லிறுப்பார்களாகவும். இப்பரிசு நிவந்தமாகச் செய்து குடுத்தோம். இத்தர்மம் பந்மாஹேச்வர ரக்ஷை.

## கம்பவர்மன் (870 – 912)

இவன் நிருபதுங்க வர்மனுடைய தம்பி என்பது மரபு. அவனோடு இவனும் உடன் காலத்தில் ஒரு பகுதியில் ஆட்சி செலுத்தியதாக வரலாற்றாசிரியர் சொல்வர். பின்வருவது இவன் காலத்து நடுகற் கல்வெட்டு (873)

ஸ்வஸ்திஸ்ரீ கோவிசைய கம்ப பருமற்கு யாண்டு மூன்றாவது வயிரமேக வாணகோவரையர் சேவகன் மீகுன்றை ஞாட்டு மலையனூருடைய செம்பத் தொண்டன் மகன் காரிப் பெருமான் பாசற்றெருமைத் தொறு எயினாட்டார் கொள்ளப் பாசாற்றூர் பூசலிடப் பூசல் சென்று கோவூர் நாட்டுச் சிற்றிடையாற்று முதுகொன்றை மூக்கின் மீமலை அயங்கயக் கரையிற் சென்று முட்டி மலையனூருடைய செம்பர் மகனான காரிப்பெரு மானண்ணன் உரையிலம்பு மாள எவ்விப்பத்திர முருவி எதிரே சென்று பட்டான்.

## இராசகேசரிவர்மன்

ஆதித்த சோழன், திருக்கழுக்குன்றம் பக்தவத்சல சுவாமி கோயில், காலம் 897.

ஸ்வஸ்திஸ்ரீ. கோ இராஜகேசரி பர்மர்க்கு யாண்டு 27ஆவது களத்தூர்க் கோட்டத்துத் தன் கூற்றுத் திருக் கழுக்குன்றத்து ஸ்ரீ மூலஸ்தனத்துப் பெருமான் அடிகளுக்கு இறையிலியாக ஸ்கந்த சிஷ்யன் கொடுத்தமையில் அப்படியே வாதாபி கொண்ட நர சிங்கப் போத்தரையரும் அப்பரிசே ரக்ஷித்தமையில், அண்டுரை யன் குணவன் மகன் புத்தன் விண்ணப்பத்தினால் பூர்வ ராஜாக்கள் வைத்தபடியே வைத்தேன். இராஜகேசரி பற்மனேன். இத்தர்மம் ரக்ஷித்தான் அடிஎன் முடிமேலன.

பிற்சேர்க்கை

## தமிழ் மன்னர் பரம்பரை

இந்த நூற்றாண்டில் ஆட்சி புரிந்த தமிழ் மன்னர் பரம் பரையை அறிவது இலக்கிய வரலாற்றறிவுக்குத் துணை புரியும் முதலாவதாகப் பல்லவர். மூன்றாம் நூற்றாண்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு புதிய அரசை நிறுவிய இம்மன்னர் பரம்பரை வரலாறறிந்த தொன்றாகும். அருங் கலை வளர்த்த பெருமை இவர்களுக்குரியது. மகேந்திரனையும் நரசிம்மனை யும் இலக்கிய வரலாற்றில் அறியாதார் யார்? இந்நூற்றாண்டில் கலம்பகம் கொண்ட மூன்றாம் நந்திவர்மன் அரசாண்டான். ஆனால் அவன் பேரனான அபராசிதவர்மனோடு இந்த நூற் றாண்டிலேயே பல்லவ வமிசம் அற்றுப் போய்விடுகிறது. பல்லவர் கோயிற் பணிகள் குறைவு, சாசனங்களும் அதிகம் வடமொழியில் ஆகவே வரலாற்றுச் செய்திகள் தெளிவுபடக் கிடைக்கவில்லை.

முதற் சங்ககாலம் தொடங்கி இலக்கிய வரலாற்றில் பாண்டியர் சொல்லப்பட்டாலும், அவர்களுடைய பண்டைய வரலாறு தொடர்பில்லாமலும் குழப்பம் நிறைந்ததாயுமே காணப் படுகிறது. பாண்டியன் கடுங்கோன் 575இல் களப்பிரரை ஓட்டிய பின், வரலாறு சிறிதே விளக்கம் பெறுகிறது. பின்னுள்ள அட்டவணையில் காட்டிய காலத்துக்கு நெடுங்காலம் பின்னும், 14ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் முகம்மதியப் படை மதுரையைக் கைப்பற்றுகிற வரையில் அவர்களுடைய ஆட்சி மதுரையில் நீடிக்கிறது. பின்னும் கூட மதுரையை விட்டு ஓடிய பாண்டியர்களின் ஆட்சி 15-16ஆம் நூற்றாண்டுகளில் தென்காசி முதலான இடங்களில் நடைபெற்ற செய்தியும் தெரிய வருகிறது.

இனி, சோழர் ஆட்சி குறித்துச் சங்ககாலம் முதல் இலக் கியத்தில் நாம் அறிந்த போதிலும்கூட, வரலாற்றில் விளக்க மில்லை. 5ஆம் நூற்றாண்டில் கோச் செங்கட் சோழன் ஆட்சி

புரிந்திருக்கக்கூடும்: தொடர்பு விளங்கவில்லை. ஆனால் புதிய பரம்பரை ஒன்பதாம் நூற்றாண்டில் தொடங்குகிறது; 13ஆம் நூற்றாண்டு முடிய இது பேரரசாக வளர்ந்து பெருஞ் சிறப்போடு விளங்குகிறது. இப்பரம்பரையின் வரலாறு கல்வெட்டுக்கள் மூலமாய் மிகவும் விளக்கமாயும் திட்டமாயும் தெரியவருகிறது.

இக்காலப் பகுதியில் சேரமன்னர் பற்றிய தொடர்பு எதுவும் இல்லை. பல்லவ பாண்டிய சோழர் பரம்பரையை இந்நூற்றாண்டுக்குப் பொருந்திய அளவில் பின்னே தருகிறோம்.

## பல்லவர் பரம்பரை

நந்திவர்மன் II 710 - 775

|

தந்திவர்மன் 775 - 825
(திருமங்கையாழ்வார் காலம்)

|

நந்திவர்மன் III 825 - 850
(கலம்பகம் கொண்டவன்)

|

நிருபதுங்கவர்மன் 850 - 882 (கம்பவர்மன் 870 - 912)

|

அபராசித வர்மன் 872 - 890 (பல்லவ வமிச முடிவு)

கம்பவர்மனைக் குறித்த செய்திகளுக்கு விளக்கமில்லை; இவன் நிருபதுங்கனோடு உடனாக மற்றொரு பகுதியில் ஆட்சி புரிந்தானென்றும் சொல்வர்.

## பாண்டியர் பரம்பரை

நெடுஞ்சடையன் பராந்தகன் 763 - 790

இராசசிம்மன் II 790 - 800

வரகுணன் I 800 - 830

சீமாறன் சீவல்லபன் 830 - 862

- வரகுணன் II 862 - 880 (மாணிக்கவாசகர் காலம்)
- பராந்தகன் 880 - 900
  - இராச சிம்மன் III 900 - 920

## சோழர் பரம்பரை

(விசயாலயன் 846 இல் தஞ்சையைக் கைப்பற்றிச் சோழ அரசை நிலைநாட்டுகிற வரையில் சோழர் வரலாறு விளக்கமில்லை

1. பரகேசரி விசயாலய சோழன் 846 - 881
2. இராசகேசரி ஆதித்த சோழன் 871 - 907
3. பரகேசரி பராந்தக சோழன் 907 - 953

கன்னர தேவன் (பட்டமில்லை)

## பாரத நூல் அட்டவணை

| எண் | நூற்பெயர் | ஆசிரியர் | காலம் | உடன் காலத் தலைவர் | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| 1 | பாரதம் | - | - | - | 'மாபாரதம் தமிழ்ப் படுத்தும் மதுரா புரிச் சங்கம் வைத்தும்' என்ற சின்னமனூர்ச் சாசனக் குறிப்பு. நூல் இல்லை. |
| 2 | பாரதம் | பாரதம் பாடிய பெருந்தேவனார் | | | இவர் எட்டுத்தொகை நூல்களுக்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர். குறிப்புக்கள் எப்படி யிருந்த போதிலும், இவரே இத்தொகை நூல்களைத் தொகுத்திருக்கலாம். |
| 3 | பாரதவெண்பா | பெருந்தேவனார் | 825 - 85 | நந்திவர்மன் III | பாட்டும் உரைநடையும். நந்திவர்மனைக் குறிப் பிடுகிறார். ஒரு பகுதி மட்டும் கிடைக்கிறது பீஷ்ம துரோண பர்வங்கள், மாவிந்தம். |
| 4 | பாரதம் | கருணிலைவி காசன் | 13 நூற்றாண்டு தொடக்கம் | குலோத்துங்கன் III | 1210இல் திருவாலங்காட்டில் திருவிளக்கு நிபந்தம். |
| 5 | வில்லிபாரதம் | வில்லிபுத்தூராழ்வார் | 14 நூ | வக்கபாகை வரபதி ஆட்கொண்டான். | 4351 பாடல். 10ஆம் நாட் போர் வரையில் பாயிரப் பகுதி. இவர் மகன் வரந்தருவார். |
| 6 | ஆதி பருவத் தாதி பருவம் | அம்பலத்தாடுமையன் | 17 நூ | | சந்தனு வரலாறு மட்டும். |
| 7 | பாரதப் பிற்பகுதி | அட்டாவதானம் அரங்க நாதக் கவிராயர் | 18 நூ | | அச்சு 1922இல், 2477 செய்யுள். 11 நாட்போர் முதல் 18ஆம் நாட் போர் வரை; வில்லிபார தத்தைப் பூர்த்தி செய்வது. |
| 8 | நல்லாப்பிள்ளை பாரதம் | நல்லாப்பிள்ளை முருகேச கவிராயர் | 19 நூ | | புதிதாக 11ஆயிரம் பாடல் பாடி வில்லி பாரதத் தில் சேர்த்து அதனைப் பெருக்கினார்கள். நாட்டுப் படலம் நகரப்படலம் உண்டு. |

## நிகண்டுகளின் வரலாற்று அட்டவணை

| எண் | நிகண்டு | ஆசிரியர் | சமயம் | நூற். | யாப்பு | பகுதி | சூத்திரம் | சொல் | பதிப்பித்தோர் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | திவாகரம் | திவாகரர் | சைவர் | 9 | நூற்பா | 12 | 2180 | 9,500 | தாண்டவராய முதலியார் | 1839 |
| 2 | பிங்கலம் | பிங்கலர் | சைவர் | 10 | நூற்பா | 10 | 4121 | 14,700 | சிவன்பிள்ளை | 1890 |
| 3 | உரிச்சொல் நிகண்டு | காங்கேயர் | சைவர் | 14 | வெண்பா | 12 | 287 | 3,000 | குமாரசுவாமிப் புலவர் | 1906 |
| 4 | சுயாதரம் | சுயாதரர் | சைவர் | 15 | கலித்துறை | 11 | 566 | 10,500 | வையாபுரிப் புள்ளை | 1939 |
| 5 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் | சைனர் | 16 | விருத்தம் | 10 | 1197 | 11,000 | ஆறுமுகநாவலர் முதலானவர் | பலர் |
| 6 | அகராதி நிகண்டு | ரேவண சித்தர் | வீரசைவர் | 16 | நூற்பா | 10 | 3334* | -- | மதுரைத் தமிழ்ச்சங்கம் | 1921 |
| 7 | ஆசிரிய நிகண்டு | ஆண்டிப் புலவர் | சைவர் | 17 | ஆசிரிய விருத்தம் | 11 | 263 | 12,000 | அச்சாகவில்லை | - |
| 8 | கைலாச நிகண்டு | கைலாசர் | சைவர் | 17 | நூற்பா | -- | -- | 15,000 | பிங்கலத்தின்வழி; அச்சாகவில்லை | - |
| 9 | பாரதி தீபம் | திருவேங்கட பாரதி | சைவர் | 17 | கலித்துறை | 12 | 737 | 13,000 | அச்சாகவில்லை | - |
| 10 | பல்பொருட் சூடாமணி | ஈசுவரபாரதி | சைவர் | 17 | விருத்தம் | 3 காண்டம் | -- | -- | அச்சாகவில்லை | |
| 11 | அரும்பொருள் விளக்க நிகண்டு | அருமருந்தைய தேசிகர் | சைவர் | 18 | விருத்தம் | -- | 700 | 12,000 | வையாபுரிப் பிள்ளை | 1931 |
| 12 | உசித சூடாமணி | சிதம்பரக் கவிராயர் | சைவர் | 18 | விருத்தம் | 18 | 937 | - | -- | 1933 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 13 | பொதிகை நிகண்டு | சாமிநாத கவி | சைவர் | 18 | I விருத்தம் II நூற்பா | 10 | 500 | 14,000 2,228 | வையாபுரிப் பிள்ளை | 1932 |
| 14 | பொருள்தொகை நிகண்டு | சுப்பிரமணிய பாரதி | சைவர் | 18 | நூற்பா | | 1000 | | மதுரைத் தமிழ்ச் சங்கம் | 1920 |
| 15 | ஔவை நிகண்டு | ? | ? | 18 | விருத்தம் | ? | ? | -- | வேதகிரி முதலி யார் குறிப்பு | - |
| 16 | நாமதீப நிகண்டு | சிவசுப்பிரமணியக் கவிராயர் | சைவர் | 19 | வெண்பா | 16 | 800 | 12,000 | வையாபுரிப் பிள்ளை | 1930 |
| 17 | நானார்த்த தீபிகை | முத்துசாமிப் பிள்ளை | சைவர் | 19 | விருத்தம் | 18 | 1110 | 5,432 | அனவரத விநா யகம் பிள்ளை | 1936 |
| 18 | சுந்தசுவாமியம் | சுப்பிரமணிய தேசிகர் | சைவர் | 19 | நூற்பா | | | 2,743 | சில பகுதிகள் மட்டும் | - |
| 19 | அபிதானத் தனிச் செய்யுட் சிந்தாமணி | கோபாலசாமி நாயகர் | சைவர் | 19 | பலவகை யாப்பு | | | | முதல் பகுதி மட்டும் | 1878 |
| 20 | சிந்தாமணி நிகண்டு | வைத்திலிங்கம் பிள்ளை | சைவர் | 19 | - | 400 | 3,000 | - | - | 1874 |
| 21 | வேதகிரியார் நிகண்டு | வேதகிரி முதலியார் | சைவர் | 19 | விருத்தம் | 1 | 600 | - | 11ஆம் தொகுதி மட்டும் | 1842 |
| 22 | விரிவு நிகண்டு | அருணாசால நாவலர் | சைவர் | 19 | விருத்தம் | 12 | 1100 | - | அச்சாகவில்லை | - |
| 23 | பொதிய நிகண்டு | ? | ? | 19 | விருத்தம் | ? | ? | | வேதகிரி முதலி யார் குறிப்பு | - |

**குறிப்பு :-** இப் பட்டியலில் கண்ட 7 - 10, 14 - 15, 18 - 23 நிகண்டுகள் எங்கும் கிடைக்குமென்று தோன்றவில்லை: இக்குறிப்புக்கள் வையாபுரிப் பிள்ளை நூல்களிலிருந்து எடுக்கப்பட்டவை. 8 ஒரு பகுதி வையாபுரிப்பிள்ளை அச்சிட்டார். ஏனையவை யாவும் நூல்களிலிருந்து யாம் ஆராய்ந்தெடுத்த குறிப்புக்கள். ஆசிரியருள் ஒருவர் சைனர்; ஏனைய அனைவரும் சைவர். நிகண்டுத் தன்மை பொருந்தி வீரமாமுனிவர் பெயரால் வழங்கும் சதுரகராதியை இவ் வட்டவணையில் சேர்க்கவில்லை.

* எண் 6 : அகரம் முதல் வகரம் வரை, மொழி முதல் எழுத்துக்கள், 10 வரிசை.

ஆசிரியர் பெயர் கால அட்டவணை

| ஆசிரியர் | நூல் | காலம் | உடன்காலத்தவர் | பக்கம் |
|---|---|---|---|---|
| அறிவனார் | பஞ்சமரபு | 875 - 900 | பாண்டியன் | 236 |
| - | இரும்பல் காஞ்சி* | 850 - 75 | | 42 |
| ஐயன் ஆரிதனார் | புறப்பொருள் வெண்பாமாலை | 850 - 75 | | 188 |
| கபிலர் | பாட்டியல்* | 800 - 25 | | 235 |
| கம்பர் | இராமாயணம் | 875 - 900 | சடையப்ப வள்ளல் | பாகம் 3 |
| கல்லாடர் | பாட்டியல்* | 850 - 25 | | 223 |
| சிறுகாக்கைபாடினியர் | சிறுகாக்கை பாடினியம்* | 825 - 50 | | 229 |
| சேந்தன் | அம்பிக்கையந்தாதி* | 850 - 75 | திவாகரர் | 316 |
| திருத்தக்கதேவர் | சீவக சிந்தாமணி | 875 - 900 | சத்தியவாக்கியன் | பாகம்3 |
| திருப்பிரவாசிரியர் | தூக்கியல்* | 825 - 50 | | 230 |
| திவாகரர் | திவாகரம் | 875 - 900 | சேந்தன்; நிருபதுங்கவர்மன் | 93 |

| | | | | |
|---|---|---|---|---|
| - | நந்திக் கலம்பகம் | 800 - 25 | நந்திவர்மன் III | 267 |
| - | தமிழ்நெறி விளக்கம் | 855 - 50 | வழுத்தூர் - மதிதரர் | பாகம்3 |
| பெருந்தேவனார் | பாரதவெண்பா, மாவிந்தம் | 825 - 50 | நந்திவர்மன் III | 10 |
| நம்மாழ்வார் | திருவிருத்தம் திரு ஆசிரியம்<br>பெரிய திரு அந்தாதி<br>திருவாய்மொழி | 800 - 25 | மதுரகவி வரகுணன் I | பாகம்2 |
| நாதமுனிகள் | - | 875 - 900 | பராங்குசதாசர் | பாகம் 2 |
| மதுரகவிகள் | கண்ணி நுண்சிறுத்தாம்பு | 825 - 850 | நம்மாழ்வார் | பாகம்2 |
| மாணிக்கவாசகர் | திருவாசகம் | 850 - 875 | வரகுணன் II | பாகம்2 |
| - | வளையாபதி* | 825 - 850 | | 44 |
| - | விம்பிசாரகதை* | 825 - 850 | | 299 |

* நூல்கள் இல்லை.

## ஆசிரியர் கால ஒப்புமை அட்டவணை

| காலம் | இலக்கியம் | இலக்கணம் | சைவம் | வைணவம் | பிரபந்தம் பிறவகை |
|---|---|---|---|---|---|
| 800 - 825 | பருப்பதம் *<br>புராண சாகரம் * | தமிழ்நெறி விளக்கம்,<br>கபிலர் பாட்டியல் *<br>கல்லாடர் பாட்டியல் | | | |
| 825 - 850 | நந்திக்கலம்பகம்<br>பாரத வெண்பா<br>மாவிந்தம்<br>இரும்பல் காஞ்சி *<br>வளையாபதி *<br>விம்பிசார கதை * | இந்திரகாளியம் *<br>சிறுகாக்கை<br>பாடினியம் *<br>திருப்பிரவாசிரியர்<br>தூக்கியல் * | | நம்மாழ்வார்<br>மதுரகவி | |
| 850 - 875 | சித்தாந்தத் தொகை * | புறப்பொருள்<br>வெண்பா மாலை | | பராங்குசதாசர் | சேந்தன் -<br>அம்பிகை<br>அந்தாதி * |
| 875 - 900 | கம்பர்,<br>திருத்தக்கதேவர் | திவாகரம், பஞ்சமரபு | மாணிக்கவாசகர்<br>(திருக்கோவை) | நாதமுனிகள் | |

* இறந்து போன நூல்கள்.

# ஆதார நூல்கள்

## அத்தியாயம்

1. பெருந்தேவனார் பாரத வெண்பா அ.கோபாலையர் பதிப்பு 1925, மாவிந்தம் - தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையப் பதிப்பு 1950. திவாகரம், பிங்கல நிகண்டு.

2. புறத்திரட்டு வையாபுரிப்பிள்ளை பதிப்பு 1936.
தக்கயாகப் பரணியுரை ஐயரவர்கள் புதல்வர் பதிப்பு 1945.
சிலப்பதிகாரம் ஐயரவர்கள் பதிப்பு 1927.
தணிகைச் சந்நிதி முறை, நன்னூல் மயிலைநாதர் உரை ஐயரவர்கள் பதிப்பு.

3. திவாகரம்: பக்கம் 168, 171 பார்க்க. வையாபுரிப்பிள்ளை இலக்கிய மணிமாலை 1954.

4. தமிழ் நெறி விளக்கம் - ஐயரவர்கள் பதிப்பு 1937.
புறப்பொருள் வெண்பாமாலை மேற்படி பதிப்பு 1953. பக்கம் 213.

5. பன்னிருபாட்டியல் - மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 1951.
யாப்பருங்கல விருத்தி பவானந்தம்பிள்ளை பதிப்பு 1916-17; பாகம் 2;
நவநீதப் பாட்டியல் உரை ஐயரவர்கள் புதல்வர் பதிப்பு 1944.

6. பஞ்ச மரபு. வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர் பதிப்பு. 1973.

7. தமிழ் நெறி விளக்கம், பஞ்ச மரபு பதிப்புக்கள்.

8. யாப்பருங்கல விருத்தியுரைப் பதிப்பு.

9. நந்திக் கலம்பகம்: பக்கம் 295 பார்க்க, தொண்டை மண்டல சதகப் பதிப்பு சி.கு. நாராயணசாமி முதலியார் 1924.

10. யாப்பருங்கல விருத்தியுரை. சித்தியார் பரபக்கவுரை, கொ. சண்முக சுந்தர முதலியார் 1898.
நீலகேசியுரை அ. சக்கர வர்த்தி நயினார் பதிப்பு 1936.

11. கல்வெட்டுத் துறையின் அறிக்கைகள்.

இவையன்றி, மு. இராகவையங்கார் பெருந்தொகை, சாசனக் கவிசரிதம்; தொல்காப்பிய உரைகள்; சதாசிவ பண்டாரத்தார் சோழர் வரலாறு முதற்பகுதி; இராசமாணிக்கனார் பல்லவர் வரலாறு முதலியனவும் பயன்பட்டன.

## சொல்லாட்சியும் பொருளும்

○○○

# மேற்கோள் செய்யுள் முதற் குறிப்பு

○○○

# சிறப்புப் பெயர் - பொருள் அகராதி

○○○



நாட்டு வரலாற்றை நோக்கும்போது,
ஒன்பதாம் நூற்றாண்டு, நாட்டு வரலாற்றில்
ஒரு திருப்பு மையமாக அமைந்திருப்பது புலப்படும்.
சேர, சோழ, பாண்டியர் என்பது நம் சொல்லாட்சி மரபு.
சேரர் தொடர்பு, சில காலம் முன்னதாகவே
நின்றுபோய் விட்டது.
சேரமான் பெருமான், குலசேகராழ்வார் முதலியோர்
இந்நாட்டில் தோன்றினர் என்ற இலக்கியத் தொடர்பை
நாம் கருதலாமாயினும்,
நாட்டுத் தொடர்பு அற்றுப்போய் விட்டது.
அதற்கு மாறாக, மூன்றாம் நூற்றாண்டிலிருந்து
காஞ்சியில் பல்லவர் என்ற புதிய மரபு
தமிழ்நாட்டில் சிறப்பான செங்கோல்
செலுத்தி வந்ததை அறிவோம்.
இம்மரபினர் வடமொழியைப்
பெரிதும் போற்றியவர்கள்; கலையை வளர்த்தவர்கள்;
குடைவரைக் கோயில்கள் பல அமைத்தவர்கள்.
முன்னமே சைவம், வைணவம், சைனம்
ஆகிய சமயங்களைத் தழுவியிருந்தவர்கள்.
எப்படியோ காலகதியின் வேகத்தில் இந்த மரபு,
ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியில்
மறைந்தே போகிறது.



The PARKAR